# பொருளடக்கம்


1. நன்றியுரை
2. சிறப்புப் பாயிரம்
3. ஆராய்ச்சி முன்னுரை
4. கதைச் சுருக்கம்

**1. தமிழகக் காண்டம்**

1. பாயிரம் ... 1
2. தமிழகப் படலம் ... 7
3. மக்கட் படலம் ... 23
4. தலைமக்கட் படலம் ... 27
5. ஒழுக்கப் படலம் ... 31
6. தாய்மொழிப் படலம் ... 35
7. கடல்கோட் படலம் ... 44
8. இலங்கைப் படலம் ... 51

**2. இலங்கைக் காண்டம்**

1. இராவணப் படலம் ... 79
2. உலாவியற் படலம் ... 86
3. காட்சிப் படலம் ... 103
4. கைகோட் படலம் ... 122
5. திருமணப் படலம் ... 135
6. ஊர் மகிழ் படலம் ... 149
7. மனையறப் படலம் ... 154
8. அரசியற் படலம் ... 161

**3. விந்தக் காண்டம்**

1. விந்தப் படலம் ... 177
2. ஆரியப் படலம் ... 181
3. தசரதப் படலம் ... 198
4. மகப்பேறு படலம் ... 201
5. தாடகை கொலைப் படலம் ... 206
6. காப்புப் படலம் ... 217
7. மிதிலைப் படலம் ... 222
8. தசரதன் சூழ்ச்சிப் படலம் ... 238
9. கான்புகு படலம் ... 263
10. மிதியடி பெற்று மீள் படலம் ... 267
11. தமிழகம் புகுபடலம் ... 271

**4. பழிபுரி காண்டம்**

1. உருக்குலைப் படலம் ... 279
2. கரன் கொலைப் படலம் ... 291
3. செவிகோட் படலம் ... 295
4. சிறைசெய் படலம் ... 303
5. மனைதேடு படலம் ... 313
6. நட்புக்கோட் படலம் ... 320
7. கண்ணுறு படலம் ... 327
8. சீதை துயருறு படலம் ... 333
9. வீடணப் படலம் ... 339
10. ஏவற் படலம் ... 345
11. அனுமப் படலம் ... 352
12. படையெழுச்சிப் படலம் ... 358

**5. போர்க் காண்டம்**

1. அதிகாயன் தூதுப் படலம் ... 365
2. ஆய்வுப் படலம் ... 371
3. அடைக்கலப் படலம் ... 378
4. உளவறி படலம் ... 391
5. போர்க்கோலப் படலம் ... 394
6. ஊர்முற்று படலம் ... 404
7. முதற்போர்ப்படலம் ... 418

8. இரவுப் போர்ப் படலம் ... 425
9. இரண்டாம் போர்ப் படலம் ... 429
10. கும்பகன்னன கொலைப் படலம் ... 433
11. சேய்வீழ் படலம் ... 441
12. கையறு நிலைப் படலம் ... 446
13. இறைவீழ் படலம் ... 456
14. ஒப்பந்தப் படலம் ... 469
15. முடிசூட்டுப் படலம் ... 478
16. ஊர்பழி படலம் ... 479
17. இறுவாய்ப் படலம் ... 484

| காண்டப்பெயர் | | படலத்தொகை | | காண்டப்பாத்தொகை |
|---|---|---|---|---|
| 1. தமிழகக் காண்டம் | — | 8 | — | 415 |
| 2. இலங்கைக் காண்டம் | — | 8 | — | 518 |
| 3. விந்தக் காண்டம் | — | 11 | — | 625 |
| 4. பழிபுரி காண்டம் | — | 12 | — | 540 |
| 5. போர்க் காண்டம் | — | 17 | — | 730 |
| | | 56 | | 2828 |

# படலப் பாத்தொகை

1. பாயிரத் தோடைங் காண்டப் படலமோ ரைம்பத் தாறும்;
ஆயிரத் திரட்டி யென்ஞூ றதனெடு நாலேழ் கூட்டித்
தாயினித் திடவே பாடும் தனித்தமிழ்ப் பாட்டு மாக
ஏயினித் தமிழர்க் கான இறையிரா வணன்பாட் டம்மா.

2. ஆயதா னூற்று மூவைந் தனுகுமைந் நூற்று மூவா
றேயபின் னறுநூற் றையைந் தியையுமைந் நூற்றெண் ணைந்து
மூயவேழ் நூற்றை யாரு முறைப்படுங் காண்டச் செய்யுள்;
ஏயவெட் டிரண்டு பன்னென் றீரறு பதினேழ் பாகே.

2. ஏய, மூய-பொருந்திய. பாகு-படலம். காண்டச் செய்யுள், காண்டப் படலம் எனக்கூட்டுக. ஏழ் நூற் றையாருகவும், பதினேழாகவும் முறைப்படுமென்க.




1. தொன் மதுரை
2. தென் மதுரை
3. இலங்கை
4. மதுரை
5. கிட்கிந்தை
6. பஞ்சவடி
7. விந்தகம்
8. இடைவள நாடு
9. அயோத்தி
10. மிதிலை

# நன்றியுரை

இக்காவிய அமைப்புக்கு ஆன்ற உதவிபுரிந்த, சென்னை மாநிலத் தமிழ்ச்சங்க அமைச்சர், உயர் திரு, புலவர், இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர் கட்கும், அவ்வப்போது படித்துப்பார்த்துக் கருத் தறிவுறுத்த புலவர் பெருமக்களுக்கும், மனமுவந்து பாராட்டிச் சிறப்புப்பாயிரம் உதவிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கட்கும், அன்புடன் ஆராய்ச்சி முன்னுரை உதவிய தளபதி அண்ணாத் துரை அவர்கட்கும், தானே முன்வந்து, இந்நூற் பதிப்புக்கு வேண்டிய பொருள்முழுதும் உதவி, என்னைத் தமிழ்மக்களுக் குரிமையாக்கிய, பெருஞ் செல்வரும், சிறந்த பஞ்சுவணிகரும், தமிழர் விடு தலைக்காக அரும்பெருந் தொண்டாற்றி வருபவரு மான-திருப்பூர், எஸ். ஆர். சுப்பிரமணியம் அவர் கட்கும், இந்நூல் அச்சிடுவதற்கு உடனிருந்து வேண்டிய உதவி புரிந்துவந்த சென்னை முத்தமிழ் நிலையச் சொந்தக்காரர் அன்பர், மே. சக்கரவர்த்தி நயினார் அவர்கட்கும், அச்சக நெருக்கடியான இக் காலத்தில் மிகக்குறைந்த நாளில் நன்கு அச்சிட் டுதவிய சென்னைத் திருவல்லிக்கேணி, ஜோதி அச்சகச் சொந்தக்காரரும், சிறந்த எழுத்தாளரு மாகிய தோழர், அ. கி. ஜயராமன் அவர்கட்கும், தங்கள் தொழிற்றிறமையால் விரைவில் நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த ஜோதி அச்சகத் தொழி லாளத் தோழர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

அன்புள்ள,

குழந்தை.



திருப்பூர்

திரு. எஸ். ஆர். சுப்பிரமணியம் அவர்கள்

திராவிட தளபதி,

## திரு, சி. என். அண்ணாதுரை M. A. அவர்களின்

# முன்னுரை

இராவண காவியம்—திடுக்கிடுகிறீர்களா? அப்படித்தான் இருக்கும். பன்னெடுங் காலமாக இராமாயணம் படித்தும், படிக்கப் பக்க நின்று கேட்டும் வந்த மக்களல்லவா! அவர்களின் செவிக்கு, இராவணகாவியம் என்ற ஒலியே சற்றுக் கிலி தருவதாகத்தான் இருக்கும். எனினும், இந்நூல், எதிர்பாராததல்ல. காலத்தின் விளைவு, ஆராய்ச்சியின் அறிகுறி, புரட்சிப்பொறி, என்று பல கூறலாம் இதற்குக் காரணமாக. இதுபோல் ஒரு நூல் வெளி வந்தே தீரும் என்பதை, நாட்டு மக்களின் உள்ளத்தின் போக்கிலே ஏற்பட்டுவரும், புதிய எழுச்சியை அறிந்தோர், அறிந்திருந்தனர், புரட்சிக் கவிஞர் பயாரதிதாசன், இதனை அறிவித்தே விட்டார் பல ஆண்டுகளுக்கு முன்னரே.

"தென்திசையைப் பார்க்கின்றேன் என்செய்வேன் எந்தன்
சிந்தையெலாம் தோள்களெலாம் பூரிக்கு தடடா!"

இராவணகாவியம், புரட்சிக் கவிஞரின் புதுக்கவிதைபோல, புதிய தமிழகத்தின் ஓவியம். இதனுடைய நோக்கம், முன்னுள்ள ஏடுகளின் மூலம் ஏற்பட்ட கேடுகளைக் களைந்து, இந்நாள் நினைவுக்கேற்ப, அவற்றினை ஆராய்ந்து, புது உருவாக்கித் தருவது. பழைய உருவிலே பற்றுக்கொண்டோருக்கு இஃது பயங்கரப் புயலாகத் தோன்றும். இதனை, ஆக்கியோர் அறிவார், மனித இயல்பறிந்தோர் ஆச்சரியமும் கொள்ளார். இராமநவமி கொண்டாடும் நாட்களிலே, நாட்டிலே, இராவண காவியம் ஆக்கப்படுவது, அதிசயம் என்று கருதிப் பயனில்லை, அறிவிப்பு என்று கொள்ளவேண்டும்—பழமை மடிகிறது என்பதற்கான அறிவிப்பு. ஜாரின் கொடுமை உண்டாக்கிய சூழ்நிலையேதான் ஒரு லெனினை தோன்ற முடிந்தது. தோன்றினதால்தான், யார் தேவகுமாரன் என்று தேய்த்தினரால் வணங்கப் பட்டு வந்தானோ அவன், மக்களின் இரத்தத்தை உறிஞ்சிடும் 'பேயன்' என்று ஏற்பட்டது. ஜார் இல்லையேல் லெனின் இல்லை! அவ்வியம் இராது!! அஃதே போல், இராமாயணத்திற்கு ஆக்கந்தேட முனைவோரும், சித்திரம் தீட்டிடுவோரும், சிறு கட்டுரையாக்கிடு வோரும் இன்று புதுக் கூத்தாட முற்பட்டிருக்

கவில்லை யானால், இக்காவியமும் எழுந்திராது. ஒன்றின் விளைவு மற்றொன்று—விளைவு மட்டுமல்ல—ஒன்றுக்கு மற்றொன்று மறுப்பு!

இராமன், தெய்வமாக்கப்பட்டான், இராமன் தெய்வமாகத் திகழ்வதற்காக, இராவணன் அரக்கனாக்கப பட்டான். கோவிலுக்கு ஓர் உருத் தேவை என்பதற்காக, கொற்றவன் மகனாக மட்டுமே குறிக்கப்பட வேண்டிய இராமன் கையில், மகத்துவம் பொருந்திய கோதண்டத்தையும், இராம தூதனின் வாலுக்கு நினைத்த அளவில் நீண்டு வளரக்கூடிய மகிமையையும், கவி கற்பித்துக் கொண்டார். வாலும் வில்லும், வணக்கத்துக் குரிய பொருள்களாக்கப் பட்டவே, தோள்வலியும் மூளைவலியும் படைத்த ஒரு மன்னன், மிலேச்சனாக்கப்பட்டான். இராமனுக்குச் செந்தாமரைக்கண் அமைததார் கவி; எனவே, இராவணன் கண்கள் செந்தழலை உமிழ்ந்தன என்று தீட்டலானார். அவருடைய நோக்கம், இராமனைத் தேவனாக்கவேண்டும் என்பது. அதற்கேற்றபடி கதை புனைந்தார்.

இராவணகாவியம், முன்னாள் கவி, தம் நோக்கத்துக்காக, இராவணன் மீது ஏற்றிய இழி குணங்களையும், கொடுஞ் செயல்களையும களைந்தெறியவும, இராவணனுடைய தூய்மைக்கு ஆதாரமான பல புகலவும், அஃதே போல, இராமனுடைய குணம், செயல் ஆகியவற்றிலே காணக் கிடைக்கும் தவறுகளைத் தெளிவு படுத்தவும தோன்றிய நூலாகும். இராமன் கோயில் எங்கும் காணப்படும் இக்காலத்திலே, இம்முயற்சியில் ஈடுபட "நெஞ்சழுத்தமும்" அதிகம் வேண்டுமல்லவா? அது ஆசிரியருக்கு அமைந்திருக்கிறது. எங்ஙனம் எனில், அவர் முன்னாள் கவிபோல ஆரியரின் போற்றுதல், அரசர்களின் மாலை மரியாதை ஆகிய வற்றினைப் பெறும் எண்ணம் கொள்ளாமல், மக்கள் மன்றத்திற்கு, மனத்திற்பட்ட உண்மையை எடுத்துரைப்பதே தமிழன் மாண்பு என்ற கொள்கையின ராக லாம், அவர் தன்மான இயக்கத்தவர். எனவே, தகுமா? முறையா? ஏற்றதா? என்ற கேள்விகளை அல்ல, சொல்லித்தீர வேண்டும்—உண்மை வெல்லும்—இன்று அல்லது நாளை என்ற உறுதியைத் துணை கொண்டு இந்நூலைச் செய்துள்ளார்.

இராமனும் இராவணனும்—உண்மை உருவங்களா? வரலாற்றுக் காலத்தவரா? அல்ல கற்பனைகள், இதனைக் கூறத் தன்

மான இயக்கத்தார் தயங்குவதில்லை. ஆனால், அவர் தம் கேள்விக்குத் தக்கவிடையிறுக்க முடியாத நேரத்தில் மட்டுமே, செந்தமிழை வாணிகம் செய்வோர், இராமாயணம் ஓர் கற்பனைக் கதை என்றுரைப்பரே யொழிய, மற்றைப்போதினில், இராமனை நிஜ புருஷனாகவே எண்ணுவர்-மதிப்பர்-வணங்குவர். ஆராய்ச்சிக் கூடத்தில் மட்டுமே ஓரளவுக்கு அவர்களின் பஜனை மனப்பான்மை குறையும். மற்றப் போதெல்லாம் அவர்கள் இராம தாசர்களே!

தன்மான இயக்கத்தவர்—இராவண தாசர்களல்லர்! இராவணனுக்குக் கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்வித்துப் பூஜாரிகளாகவேண்டும் என்பதற்காக அல்ல இக்காரியம் புனைந்தது. பழி சுமத்தினரே பண்டைக் கவிஞர்கள் இராவணன் மீது, இது முறையல்லவே, துருவிப் பார்க்குங்கால், விஷயம் முற்றிலும் வேறாகவேயன்றோ உளது என்று எண்ணித் தீட்டியதே இந்த ஏடு.

இராமதாசர்களுக்கு இராவணதாசர் விடுக்கும் மறுப்புரை அல்ல இந்நூல். இராமதாசர்களுக்கு, தன்மானத் தமிழர் தரும், மயக்க நீக்கு மருந்து இது. "தாசர் நிலை கூடாது தமிழா! இராமதாசர் என்பது ஆரிய தாசராக்கு வதற்கே பயன்படும் நண்பா!" என்று அறிவுறுத்தவே இந்நூல் வெளிவந்துளது.

இராமாயணம் தீட்டப்பட்ட காலம், இந்தப் பரந்த பூபாகத்திலே இரு வேறு கலாச்சாரங்கள் மோதத் தொடங்கிய நேரம், இது பண்பாடு, மக்கள் உளநூல், நாட்டுநிலை அறிவோர், அறிந்தோர் கண்ட உண்மை.

திராவிட இன மக்களின் எழில் மிக்க வாழ்க்கையிலே, ஆரிய இனக்கலாச்சாரம் தூவப்பட்டது என்பதை மறுப்பார் எவருமிலை. நாம், நமது கருத்துக்கு மாறானவர்கள், இருசாராரும் இதனில் மாறுபட்டோ மில்லை. ஏனெனில், இது மறைக்க முடியாத உண்மையாகி விட்டது.

திராவிடம்—ஆரியம் எனும் இருவேறு பண்பாடுகள் இருந்தன—கலந்தன. இதனை அவர்களும கூறுகின்றனர். எது திராவிடம், எது ஆரியம் என்று பிரித்துக்காட்டக் கூடாதவாறு கலந்துவிட்டது, என்று முறுவலுடன் கூறுவர், பிரித்துக் கூறுவர். பிரித்துக் கூறக்கூடாது என்ற ஆர்வம் அவர்களுக்கு இருப்பது மட்டு மல்ல, அவர் தம் ஆராய்ச்சியாலும்

தெரிவது, பிற்காலத்தில் பிரிக்கக்கூடாதவாறு, 'சர்வ ஜாக்கிரதையாக,' மிகத்திறமையுடன், அந்நாளிலே, ஆரியத்தைத் திராவிடத்தில் குழைத்திருக்கிறார்கள், என்ற உண்மையும் தெற்றென விளங்குகிறது. கண்டு பிடிக்கவே முடியாத களவு! வெளிக்குத் தெரியாமல் நடைபெறும் விபசாரம்! ஓசைபடாமல் கடிக்கும் நாகம்!—இவைபோல் இஃது பிரிக்கவே முடியாதபடி கலந்து போயிருக்கக் கூடும்! இஃதோ புதை பொருள் தோண்டப்படும் காலம்! மகஞ்ச தாரோக்கள் காணப்படும் காலம்! மனித அறிவுக்கு எட்டாதது என்று எண்ணப்பட்ட எண்ணற்ற விஷயங்களை எளிதில் அறியக்கூடிய வழிவகை கண்ட காலம். எனவேதான், எது ஆரியம், எது திராவிடம் என்று பிரித்துக் காட்டக்கூட முடியாத அளவு கலந்துபோய் விட்டது என்று கூறப்படும் தன்மையை, மாற்றிட முடிகிறது. மாற்றாரின் கோபத்துக்குக் காரணம் அதுவே. எவ்வளவு முன்னேற்பாடாக, திராவிடக் கலையினைச் சிதைத்தும் குறைத்தும், ஆரியத்தை அத்துடன் இணைத்தும், இழைத்தும் ஒட்டியும் கட்டியும், பூசியும் தூவியும் பலவகையாலும் பலகாலமாகப் பாடுபட்டுக் கலந்தும், இன்று இந்தப் "பாவிகள்" எப்படியோ துப்புக் கண்டுபிடித்து, துருவித் துருவி பார்த்துச் சலித்தும் புடைத்தும் புடம்போட்டும் பார்த்து, இதோ ஆரியம், இதோ திராவிடம், இன்னது இன்ன அளவு உள்ளது என்று பிரித்துக் காட்டுகின்றனரே, அந்த நாள் தொட்டு நாம் செய்த முயற்சிக்கு இந்நாள் வந்ததே விபத்து என்றெண்ணிக் கவலைப்படுகின்றனர்; அவர்கள் கவலைப்படுகிறார்களே என்பதற்காகக் காலவேகம், வேலை நிறுத்தம் செய்யுமா! தடையும் எதிர்ப்புப் படையும், அந்த வேகத்தை அதிகப்படுத்துகிறது.

இராவண காவியத்தை இந்த மன நிலையின் கனி யெனக் கொள்ளவேண்டும். இதுவும், அந்நாள் இராமாயணம் போல, கலைப்போர் முரசுதான்! இரண்டும் கற்பனைகளே! முன்னது இராமனைத் தேவனாக்க! இஃது, இராவணனைத் தேவனாக்கவுமல்ல-தமிழனாக்க! அதாவது வீரனாக்க! முன்னதற்குக் கவி, வானரையும் வானிலுறைவோரையும் துணைகொள்ள நேரிட்டது. இந்நூலுக்கு அஃது தேவையில்லை. முன்னூலில் புதைந்துள்ளவைகளைக் கொண்டே, இராவணனின் உருவம் இத்தன்மையது என்று எடுத்துக் காட்டுகிறார் நூலாசிரியர் சம்பராசுரயுத்தம்

என்று முன்னூல் கூறுகிறது-அசுரன் அவன் என்று பயங் காட்டுகிறது. இராவண காவியத்திலே, சம்பரன், அசுரனல்ல-பாண்டியன்! எதைக்கொண்டு இம் முடிவு கட்டுகிறார்? முன்னூலிலே சம்பராசுரன், மீனக்கொடியோன் என்று குறிக்கப்பட்டிருக்கிறது; ஆக, மீனக்கொடி பாண்டியனுக்குரியது! எனவே சம்பரன் அசுரனென்று ஆரியரால் நிந்திக்கப்பட்ட பாண்டிய மன்னனாகத்தான் இருக்கவேண்டும் என்று முடிவு கட்டுகிறது. இஃதே போலவே, இந்நூலின் கண் காணப்படும் பல்வேறு நிகழ்ச்சிகட்கும் ஆதாரம், இராமாயணத்திலிருந்தே சலித்து எடுக்கப்பட்டவையே யாகும்.

இராவணகாவியத்திலிருந்து தப்பவேண்டுமென்று விரும்பும், ஆரியர்க்கும் ஆரிய நேசர்கட்கும், ஒரே ஒரு வழிதான் உண்டு; இராமாயணமே பொய்க்கதை, அதனை நாங்கள் ஏற்கோம் என்று அறிவித்துவிடுவதுதான். வேறு மார்க்கம் இல்லை.

கதை கிடக்கட்டுமய்யா! காவிய ரசனை இருக்கிறதே, அது, கம்பனின் இராமாயணத்தில் பொங்கி வழிகிறதே, அதிருக்கட்டும் அச்சம் ஏன்? கொச்சைத் தமிழிலே, ஏதேதோ கூறிடுவோர் கூறட்டும். அழகு கவிதையில் ஆரிய இராமன் மிளிர்கிறான், என்று கூறுவதற்கும் இந்தப பொல்லாத சூழ்நிலை இடந்தரவில்லை! கூறவேண்டியதைக் காவியச் சுவை குறைவுபடா வண்ணம் கூறி விட்டிருக்கிறார். அங்கு ஆறு ஓடும விதம் எவ்வளவு அழகு பட உளதோ, இங்கு முளது. அங்கு இயற்கைக்குத் தமிழ் ஆபரணம் பூட்டப்பட்டிருப்பது போலவே, இராவணகாவியத்திலும் பொலிவுறப் பூட்டப்பட்டுளது. அதிலாவது, தேவாம்சம் புகுந்து தமிழின் இனிமைக்கும் ஊறுதேடுகிறது; இதன் கண் அக்குறையும் கிடையாது. அது ஆரியங்கலந்த கடுந்தமிழில் புலவர்க்காக ஆக்கப்பட்டது. இது எளியஇனிய தனித்தமிழில் எல்லாத் தமிழ்மக்களுக்கும் இயற்றப்பட்டது. எடுத்துக் காட்டாகச் சிலகூறுவோம்.

## 1. கதிரவன் தோற்றம்

"அளித்தகை யில்லா வாற்ற லமைந்தவன் கொடுமை யஞ்சி
வெளிப்பட வரிதென் றுன்னி வேதனை யுழக்கும் வேலை,
களித்தவர் களிப்பு நீங்கக் காப்பவர் தம்மைக் கண்ணுற்
றொளித்தவர் வெளிபபட் டென்னக் கதிரவ னுதயஞ் செய்தான்."

[கம்பராமாயணம்: அணிவகுப்புப் படலம். 24]

[சூரியன், இராவணன் கொடுமைக்கு அஞ்சி வெளிவரமுடியாமல்

வருந்திக் கொண்டிருக்கும்போது, இராமன் பண்டையைக் கண்டு வெளிப்பட்டான்.]

" இருண்டபே ரிருளை நீக்கி இளங்கதிர்ச் செல்வன், துப்பில் திரண்டுமே பொருது வென்று சென்றவர் போக, மண்ணில் புரண்டுமே யுயிரை நீத்துப் போனமா மறவர்க் கின்றே டிரண்டுநா ளாயிற் றென்ன எண்ணுவான் போல வந்தான்."

[இராவணகாவியம்: இரண்டாம்போர்ப் படலம்-1]

[துப்பு-வலி. துப்பில் திரண்டு-வலிமிக்கு]

## 2. கதிரவன் மறைவு

" தன்றனிப் புதல்வன், வென்றித் தசமுகன் முடியில் தைத்த மின்றளிர்த் தனைய பன்மா மணியினை வெளியிற் கண்டான், ஒன்றொழித் தொன்றா மென்றவ் வரக்கனும் ஒளிப்பான் போல வன்றனிக் குன்றுக் கப்பால் இரவியும் மறையப் போனான்."

[கம்பராமாயணம்: மகுடபங்கப் படலம்—1]

[சூரியன் மகனை சுக்ரீவன், இராவணனது மணிமுடியைச் சிதைக்க, இராவணன் அங்கு நில்லாது சென்றது போல, மகன் வென்றி கண்ட மகிழ்வால் சூரியனும் மறைந்து சென்றான்.]

" குருதி யாடிக் குவிபிணக் காடணர்
பரவை போலப் படர்செங் களத்தினை
பரிதி காணப் படாதெனச் செல்லவே
இரவு வந்த தினுங்கொலு வேனென."

[இராவணகாவியம்: முதற்போர்ப்படலம்-77]

[அணர்தல்-மேல் நோக்கி எழுதல். பரவை-கடல்.]

விரிக்கிற் பெருகும்! பெருங்காப்பியத்திற்குள்ள இலக்கண முறை சிறக்கச் செய்துள்ளார். கவிச்சுவை, ஓசை, உவமைகள், அணிகள், அழகுடன் அமைந்துள்ளன. அகம் புற இலக்கணங் களில் கூறப்படும் களவு, கற்பு, போர் முறை, வீரம் முதலியவற் றிற்கோர் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றது. எனவே சிறந்ததோர் காவியமாக அமைந்துள்ள இராவணகாவியம் தமிழின் இனிமை கண்டு சொக்குவோருக்கு, விருந்தாக அமை யுந்தகைமைத்து.

இராமாயணம், ஆரிய ஆதிக்கத்துக்குப் பயன்பட்டது மறுக்கொணாத உண்மை. பண்டித ஜவஹர் தம் திருமகளா

ருக்குத் தீட்டிய இருமுகத்திலேயும் இதனைக் குறித்தார். நோக்கமே அந்நூலுக்கு அதுதான்.

தோழர் புலவர் குழந்தை, தமிழர்-தமிழ் இனம் விழிப்புற்று வீறு கொண்டு, விடுதலை பெற்று; வீரமக்களாய், தன்னாட்சித் தனியரசுரிமையுடன் வாழவேண்டும் என்ற நோக்குடையார். எனவே, அவர் தமது அறிவுத்திறனை, ஆராய்ச்சி அனுபவத்தை, தமிழை, இந்த நோக்கத்துக்குப் பயன்படுத்தியுள்ளார். காவியத்திலே, தமிழ்நாடு, தமிழ், தமிழர் தன்மை, ஆரியர் வருகை, அவரைத் தமிழர் ஆதரித்தமை, ஆரியரின் உட்கருத்து, அவர்தம் உளவு முறை, கெடு நினைப்பு, தீய செயல் ஆகியவற்றினை விரித்துரைத்திருக்கிறார்.

சுருங்கக் கூறுமிடத்து, இந்நூல், பழமைக்குப் பயணச் சீட்டு, புதுமைக்கு நுழைவுச் சீட்டு, தன்மான இயக்கத்தார், தமிழ்ப்பகைவர்கள், காவியமறியாதார், கலையுணர்வில்லாதார் என்ற அவமொழியினை அடித்துத் துரத்தும் ஆற்றலாயுதம். தமிழ் மறுமலர்ச்சியின் தலை சிறந்த நறுமலர். நெடுநாள் ஆராய்ச்சியும், நுண்ணிய புலமையும், இனப்பற்றும் ஒருங்கமைந்த ஓவியம். தமிழரின் புதுவாழ்வுக்கான போர் முரசு! காவிய உருவில் ஆரியத்தைப் புகுத்திவிட்டோம். எனவே இது அழிந்துபடாது என்று இறுமாந்திருப்போருக்கு ஓர் அறை கூவல். தமிழருக்கு உண்மையை உணருமாறு கூறும் ஓர் அன்பழைப்பு! தமிழரசுக்குக் கால்கோள்! விடுதலைக் கீதம்!

இவ்வரிய நூலை, மிகச்சிரமப்பட்டு, தமிழரின் தன்மானம் தழைக்க வேண்டும் என்ற நோக்குடன் எழுதியுள்ளமைக்கு, என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதுடன்; நந்தமிழ் மக்கள் இதற்குப் பேராதரவு தருவர் என்று அவர்க்கு உறுதி கூறுகிறேன். தமிழராகிய நீவிர், உமக்கென ஆக்கப்பட்ட இத் தனித் தமிழ்க் காவியத்தைப் போற்றியாதரிப்பீர் என்ற நம்பிக்கையை ஈடேற்றி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். வணக்கம்.

அன்பன்,

அண்ணாத்துரை.

# இராவண காவியம்

மிகப்பழங்காலத்தே தமிழ்நாடு இன்றுள்ள எல்லைக்குட்பட்டிருக்கவில்லை; வடக்கில் பனிமலைகாறும் பரவியிருந்தது; அயல்நாடர் குடியேற்றத்தால் பின்னர் விந்தமலையை வடக்கெல்லையாகக் கொண்டது. தென்கடல் நிலமாக இருந்தது. அது, இன்றுள்ள குமரிமுனைக்குத் தெற்கில் ஆயிரங் கல்லுக்கு மேல் அகன்றிருந்தது. கிழக்கிலும் வங்கக்கடலும், சாவக முதலிய தீவுகளும் ஒரே நிலப்பரப்பா யிருந்தது. தென்னிலத்தில் குமரிமலை; பன்மலை முதலிய மலைகள் ஓங்கியுயர்ந் திருந்தன. குமரிமலையில் குமரியாறும், பன்மலையில் பஃறுளி யாறும் தோன்றி அந்நிலத்தை வளஞ்செய்தன.

குமரியாற்றுக்கும பஃறுளியாற்றுக்கும் இடைப்பட்ட நிலம் பெருவளநாடு எனவும், பஃறுளிக்கும் தென் கடலுக்கும் இடைப்பட்ட நிலம் தென்பாலிநாடு எனவும், வழங் கின; பஃறுளியாற்றங் கரையில் இவ்விரு நாடுகளின் தலைநகர மான மதுரை இருந்தது. குமரிக்கும் விந்தத்திற்கும் இடைப் பட்டநிலம் திராவிடம் என வழங்கிற்று. இதன் தலைநகரம் வஞ்சி என்பது. கிழக்கு நாட்டின் தலைநகர் நாகை ஆகும். இந்நால்வகைப் பட்ட தமிழகம் - குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என ஐந்நிலமாகி மக்கட்கு வேண்டிய எல்லாச் செல்வமும் பொருந்தி யிருந்தது.

பழந்தமிழர்கள் அறிவு, ஆற்றல், வணிகம், கைத்தொழில் ஆகிய நாகரிக நற்பண்பில் சிறந்து அதற்கேற்ப அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நாற்பாலாக விளங்கினர். இல்லறமுற்றிப் பொதுநலம் புரிவோர் அந்தணராவர், உழவு முதலிய எல்லாத் தொழிலாளரும் வேளாளராவர், நம்முன்னை யோர் நல்லொழுக்கத்திற் சிறந்து ஒன்றுபொருகுலமா யிருந் தனர். தாய்மொழியாந் தமிழ் மொழியை உயிரினும் பெரிதாகப் போற்றி வளர்த்துவந்தனர்.

ஐந்நில மக்களும் தங்களுக்குள் ஒரு தலைவனை ஏற்படுத்திக் கொண்டு அவன் ஆணைக்குட்பட்டு வாழ்ந்துவந்தனர். பின் னர்த் தமிழக முழுமைக்கும் ஒரு மாபெருந் தலைவனை ஏற்படுத் தினர். அவன் தமிழகத்தின் நடுவில்-இன்றுள்ள இலங்கை

பின் தென்மேற்கில் இருந்த ஒரு தொன்னகரில் இருந்து தமிழ கத்தை ஆண்டு வந்தனன். அப்பண்டையோன் மரபில் வந்த வரே பாண்டியராவர். அம்மாபெருந் தலைவன் வழிவந்த ஒரு வன் தன்மகனைத் தென்னாட்டுக்கும், மற்றிரு தமிழ்த்தலைமக்களை கிழக்குநாடு திராவிட நாடுகட்கும் தலைவராக்கினான். அம்மூவர் வழிவந்தோரே பாண்டிய சோழ சேரராவர்.

கி. பி. 140 கடைச்சங்க இறுதிக்காலமாகும். கடைச்சங்க முன் 8000 ஆண்டுகளுக்குமுன் தென்கடல் பொங்கித் தென் பாலியையும், கிழக்கு நாட்டின் பெரும்பகுதியையும் வாய்க் கொண்டது; பின், கி. மு. 2500-ல் ஒரு முறை பொங்கிப் பெரு வளத்தின் பெரும் பகுதியையும், கிழக்கு நாட்டையும் விழுங் கிற்று; கி. மு. 700-ன் முன் ஒருமுறை பெருகித் திராவிடத்தின் ஒரு பகுதியையும் உண்டேப்பமிட்டது.

இரண்டாங் கடல்கோளின் பின்னர் இலங்கை உண்டானது இலங்கைநாட்டின் நடுவில் இருந்த மூரிகூடல் மலைமீது இலங்கை நகர் இருந்தது.

மூன்றாங் கடல்கோளுக்கு முன் இலங்கையிலிருந்து தமி ழகத்தை யாண்டுவந்த மாபெருந்தலைவர் வழிவந்த வச்சிரவாகு வின் மனைவியான கேகசி என்பாள் இராவணன், கும்பகன்னன், பீடணன் என்னும் மூன்று ஆண்மக்களையும், காமவல்லி என் னும் பெண்மகளையும் பெற்றனள். மூத்தவனான இராவணன் முடிபுனைந்து தமிழகத்தை ஆண்டு வந்தனன்.

மலைவளங்காணச் சென்ற இராவணனும், திராவிடத்தைச் சார்ந்த முதிரையிலிருந்து முல்லைநாட்டை யாண்டுவந்த மாயோன் மகள் வண்டார்குழலியும் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு மணம் புரிந்து இல்லறம் நடத்திவந்தனர். வண்டார் குழலி சேயோன் என்னும் செம்மலைப் பெற்றனள்.

தமிழகத்தின் வடக்கெல்லையான விந்தச்சாரல் பல சிறு நாடுகளாகப் பகுபட்டிருந்தது. வட நாட்டில் ஆரியர் என்னும் ஓரினத்தினர் வாழ்ந்துவந்தனர். அவர் ஏற்றத்தாழ்வான குல வேற்றுமை யுடையவர். அவர்களில் கல்வி யறிவுள்ள முதி யோர் சிலர், இராவணன் தோன்றுவதற்கு நெடுங்கால் முன் னரே துறவுக் கோலத்துடன் தமிழகம் போந்தனர். தமிழ் மக்கள் அன்னாரை அன்புடன் வரவேற்று ஊணுடை யுதவிப் போற்றி வந்தனர். அவர் தமிழ் கற்றும், தமிழரிடம் நெருங்கிப்

பழகியும் வந்தனர். இவ்வாறே பின்னரும், பின்னரும் பலர் வந்தனர். நாளடைவில் அவர் தமிழகம் முழுதும் போந்து, தமிழத் தணிருடனும், புலவருடனும் நெருங்கிப் பழகி அரசர் உறவையும் பெற்றனர். நாளாகாக இளைஞரும வந்து, தமிழ்ச் செல்வ இளைஞரிடம தோழமை செய்யும் பார்ப்பன வேலையும் சிலர் பார்த்து வந்தனர்.

நாளடைவில் பலர் பெண்டு பிள்ளைகளுடன் குடியேறி விந்தக் காடுகளில் இலைக்குடில்கள் அமைத்து வாழ்ந்துவந்தனர். அவர் வேள்வி மூலம் உயிர்களைக் கொன்றுண்ணத் தொடங்கினர். தமிழ் மக்கள் தடுத்தனர். அவர் கேட்கவில்லை. இருவருக்கும் போருண்டானது. அம்மக்கட்போர் தமிழாரிய மன்னர் போரானது. முடிவில் வடவரசர் தோற்றனர். ஆரிய முனிவர்கள் அஞ்சினவர் போல நடித்துப் பல தமிழரசர்களை வஞ்சித்துக் கொன்றனர். நூற்றுக்கணக்கான தமிழர் கோட்டைகளைத் தீயிட்டெரித்தனர்.

விந்தச்சாரலி விருந்த இடைவள நாட்டை யாண்டு வந்த தாடகை யென்னும் தமிழரசி இராவணனது துணையை வேண்டினாள். அவன் சுவாகு என்னும் படைத்தலைவனை பெரும் படையுடன் அனுப்பினான். சுவாகு இடைவளஞ் சென்று ஆரியப் புலைவேள்வியை யகற்றிக் காத்துவந்தான். அதனால், கோசிகன் என்னும ஆரிய முனிவன் வேள்விசெய்ய முடியாது மனமுடைந்து சென்றனன்.

வடநாட்டில் சரயுவாற்றங் கரையில் உள்ள அயோத்தியில் தசரதன் என்னும் சிற்றரசன் ஒருவன் இருந்தான். அவன் கோசலை, சுமத்திரை என்னும் இருமனைவியருடன் பல காதல் மகளிருடனும் களித்து வந்தான்; தனது தோள்வலியால் பல நாடுகளை வென்று கோசலம் என்னும் நாட்டை நிறுவிப் பேரரசனானான். பின் தன் தகுதிக்கேற்பப் பேரரசனான கேகயன் மகள் கைகேசியைக் கேட்டான். அவன் மறுக்கவே, தனது நாட்டைக் கைகேசிக்குப் பரிசமாகக் கொடுத்து அவளை மணந்தனன்.

கிழப்பருவமுற்றும் பிள்ளையில்லாது வருந்திய தசரதன், குலகுரு வசிட்டர் சொற்படி கலைக்கோட்டு முனிவனைக் கொண்டு குதிரை வேள்வி செய்தனன். ஓராண்குதிரை படையுடன் ஓராண்டில் நாடுசுற்றி மீண்டது. முனிவர் வேள்வி தொடங்கினர். அவ்வேள்விக் குதிரையைக் கோசலை வாள்கொண்டு

மூன்று வெட்டில் வெட்டி வீழ்த்தினாள். கோசலை தன் கண
வனைத் தழுவுவதுபோல் வெட்டுண்ட அவ்வாண்குதிரையைத்
தழுவி அவ்விரவைக் கழித்தனள். சடங்குகள் முடிந்தபின்
பலப்பல குதிரை, ஆடு, மாடு, ஆமை, பாம்பு, பறவை முதலிய
பன்னூற்றுக் கணக்கான உயிர்களைக் கொன்று தின்று சோமக்
கள்ளுண்டு இன்புற்றனர். தசரதன் கலைக்கோடர் முதலிய
வேள்வியாசிரியர் மூவர்க்குக் கோசலை முதலிய மூன்று மனைவி
களையும் காணிக்கையாகக் கொடுத்தான். அவர்கள் கலிமொழி
பேசிக்கூடிக் கலந்தின்புற்று மூவரும் கருப்பமுறவே அவர்களுக்
கீடான பொருள் பெற்றுக்கொண்டு தசரதனிடம் ஒப்பித்துச்
சென்றனர். கருப்பமுதிர்ந்து கோசலை ராமனையும், கைகேயி
பரதனையும், சுமித்திரை லக்குவ சத்துருக்கனரையும் பெற்றனர்.
மக்கள் வளர்ந்து மணப்பருவ முற்றனர்.

மனமுடைந்து சென்ற கோசிகன் அயோத்தியை யடைந்து
வேள்வித்துணையாக ராமலக்குவரை அழைத்துக்கொண்டு
இடைவளநாட்டை யடைந்து ஒரு சோலையில் தங்கினர். அங்கே
தனித்து வந்த தாடகையை முனிவன் சொற்படி ராமலக்குவர்
கொன்றனர். அங்கிருந்து சென்று தன் குடிலையடைந்து முனி-
வன் வேள்வி தொடங்கினன்.

சுவாகு, இளவரசனான மாரீசனோடு சென்று வேள்வியைத்
தடுத்தான். ராமன் சுவாகுவைக் கொன்றான். தன்னிலைமை
யுணர்ந்த மாரீசன் ஆங்கு நின்றும் மீண்டனன். மூவரும்
வேள்வி முடித்துத் தமிழகத்தை நீங்கினர்.

தூதரால் இதையறிந்த இராவணன், விந்தநாட்டை
யாண்டு வந்த தனது தங்கை காமவல்லிக்குத் துணையாகப்
பெரும்படையை அனுப்பினன். கரன் எனனும் படைத்தலைவன்
அப்பெரும்படையை ஆங்காங்கு அமைத்துக் காத்துவந்தனன,
காமவல்லியின் காப்பில் விந்தநங்கை புலைவேள்வியற்றுப்
பொலிந்தனன்.

வேள்வி முடித்துச்சென்ற மூவரும் மிதிலையை யடைந்து
சனகன் விருந்தினராக இருந்தனர். சனகன் முனிவரிடம்,
தான் கண்டெடுத்து வளர்த்துவரும் சீதையை மணக்கப்
பேரரசர் எவரும் முன்வாராமையையும், அதனால், இவ்வில்லை
வளைப்போர்க் குரியளென ஒரு வில்லை நாட்டியும ஒருவரும் வாரா
மையையும் கூறி வருந்தினான். முனிவர் கட்டளைப்படி ராமன்

அவ்வில்லை யிறுத்தொடித்தனன். சனகன் மகிழ்ந்து, தசரதன் முதலியோரைவரவழைத்துச் சீதையை ராமனுக்கும், ஊர்மிளையை லக்குவனுக்கும், தன் தம்பி குசத்துவசன் மகளிரான மாண்டவியைப் பரதனுக்கும், சுதகீர்த்தியைச் சத்துருக்கனுக்கும் மணஞ்செய்து கொடுத்தனன். தசரதன் சனகனிடம் விடை பெற்று மக்கள் மருமக்களுடன் அயோத்தியை யடைந்தனன்.

தசரதன், ராமன்மீதுள்ள பற்றினால் பரதனுக்குரிய நாட்டை ராமனுக்காக்க வெண்ணித் தந்திரமாகப் பரதனைச் சத்துருக்கனுடன் அவன் பாட்டனாருக் கனுப்பிவிட்டு ராமனை நாட்டு மக்களிடம் பழகச் செய்தனன். இவ்வாறு பன்னிரண்டாண்டுகள் சென்றன, தசரதன் அரசர்களையும் குடிகளையும் கலந்து ராமனுக்கு இளவரசுப் பட்டங்கட்ட முடிவு செய்தனன். இதை யறிந்த கைகேசியின் தோழியான மந்தரை என்பாள் அரசன் சூழ்ச்சியைக் கூறி முடி சூட்டைத் தடுக்கும்படி வேண்டினள். கைகேசி தசரதனிடம் முன்னர்ச் சம்பரனை வென்றதற்காகக் கொடுத்த இருவரங்களில் ஒன்றால் பரதன் நாடாளவும், மற்றொன்றால் ராமன் பதினான்காண்டு காடாளவும செய்யவேண்டும் எனக் கேட்டாள். தசரதன் சூழ்ச்சி பலிக்கவில்லை. ராமன் சீதை லக்குவன் மூவரும் தேரேறிக் காடு சென்றனர்.

சென்றவர், குகனென்னும் தோழனால் கங்கையைக் கடந்து வழி செல்ல ஆரிய முனிவர் வரவேற்று வழியனுப்பச் சென்று சித்திரகூட மலையை யடைந்திருந்தனர். தேரோட்டி வந்த சுமந்திரன் சென்று கூறவே தசரதன் ராமன் பிரிவால் உயிர் விட்டனன். பரதன் செய்தி கேட்டு வந்து தந்தையின் உடலை அடக்கம் செய்து சேனை சூழச் சித்திர கூடத்தை யடைந்து ராமனை நாட்டாள வரும்படி வேண்டினன். ராமன் நாடு பரதனுக்குரிய தென்பதைக் கூற, பரதன் நான் அதை உனக்குத் தந்தனன். ஏற்றருள்க வென, ராமன் நான் பெற்றோர் சொற்படி பதினான்காண்டு கழித்து வருகிறேன். அது மட்டும் எனக்கீடாக நீ ஆள்வாயெனப் பரதன் ராமன் மிதியடியைப் பெற்று மீண்டு, நந்தியூர் என்னும் சிற்றூரில் தங்கி, மிதியடியை முடிபுனைந் தரியணை யிருத்தி அதை வணங்கி வந்தனன். சத்துருக்கன் ஆட்சி புரிந்து வந்தனன்.

சித்திர கூடத்தைவிட்டு ராமன் தமிழகத்தை யடைய ஆரியர் வரவேற்கச் சில நாளங்கிருந்து சரபங்கன் இல்லை

யடைந்திருந்தனர். ஒரு நாள் முனிவர்கள் ஒன்று கூடி வந்து
தமிழகத்தில் தாங்கள் தவவேள்வி செய்ய முடியாமல் கரன்
தடுப்பதைக் கூறி அவனைக் கொன்று தங்களை வாழ்விக்கும்படி
வேண்டினர். ராமன் அதற் கிசைந்து விடை பெற்றுச்சென்று
முனிவர் இருக்கையில் தங்கித் தமிழ் கற்றும், வேள்வி செய்ய
முனிவர்க் குதவியும், இரண்டகத் தமிழரை நட்பாக்கியும் பத்
தாண்டினை அங்கே கழித்தனன். பின் அகத்தியன் நிலை
யடைந்து அவனால் ஒரு வில்லும், இரு அம்புக்கூடுந் தரப்பெற்
றுச் சென்று பஞ்சவடி என்னும் இடத்தில் தங்கி யிருந்தனர்.

ராமன் ஒரு நாள் தனித்துலாவிய காம வல்லியைக் கண்டு
காமுற்று, அவள் அறிவுரையைக் கொள்ளாது கையைப் பிடித்
திழுத்து வற்புறுத்தினான். அவள் திமிறிக்கொண்டு விரைந்து
சென்றனள், ராமன் தன் தம்பியால் அத்தமிழரசியை மூக்கை
யும் காதையும் முலைக்கண்களையும் அறுத்துக் கொன்று, முன்
னேற்பாடில்லாத கரனையும் பொருதழித்தான்.

தூதரால் செய்தி யுணர்ந்த இராவணன் கொதித்தெழுந்து
தேரேறி விந்தஞ் சென்று, காமவல்லி வளர்த்த மானைவிட்டு
ராம லக்குவரைப் பிரித்து அவரை வளைத்துக் கொள்ளும்படி
வீரரை வைத்துச் சீதையை எடுத்து வந்தனன். சீதை புலம்ப
'உன் கணவன் வரின் நல்லறிவு புகட்டி அவனுடன் அனுப்பு
கிறேன் அஞ்சேல்' எனத் தேற்றித் தன் தங்கையின் நிலையில்
வைத்துப் போற்றி வந்தனன்.

மறவரால் வளைக்கப்பட்ட ராமலக்குவர் அவரை யோட்டிச்
சென்று இலைக் குடிலில் சீதையைக் காணாது வருந்தித் தேடிப்
பாதையைப் பின பற்றிச் சென்று ஒரு முனிவன் குடிலை யடைந்
தனர். அவன், சீதையை இராவணன் இலங்கை கொண்டு
செல்வதையும், வாலியால் துரத்தப்பட்டு மதங்கரிடமுள்ள சுக்
ரீவன் வரலாறுங் கூறியனுப்பச் சென்று மதங்கரைக் கண்டு
நிகழ்ந்தது கூறினர். அங்கே அனுமன் வர மதங்கர் அவர்களை
அறிமுகப் படுத்தி அனுமனுடன் அனுப்பச் சென்று சுக்ரீவ
னைக் கண்டு வரவுகூறி உதவி நாடினர். அவன் என் அண்
ணனைக் கொன்று அரசிந்தால் உனது மனைவியை மீட்டுத்தரு
வேன் என்றான். ராமன் அதற்கிசைந்து வாலியுடன் போரச்
சொல்லி ஒரு மரத்தின் மறைவிலிருந்து அம்பெய்து வாலியைக்
கொன்று சுக்ரீவனைக் கிட்கிந்தைக் கரசனாக்கி மதங்கர் நிலை
யடைந்திருந்தான்.

சீதையைப் பார்த்துவரத் தேவியோடு சென்ற இராவணன் ராமன் வாலியைக் கொன்று சுக்ரீவன் படையொடு இலங்கையை முற்ற வரப்போவதாகக் கூறிச் சென்றனன். சீதை, தன்னால் இலங்கை போர்க்கள மாவதை எண்ணிப் புலம்பிக் கொண்டிருக்கையில் பீடணன் மகள் திரிசடை அங்கு வரவே, உன தந்தையிடம் சொல்லி என்னை எப்படியாவது என் கணவனிடம் சேர்த்துப் போரில்லாமல் செய்வாயெனச் சீதை வேண்டினள். திரிசடை அவ்வாறே தந்தையிடம் சென்று கூற அவன் சரியெனக்கூறி யனுப்பிவிட்டுத் தானும் ராமனை யடைந்து சுக்ரீவன்போல் அரசனாக எண்ணி அதைத் தன் நண்பன் நீலனிடம் கூறி ஆவன செய்யுமாறு ஏற்பாடு செய்திருந்தனன்.

ராமன் சீதையைப் பார்த்துவரும்படி சுக்கிரீவனது அமைச்சனை அநுமனை அனுப்பினன். அநுமன் இலங்கை சென்று ஓர் ஆரியனால் பீட்டணன் நிலைமை யறிந்து சென்று பீடணன் மனையை யடைந்தான். பீடணன் அநுமனை வரவேற்றுத் தனது எண்ணத்தைக் கூறவே, அநுமன் அவ்வாறே செய்வதாக உறுதி கூறித் திரிசடையுடன் சென்று சீதையைத் தனியாக அழைத்து வந்து ராமன் படையொடு வந்து இலங்கையை யழித்து உன்னை மீட்டுச் செல்வா னெனவே சீதை இடுக்கிட்டு இராவணன் பெருமை கூறித் தனியாக வரும்படி கூறுமெனக் கூறித் திரிசடையுடன் சென்றனன்.

அநுமன் வெளிச் செல்லும்போது வாயிற் காவலர் பிடித்துக் கொண்டுபோய் இராவணனிடம் விட்டனர். இராவணன் அவன் வந்த வரலாற்றைக்கேட்டு, அயலாரோடு கூடி அரசைக் கொன்ற இரண்டகச் செயலைக் கண்டித்துக்கூறி, ராமனைத் தனியாக வந்து மன்னிபபுக்கேட்டு மனைவியை யழைத்தேகும்படி கூறெனக் கூறியனுப்பினன்.

அநுமன் சென்று கூறவே, ராமன் பணிவை மறுத்துப் படையுடன் சென்று இலங்கைப்புறத்துத் தங்கினன். ஒற்றரால் அறிந்த இராவணன், ராமனிடம் அதிகாயனைத் தூது விட்டான். ராமன் பணிவை மறுத்துப் போருக்குத் தயாரெனக் கூறிவிட்டனன். இராவணன பேரவை கூட்டிப் போரில் முறியடிப்பதே ஏற்றதென முடிவு கண்டனன். அப்போது பீடணனெழுந்து ராமன திறமைகூறிச் சீதையை விட்டு உறவு கொள்வோம, மீளானுயின் விந்த நாட்டை விட்டேனும் பகையின்றி

வாழ்த்தினையென்றனன். இராவணன் வெகுண்டு அவையை விட்டோட்டினன்.

அவையை விட்டுச் சென்ற பீடணன்-நீலன், வேலன், குமிலன், சேரி என்னும் படைத் தலைவருடன் சென்று அடைக்கலமென ராமன் காலில் வீழ்ந்தான். அவன் புகல் தந்து அப்போதே இலங்கை யரசனாக அவனுக்கு முடிசூட்டினான். பீடணன் இலங்கையை எளிதில் வெல்வதற்கான உளவையெல்லாம் உரைத்தனன்.

இதையறிந்த இராவணன் கடுஞ்சினங்கொண்டு போர்க்குத் தயாராகும்படி படைத்தலைவருக்குக் கட்டளையிட்டான். தானைத் தலைவர் முரசறைவித்தனர், தமிழ் மறவர் போர்க்கோலம் பூண்டு திரண்டனர்.

பொழுது புலர்ந்ததும் பகைப்படை நகர்ப்புறத்து வந்து தங்கிற்று. இராவணன் கோட்டையைக் காப்பமைக்கும்படி கட்டளையிட்டுப் பகைப்படை நிலைமையை அறிந்துவர ஒற்றரை ஏவினான். பீடணன் அவரைக் காட்டிக் கொடுத்தனன். ராமன் அவரைச் சிறையிட்டனன். இவ்வாறு பல முறை காட்டிக் கொடுத்தனன் அக்கடை மகன்.

ஆரியப்படை நகரை முற்றியது, மதில் போரில் வட்டவர் படை தோற்றது. களங்கண்டு பொருதனர், இரண்டு நாள இரவும் பகலும் ஓயாது போர் நடந்தது. இருபடையிலும் பலர் மாண்டனர்.

கும்பகன்னனுக்கும் ராமனுக்கும் கடும்போர் நடந்தது. ராமன் சமயம் பார்த்து முறையின்றிக் கைகால்களை யறுத்துக் கொன்றான். செய்தி கேட்ட இராவணன் கதறிப் புலம்பச் சேயோன் தேற்றிச் சென்று போர்க்களம்புக்கான்.

ஓரிடத்தில் கும்பலாக இருந்த ஆரியப்படையொடு தனியாகப் பொருது கொண்டிருந்தான். பீடணன் ராமனிடம் கூறி இதுவே அவனைக் கொல்ல ஏற்ற கால மென்றான். ராமனே லக்குவன், பீடணன், சுக்கிரீவன், அனுமன் முதலியோர் பெரும் படையுடன் சென்று வளைத்துப் பொருதனர். ஒருவன் பின்னிருந்து தேர்ப்பாகனைக் கொன்றான். பீடணன் குதிரைகளைக் கொன்றான். முடிவில் சேயோன் அம்புக் கூடுவறிது பட்டது, வாள் முதலிய கொண்டு பொருதான. அந்தோ! முடிவில் லக்குவன் ஓரம்பை யேவித் தமிழர்குலக் கொழுந்தைத் தலையை யறுத்துக் கொன்றனன்.

அது கேட்ட இலங்கை ஓவென்றலறியது. இராவணன் பலவாறு புலம்பிச் சீறியெழுந்து களஞ் சென்றான். இராவணனுக்கும் ராமனுக்கும் கடும்போர் நடந்தது. லக்குவன் முதலிய அனைவரும் சூழ்ந்து பொருதனர். ராமன் தேர்ப்பாகனைக் கொன்றான். பீடணன் குதிரைகளைக் கொன்றான். இராவணன் வெகுண்டு அப் பாவி மேல் எறிய வாளை ஓங்கினான். லக்குவன் குறுக்கே வந்து அம்பெய்யவே அவ் வாளை அவன் மேல் எறிந்தான். அப்போது, அதாவது—லக்குவன் பக்கம் வாளெறியத் திரும்பும் போது, மாதலி என்பான் ஒரு கூரிய அம்பை ராமனிடம் கொடுத்து, வாள் எறிந்து திரும்பு முன் கொல்க எனவே, முறை கெட்ட ராமன் அவ்வாறே தமிழகம் புலம்பத் தலையறுத்து வீழ்த்தினான். தமிழர் மாபெருந் தலைவன் உடல் மண்ணில் புரண்டது. அடுகளம் அழுகளமாயது. வண்டார் குழலி உடனுயிர் விட்டனள். யாவரையும் அடக்கம் செய்து காடு வாழ்த்திச் சென்றனர் தமிழர். ராமன் மனைவியையடைந்து பீடணனுடன் கோயில் புக்கான.

ராமன் பீடணனோடு, தமிழகத்தில் தமிழரைப் போல எல்லா உரிமையும் எய்தி ஆரியர் நிலையாய் இருந்து வாழ்தற்கேற்ற ஒப்பந்தஞ் செய்து கொண்டு, பீடணனை இலங்கை யரசனாக்கிப் பெரும்படையைக் காப்பாக வைத்துவிட்டு அயோத்தி சென்றனன். சுக்ரீவன் கிட்கிந்தை சென்றனன். பீடணன் ஆரிய அடிமையாய் அரசிருந்தனன்.

ராமன் அயோத்தி சென்று முடிபுனைந்து அரசனாகி வேத வேள்விகள் பல செய்து ஆரியரைப் போற்றி அரசு புரிந்து வருகையில், ஒரு ஆரியன் தனது மாண்ட பிள்ளையுடன் அரண்மனையையடைந்து, உனது நாட்டில் ஒரு சூத்திரன்—தமிழன் தவஞ் செய்கிறான். அதனால், எனது பிள்ளை இறந்தது' எனக் கேட்ட ராமன் ஆரியர் வழி காட்ட அங்குச்சென்று, பீடணனது ஆரிய அடிமையாட்சியை வெறுத்து வாள் வடக்கிருந்த—உயிர் விடற்கு உண்ணா நோன்பிருந்த சம்புகன் எனும் தமிழ் மகனை வெட்டி வீழ்த்தி நகருற்றான். ஆரியர் செத்த பிள்ளை பிழைத்ததெனக் கூறி விட்டனர்.

ஒருநாள் ஒரு ஒற்றன் ராமனிடம் வந்து, 'அயலான் மனையில் பலமாதம் இருந்தவளை அழைத்து வந்து வைத்துக் கொண்டான்' என ஊரார் பழிக்கின்றனர் எனக் கூறினான். ராமன் அதைச் சீதையிடம் கூறி வருந்தினான். சீதை கணவனைத் தேற்றிச் சென்று ஒருவருமறியாமல் சரயுவில் வீழ்ந்திறந்தனள். பிரிவாற்றாமல் ராமனும் அவ்வாற்றில் வீழ்ந்திறந்தான்.

# இராவண காவியம்

## பாயிரம் — தமிழ்த்தாய்

1. உலக மூமையா யுள்ளவக் காலையே
பலக லைப்பயன் பாங்குறத் தாங்கியே
இலகி யின்றுநா னென்னு மொழிக்கெலாம்
தலைமை யாந்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

2. பின்னர் வந்து பிறந்து செருக்கொடு
முன்னர் வந்த மொழிபல வீயவும்,
இன்னு மன்ன விளமைய தாயுள
தன்னி கர்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

3. கன்ன டங்தெலுங் கந்துளு வம்புயல்
மன்னி மேவு மணிமலை யாளமாம்
பொன்னின் மேனி திரிந்து பொலிவுறு
தன்னை நேர்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

4. மூவர் மன்னர் முறையொடு முன்புதம்
ஆவி யென்ன அருமையிற் போற்றிய
நாவின் மீது நடம்பயில் நாணயத்
தாவில் நற்றமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

5. மன்னை நேரெழு வள்ளலும், மற்றரும்
பொன்னை யீந்தும்பொன் போன்றதம் இன்னுயிர்
தன்னை யீந்துந் தகவுட னேம்பிய
அன்னை நேர்தமி ழன்னையைப் போற்றுவாம்.

6. எழுத்துச் சொற்பொருள் யாப்பணி யைந்தினும்
பழுத்த வாய்மொழிப் பாவலர் பண்புற
இழைத்த பாத்தொகை எண்ணில வாய்வளந்
தழைந்த முத்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

7. ஞாயி றன்னசொல் நாவலர் வாய்ப்பிறந்
தீயை வல்லோ ரிசையின் வளர்ந்துமுத்
தூய சங்கத் திருந்த தொழுதகு
தாயை நேர்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

8. இனித்த பாலினுந் தேலினு மின்சுவைக்
கனித்தொ கையினுங் கட்டிக் கரும்பினும்
நினைத்த வாயுஞ்சொல் நெஞ்சு மினித்திடும்
தனித்த மிழ்ப்பெருந் தாயினைப் போற்றுவாம்.

9. கனைத்து மூக்கியுங் கர்ருக்கு ரென்றுயிர்
இனைத்துத் தேம்பி யிடர்ப்பட லின்றியே
இனித்த வின்சுவை யோடெளி மைப்படுந்
தனைத்த ருந்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

10. பூவை யோடு பொலஞ்சிறைக் கிள்ளையும்
காவி னிற்கலி யுங்கனி யச்சொலும்,
மாவும் புள்ளுமம் மாவெனு மங்கலத்
தாவி லாத்தமிழ்த் தாயினைப் போற்றுவாம்.

## தமிழகம்

11. பண்டு நம்மவர் பாத்துப் பலவளங்
கண்டு சுற்றங் கலந்து கரவிலா
துண்டு வாழ வுதவி யுலகவாந்
தண்ட மிழகந் தன்னை வழுத்துவோம்.

12. நினைத்த நெஞ்சு நெகிழநந் தாயகம்
அனைத்து மூண்டுநீ யாழியோ டாரியம்
இனைத்த ளவுட னின்றியாங் கண்டுள
தனித்தி ராவிடத் தாயினைப் போற்றுவாம்.

## தமிழ்மக்கள்

13. ஒழுக்க மென்ப துயிரினு மேலதன்
இழுக்கம் போலிழி வில்லை யெனுஞ்சொலைப்
பழக்க மாக்கிப் பயின்று பயின்றுயர்
வழக்க மாந்தமிழ் மக்களைப் போற்றுவாம்.

---

8. நினைத்த நெஞ்சும் சொல்வாயு, எனக் கூட்டுக.

குன்று மாரியக் கொள்கை மறுத்தெதிர்
நின்று தாழ்ந்த நிலைமையை யெய்தியும்
நன்றி யேனுந்தங் கொள்கையை விட்டிடா
வென்றி மேதமிழ் வீரரைப் போற்றுவாம்.

15. கள்ள ரென்று மறவரென் றுங்கடைப்
பள்ள ரென்றும் பறையரென் றும்பழித்
தெள்ள நொந்து மியல்பிற் றிரிகிலா
மள்ள ராந்தமிழ் மக்களைப் போற்றுவாம்.

16. ஒருது ளிகடு வுண்ணினும் பால்கெடும்
பொருளை யாய்ந்தயற் புன்மையைப் போக்கியே
பெருமை வாழ்வு பெறுதற் கவாவியே
வருத வித்தமிழ் மக்களைப் போற்றுவாம்.

புலவர்

17. பலது றைத்தமிழ்ப் பாட்டு முரையுஞ்செய்
துலக மின்புற வோதியுந் தாய்மொழிக்
கலகி லாததொண் டாற்றிய முத்தமிழ்ப்
புலவர் பொன்னடிப் போதை வணங்குவாம்.

18. மூப்பி யன்றநம் முன்னவர் வாழ்விய
லாப்ப யின்ற வொழுக்க மனைத்தையும்
யாப்பி யற்படி நூல்செய் தளித்ததொல்
காப்பி யப்பெரி யாரைக் கருதுவாம்.

வேறு

19. இக்கதைக் கடிப்படை யிவைக ளாமென
அக்கறை யொடுதமிழாய்ந்து கண்டுமே
தக்கசெந் தமிழ்வளர் தந்தை தாயராம்
ஒக்கலைத் தமிழ்வள ருளத்தி ருத்துவாம்.

---

14. குன்றும்—இழிந்த

### அகவல்—வேறு

20. மலையுங் காடும் வயலுங் கடலுமா
முலக நான்கு முறுவளந் தேங்கிய
நிலைய மாக நிகழ்த்திய நானிலத்
தலைவர் பொற்கழல் தம்மை வழுத்துவாம்.

### வேறு

21. படியிடை முத்தமிழ்ப் பாவல ராகவும்
கடியுடைத் தமிழகக் காவல ராகவும்
வடிவுடை முதுதமிழ் மரபினின் மேவிய
முடியுடை மூவர்தம் மொய்கழல் போற்றுவாம்.

22. இலங்கையை யடைதர இளையபாழ்ம் பாவியும்
அலங்கியே யாரியர்க் கடிமையாய்ப் படையொடு
தலங்கியே யெதிர்வரக் கண்டுமத் தமிழ்மனங்
கலங்கிடா விறையவன் கழலிணை போற்றுவாம்.

### வேறு

23. கொண்டோன் களப்படவக் கொலைகார ஆரியருங்
கண்டே யிரங்கக் கணவ னுடனவிந்து
தண்டாத் தகையதமிழ்த் தாய்மானங் காத்துயர்ந்த
வண்டார் குழலி மலர்ச்சிலம்பை வாழ்த்துவமே.

### முப்பால்—வேறு

24. மெய்வ கைதெரி மேலவர் போலயாம்
செய்வ தின்னசெய் யாதன வின்னென
உய்வ கைமுழு தோர்ந்து பழந்தமிழ்
ஐயர் யாத்த வறத்தினைப் போற்றுவாம்.

25. திருவுங் கல்வியுஞ் செய்தொழின் மேன்மையும்
மருவு நண்பு மருவலர் தன்மையும்
செருவு மாட்சித் திறன்முத லாகிய
பொருவி லாத பொருளினைப் போற்றுவாம்.

---

22. அலங்குதல்—தத்தளித்தல். தலங்குதல்—இடு செயல் புரிதல்.

26\. மனைய றத்தின் வகையமை காதலர்
தனைநி கர்த்தவர் தம்மைத் தெரிவுறத்
தினைநி கர்த்தள வேனுஞ் செயும்பயன்
பனைநி கர்த்தவின் பத்தினைப் போற்றுவாம்.

## அவை யடக்கம்

27\. ஏசு வார்சிலர்; ஈதுண்மை யேயெனப்
பேசு வார்சிலர்; பேச வெதிர்மனங்
கூசு வார்சிலர்; கூக்குர லார்சிலர்;
மாசி லாத்தமிழ் மாக்கதை கேட்கினே.

28\. வழியெ தென்னும்; வரன்முறை மாற்றிய
பழிய தென்னும்; பகைகொ டுரைவசை
மொழிய தென்னு; முறைமை யிலாதவிழ்
தொழிய வென்னு; மொழிப்பகா மென்னுமே.

29\. வடக்கி ருந்திங்கு வந்த கதையினைக்
கிடக்கை மாற்றிக் கிளந்து வடக்குற
நடக்கை யாக்கிய தன்றி யிதிற்புலப்
படக்கி டந்ததீ தொன்றிலைப் பார்க்கினே.

30\. பொய்வித் தான புரட்டொடு பூரியத்
தெய்வத் தன்மைத் திருட்டை யகற்றியே
மெய்வித் திட்டு வினைவின் பயன்கொள
உய்வித் தேமலா னென்றும்வே றின்றிதே.

31\. கொடுமை யாமனுக் கோதுடை யாரியக்
கடிமை வாழ்வி னழுந்துவார்க் கென்செயும்?
அடிமை வாழ்வி னகன்று விடுதலை
அடைய மேவுந் தமிழர்க்கி தாகுமே.

32\. தமிழர் தாழ்வு தனையெடுத் தோதியே
தமிழர் வாழ்வு தனைநிலை நாட்டலான்
தமிழ ரென்னு முணர்வு தலைப்படும்
தமிழர் யாருந் தலைக்கொளு வாரரோ.

---

31\. மேவுதல்—விரும்புதல்

33 கோதி லாத குழந்தை குதலையைத்
தீது நன்றெனத் தேர்வரோ பெற்றவர்?
ஈது நந்தமி ழின்கதை யேயிதை
ஓது நாவனு முங்கள் குழந்தையே.

34 இன்மை யேது மிலாமை யெலாமுணர்
நன்மை சேர்தமிழ் நாவலர்ச் சேருமென்
புன்மை யான பொருளு மடைந்ததன்
தன்மை யாகுநன் னீரின் றகையவாம்.

35 வசைம விந்த மறுக்கெட வண்டமிழ்ப்
பசைம லிந்து பயின்று பயன்பெற
இசைம லிந்த இராவண காவியம்
திசைம லிந்து சிறந்து திகழ்கவே.

காலம். வேறு

36. அமைகடைக் கழகப் பின்னே ராயிரத் தெண்ணூற் றைந்தாய்
இமையுமா யிரத்துத் தொள்ளா யிரத்தொடு நாற்பத் தைந்தில்
அமைவுறக் குழந்தை நன்காய்ந் தருந்தனிந் தமிழ்ப்பா வாக்கக்
கமையுறு தமிழர் மேலோன் காவியஞ் சமைந்த வாறே.

நூற்பயன்

37. தந்நிலை யுணர்ந்து வாய்மைத் தமிழர்க ளடிமை வாழ்வாம்
இந்நிலை தவிர்ந்து முன்ன ரிழந்தத முரிமை யெய்தி
முன்னிலை யடைந்து வாழு முறையொடு வாழ்வர், வீரக்
கன்னிலை நின்ற மேலோன் காவியம் பயிலு வோரே.

---

36. இமையும்—திகழும். கமை—பொறுமை. கடைக் கழக முடிவு, கி. பி. 140க்குள் என்பது ஆராய்ச்சி யறிஞர் முடிவு. கடைக்கழக முன்—'கம்முன், க. மு' எனவும்; கடைக்கழகப்பின்—'கப்பின், க. பி' எனவும் வழங்கலாம். கி. பி. 1945—க. பி. 1805. 37. கல் நிலை.

# 1. தமிழகக் காண்டம்

## 2. தமிழகப் படலம்

### வேறு

1. தெண்டிரை மூன்று திசையுநுங் காப்ப
வண்டமிழ் விந்த மலைவடக் கார்ப்பப்
பண்டுந முன்னர் பயன்பட வாழ்ந்த
தண்டமிழ் வேலித் தமிழகங் காண்பாம்.

2. நனிமிகு பாண்டிநந் நற்றமிழ்ச் செல்வி
பனிமலை காறும் பகைசிறி தின்றி
இனிதுயர் வெண்குடை நீழ லிருந்து
தனியர சோச்சித் தமிழகங் காத்தாள்.

3. சீரியல் வாய்ந்த செழுந்தமி ழன்னை
மாரி வழங்கும் வடதலை நாட்டை
ஆரிய ரென்னு மயலவர் தங்கள்
பேரறி யாத பெருமையி னாண்டாள்.

4. விந்த வடக்கு விளங்கி யிருந்த
நந்தமிழ் மக்கணன் னாகரி கத்தைச்
சிந்து வெளிப்புறந் தேறி யறிந்தார்
சிந்தை மகிழ்ந்து செருக்குற நாமே.

5. சிந்துவி னின்றே திசையிசை மேய
அந்தநன் னாட்டி னகன்றதன் மேற்கில்
நந்திய வாணிக நாடிருப் பாக
வந்தனர் வாழ்ந்து மணித்தமிழ் மக்கள்.

### பெருவளநாடு

6. தன்கடன் குன்றித் தமிழகங் கொண்ட
தென்கடல் முன்பு செழுந்தமிழ் நாடா
நன்கட னாடு நனிவளந் தேங்கிப்
பொன்கட னாடப் பொலிந்தது காணும்.

---

5. நந்திய-தழைத்த. வாணிக நாடு-யவன நாடு.

6. கடல்நாடும்-கடலும் விரும்பும். பொன் கடன் நாட-செல்வம் கடன் கேட்க.

7. ஆயிரங் கல்வி னகன்ற பரப்ப
தாயய ஞுடா ரவாவுற, நீங்கிப்
போயவ ரேங்கப் பொலிவுறு செல்வம்
தாயது பண்டக சாலையை மானும்.

8. ஆயகன் னூட்டி னணியுறுப் பாக
ஞாயிறு செல்ல நடுக்குற வோங்கிச்
சேயுயர் வானின் றிகழ்மணித் தூணின்
மீயுயர் செல்வக் குமரி விளங்கும்.

9. அம்மலை தோன்றி யதன்பெயர் பெற்றுக்
கைம்மலை கண்டு களித்தெதிர் செல்லும்
மைம்மலை போல வளனுறப் பாய்ந்தே
அம்மலை நாட்டையவ் வாறணி செய்யும்.

10. நாட்டு புகழ்த்தமிழ் நாட்டி னதுதென்
கோட்டிலின் றுள்ள குமரி முனைக்கு
நோட்ட மிகுமிரு நூறுகற் றெற்கில்
ஊட்டுங் குமரியா றோடின காணும்.

11. அம்மலைத் தெற்கி னணிமுகில் மேயும்
செம்மலை வீழ்க்குந் திரடொடர் மேய
பன்மலை யோடு பழந்தமிழ் நாட்டு
மன்மலை யாத மணிமலை யோங்கும்.

12. அத்தொடர்க் குன்றத் தருமக வாகி
முத்தமி ழாளர் முதுநெறி போலப்
பத்தி யருதுசெல் பஃறுளி யாறு
புத்துண வாக்கிப் புதுவிருந் தாற்றும்.

---

9. கைமலை—யானை. அ மலைநாடு—குமரிநாடு. இது, பெருவளத்தின் மறுபெயர்.

10. நோட்டம்—பார்வை. ஊட்டுதல்—வளஞ்செய்தல்.

11. செம்மல்—(பகைவரின்)செருக்கு. திரள் தொடர். மலைதல்—மயங்குதல்.

13. ஐவளம் பட்ட வளக்கும ரிக்கும்
நொய்வளம் பட்டவைந் நூறுகற் றெற்கில்
பைவளம் பட்டநீள் பஃறுளி யாறு
பெய்வளம் பட்டுப் பெருகியே சென்ற.

14. இன்னு முகிலின மேயபல் குன்றுந்
துன்னுபல் லாறுந் தொகுவளஞ் செய்ய
என்னிலை யென்றவ் விருநில மங்கை
மன்னு பெருவளம் வாய்ந்து பொலிந்தாள்.

### தென்பாலி

15. அப்பெரும் பஃறுளி யாற்றின தெற்கில்
திப்பிய தென்கடல் தெற்கின தாகக்
கப்பிய பல்வளங் காமுற யாரும்
நப்புகழ் மேயதென் பாலி நளியும்.

16. இடைநில மைந்துநா றெண்ணரு கல்விற்
படவொளி மேய பவளமு முத்தும்
கொடுகுட நாட்டுக் கொழும்பொரு ளோடு
கடல்வளங் கண்டு களித்ததந் நாடே.

### பெருவளம் தென்பாலி

17. குணகரை குன்றங் குறும்பனை யோடு
மணமிகு தெங்க மதுரைமுன் பாலை
இணருபின் பாலையோ டேழ்தலை மேய
உணவமல் நாற்பதோ டொன்பது நாடே.

---

13. நொய்—மென்மை. பை—பசுமை, அழகு.
பெய்வளம்—மழைவளம்,

14. 'என் னிலை'—தருக்குச் சொல்.

15. ந - சிறந்த. நளியும் - பரந்திருக்கும்.

17. இணர்தல் - நெருங்குதல். அமலுதல்-பெருத்தல். ஏழ்தலைமேய - ஏழ்என்னும் எண்ணை முதலிலு டைய. ஏழ்குணகரைநாடு, ஏழ்குன்றநாடு. ஏழ் குறும்பனைநாடு, ஏழ்தெங்கநாடு, ஏழ்மதுரைநாடு, ஏழ்முன்பாலைநாடு, ஏழ்பின்பாலைநாடு எனக் கொள்க.

18. கொல்லம தோடு குமரி முதலா
மல்லன் மிகும்பன் மலைவள நாடும்
எல்லியல் பாகவே ழேழொடு குன்று
நல்லியல் பாகவந் நாடு பொலிந்த.

வேறு

19. பருவ ளக்குமரி யோடு பஃறுளி யாறு வீறுகொடு
பாய்தலான்
பெருவ ளத்தின தாற்பெ ருவள நாடெ னும்பெயர்
பெற்றதால்;
குருவ ளக்குமரி பாய்த லாற்குமரி நாடெ னும்பெயர்
கூறுமால்;
மருவ ளத்ததென் பாலி ருத்தலான் வழங்கு
மஃதுதென் பாலியே.

வேறு

20. தன்னிகராந் தமிழ்வளர்க்கத் தலைச்சங்கந் தனைநிறுவி
மன்னுபெரும் புகழ்பூத்த மழைவளக்கைப்
பாண்டியர்தந்
துன்னுமுயர் பதியான தொன்மதுரை யெனுநகரைத்
தன்னுடைய தலைநகராத் தான்கொண்ட தந்நாடே.

21. அந்நகரம் பஃறுளியாற் றங்கரையி னுலகினுள
எந்நகரு மிந்நகருக் கிணையாகா தெனும்படிக்குத்
தன்னிகராந் தமிழ்வளர்க்குந் தலைக்கழக மோடுதமிழ்
மன்னர்களும் புலவர்களும் வாழ்நிலையா யிருந்ததுவே.

திராவிடம்

22. அந்நாட்டின் வடக்காவா னணிவிந்த மதன்றெற்கா
நன்னாட்டின் முன்னாட்டு நாடாநன் னலங்காட்டும்
பன்னாட்டு முன்னிட்டும் பயன்காட்டும் படியமைந்த
தென்னாட்டின் வடநாடாந் திருநாடு திகழ்ந்ததுவால்.

---

18. கொல்லம், குமரி முதலிய மலைநாடுகள். எல்—பெருமை. நல் இயல்பு ஆக—நல்ல வளம் பொருந்த. அ நாடு—பெருவளமும் தென் பாலியும்.

23. மலைப்பிறந்து கற்றவழ்ந்து மலைச்சாரல் வழிநடந்தே
இலைப்பரந்த நறுமுல்லை எதிர்கானத் திடைவளர்ந்து
தலைப்பிறந்த வளமருதந் தனைமருவிப் பயனுதவி
அலைப்புகுந்து நலம்புரியு மாறென்ப ரவ்வாறே.

24. வடவரையு மிடைவரையும் வானளவுங் குடவரையும்
மிடைவரையா தெழுகோதா விரிகாரி பெண்பாலி
தடவரைகா விரிவாலி தமிழ்வையை பொருனைமுதல்
நடைவரையா வாறுகளால் நல்வளத்த திருநாடு.

25. மலைவளமுங் கான்வளமும் மருதவயற் பெருவளமும்
அலைவளமுந் தலைமயங்கி யருவளமா வமைந்தொடு
நிலவளநீர் வளமெல்லாம் நிலைவளமா நிலவியதால்
இலகுதிரா விடமெனப்பே ரேற்றதுவா லிந்நாடே.

26. மஞ்சுதவழ் தருமேற்கு மலைத்தொடர்கீழ்ப் படமேற்கில்
விஞ்சுபுகழ்ப் பெருஞ்சேர வேந்தரிருந் திலிதாண்ட
வஞ்சியெனப் பெயர்பூண்ட மலிவளத்த திருநகரைக்
கொஞ்சுதலை நகராகக் கொண்டதுவா லிதன்கீழ்பால்.

கிழக்கு நாடு

27. சிங்களஞ்சா வகமுதலாந் தீவுகளுந் திரையோவா
வங்கவிருங் கடற்பரப்பும் மரஞ்செறிகான் மலையருகச்
செங்கரும்புஞ் செந்நெல்லுஞ் செருக்கொடுவான்
றொடவிகலும்
பொங்குவள வயல்மருதம் புனைநாடாப்
பொலிந்ததுவே.

28. அம்மருத வளநாட்டி னணிநாகை யெனுநகரில்
மும்மதிலின் கோயிலிடை முறைதிறம்பா வகையிருந்து
செம்மையுடன் றமிழர்களைத் திசைமணக்குந்
தமிழ்ச்சோழர்
தம்முயிரின் காப்பேபோற் றனிக்காத்து வந்தனரே.

---

24. மிடைதல்—நிறைதல். வரைதல்—நீக்கல். காரி—கிருஷ்ணா. பெண்-பெண்ணையாறு. நடைவரையா-வற்றா. 25. திரு ஆ இடம்—செல்வம் பொருந்திய இடம். திரு—செல்வம். ஆ—ஆகும், ஆதல்.

29. அந்நாடு கிழக்கிருந்த தாற்கிழக்கு நாடெனவும்
முன்னோடு மருதவள முதன்மைகொடிந் திரமெனவும்
தென்னாடுந் திருநாடும் செவிகேட்கும் புகழ்வாய்ப்ப
எந்நாடு மிணையில்லை மெனவேங்க விலங்கினதே.

30. அக்கிழக்கு நாட்டொடுநல் லணிகிளர்தென்
பாலியும்பொன்
தொக்கிருக்கும் பெருவளமுந் தொலைவறியாத்
திராவிடமும்
மக்களுக்கும் புட்களுக்கு மாக்களுக்கும் வேண்டுவன
புக்கிருக்குந் தமிழகமாப் பொருவிலவாப்
பொலிந்தனவே.

ஐந்நிலம் - குறிஞ்சி

வேறு

31. இவ்வகை நான்குட னியன்று பல்வளந்
துவ்விய தமிழகந் துணிந்த மேலவர்
செவ்விய முறையினிற் சென்ற வைந்நிலக்
குவ்வையின் முதலிய குறிஞ்சி காணுவாம்.

32. இடிகுரல் யானைதன் னிணைய வின்னுயிர்ப்
பிடிபசி களைந்திடப் பெரிய யாக்கிளை
முடியது படியுற முறிக்கு மோசையாற்
படிசிறு கிளியினம் பறந்து செல்லுமால்.

33. அருவிய முருகிய மார்ப்பப் பைங்கிளி
பருகிய தமிழிசை பாடப் பொன்மயில்
அருகிய சிறைவிரித் தாடப் பூஞ்சினை
மருவிய குரக்கினம் மருண்டு நோக்குமால்.

---

29. முன்—கிழக்கு. இந்திரம்—கிழக்கு, தலைமை.
31. குவ்வை—கூட்டம். 3 . யா—ஒருமரம். படி—நிலம்.
33. முருகியம்—குறிஞ்சிப்பறை.

34. பன்றியி னினமுருப் பரணங் காப்பருஞ்
சென்றற முதிர்தினைக் கதிர்கொய் செம்மருங்
கன்றிய வள்ளியின் கிழங்கு கன்னருங்
குன்றெறி ரொலிபடக் குறிஞ்சி பாடுவர்.

35. கிளிகடி பரணிடைக் கிளவி வேட்டவன்
குளிர்நிழல் வேங்கையிற் குரவை யாடிடும்
அளிமுரல் குழலியி னளகத் துண்மறை
ஒளிமுக மதியினை யுருவி நோக்குமால்.

36. அடுப்பிடு சாந்தமோ டகிலின் நாற்றமும்
துடுப்பிடு மைவனச் சோற்றி னாற்றமும்
மடுப்படு காந்தளின் மணமுந் தோய்தலாற்
கடைப்படு பொருளெலாங் கமழுங் குன்றமே.

37. தண்டமி ழகமெனுந் தாயின் மங்கலங்
கொண்டணி விழவயர் குறிச்சி முன்றிலிற்
றொண்டக முழங்கிடத் தோலின் யாக்கையர்
கண்டெனு மொழிச்சியர் களிப்ப வாடுவர்.

38. சந்தன முன்றிலிற் றங்கை பாவையை
மந்திகை செய்துள மகிழச் செய்யுமால்;
குந்தியே கடுவனுங் குழந்தை பூண்மட
லந்திகழ் கிலுகிலி யாட்டித் தேற்றுமால்.

வேறு

39. தேனுந்தினை மாவுந்தொகு தெளிவுந்தெளி தேனை
மானுஞ்சுனை நீருங்கழை யோடைவன மடையும்
கானந்தரு கிழங்கும்பல கனியுங்கனி மொழியார்
ஏனந்தனி லேகந்திட விளிதாவிருந் தயரும்.

---

34. கன்றுதல்—முதிர்தல். கல்நர்—தோண்டுவோர். 35. அளி—வண்டு. அளகம்—மயிர். 36. சாந்தம்—சந்தனமரம். ஐவனம்—மலைநெல். 37. குறிச்சி—குறிஞ்சி நிலத்தூர். தொண்டகம்—குறிஞ்சிப்பறை. 38. மடல்—ஓலை. கிலுகிலி—கிலுகிலுப்பை. 39. தெளிவு—கனிச்சாறு. கழை—மூங்கிலரிசி.

## வேறு

40. துளிபிகு கூதிரிற் றுணைமை யோடுயிர்
களிமிகு யாமமெய் கலந்தங் கின்புற
அளிமிகு காதல ராகி யன்பது
கொளவிட மாய்மழைக் குறிஞ்சி மன்னுமால்.

## முல்லை

41. கொல்லியந் தேனெனுங் குதலை வாய்த்தமிழ்ச்
சொல்லியர் மூத்தொடு துலிவு கொண்டொளிர்
பல்லென மலர்ந்தவர் பணியத் தோள்பெறும்
முல்லையம் புறவடர் முல்லை காணுவாம்.

42. பூவையுங் குயில்களும் பொலங்கை வண்டரும்
பாவிசை பாடமுப் பழமுந் தேனுந்தந்
தேவிசை பெறுங்கடற் றிடையர் முக்குழல்
ஆவின மொருங்குற வருக ணைக்குமால்.

43. மக்களுக் குணவிட வளைக்கை யாய்ச்சியர்
கக்கமுக் கிடத்தயிர் கடையு மோசைகேட்
டக்கறைக் கொண்டுபார்ப் பணைக்கும் பேடையைக்
கொக்கரக் கோவெனக் கூவுங் கோழியே.

44. முதிரையுஞ் சாமையும் வரகும் மொய்ம்மணிக்
குதிரைவா லியுங்களங் குவித்துக் குன்றெனப்
பொதுவர்கள் பொலியுறப் போர டித்திடும்
அதிர்குரல் கேட்டுழை யஞ்சி யோடுமே.

---

மடை—சோறு. 'அயரும்' எனச் செய்யுமென்
முற்றுப் பல்லோர் படர்க்கையில் வந்தது.
பின்னும் இவ்வாறு வருவன கொள்க.

40. அளி—அன்பு. 41. புறவு-காடு. 42. கடறு—காடு. முக்குழல் — கொன்றை, ஆம்பல், வேய்ங்குழல். 43. கக்கம்—தோளிடுக்கு (கச்சு) முக்கிட—வருந்த, பார்ப்பு—குஞ்சு. 44. பொதுவர்—முல்லைநில மக்கள். பொலி—தவசக்குவை. உழை—ஒருவகை மான்.

45. சிறுமறிக் குழாத்தொடு செல்லு மாப்பிணை
குறுகிடக் கலையிளங் குரலிற் கூவவே
குறுநடைச் சிறார்மறிக் குட்டி யீட்டிடக்
குறுமுயற் றேற்பறை கொட்டு வாரரோ.

46. கொன்றையம் புறவிடைக் கொடியின் மின்னரிவான்
குன்றுறை யிளையகார் குறுகி மாலையிற்
சென்றவர் வரவெதி ருள்ளிச் செவ்வியர்
முன்றிலி லிறைகொள முல்லை யோங்குமால்.

## பாலை

47. எல்லிய முதுவெயி லெறிப்ப நல்வள
முல்லையுங் குறிஞ்சியு முறைமை தப்பியே
நல்லியல் பிழந்தற நலிவு செய்திடும்
பல்லவங் கருகுவெம் பாலை காணுவாம்.

48. வற்றிய விருப்பையும் வதங்கு மோமையும்
துற்றிய யானைதன் றுணைக்கை யைப்பிடி
பற்றியே யுரலடி பதைப்ப வெங்கனல்
சுற்றிட வுடல்துடி துடித்துச் செல்லுமே.

49. மன்னிய முதுவெயில் வளைப்ப வாய்வெரீஇ
இன்னிளங் குருளைமிக் கிளைந்து வெம்பிடத்
தன்னிழல் தங்கவே தாய்மை மீதுற
நன்னரில் வலியசெந் நாயு யங்குமே.

50. போதர வேவிடாய் புலம்பிப் பொள்ளென
மாதறு நீர்ச்சுனை மருவி நீர்பெறுப்
பாதிரி யலர்பறந் தலையின் பாவிரீஇத்
தாதுணம் புறவினந் துயருற் றேங்குமே.

---

45. மறி-ஆடு. பிணை-பெண்மான். கலை-ஆண்மான்.

46. இறைகொளல் - இருத்தல். 47. எல்லி - ஞாயிறு. பல்லவம் - தளிர்.

49. வெரீஇ - வெருவி. வாய்வெருவுதல் - சோர்வால் வாய் குழறுதல். குருளை - குட்டி. தாய்மை-அன்பு. நன்னர் இல் - நலமில்லாத. உயங்குதல்-வருந்துதல்.

50. மாது-அசை. பறந்தலை-பாலைநிலத்தூர். தாது உண் அம் புறவு. தாது-பருக்கைக்கல்.

51. கடிக்கமழ் மராமலர்க் கண்ணி யஞ்சிறூர்
படிக்குற வெருத்துக்கோ டன்ன பாலைக்காய்
வெடிக்கவிட் டாடிட விரும்பிக் கோலினால்
அடிக்குமோ சையிற்பருந் தஞ்சி யோடுமே.

52. பொருந்திய நண்பகற் போதிற் காளைபின்
திருந்திழைக் கன்னியுஞ் செல்லக் கண்டுமே
இருந்துமே யெம்மனை யின்று நாளைநீர்
விருந்துண்டு சென்மென வேண்டிக் கொள்வரே.

53. தோட்டுணை யாகவே சுரிமென் கூந்தலைக்
கூட்டியே செல்பவன் குற்ற மற்றவன்
ஆட்டிநீ 'பிரிக்கலை' யென்றவ் வன்னையை
மீட்டுமே யூர்செல விடுக்கு வார்களே.

54. ஓட்டிய சுற்றமாங் குறவே மீளியைக்
கட்டியே தழுவிடுங் கற்பைக் கண்டுமே
விட்டிரு வோரையும் விலகு வார், சிலர்
இட்டிரு வோரையு மேகு வார்களே.

55. அடிபடு நிரைகவர் பறையி னார்ப்பினாற்
கொடுவரி வெருவுறா உங் கொதிகொள் வெஞ்சுரம்
துடியிடை யினைதரத் துரந்து செல்பவர்
படருற நண்பகற் பாலை மன்னுமால்.

மருதம். வேறு

56. கல்லிடைப் பிறந்த யாறுங் கரைபொரு குளனுந்
தோயும்,
முல்லையம் புறவிற் றோன்று முருகுகான் யாறு பாயும்,
நெல்லினைக் கரும்பு காக்கும், நீரினைக் கால்வாய்
தேக்கும்,
மல்லலஞ் செருவிற் காஞ்சி வஞ்சியு மருதம் பூக்கும்.

---

51. கடிகமழ்-மணம்வீசும். படிக்குஉற-நிலத்தில்விழ.
52. இன்று இருந்து விருந்துண்டு நாளை சென்மென.
53. தோள்துணை. ஆட்டி-பெண், 'அம்மா' என்றபடி.
அன்னை-செவிலி. 54. மீளி - பாலைநிலத்தலைவன்.
கற்பு-மணஞ்செய்து கொள்ளும் விருப்பம். 55. நிரை
ஆவினம். கொடுவரி-புலி. படர்-துயர். 56. கல்-மலை.
முருகு-தேன், மணம். மல்லல்-வளம். செறு-வயல்.

57. சேற்றினை யுழுவார் சேற்றிற் செந்நெலை விதைப்பார் செந்நெல்
நாற்றினை நடுவார் நாற்றின் நடுக்களை களைவார் நன்னெல்
தூற்றினை யறுப்பார் தூற்றின் சுமையினைச் சுமப்பார் சுற்றும்
ஏற்றினை யுதைப்பா ரேற்றி லிகல்வலி யுழுநர் வாழ்வே.

58. நிலையிலாப் பொருளை நீக்கி நிலைப்பொரு ளாக்குமாபோல்
அலைபடு பதரும் புல்லு மப்புறப் படுத்தி யான்ற
கலைவலா ருள்ளம் போன்ற களத்திடைக் களமர் மேலை
மலையெனக் குவித்துச் செந்நெல் மணிப்பொலி தூற்று வாரே.

59. தூற்றிய பொலியைத் தங்கள் தொழிலினுக் குதவி நாளும்
ஆற்றிய வினைஞர்க் கெல்லா மளவறிந் தளித்துப் பெற்ற
பேற்றினை யில்லஞ் சேர்த்துப் பெருநிலக் கிழவி தன்னைப்
போற்றியே பொலிக வென்று பொங்கல்வைத் துவக்கு வாரே.

60. போர்க்களம் பாடிப் பெற்ற பொன்மலர் பொலியச் சூடி
மாக்கிணைப் பொருநர் செந்தா மரைக்குள மருதம் பாடி
ஏர்க்களம் பாடிப் பெற்ற பரிசினை யிணையி லாத்தம்
ஊர்க்களம் பாடுவார்தம் முடைப்பரி சாக்கு வாரே.

61. மரைமலர்க் குளத்தி லாடும் மயிர்த்தலைச் சிறுவர் நீண்ட
பொருகரிக் குருத்த ளந்து பொம்மெனக் களிப்ப ரோர்பால்,
குரைகழற் சிறுவர் போரிற் குலுங்கியே தெங்கின் காயைப்
புரைதபப் பறித்துக் காஞ்சிப் புனைநிழ லருந்து வாரே.

---

57. சுற்றுதல்-தாம்பாடுதல், போரடித்தல். ஏறு-எருது. இகல்-மாறுபாடு.
60. இணை-மருதப்பறை. ஊர்க்களம்-ஊரிடம்.
61. கரிக்குருத்து - யானைக்கொம்பு. போர்-வைப்போர். புரைதப-குற்றமின்றி

62. மழுக்குதா ராக்குஞ் சுக்கு வாத்திளங் குஞ்சு நீத்தம்
பழக்கவக் காட்சி யைத்தாய் பார்த்துள மகிழு
மோர்பால்;
வழக்குறு மக்க ளுண்டு வழிச்செல விளநீர்க் காயைக்
கொழுக்கவுண் டலுத்துப் போன குரக்கினம் பறித்துப்
போடும்.

63. நீரகம் பொருந்த நீரார் நிலவளந் திருந்த நீடும்
ஊரகந் தோறுஞ் செந்நெ லுணவக மருவ வூணின்
சீரக வியலா ரூடல் செய்யும்வை கறையி லேரார்
பாரக முழவேர்ப் பூட்டும் பைம்புனல் மருத
மோங்கும்.

## நெய்தல்

64. பொன்னென மலருந் தூய புன்னையங் கான லாங்கண்
முன்னிய வலிய கோள்வல் முதலைய, மதலை யுப்பு
மன்னுநீள் கழிக்கண் மூத்த மகன்றிலம் புணர்ச்சி
வாய்ந்தார்
தன்னிகர் கொண்க னோடு தாழைவீ ழூச லாடும்.

## வேறு

65. பட்டினும்பஞ் சினுமயிர்செய் யாடை பீலி
பன்மணிசங் கணிபன்மணப் பண்ட மேற்றி
முட்டிலய னாடிறக்கி நிறைபொன் கொண்டு
முத்தமிழின் கொடிநுடங்கக் கரையை நோக்கி

---

62. மழுக்குதல்-நீந்தத்தாழ்த்தல். வழக்குறுதல்-நடத்தல்.

63. ஊணின் சீரக இயலார்-சமையற் றொழிலில் வல்லமகளிர். பாரகம்உற-தமிழகம்மேம்பட, உண்டுவாழ.

64. கானல் - கடற்கரை. மதலை-இன்றியமையாதது. மூத்த-மிக்க. மகன்றில்-இணைபிரியாது வாழும் ஓர்நீர்ப்பறவை.

65. முட்டு-தடை. மட்டு-தேன், மணம். ஆலித்தல். ஒலித்தல்.

மட்டவிழ்பூந் திரையில்வருங் கப்பல் கண்டு
'வாழ்கதமிழ், வாழ்கதமிழ் மக'மோ வென்னப்
பட்டினமக் கடல்வளம்பட் டெனவா வித்துப்
பரதவரப் பெருங்கடலின் பயன்கொள் வாரே.

**வேறு**

66. பசிபட வொருவன் வாடப் பார்த்தினி திருக்கும் கீழ்மை
முசிபட வொழுகுந் தூய முறையினை யறிவார் போல
வசிபட முதுநீர் புக்கு மலையெனத் துவரை நன்னீர்
கசிபட வொளிமுத் தோடு கரையினிற் குவிப்பா ரம்மா.

67. பாணியுஞ் சீருந் தூக்கும் பண்ணொடு பொருந்தச் செங்கை
ஆணியுந் திவவுங் கூட்டி யமைத்தயாழ் நரம்பைச் சேர
மாணிழைப் பரத்தி பாட மகன்றில்கேட் டுவக்கும் பாக்கம்
காணிய கலமுள் ளோர்க்குக் கலங்கரை விளக்கங் காட்டும்.

68. வருமலை யளவிக் கானல் மணலிடை யுலவிக் காற்றிற்
சுரிகுழ லுலர்த்துந் தும்பி தொடர்மரை முகத்தர் தோற்றம்
இருபெரு விசும்பிற் செல்லு மிளமைதிர் மதியந் தன்னைக்
கருமுகில் தொடர்ந்து செல்லுங் காட்சிபோற் றோன்று மாதோ.

69. திரைதரு பொருளு முப்புச் செறிவிலாப் பொருளு மல்கக்
கரைவரு கப்பல் நோக்கிக் கானலம் புன்னை சாய்ந்து
நரையிதழ்ப் பரத்தி யேங்கு நாள்வெயிற் காலை யும்பின்
பெருவளக் குவியல் வீட்டும் பெருமணல் நெய்தலோங்கும்.

---

66. முசிதல்-அறுதல். முசிபடுதல்-கெடுதல். வசிபட-இருப்பிடம் கெட, துவர்-பவளம். நீர்-தன்மை.
67. பாணி, சீர், தூக்கு-தாளவகை. பாணி-எடுப்பு. சீர்-முடிப்பு. தூக்கு-நிகழ்ச்சி. திவவு-வார்க்கட்டு.
68. அளவுதல்-சேரடல். 69. மல்க-நிறைய. நரை இதழ்-(பிரிவால்) வெளுத்த இதழ்.

## திணைமயக்கம்

70. ஆய்ச்சியர் கடைந்த மோரு மளையொடு தயிரும் பாலும்
காய்ச்சிய நெய்யும் விற்றுக் கரும்பினைக் கசக்கப் பண்ணும்
வாய்ச்சியர் தந்த நெல்லும் வழியிடை யுப்புங் கொண்டு
போய்ச்சுவை படச்சோ றாக்கிப் புசிப்பர்தங் கிளைக ளோடே.

71. குன்றுறை கோட்டி யானை குறுகியே பழனந் தன்னைத்
தின்றுசெங் கரும்பைக் கையிற் செழுங்கிளைக் காகக் கொண்டு
சென்றிடும் வழியில் வேங்கை செருக்கவக் கரும்பாற் றாக்கி
வென்றதை யெயினர் கொள்ள வீசிவே தண்டஞ் சாரும்.

72. புல்லிய சுடுவெம் பாலைப் புறாவயல் மருதம் புக்கு
நெல்லயின் றேகும் போது நீர்க்கொடி பலவைக் கவ்விச்
செல்லவே யிளம்பார்ப் பென்று செருச்செய்தச் சுளைப்ப லாவை
முல்லையாய்ச் சிறுவர்க் காக்கி முனைப்பொடு பறந்து செல்லும்.

73. அஞ்சிறைப் பொன்காற் பூவை யலர்குருந் திருந்து கேட்பப்
பஞ்சிறைப் பவளச் செவ்வாய்ப் பைங்கிளி குறிஞ்சி பாடும்;
நெஞ்சுநெக் குருகித் தும்பி நெய்தலை நீத்துச் செல்ல
வஞ்சியர் முகம்போ லுந்தா மரையளி மருதம் பாடும்.

---

70. அளை - வெண்ணெய். 71. எயினர் - பாலைநில மக்கள். வேதண்டம்-மலை. 72. கொடி—காக்கை. பலாச்சுளையைத் தன் குஞ்சென்று மயங்கியது புறா. 73. பஞ்சு-செம்பஞ்சு. இறை-தங்குதல்.

74. வரைதரு பொருளுங் கானம் வழங்குறு பொருளுஞ் செந்தா
மரைதரு மருத வேலி மலிதரு பொருளு முந்நீர்த்
திரைதரு பொருளு முள்ளூர் செறிதரு பொருளு மெங்கும்
விரைதரு பொருள வாகி மெய்ம்மயக் குறுத்த தம்மா.

75. யாணர்கொண் டெதிர்ப்பா டான வதரிடைச் சிறும்பேர் கல்யாழ்ப்
பாணரும் பொருநர் தாமுங் கூத்தரும் பருங்கட் செவ்வாய்ப்
பூணணி விறலி யோடு புலவரும் பெற்ற செல்வம்
மாணுறப் பெறவே யாற்றுப் படுக்குவர் வள்ளி யோர்பால்.

76. முல்லையைக் குறிஞ்சி சார முல்லைமற் றதனைச் சார
எல்லியுண் டாக்கு பாலை யிருமையுஞ் சேரச் சார
மல்லலஞ் செறுவை நெய்தல் மருவிட மருதந் தன்னைப்
புல்லிடக் கழியை யைந்தும் புணரியாப் புறுமாங் காங்கே.

77. அருந்தமி ழகத்தெப் பாலு மமைந்தநா னிலத்தாங் காங்கே
பொருந்திய நடுவண் வானம் புகுதரு மாடக் கோயில்
இருந்தனர் தலைவ ராறு ரினத்தொழில் மக்க ளெல்லாம்
திருந்திய சிற்றூ ராங்கண் திகழ்ந்தனர் புறஞ்சூழ்ந் தம்மா.

78. பேரர சதன்கீழ் மூன்று பெருந்திற லரசு மந்தச்
சீரர சதன்கீழ்ச் செங்கோற் றிருவமர் நாடும் நன்னாட்
டாரர சதன்கீழ்ச் சீறூ ரரசுமாங் கமைந்து மக்கட்
சாரர சுரிமை பூண்டு தமிழகம் பொலிந்த தம்மா.

---

74. எணி-நாடு. விரைதல் - ஒன்றுக்கொன்று முற்படுதல். 75. இதுவும் ஐந்நிலத்தும் நிகழ்வது.

79. எழுநிலை மாட கூடத் தியன்றகல் தெருவுந் தாங்கி
நழுவிலா வளங்கள் மேவி நலவழிப் படிவி டெல்லாம்
வழிவழி பெருகி மக்கள் வாழ்வதற் கேற்ற வாறு
பழமரச் சோலை சூழ்ந்து பசந்திருந் தனசீ ரூரே.

80. இன்னபல் வளத்த தாகி யியற்கையி னியல்பி யாவும்
மன்னிய குறிஞ்சி முல்லை வளமிலி மருத நெய்தல்
அந்நெறி யமைந்த செல்வத் தைந்நிலக் கிழமை தாங்கித்
தன்னிக ரிலாத மேன்மைத் தமிழகம் பொலிந்த தம்மா.

81. ஐம்பெருங் கண்டமாவின் றமைதரு மூலகில் வாழும்
வம்பலர் பயில்வண் டன்ன மக்களெல் லோர்க்கு முன்னர்த்
தம்பெயர் விளங்கப் போந்த தாயகம் இதுவே யென்றால்
இம்பரில் இதனுக் கொன்றி டிதுவலால் பிறிதொன் றுண்டோ ?

## 3 மக்கட் படலம்

### வேறு

1. அத்த மிழகத் தாய்தரும்
முத்த மிழ்த்துறை முற்றிய
மெய்த்த மிழ்ப்புல வேந்தரைப்
புத்து ணர்வுறப் போற்றுவாம்.

2. முன்னு பில்லற முற்றியே
தன்ன லங்கள் தவிர்த்துமே
இன்ன லஞ்செய் திசைபெறும்
அன்ன ரேதமி ழந்தனர்.

3. அரசி யன்முத லாகிய
துரிசி லாது துலங்கவே
வரிசை யாக வகுத்துரை
பரிசு காணிவர் பண்பரோ.

---

80. வளமிலி—பாலை. 2. முன்னுதல்—பொருந்தல்.
3. துரிசு-குற்றம்.

4. ஐவ கைத்துன் பகற்றியே
உய்வ கைத்துயி ருற்றிட
கைவ லத்தினிற் காப்பவர்
மெய்வ கைத்தமிழ் வேந்தரே.

5. நீரி னுங்நன் னிலத்தினும்
கூரு கொண்டு கொடுத்துமே
ஈரி ரும்பொரு ளீட்டுவோர்
மாரி வண்கை வணிகரே.

6. மேழி யானில மேவுயிர்
சூழ வுண்டு தொகுபசி
வீழ வுண்டி விளைக்குவோர்
ஆழி மொய்ம்பின்வே ளாளரே.

7. களவு முற்றிய கற்பினர்
அளவ றிந்தற மாற்றிட
உளம றிந்தவர்க் கோதுவோர்
பளகி லாத்தமிழ்ப் பார்ப்பனர்.

8. மற்று முள்ள வகுப்பெலாம்
உற்ற வாழ்வுக் குறுதுணை
யிற்றொ ழிலினி யன்றதாற்
பெற்ற னதொழிற் பேரரோ.

9. முதலில் வெம்பசி மூளவே
அதனை நீக்குண வாக்கவே
முதன்மு தலின முன்னர்செய்
ததுப யிர்த்தொழி லாகுமே.

10. பழுதி லாத பயிர்த்தொழில்
பழுதி லாது பயிற்றவே
பழுதி லாத பலதொழில்
பழுதி லாது பயிற்றினர்.

---

4. ஐவகைத்துன்பம — தனலால், அலுவலாளரால், பகைவரால், கள்வரால், பிற உயிரால் வருவன. நோய்தரும நச்சுபபுழுக்களும அடங்கும. 5. கூர்-மிக. கொண்டு கொடுத்தல்-வணிகம். ஈர் இரும்-நனிமிக. 6. ஆழி—தேருருள். மொய்ம்பு—வலி. 7. பளகு—குற்றம.

11. உழுந்தொ ழிற்குரித் தாகவே
ஒழிந்த யாவு முழுத்றலான்
பழந்த மிழ்வகுப் பாரெலாம்
உழுந்தொ ழிற்கொ ளுழவரே.

12. தாளி னற்பொருள் தருவதை
வேளெ னப்பொருள் விள்ளுவர்
நாளு மேதொழில் நன்குசெய்
தாளு வோர்கள்வே ளாளரே.

13. இத்தொ ழிலிவர்க் கின்றெறு
எத்தொ ழிலுமெ லாருஞ்செய்
தத்தொ ழிற்குரி யார்களாய்
ஒத்து வாழ்ந்த ரொருங்கரோ.

14. மன்ன ராகலாம் பின்னரும்
மன்னர் பின்னரின் வாழலாம்
அன்னர் யாவரு மந்தணர்
பின்னென் வேற்றுமை பேசவே.

15. அரச ரில்வழி யந்தணர்
அரச ராயுல காளுவர்
வரிசை பெற்றுயர் மற்றரும்
அரசு தாங்குவ ரங்ஙனே.

16. முல்லை யேமுத லாகிய
நல்லி யல்புறு நானிலத்
தெல்லை மேவிய யாவரும்
இல்லை வேறிவ ரின்றியே.

17. முல்லை யாயர் குறிஞ்சியின்
எல்லை காணி னிறவுளர்
செல்வி னெய்தல் தமிலரே
ஒல்லி வாழி னுழவரே.

---

12. தாள்—முயற்சி. வேள்—உதவி. 17. இறவுளர்—குறிஞ்சி நிலமக்கள். ஒல்லி-பொருந்தி.

### வேறு

18\. தூயகைத் தொழிலி னோடேர்த் தொழிலொடு
வணிகந் துன்னி
ஆயமுத் தொழிலி னோடாங் கமைகுடித் தொழில்க
ளெல்லாம்
ஏயவ ருயர்வு தாழ்வ தின்றியே புரிந்து நாளும்
தூயவத் தொழிலுக் கேற்பத் தனித்தனிப்
பெயர்பெற் றாரே.

19\. பானுரை போலப் பஞ்சிற் பட்டினன் மயிரிற்
பொன்னின்
நூனிரைத் துள்ளங் கொள்ள நுணிகிய சாய மேற்றி
மேனிலத் தவர்மீக் கொள்ள விழைதரு வனப்பிற் றாகப்
பூநிரைத் தணியா ராடை புதுமையி னெய்வார் நெய்வார்.

20\. ஐவகைப் பொன்னிற் றூரி னவிர்மணி யொடுகல்
மண்ணில்
கைவகைக் கலனும் பன்மைக் கருவியு மேனத் தாறும்
செய்வகைப் படியே தட்டார் திறன்மிகு தச்சர்
கொல்லர்
மெய்வகைக் குயவர் கண்ணார் வேதர்கற் றச்ச ராறுர்.

21\. அழுக்கற வெளுத்து வண்ண மாக்குவோர் வண்ணார்,
பின்னர்
மழுக்குற மயிரை நொய்தின் மழிப்பவர் மழிப்பர்,
வாய்மை
ஒழுக்குற வரிதி னோவந் தீட்டுவோ ரோவர், மற்றும்
வழுக்குறு தொழில்க ளெல்லாம் வகைப்படுத் தப்பேர்
பெற்றார்.

---

18\. குடித்தொழில் - வெளுத்தல், மழித்தல் முத லியவை. 19. பால் நுரை. நூல் நிரைத்து-நூற் களை வரிசையாகப் பாய்ச்சி. பூ-பூ வேலைப்பாடு. 20. தாரு-மரம். கற்றச்சு-சிற்பம். 21. ஓவம்-சித்திரம்.

6. ஏந்திய செல்வ மோங்கு மிரும்புனல் மருதந் தன்னில்
வாழ்ந்தவே ருழவ ரோங்க வருமுதற் றலைவர் முன்பு
போந்தவ னரணந் தங்கிப் பொருள்வளம்
பொலியக் காத்து
வேந்தனென் றுரை னப்பேர் மேவினார் வழிவந் தோரும்.

7. கடல்கடந் தயலா டேகிக் கலனிறை பொருள ராகி
மடலுடைத் தாழைச் சேர்ப்பின் மணலுடை
நெய்தல் வாழும்
மிடலுடை நுளையர் தங்கள் மேலைய தலைவன் முந்நீர்
நடையுடை வருணன் ஆனான் நண்ணினர்
பின்னு மப்பேர்.

8. அன்னநால் வருந்தம் மக்கட் காவன வியலு மாற்றான்
மன்னிய தலைமைக் கேற்ற வாறுசெய் துலகர் போற்றும்
நன்னரா யிருந்த தாலந் நானிலத் தலைவ ராகப்
பின்னவ ரேற்றிப் போற்றும் பெரும்புகழ்பெற்றா ரம்மா.

9. மன்னிய குறிஞ்சி முல்லை மருதநீள் நெய்த லென்னும்
அன்னநா னிலங்க டோறு மாளர சிருக்கை யெய்தி
நன்னரி னமைந்து வேண்டும் நலமெலா முடைய தாகத்
தன்னிகர் தானே யான தமிழகம் பொலிந்த தம்மா.

10. முடியுடை மூவ ரோடு முதல்வர்தங் காப்பின் மிக்க
நடையுடைத் தாய பின்றை நானிலக் கிழமை நீங்கிக்
கொடையுடைத் தமிழ வேளிர் குறுநில மன்ன ராக
நெடுநிலக் கிழமை பூண்டு நின்றது தமிழர் வாழ்வே.

11. ஈங்குபல் லாண்டு செல்ல விருந்தரி முகத்தில் வாழும்
ஓங்குநல் லறிவு வாய்ந்த வுயர்தமிழ் மக்க ளெல்லாம்
தாங்குநா னிலத்த ராகித் தனித்தனி வாழ்தல் நீத்துத்
தேங்குமோர் குடையி னீழற் றிகழ்ந்திட
மனக்கொண் டாரே.

---

6. அரணம - கோட்டை, காவல். வேத்து-காப்பு.
7. சேர்ப்பு-கடற்கரை. மிடல்-வலி. நடை-ஒழுக்கம்.
வருணம-கடல், வருணன்-கடலுக்குரியவன்.

## மாபெருந்தலைவன்

12. தண்டமி ழகத்தை முற்றுந் தனியர சாட்சி செய்யத்
திண்டிற லொழுக்க மேன்மை திறம்பிடா நிலைமை வாய்ந்த
தண்டமிழ் மகனைத் தங்கள் தலைவனாக் கொண்டா ரந்தப்
பண்டையோன் மரபில் வந்தோர் பாண்டிய ரெனப்பட் டாரே.

### வேறு

13. வென்றி வேலுடை வேந்தனு மணிமுடி வேய்ந்தே
அன்று தண்டமி ழகத்தினாப் பண்ணதன் முகம்போல்
இன்றி லங்கையந் தீவுதென் மேற்கினி லெழிலோ
டன்றி ருந்ததொன் னகரினி லமர்ந்தினி தாண்டான்.

14. நானி லத்தவ ரவரவர் முறைப்படி நடக்க
மேனி லத்தவர் பொருள்கொடு மிகுபொருள் கொடுப்பத்
தானி னைத்தது தமிழர்கள் நினைத்ததே யாகத்
தேனி னித்தசெந் தமிழ்வளர்த் தேமுறை சிறந்தான்.

15. பின்னர் நாள்பல செல்லவோர் பெருந்தலை மகனும்
தன்ன ருந்தலை மகனைமுத் தமிழ்தனி வளர்க்க
நன்னர் மேயதென் பாலியாம் பெருவள நாட்டின்
மன்ன னாக்கின னன்னனும் வண்டமிழ் வளர்த்தான்.

16 பைந்த மிழ்வளர்த் துவக்குமப் பாண்டிய மன்னன்
சிந்தை போற்செயல் திருந்தவே முறைசெய்து சிறக்கத்
தந்தை தாயினும் அன்புடன் தமிழகம் புரக்கும்
எந்தை மாபெருந் தலைவனு மினிதென மகிழ்ந்தான்.

17. இன்ன போலவே கிழக்குநா டென்னுமவ் விடத்திற்
கன்னை போலவோ ரன்புடைத் தமிழ்மகன் தன்னை
மன்ன னாக்கினன் அன்னனும் வண்டமிழ் வளர்த்தான்
இன்ன வன்மர பெழுந்தரே யிசையுடைச் சோழர்.

---

13. நாப்பண்-நடு. 14. மேனிலம்-மேல்நாடு.
பொருள்-சரக்கு.

18\. ஓகை யோடவர் வானினுங் கொடுமுடி யுயர்ந்த
நாகை மாநகர் தனிவினி திருந்துநா ளுளும்
ஈகை யோடுசெங் கோலுற முதலிய வெவற்றும்
வாகை சூடியே வழிவழி பொலிந்தனர் மன்னோ.

19\. நாழி யானுயிர் தாங்கிடு மக்களை நாளும்
வாழ வைத்திடு முணவினில் குறைவிலா வளத்தால்
சோழ முற்றுயர்ந் திருந்ததால் முன்னவர் சொன்னார்
சோழ மென்றதை யாண்டவ ராயினர் சோழர்.

20 இந்த வாறவன் கிழக்குநா டாண்டவ னிருக்கச்
செந்த மிழ்த்திரா விடந்தனக் கோர்தமிழ்த் திருவாய்
மைந்த னைத்திரு மன்னவ னாக்கினா னன்னோன்
பிந்தி வந்தவ ரேதமிழ்ப் பேரிசைச் சேரர்.

21\. தெருவி லாடிளஞ் சிறுவர்பந் தெறியவே சிதறி
இருவி சும்பிடைப் புகுதர வினப்பகை யென்று
வெருவி மாமதி மறைமுடி மேக்குயர் வஞ்சி
மருவி யின்பொடு வழிவழி சிறந்தனர் மாதோ.

22\. மாரி யோவரு வளமுடைத் தாகிய மலையின்
சேரல் சூழக நாட்டிடை வாழ்விடஞ் சேரச்
சேரல் என்பதை யம்மலை நாட்டொடு சேர்த்துச்
சேரம் என்றனர் ஆண்டவ ராயினர் சேரர்.

23\. மாரி போற்பொரு ளீந்துமே தாய்மொழி வளர்த்த
சேர சோழபாண் டியரெனத் தமிழர்கள் செப்ப
வீர ராகவும் புலவர்க ளாகவும் வெருவாச்
சூர ராகவும் விளங்கினா ரிவர்வழித் தோன்றல்.

24\. அன்ன மூவருந் தன்னின்கீ ழன்னசிற் றரசர்
தன்னை யேற்படுத் தியல்பொடு தமிழகந் தன்னைப்
பன்னு நாற்றுறை பழுத்தநற் பழந்தமிழ்ப் புலவர்
சொன்ன சொற்படி புரந்திசைத் தொடைபுனைந் தனரே.

---

18\. ஓகை-உவகை. வாகை-வெற்றி. 19. சோழம் உறுதல்-மிகுதல், சிறப்புறுதல். 22. (உதியஞ்) சேரல் எனவும் சேரன் என்னும் பெயர் வழங்குதல் காண்க.

25. குலவு செல்வமுங் கல்வியுங் குடிவளர் கோட்டத்
தலைவ ராயசிற் றரசர்கி ழூரகத் தலைவர்
மலைவி லாதெலா மக்களுந் தகவுற வாழக்
கலைவ லாருளக் கருத்தொடு களிவுறக் காத்தார்.

26. தூய ஓூரகந் தனையினி தோம்பிடத் தொல்சீர்
மேய நல்லரை சிறுவலூர் மக்களம் மேலோர்
ஆய யாவையும் குறைவிலா தமைவுற வாக்கித்
தாயி னும்பெரி தன்புடன் காத்துவந் தனரே.

27. மக்க ளுந்தலை மக்களு நானிலத் திடைவாழ்
மக்க ளுந்தலை மக்களும் வகைபடு தொழில்செய்
மக்க ளுங்கருப் பொருளொ னு மனையறத் தலைமை
மக்க ளாங்கிழ வனுங்கிழத் தியுமென வாழ்ந்தார்.

28. ஒத்த வோர்குல மாகியே யொருங்குற வாழ்ந்த
முத்த மிழ்ப்பெரு மக்களைக் கற்றறி வுடர்
பொத்தை யாய்ப்பெறும் பிறவிவேற்
றுமையெனப் புகல்வர்
பித்தர் சொல்லினைப் போற்றுவோ ரொருவகைப்
பிறப்பே.

## 5 ஒழுக்கப் படலம்

### வேறு

1. ஒப்பாரு மில்லாத வுலகேத்துந் தமிழ்மக்கள்
எப்பாலுந் தமக்குரிய வியனெறியாஞ் செயன்முறையிற்
றப்பாமற் செய்வனவுந் தவிர்வனவுங் கடைப்பிடித்து
முப்பாலின் படியொழுகி முறைமையொடு
வாழ்ந்தனரால்.

2. அன்பாகி யருளாகி யறிவாகி யுலகுயிரின்
முன்பாகி யொளியாகி முதலாகி முடியாத
இன்பாகி யியல்கின்ற இறைவாழ்த்தி முறைவாழ்ந்தார்
தன்போலப் பிறவாழ்வு தனைப்பேணும் பழந்தமிழர்.

---

25. கோட்டம்-நாடு. ஊரகம்-இராமம். 27. கிழவன், கிழத்தி-காதற்றலைவர்.

3. பொல்லாரைக் காணினுஞ்செம் பொன்முதலாம்
பொருள்சிறிதும்
இல்லாரைக் காணினுமே யெத்தொழிலுந் தெரியாத
புல்லாரைக் காணினும்பால் பொருந்தியவாண்
பெண்ணிலொரு
கல்லாரைக் காணாராய்க் கற்றுநல முற்றூரே.

4. மனத்தானும் பிறர்பொருளை வெளவாராய் வறியோருக்
கெனைத்தானுந் தினைத்தேனு மீத்துண்டு தமைச்சூழும்
இனத்தாரி னினத்தாரா யிடர்காணப் படிவாழ்ந்தார்
தனைத்தானே நிகராகுந் தமிழ்த்தாயின் றலைமக்கள்.

5. சான்றோரி னுறுதிமொழி தலைக்கொண்டு சான்றோரை
ஈன்றோரின் படிபேணி யீன்றவிரு மக்களையும்
சான்றோரென் றுலகேத்தத் தாமாக்கிப் புகழ்பூண்டார்
வான்றோயு மலையாறு வளஞ்செய்யுந் தமிழ்நாடர்.

6. இன்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாதே யெவ்வுயிரும்
பொன்னேபோ லருள்பூத்துப் புறந்தந்து புகழ்பூத்தார்
கொன்னுளுங் கலஞ்செலுத்திக் குடயவனப் பெருவணிகர்
பொன்னுடிப் பொருளுடிப் புகலாகும் புகழ்நாடர்.

7. நலக்குறையே வலக்குறையா நற்குணநற் செய்கைதமக்
கிலக்கியமாய் வழிவருவோர்க் கிலக்கணமா
யெனைத்தொன்றும்
சொலக்குறையா மனைவாழ்க்கைத் துறைநின்று
முறைவாழ்ந்தார்
இலைக்குறையென் றெனைவளமு மினிதமைந்த
வியனுடர்.

8. பொருவிலே மெனப்போந்தபொருளிலரை யெள்ளுதலும்
திருவிலே மெனக்குறைவு சிந்தையிடைக் கொள்ளுதலும்
வெருவிலே யகன்றோட வேற்றுமையற் றேவாழ்ந்தார்
கருவிலே திருவுடைய கவல்காணக் கலைநாடர்.

---

3. பிற-பிறவுயிர். 6. புறந்தருதல்-காத்தல். கொன்-மிகுதி. 7. நலக்குறை-நலம். வலக்குறை-வலி.
8. பொருவு-ஒப்பு. வெருவிலே-அஞ்சி.

9. கேண்மையிடை யருவுளமுங் கிளைதழுவுங்
கிழமையுஞ்சான்
றாண்மையொடைம் பூதவுல கறிவுமுயிர் மெய்யறிவும்
தோண்மையுந்தா ளாண்மையுநற் றுணையுறவே
நனிவாழ்ந்தார்
நாண்மைநிலை யறிந்துதக நடந்துநலம் பெறுதமிழர்.

10. அன்புக்கோ ருரைகல்லாய் அருளுக்கோர் நிரையில்லாய்
பின்புக்கோர் வழிநிலையாய்ப் பெருமைக்கோ
ரொளிமலையாய்
இன்புக்கோ ருறையிடா யிசைபரவத் திசைவாழ்ந்தார்
துன்புக்கோர் செயல்புரியாத் துற்றசுவைப் பொற்றமிழர்.

11. தன்னலமென் னும்பொருளைத் தான்காணா
ராய்ச்செய்யும்
இன்னலமே யந்நலமா மெந்நலமும் பொதுநலமாய்
நன்னலஞ்செய் தெண்ணியவை நண்ணிநல மன்னினரால்
பன்னலமும் பொருந்தியதன் பயன்றுய்க்கும் பழந்தமிழர்.

12. முட்டாற்றுப் படவெவரு முயலாமை
யெனுங்குறையை
விட்டோட்டித் தாளாண்மை வேளாண்மைப்
படவாழ்ந்தார்
நட்டாற்றுக் கிடைப்படினு நலியாது தமிழ்வளர்க்குங்
கொட்டாட்டுப் பாட்டுடைய குலமோங்குங்
குணநாடர்.

13. அவ்வவர்தம் பிறப்புரிமை யவரெய்தி யவ்வவருக்
கவ்வவரே யரசர்களா யவரரசுக் கவரரசாய்
அவ்வவர்தம் முதற்கடமை யவ்வவர்செய் தேவாழ்ந்தார்
எவ்வளவு மிறைமுறையி னியனெறிமா ருத்தமிழர்.

---

9. கேண்மை-நட்பு. கிழமை-உரிமை. ஐம்பூதம்-நிலநீர் தீகாற்று வெளி. தோண்மை-வலி. நாண்மை-வாழ்நாள். 10. நிரை-ஒழுங்கு. வழிநிலை-வழிகாட்டி. இசை இசைபரவ. 12. முட்டு-குறைவு, இடையூறு. ஆற்றுப்பட-செல்ல.

14. கூலியா யிரங்காணங் கொடுத்தாலுங் கோலொருவும்
போலியா ரெனுமுரையைப் பொய்யாக்கி மெய்ந்நின்றார்
வேலியா யிரங்கலநெல் விளையவுயர் மலையிலெழுந்
தாலியா வருமொலிய லனைவளற்றுந் தமிழ்நாடர்.

15. மண்ணரசு மனையரசும் மற்றையபல் லெழிலரசும்
பெண்ணரசு மாணரசும் பிரியாத பேரரசாய்
நண்ணரசு புரிந்தொருங்கு நல்லரச ராய்வாழ்ந்தார்
பண்ணரசர் வளர்த்தவிசைப் பாவரசத் தமிழரசர்.

16 இல்லாமை வறுமையவர்க் கியலாமை தீச்செயலே
சொல்லாமை பொய்குறளை சோராமை பிறர்பயனே
செல்லாமை தீநெறியே தீண்டாமை பிறர்பொருளே
கல்லாமை களவிவறே கருதாமை யறங்கடையே.

17. பொன்மான மாறலும் பொருண்மான மாறலும்
மன்மான நிலைதீர்ந்து மதிமான மாறலும்
கன்மான வயலார்முன் கையேந்திப் பல்லிளியார்
தன்மான மாறுத தகுமானத் தனித்தமிழர்.

18. சிறந்தாலும் பெருமையினிற் றீர்ந்தாலு முரிமையெலாந்
துறந்தாலும் பொருவுநிலைத் துறைபோந்து
முறைவாழ்ந்தார்
இறந்தேனும் பொதுவாழ்வுக் கியன்றனசெய்
குவதல்லான்
மறந்தேனும் பிறன்கேடு சூழாத மணித்தமிழர்.

19. உளமலிந்த பெருங்காதற் கடல்படிந்த வொப்புடையார்
கல்வியலாம் புணைதழுவிக் கற்பியலாந் துறைநண்ணி
வளமலிந்த மனைவாழ்க்கைக் கரையேறி மகிழ்பூத்தார்
குளமலிந்த புனன்மருதக் கொடையெதிருங் குளிர்நாடர்.

---

14. காணம்-பொன். ஆலித்தல்-ஒலித்தல். ஒலியல்-யாறு.

16. குறளை-கோட்சொல். சோர்தல்-மறத்தல். இவறு-உலோபம். அறங்கடை-குற்றம்.

17. மானம்-கேடு. மான-ஒப்ப.

18. பொருவுநிலை-ஒத்தநிலை.

20. காதலரும் பாதவரைக் காதலிக்குங் கழிமடமும்
காதலர்தம் மிடைத்தோன்றுங் கைகடந்த காமமதும்
தீதெனவே நீத்தின்பத் திறந்தெரிந்து திகழ்ந்தார்கள்
போதலர மதியெனப்பூங் குமுதமலர் புனனாடர்.

21. காதல்முதிர்ந் தில்லறஞ்செய் காதலர்தா மவரோடு
சாதலிலே யேற்றனியாந் தபுதார நிலைவாழ்தல்
ஈதலது பலரைமணந் திடர்விளைக்கு மிழிசெயலைக்
காதினுங்கேட் டறியார்கைக் களிறிளைக்கு மலைநாடர்.

22. அறப்போர்செய் குவதன்றி யரசிழக்க நேரினுமே
மறப்போர்செய் தறியாது மறஞ்செறிந்த
மனத்தினராய்ப்
புறப்பொருளின் றுறையறிந்து பொருதுபுகழ்
பூண்டிருந்தார்
திறப்பாடெல் லாம்பொருந்தித் திருவளருந் தென்னாடர்.

23. ஆன்றவிந்த தமிழ்ப்பெரியா ரந்தணரா மையரெனுஞ்
சான்றவர்நல் வழிநின்று தமைப்போலத் தமையன்போ
டூன்றதமிழ்ப் பெருங்குலத்திற் கியன்றபொது
நலஞ்செயவவ்
வான்றவர்தஞ் சொற்பொருட்கண் ணமைந்தபழந்
தமிழகமே.

## 6 தாய்மொழிப்படலம்

### வேறு

1. ஊக்கமு முணர்வு முளமுதன் மக்க
ளுயிர்மெயி னிருந்துதம் மவரை
நீக்கவு, மொருவர்க் கொருவர்தங் கருத்தை
நினைத்தவா றெதிருரை யாடி
மாக்களி லிருந்து மக்களா யுயர்ந்து
வாழவும் வகைபட முதலில்
ஆக்கிய மொழிநந் தமிழ்மொழி யென்று
லாரிதன் பெருமையை யறைவார்.

---

21. தபுதார நிலை-மனைவியை யிழந்திருத்தல்.

1. உயிர்மெய்-பிராணி. மாக்கள்-பகுத்தறிவில்லாதவர்

2. பரிதியி லிருந்து சிதறிய வுலகப்
        பகுதியில் முதலினில் குளிர்ந்து
பெரிதுயிர் வகைகள் முதன்முதல் தோன்றப்
        பெற்றது பழந்தமி ழகமே;
ஒருதமி ழகத்து மக்களே யுலக
        மக்களுக் கொருமுதல்; மக்கள்
தருமுதல் மக்கள் பேசிய மொழிசெந்
        தமிழெனில் இதற்கிணை யெதுவோ?

3. இனியசெந் தேனு மினியவான் பாலு
        மினியதீஞ் சுவைநிறைந் தியலும்
கனியதன் சாறுங் கரும்பினின் சாறுங்
        கனிவுறு முதலவின் பருப்பும்
இனியவின் சுவையொன் றேயுளங் கேட்டற்
        கினிமைநம் பாலிலை யென்று
கனியவுள் ளுருகிக் கவன்றிட விரங்கிக்
        கைசெயு மின்றமிழ் மொழியே.

4. உரப்பியுங் கனைத்து முடிமுத லடிநாக்
        குழறியுங் குழறியு முயிர்ப்பை
நிரப்பியுங் கழுத்தி னெஞ்சினி, விதழை
        நெகிழ்த்துமுள் ளுயிர்ப்பது வெளியில்
வரத்துணை யின்றித் திணறியு மெழுத்தை
        யொலித்திடும் வருத்தமு மின்றிப்
பொருத்திய வாயைத் திறக்கவா றைந்தும்
        புறப்படு மெளியசெந் தமிழே.

5. எழுத்தொலி வேறு வொவ்வொரு சொல்லி
        னிடத்துமவ் வொலிகள்வெவ் வேறு,
அழுத்தவோர் பொருளா நெகிழ்க்கவோர் பொருளா
        வவற்றிடை நலியவோர் பொருளா,
எழுத்தொரு பயனு மின்றியாங் கடுக்கா
        வினையன வேற்றுமை பலவா
வழுப்பட லின்றி யெலாமொரு வகையா
        வமைந்தது வண்டமிழ் மொழியே.

---

8. கைசெய்தல்-உதவுதல்.

6. அம்முதல் னௌவீ றாகிய வெழுத்தை
யறிந்தவ ரெளிதினிற் றாமே
தம்முறு துணையாத் தடைசிறி தின்றித்
தமிழறி வுடையவ ராவர்,
அம்முறை மேலு முயன்றிடிற் புலமை
யடைகுவ ரையமின் றிதைப்போற்
செம்மொழி வேறொன் றுளதெனப் புகல்வோர்
தெரிதர வுரைக்கமுன் வருவீர்!

7. சொற்றொறும் பொருளின் சிறப்புமப் பொருளிற்
சொற்பொருந் துறுவமை சிறப்பும்
சொற்றொட ரமைவின் சிறப்புமத் தொடரிற்
சொற்பொரு ளமைதியின் சிறப்பும்
கற்றொறு முள்ளங் களிக்கவத் தொடரிற்
கருத்தமைந் திருக்குநற் சிறப்பும்
பெற்றுள தமிழ்த்தாய்க் கிணையொரு சிறப்புப்
பேசுவ தெனதுபே ரவாவே.

8. ஒருமொழி யேனு மிணையநாள் வரையு
முலகெலாந் தேடியு மடையா
இருவகைக் கைகோ ளன்பினைந் திணையோ
டெழுதிணை யகம்புற மென்னும்
பொருளினை யுடைய பழந்தமிழ்த் தாயைப்
பொருளிலா ளெனப்புகல் பொய்யர்
மருளினை யுண்மைப் பொருளென மதிப்போர்
மதியினுக் குவமையம் மதியே.

9. பேசுநற் குணமு மெழிதெழில் வனப்பும்,
பெரியர்சொற் கடந்திடா வொழுக்கும்,
விசொளி மணிப்பூண் பெருக்கு, மேவரிய
முதுமையோ டிளமையும், வேறோர்

---

8. இருவகைக்கைகோள-களவு, கற்பு. அகத்திணை யெழாவன-குறிஞ்சி, முல்லை, மருதம, நெய்தல், பாலை, பெருந்திணை, கைக்கிளை என்பன. இவற்றிற்கு முறையே-வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன புறத்திணைகளாகும.

ஆசிலாத் தனித்த நடையுமா கியலில்
வறுவகைச் சிறப்பொடு பொலிந்து
மாசிலா மணியா யொளிர்தமிழ்த் தாயை
வடகுட மாதரொப் பாரோ?

10. ஏயதங் கருத்தை யுரைத்திடும் பாட்டு
முறையுமா கியமுத லியலும்
மேயவப் பாட்டைப் பண்ணொடு திறனு
மேவுற விசைத்திடு மிசையும்
வாயவவ் விரண்டோ டுளப்படு கருத்தை
மனக்கொள நடிக்குநா டகமும்
ஆயமூ வுறுப்பி தனையுறுப் பறையென்
றறைகுவ ரறிவிலா வெள்வர்.

11. ஒருவகை யொலிப்பு மிருவகை வழக்கு
முரியமுப் பெயருநாற் பாவும்
இருதகை வருமைந் தியலுமா றுறுப்பு
மெழுவகைத் திணையுமெண் வனப்பும
மருவிய வொன்பான் சுவையும்பத் தழகும்
வகைபட வமைதமிழ் மொழியைத்
திருகிய மனத்தார் சிறப்பிலை யென்று செப்பினுப்
பவர்பொறுப் பவரே.

---

9. பெரியர் சொற் கட்வரமை-இலக்கணவரம்புடைமை. மணிப்பூண்பெருக்கு-இலக்கியப் பரப்பு.

10. வாய-வாய்த்த. வெளவர்-பொறுமைக்காரர்.

11. இருதகைவரும் — மிகத்தகுதி வாய்ந்த. இயல்-இலக்கணம். இருவகை வழக்கு-உலகவழக்கு செய்யுள்வழக்கு. முப்பெயர்-இயல், இசை, நாடகம். நாற்பா-வெண்பா, ஆசிரியம, கலி, வஞ்சிப்பா. ஐந்திலக்கணம்-எழுதது, சொல், பொருள், யாபபு அணி. ஆறுறுப்பு-எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை. எழுவகைத்திணை 8-ம் பாட்டில் காண்க. வனப்பெட்டு-அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு. ஒன்பான் சுவை-நகை, அழுகை, இழிவு, வியப்பு, அச்சம், வீரம், வெகுளி, உவகை, நடுநிலை. பத்தழகு-சுருங்கச்சொல்லல் முதலியன. (மரபியல்-109)

12\. பகுத்தறி வுடைய மக்களை யாண்பெண்
பாலெனு முயர்திணை யாவும்
பகுத்தறி விலவோ டனைத்தையு மொன்று
பலவெனு மஃறிணை யாவும்
பகுத்தறி தரவிற் றெழுத்தினு லவற்றைப்
பாங்குட னுணர்த்திடுந் தமிழ்க்குப்
பகுத்தறி வில்லா தாக்கிய வுலகப்
பான்மொழி யிணையெனப் படுமோ ?

13\. ஈங்கொரு புதுமை யில்பொரு ளுவமை
யெனத்தகு சிறுமுகை மணம்போற்
பாங்கொடு மக்கள் பற்பல பெற்றும்
பழமையென் றளவிடு மகவுந்
தாங்கிய தாவிற் கன்னியா யிளமை
ததும்பிடுந் தண்டமிழ்த் தாயை
நீங்கிய விளமைச் சிறியவ ருலக
நெறியிலா ரொத்துளே மெனலே.

14\. வண்புகழ் மூவ ரொடுதமிழ்க் குயிரை
வழங்கிய தலைவனுங் காத்த
தண்பொழில் வேலித் தமிழக முழுதுந்
தழைத்தினி திருந்தசெந் தமிழர்
கண்பொலி பாவை யுயிரினும் பெரிதாக்
கருதியே கவினுற வளர்த்த
மண்புகழ் தமிழ்த்தாய் சிறப்பினை முழுதும்
வகுத்துரைத் திடவலன் கொல்லோ !

15\. உருவமு மியல்போ டெளிமையும் வளமு
மொருங்கமைந் தெழுதரு மெழுத்தும்
அருமையி னெழுத்தா னியன்றசெஞ் சொல்லு
மாகிய வுறுப்பினை யுடைய
பொருளெனும் பெண்ணை யருமையி னின்று
பொருந்திசை யோடுகூத் தென்னுந்
திருமணிக் கலனோ டுடையணிந் துள்ளந்
திகழ்ந்தன ளருந்தமி ழன்னை.

---

13 அகவு-வயது.

16. இன்னணம் வேண்டுஞ் சிறப்பெலாம் பெருகி
யிருந்தமி ழகத்திடை யொளிரும்
பொன்னெனப் பொலிந்து பூவென மலர்ந்து
புலவர்செந் நாவிடை வளர்ந்த
தன்னிக ரில்லாத் தனித்தமிழ் மொழியைத்
தாய்மொழி யாகவே யுடைய
மன்னிய பெரும்பேர் மருவிய தமிழ
மக்களே மக்களுள் மக்கள்.

### வேறு

17. வில்லே ருழும்போர் வீரர்களும் வெவ்வே ருண
வினைவலரும்
நெல்லே ருழும்வே ளாளர்களும் நிலங்காப் புடைய
மன்னர்களும்
மல்லே ருழும்பொன் வாணிகரும் மனையே ருழுமா
திருமவரிற்
கல்லா தவரே யில்லா ராய்க் கற்றே யறிவைப் பெற்றாரே.

### வேறு

18. ஏடுகை யில்லா ரில்லை யியலிசை கல்லா ரில்லைப்
பாடுகை யில்லா ரில்லைப் பள்ளியோ செல்லா ரில்லை
ஆடுகை யில்லா ரில்லை யதன்பயன் கொள்ளா ரில்லை
நாடுகை யில்லா ரில்லை நற்றமிழ் வளர்ச்சி யம்மா.

19. தமிழெனு திருகட் பார்வை தமிழெனு துருவப் போர்வை
தமிழெனு துயிரின் காப்புத் தமிழெனு துளவே மாப்புத்
தமிழெனு துடைமைப் பெட்டி தமிழெனு துயர்வுப்
பட்டி
தமிழெனு துரிமை யென்னத் தனித்தனி வளர்ப்பர்
மாதோ.

20. நாடெலாம் புலவர் கூட்டம் நகரெலாம் பள்ளி யீட்டம்
வீடெலாந் தமிழ்த்தாய் கோட்டம் விழவெலாந்
தமிழ்க்கொண் டாட்டம்
பாடெலாந் தமிழின் றேட்டம் பணையெலாந்
தமிழ்க்கூத் தாட்டம்
மாடெலாந் தமிழ்ச்சொல் லாட்டம் வண்டமி ழகத்து
மாதோ.

---

17. மல்—வளம், வருவாய். 19. ஏமாப்பு—கருத்து. பட்டி—உறைவிடம். 20. பாடு-வேலை. தேட்டம்—செல்வம். பணை—வயல். மாடு-பக்கம். சொல்லாட்டல்-சம்பாஷணை.

21. உண்டியை யுண்ணார் பொன்பட் டுடையினை
யெண்ணார் கன்னற்
கண்டினைப் பேணார் செம்பொற் கலன்களைப்
பூணார் வண்ணச்
செண்டினைச் சூடார் சாந்தத் திரளினை நாடார் யாழின்
தண்டினைத் தீண்டார் யாருந் தமிழ்மொழி
பயிலாக் காலே

## வேறு

22. பாடுபவ ருக்குமுரை பண்ணுபவ ருக்கும்
ஏடதுவி ரித்துரை யிசைப்பவர் தமக்கும்
நாடுநக ரோடவர் நயப்பவை கொடுத்தும்
தேடிவரு வித்துமுயர் செந்தமிழ் வளர்த்தார்.

23. சொற்சுவை யடுத்தொளிர் தொடைச்சுவை நிறைந்த
நற்சுவை யுடைப்பொரு ணலச்சுவை செறிந்த
பற்சுவை படச்செயுள்செய் பாவலர்கொ ளப்பொன்
னிற்சுவை கொடுத்துய ரியற்றமிழ் வளர்த்தார்.

24. மண்ணுமுழ வோடுகுழல் கூடுதரு யாழின்
எண்ணொடு கலந்திலகு மேழிசை பொருந்தப்
பண்ணொடு திறந்தெரிபு பாடுமவர் கொள்ள
எண்ணிய கொடுத்துய ரிசைத்தமிழ் வளர்த்தார்.

25. உண்ணிகழ் கருத்தவ ருறுப்பினிடை தோன்ற
எண்வகைய தாயவிற லேயவுய ரின்பம்
நண்ணிட நடிக்குமவர் நாடுவ கொடுத்துக்
கண்ணியம தாகநடி கத்தமிழ் வளர்த்தார்.

---

21. செண்டு-பூச்செண்டு. சாந்தத்திரள்-சந்தனக்கலவை.

23. பொன் இன்சுவை-பொன்னாகிய இனியசுவை.

24. மண்ணுதல்-சீர்செய்தல். முழவு-மத்தளம். எண்-நரம்பின் ஓசையளவு. ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை விளரி, தாரம், இளி, உழை.

25. விறல்-மெய்ப்பாடு. மெய்ப்பாடு எட்டு 11-ம் பாட்டில்காண்க. ஏய-பொருந்த.

26. நன்னய மமைந்தவிர் நரம்பினொடு பாடும்
சொன்னய மமைந்தகுழ லோடினிய தோலின்
பன்னய மமைந்திலகு பல்லிய மிசைப்போர்
முன்னிய கொடுத்துயரு முத்தமிழ் வளர்த்தார்.

27. வாய்மொழி பொதிந்திடுசொன் மாலைபல வேய்ந்து
தாய்மொழி வளர்த்திடு தமிழ்ப்புலவர் தம்மை
ஆய்மொழி புனைந்தில கரியணை யிருத்திப்
போய்மொழி பெருதிலகு பொன்முடி புனைவார்.

28. தேங்குபுகழ் தாங்கிய செழும்புலவர் கொள்ள
ஓங்குமுகில் தோய்முக டுயர்ந்தமலை யேறி
ஆங்கவர்கள் கண்டநிலை மானவை யனைத்தும்
பாங்கொடு கொடுத்துயர் பசுந்தமிழ் வளர்த்தார்.

29. என்றுமுயர் செந்தமி ழியற்புலவர் கொள்ளக்
கன்றினொடு தூங்கிவரு கைப்பிடி புணர்ந்த
வென்றுகொடு வந்தவெறி வேழமது தந்து
நன்றியொடு தொன்றுவரு நற்றமிழ் வளர்த்தார்.

30. மாணிழை புனைந்துமண வாமல ரணிந்தும்
பாணரொடு கூடவரு பாடினியர் கொள்ளச்
சேணமரு வுங்குதிரை தேரொடு கொடுத்துங்
காணிய படிக்கவர் கலைத்தமிழ் வளர்த்தார்.

31. தாய்க்கொலை புரிந்தவர் தமிழ்க்கொலை புரிந்தா
ராய்க்கொலை புரிந்தவட வாரியரின் மானச்
சேய்க்குண மிலாதவிழி தீயரை யொறுத்தே
தாய்க்குநிக ராகிய தமிழ்மொழி வளர்த்தார்.

கழகம்—வேறு

32. பல்வளப் புடையதென் பாலி நாட்டிடைக்
கல்வளப் பஃறுளி யாற்றின் கண்ணமர்
நல்வளப் புடையதொன் னகர மேவிய
சொல்வளப் படுதமிழ் சுவைத்த பாண்டியன்.

---

26. நயம்-இனிமை. இயம்-இசைக்கருவி. முன்னிய-எண்ணிய. 31. சேய்க்குணம்-தாயைப் பேணுங் குணம். 32. கல்-மலை.

33. புலக்கணி னுணர்தமிழ்ப் புலவ ராக்கிய
இலக்கிய விலக்கண வெண்ணில் நூல்களை
நலக்குறு புலவர்தங் குழுவி னுப்பனோர்
அலக்குறு பொனாருள மாய வெண்ணினன்.

34. எண்ணிய படியுள வெழுச்சி மீதுற
அண்ணிய பொதுமைநோக் கறிஞர் தங்களை
நண்ணியே யமர்வுற நகரிற் கூட்டியே
கண்ணிய மொடுதமிழ்க் கழகங் கண்டனன்.

35. கண்டவக் கழகமுன் கருத்தை யேற்றியே
வண்டமிழ் நூல்களை வரைய றுத்திடத்
தண்டமி ழகத்திடைத் தமிழின் வாழ்வுறும்
ஒண்டமிழ்ப் புலவரை யொருங்கு கூட்டினன்.

36. கூட்டிய புலவரைக் குமரி நாட்டிடை
நாட்டிய தமிழ்க்கொடி நுடங்கு நாளவைக்
கோட்டியி லவரவர் கொணர்ந்த பாக்களை
ஏட்டிடை யிருந்தரங் கேற்றி னரோ.

37. அண்ணிய புலவர்பே ரவையிற் றங்கள்பாக்
கண்ணிய வுட்பொருட் கருத்தைப் பேரவை
உண்ணியே யுடன்பட வுரைத்துத் தம்முளத்
தெண்ணிய படியரங் கேற்றி னாரரோ.

38. அவ்வரங் கேறிய வரிய நூல்களை
ஒவ்வொரு தமிழரு மோதி யின்புற
அவ்விடை யேடெழுத் தாணி மேவிய
செவ்விய தமிழ்க்கொடி செறித்திட் டானரோ.

39. அவ்வகை யொவ்வொரி யாண்டி னோர்முறை
செவ்விய நூலரங் கேற்றிச் சீருற
ஒவ்விய படியெலா முழைத்துத் தீஞ்சுவை
வவ்விய முத்தமிழ் வளர்த்து வந்தனன்.

---

33. புலக்கண்-அறிவுக்கண். அலகு உறு-அளவுபட்ட, பகுதிப்பட்ட. அது, அகம் புறம்.
36. கோட்டி-கூட்டம்.
37. கண்ணுதல்-கருதுதல். உண்ணுதல்-கேட்டல்,

40. ஈங்கிது வாகவாண் டிருந்து செந்தமிழ்ப்
பாங்குட னைந்தமிழ்ப் பாவல் லோர்களால்
ஓங்கிய முத்தமி ழோதி யத்தமிழ்
ஆங்குயர் வழிகளு மாய்ந்து வந்தனன்.

41. தகையுற வத்தமிழ்ச் சங்கந் தங்கினோர்
வகையுறப் புலவர்கள் வகுத்த பாக்களைத்
தொகையுறத் தொகுத்துநூல் செய்து மோதியும்
திகழுற வாய்ந்துநேர் செய்து வந்தனர்.

42. முத்தமி ழாய்தர முறையி னாக்கிய
அத்தமிழ்ச் சங்கமவ் வண்ணல் பின்னரும்
வைத்ததம் முன்னவர் வழியைப் பின்றொடர்ந்
தொத்தினி தோம்பிட வோங்கி வந்ததே.

43. அங்கிலை யிருந்தகம் அருமைத் தாய்பிற
மன்னவ ராட்சியால், வடவர்ச் சேர்ந்தவன்
தன்னைநேர் தமிழரால், தமிழ ரல்லரால்
இங்கிலை யடைந்தனள்; இன்னு மென்கொலோ!

## 7. கடல்கோட் படலம்

1. இங்ஙனம் பல்சிறப் பியைந்து பல்வள
முங்கியே செந்தமிழ் மொழியை யோம்பியே
தங்களுக் கரசர்கள் தாங்க லாகவே
மங்கலம் பொருந்திட வாழ்ந்து வந்தனர்.

2. இவ்வகை வாழ்வையி லினிது போற்றிடும்
செவ்வியர் பொருளினைத் தீயர் நன்றென
வவ்வுத லுலகியல் வழக்கம் போலவே
கவ்வைநீர் வேலையுங் கருத்துட் கொண்டதால்.

3. அல்லது வழியிற்கேட் பாரற் றேங்கிட
நல்லது மறைவினை நண்ணரி வாழினும்
பல்லவர் கனுமதிற் பாய்தல் போல்வளம்
புல்லுநா டதனைக்கண் போட்ட வாழியும்.

---

43. வடவர்ச்சேர்ந்தவன்-பீடணன். 1. முங்குதல்-நிறைதல். 2. கௌவை-ஒலி. வேலை-கடல். 3. அல்லது-கெட்டபொருள்.

## வேறு

4\. தனித்தனி சொல்லி னின்பந்
தனைபடத் தொடரி னின்பம்
நுனிப்பொருள் காணி னின்பம்
நுணுகியுண் ணோக்கி னின்பம்
நினைத்தொறு நெஞ்சுக் கின்பம்
நேர்தனித் தமிழே நீதான்
அனைத்துமே யின்ப மானா
லவாவுறார் யார்தான் சொல்வாய்?

5\. மன்னரைப் பாடி முன்னர்
வண்டமிழ்ப் புலவர் பின்னர்த்
தன்னையா னாது பாடல் தகவிலை யினியம் மன்னர்
இன்னுயி ரெனவே போற்று மிருந்தமிழ் நாடு கொண்டு
மன்னனாய் வாழ வென்னி வகைகட லிருந்த தம்மா.

6\. தனித்தனிப் பொருளிற் றேய்ந்து
தமிழொடு முரணி யாங்கே
இனித்திடு மினிமை யெல்லா
மெதிர்த்துமு னிற்க வாற்றுப்
பனித்தவை யகல டைந்து
பணிந்ததா லினிமை காணுக்
கனைக்கடல் தமிழை யுண்ணக்
கருத்திடைக் கொண்ட தம்மா.

7\. அரும்பொரு ளடைதற் காக
வாங்குநின் றீங்குப் போந்து
வரும்பொருட் காகத் தீர்ந்த வடவரை யெள்ளி நாட்டை
ஒருங்குறு பொருளோ டாளு
முரிமையுங் கொள்ள வெண்ணிக்
கருங்கடல் வடவர் நாணக் காலம்பார்த் திருந்த தம்மா.

---

5\. ஆனாது-பொருந்தாது.

6\. பனித்தல் நடுங்குதல், கனைத்தல்-ஒலித்தல்.

7\. வரும்பொருள-வளம், பெரும்பொருள். தீர்தல்-அன்பினீங்கல்.

8. கழகமோ டமர்ந்து தென்னர் கவிதமி
ழாய்ந்தாய்ந் தன்னோர்
வழிவழி புகழின் வாழ வறிதுபார்த் திருத்தல் நம்மோர்க்
கழகல வெனவே பாழு மலைகடல் கழகத் தாங்குப்
பழகவே யேற்றகாலம் பார்த்துமே யிருந்த தம்மா.

9. நல்லவ ருறவை நாடி நணித்துவந் தணித்தா யன்னோர்
இல்லிடத் திருந்த வாவி யின்புறு மறிஞர் போலச்
சொல்லிடத் திலிய வின்பந் தோய்தமி ழுறவை நாடிப்
புல்லியே யளவ ளாவப் பொருகடல் நினைத்த தம்மா.

10. எண்டிசை யவாவு மின்பத் தியைந்துகட் டழகி னோடு
பண்டணி யாடை தாங்கும் பசுந்தமிழ்த் தாயை நேரிற்
கண்டவர் பொல்லாக் கொள்ளிக் கண்படு மென்றிரங்கித்
தெண்டிரைக் கடலும் பாவம்! திரைப்படாம்
போர்த்த போலும்.

11. தண்ணுமை தாளத் தோடுந் தழங்கியாழ்த்
திறத்தி னோடும்
நண்ணிய வாரகத் தோடும் நல்லிசைத் தமிழர் பாடும்
பண்ணமை தமிழின் றூய பாட்டினைக் கேட்டுக் கேட்டுக்
கண்ணிய கடலு முள்ளக் களிப்பினாற் பொங்கிற் றம்மா.

### வேறு

12. இன்றிருந்தா யிரத்தெண்ணூற் றிருந்தகடைக்
கழகத்தி லிருந்து முன்னே
சென்றிடுமா வாயிரத்தத் தீயாழி தென்பாலாஞ்
செழிய நாட்டின்
ஒன்றுபெரும் பகுதியையு மிந்திரத்தோர்
பகுதியையு முணவ தாக
மென்றுசுவைத் துண்ணுமல் தமிழ்த்தாய்கண்
ணீர்வடிக்க விழுங்கிற் றந்தோ.

---

10. தெண்டிரை-தெளிந்த அலை. படாம்-ஆடை,போர்வை.
11. தண்ணுமை - மத்தளம். தழங்குதல் - ஒலித்தல்.
திறம் - இசைக்கூறு. ஆரகம்-இசை.

## வேறு

13. "யாழுங் குழலும் பலபறையும் யாழோ ராடு மாட ரங்கும்
போழும் பனையே டுந்தோய்ந்த பொதிபொதி யான
தமிழ்நூலும்
வாழும் பொருளும் நிலபுலமும் மனையோ டினவும்
வாய்க்கொண்ட
பாழுங் கடலே! நீயொருநாட் பாழாய்ப் போகக்
காணேமோ.

14. வாரா யெனவே கைகோத்து மலர்வாய்
மோந்து முத்தாடிச்
சீராய் வளர்த்த கோத்தாயின் சீரைக் குலைக்கச்
சினந்துவரும்
நேரார் காலைக் கும்பிட்டு நேரா நின்று, நேரொன்றும்
பாரார் போலப் பாழ்ங்கடலே! பகையாய்
நின்று புகையாயே.

15. பாட்டைக் கேட்டங் கேதேனும்
பரிசு கொடாதோ டமையாதவ்
வேட்டைத் தீயிற் போட்டோட்டு
மிழிஞர் போல வெறிகடலே!
மூட்டை மூட்டை யாப்பாட்டை
முதுகிற் கொண்டு மமையாதந்
நாட்டைக் கொண்டா யினியெங்கள்
நண்ணார் குழுவை நண்ணுயே.

16. கட்டாய் நின்று தமிழ்நாட்டைக்
காத்து வந்தே கைக்கொண்டு
விட்டா யோவாப் பாழ்ங்கடலே!
மெய்காப் பாள ராயிருந்து
பட்டா வுருவித் தலைவெட்டும்
பகைவர் முன்னம் பல்விளிக்கும்
ஓட்டார் போலப் பகைவாழ்வி னுவரு நின்று சுவருயே.

---

13. போழ்-செப்புத்தகடு.

14. நேராநின்று-நேர்ந்து, நேர்-நேர்மை

16. உவறுதல்-பெருகுதல். சுவறுதல்-வற்றுதல்.

17. மண்ணா வலினால் புகவென்றே
மாற்றார் காலிற் போய்வீழ்ந்து
கண்ணா லறியா வுளவெல்லாங்
காட்டிக் கொடுத்தே கருதாரால்
உண்ணா வுறவை யொழித்தந்தோ!
வுலகா ளுரிமை பெற்றவிழி
நண்ணார் போலப் பாழ்ங்கடலே!
நலியா நின்று தொலையாயே.

18. துணையா நின்ற மறவோரைத்
துணையாக் கொண்டே யுடனாகி
இணையா நின்ற முன்னோனுக்
கெதிரா வருமா கொடியோர்போல்
அணியா நின்ற வணிகொண்டவ்
வன்னைக் கெதிரா வவ்வணியே
புணையா வந்த பாழ்ங்கடலே!
பொன்றா யோநீ யின்றோடே.

19. நன்றோ பழகித் துணைசெய்யும்
நல்லோர் போல நலஞ்செய்தே
ஒன்றார் போலப் பாழ்ங்கடலே!
உயிர்கொண் டொழிந்தா யோகெடுவாய்"
என்றே புலம்பித் தமிழ்மக்கள்
இடம்விட் டகலா விடரெய்தித்
தன்றா யிழந்த கன்றேபோல் தம்மூ ரிழந்து தவித்தாரே.

20. அன்னை புலம்பத் தந்தையழ ஆவா வென்றே மக்களழத்
தன்னை புலம்பத் தங்கையழத்
தாவா நின்றே யொக்கலொடு
பொன்னை யிழந்துங் கைவந்த
பொருளை யிழந்தும் மணிமாடத்
தன்னை யிழந்தும் வடபாலி
தன்னை யடைந்தார் தமிழ்மக்கள்.

---

18. அணியே புணை-தன்மீது பாடிய தமிழ்ப்பாட்டுக்களின் இனிமை கண்டே மேலும் கரணைப் பொங்கியது.

20. புலம்பல்-தனித்தல், அழுதல். தன்னை-அண்ணன். தாவா நின்று-தாவி, விரைந்து.

வேறு

21. வேலியே பயிரை மேய்ந்தால் மேலொரு
காப்பின் றேபோற்
கோலியே வேலி யாகக் குழவியைத் தாய்காப் பேபோற்
சாலவே காத்து வந்து தமிழ்க்கட லெனப்பேர் பெற்ற
வேலையே கொள்ளு மாறுல் வேறினிச் செய்வ தென்னே.

22. என்றவ ரமைதி கொண்டா ரென்னினு மிழந்த செல்வத்
தொன்றற வொன்று வந்தாங் கூசலாட் டுறவே யுள்ளம்
கனறியே கதறி மேலோர் கழிந்ததற் கிரங்கே லென்னும்
நன்றியல் பொருளை யுன்னி நாள்கழித் திருக்குங் காலை.

வேறு

23. குஞ்சோ ரைந்தின் மூன்றொழியக் கோவென்
றலறுங் குருகேபோல்
வஞ்சாய்! நீயுன் பொருளிழந்து மண்மே
டாவா யென்றலற
அஞ்சா தக்கா ராழிபினும் ஐந்நூற் றேழு ராயிரத்தே
எஞ்சா நின்ற பெருவளத்தோ டிந்திரப்
பேரின் ருக்கியதே.

24. அந்தோ முன்போற் றமிழ்மக்க ளானோர்
வடபா லடைவாகிக்
கொந்தார் கானக் குலமுண்டு கொழுத்தே
யடிமைக் குடியாக
நந்தா வாய்மைத் தமிழ்நாடர் நலமுண்
டகலா நிலைகொண்ட
வந்தே றிகளைத் தீயாழி மண்வாய்க்
கொண்டே வென்றதுவே.

வேறு

25. தொன்றுள்ள நகரிழந்த தூயதமிழ்ப் பாண்டியனும்
இன்றுள்ள குமரிமுனைக் கிருநூறு கற்றெற்கில்
குன்றுள்ள மலரவருங் குமரியாற் றங்கரையில்
நின்றுள்ள தென்மதுரை நெடுநகரம் புக்கிருந்தான்.

---

௨௩. க. மு. 2500. குருகு- குருவி.

26. தென்மதுரை குடிபுகுந்த செய்யதமிழ்ப் பாண்டியனும்
தன்மையுட னேயிரண்டாஞ் சங்கமது தான்கண்டு
நன்மையொடு தமிழாய்ந்து நன்னூல்கள் பலசெய்து
முன்மையிலும் பன்மடங்கு முறைபுரந்தாங்
கினிதிருந்தான்.

27. அடைக்கழகத் தலைநகரை யலைமூடப் புதிதாக
இடைக்கழகங் கண்டாரவ் விடந்தனையுங்
கடல்கொள்ளக்
கடைக்கழகங் கண்டதனாற் கலைத்தமிழின் பெருவளர்ச்சி
உடைக்கழகந் தொடர்பகலா தொருங்குநடை
பெற்றதுவே.

28. தந்துவைத்த வொருபொருளைத் தான்கொள்ளு
மாறேபோல்
வந்தடுத்துத் தீயாழி வாய்க்கொண்டு போயதன்பின்
இந்திரத்தை யினிதாண்டன் றிருந்தபெருந்
தமிழ்ச்சோழன்
செந்தமிழின் மணங்கமழுந் திராவிடம்புக் கிருந்தனனே.

29. பூண்டசுவை யதுகண்ட பூனையுறி யுறியாகத்
தாண்டுமெனு முதுமொழிபோற் றமிழ்சுவைத்த
பாழ்ங்கடலும்
ஆண்டதுவேழ் நூற்றின்முன் னரைகுறையா
வுள்ளதுங்கொண்
டுண்டுள்ள வளவினநாட் டிடஞ்சுருங்கச் செய்ததுவே.

30. எத்தனையோ வகப்பொருணூ லெத்தனையோ
புறப்பொருணூல்
எத்தனையோ விசைத்தமிழ்நூ லெத்தனையோ
கூத்தியனூல்
எத்தனையோ விலக்கியநூ லெத்தனையோ விலக்கணநூல்
அத்தனையுங் கொள்கடனீ யறிவுபெறுக் கழிமடமேன்?

31. மணிமலையெங் கேகுமரி மலையொடுபன் மலையெங்கே
அணிபிருபஃ றுளிகுமரி யாறெங்கே யவ்வாற்றால்
பணிபறியாப் பெருவளந்தென் பாலியொடிந் திரமெங்கே
உணியெனவே யுறிஞ்சியநீ ஒகெடுவாய் கொடுங்கடலே.

---

29. முன்-கம்முன். 31. பணிபு அறியா - குன்றாத.
உணி—ஆடுமாடுகளைக் கடித்துக் குருதியை
யுண்ணும் ஒருவகைப்பூச்சி.

32. அதன்பின்ன ரேவையை யாற்றினது கரையுடைய
புதுமதுரை யதுகண்டு புகழ்பூத்தார் பாண்டியர்கள்,
இதுவாக வேசோழ ரெழில்பூத்த புகார்நகரம்
அதுவாகத் தமிழ்வளர்த்தே யரசுவீற் றிருந்தனரால்.

33. பின்னருமத் தியாழி பெருவயி று நிரம்பாது
மன்னியசீர்க் கடைக்கழக காலத்தே வாய்வைத்துப்
பொன்னலரும் புன்னையங்காப் புகார்முதலா கியவுண்டே
இந்நிலைமை யாக்கியதா லினும்பசிதீர்ந் திலவேயோ?

## 8. இலங்கைப் படலம்

### வேறு

1. 'தறைகட லுண்டல் கண்டாம், தமிழக முழுது மொன்றை
வறியவ னிலிதி ஞெம்பும் வகையினன் முறையி னோடு
இறைதர மலையுங் கானுந் திரையொடு நாடுஞ் செல்வம்
இறையிரா வணன்முன் காத்த இலங்கைநாட் டியல்பு காண்பாம்.

2. பெருவள மொடுதென் பாலி பெயல்வள மருதத் தோடு
பொருகடல் விழுங்கிக் கொண்டு போயபின் றளித்து நின்ற
திருவிட மதன்றென் பாங்கிற் சிதறிய தீவுக் கெல்லாம்
ஒருபெருந் தலைமை தாங்கி யொளிர்ந்ததவ் விலங்கை நாடே.

3. குடக்கொடு குணக்குந் தெற்குங் கொடுங் கடல் வளைத்துக் காப்ப
வடக்கினில் வளங்க ளெல்லாம் வாய்திரா விடத்தின் பாங்கர்
நடக்குறும் படிக்கு வாரி நடக்கிலா நிலமா வற்றின்
இடைக்குட மூக்குப் போல விருந்ததவ் விலங்கை நாடே.

---

32. புகார்-காவிரிப்பூம் பட்டினம.
1. செல்வமாகிய இறையைத் தர. இறை-தங்கியிருந்து.
2. மருதம்-கிழக்குநாடு.
3. வாரி-கடல். குடமூக்கு-திவகற்பம்.

4. இவ்வகை சுருங்கி னின்ற விடைநில மதனைப் போக்கித்
தெவ்வர்க ளணுகா வண்ணந் திரைக்கட லிரைத் தேக்கிக்
கவ்விய கடலி னாழ்ந்த கடற்கிடங் கதுவுண் டாக்கிச்
செவ்விய தீவ மாக்கித் திகழ்ந்தன ரிலங்கை வாணர்.

5. அக்கடற் கிடங்கைத் தாண்டி யருந்தமி ழகத்திற் செல்லப்
புக்கிட நாட்டி னாங்கே பொருந்திய பரப்பி னோடும்
தக்கதைத் திருத்தி னோடுஞ் சமைந்துநீங் காத காவல்
மிக்கதிண் பால மந்நீர் மிதவைபோற் பொலிந்த மன்றே.

6. இங்கவை யிலங்கை நன்னா டிடைக்கழ கத்தே பெய்யும்
மங்குலைக் கொடையா வெள்ளி மலையினை வலியாற் றள்ளி
எங்குமே பரப்பி னோங்கு யர்ந்த இராவணன் குடைநி ழற்கீழ்த்
தங்கிய தமிழ கத்தின் றலைமைபூண் டிலங்கிற் றம்மா.

7. ஊரெலா மகிலி னாற்றங் காவெலாம் பூவி னாற்றம்
நீரெலாங் கலவை நாற்றம் நிலமெலாஞ் சேற்றி னாற்றம்
ஏரெலாந் தமிழி னாற்றம் உள்ளெலா முணவி னாற்றம்
யாரெலா மெழுமா நாற்ற மறையுதற் குரிய ரம்மா.

8. ஆவெலாங் குடப்பா னல்கு மழுகெலா மணப்பா லல்கும்
காவெலாங் கனிக ளீயுங் கனியெலா மினிமை தோயும்
பூவெலாஞ் செழுந்தேன் சொட்டும் புனலெலாம் பைங்கூழ் மூட்டும்
மாவெலாந் தமிழ்ப்பண் ணூட்டும் வளமுறா மிலங்கை நாட்டே.

---

4. தெவ்வர்-பகைவர். கிடங்கு-அகழி. 5. மிதவை-தெப்பம். 7. உள்-வீடு. 8. அல்குதல்-தங்குதல். மூட்டுதல்-நிறைதல். மா-வண்டு.

9. சங்கினம் பயந்த முத்துந் தாமரை தந்த முத்தும்
வெங்களி றுகுத்த முத்தும் வேய்கழை யுதிர்த்த முத்தும்
எங்குமே முத்தந் தத்தி யிலகுத லிலங்கை யென்னும்
நங்கைமற் றவற்றை யெள்ளி நகைத்தல்போற் றோன்று மாதோ.

10. பொன்னையுந் திகழு மொன்பான் மணியையும் பொருந்திச் செந்நெல்
கன்னலுங் கனியுங் காயுங் கடிமலர் கிழங்குந் தேனும்
புன்னையுங் கமுகு மேனைப் பொழிலொடு வாழை தாழை
தென்னையும் பனையு மோங்கித் திகழ்ந்ததவ் விலங்கை நாடே.

11. நால்வகைத் திணையுந் தாய்போல் நல்குபல் கூலத் தோடு
பால்வகைக் கூலந் தாங்கிப் பல்வகை வளமுந் தேங்கி
நூல்வகைத் தமிழின் காட்சி நுணங்கிய பெரியா ரோடு
மேல்வகைக் குடிகள் வாய்ந்து மிளிர்ந்ததவ் விலங்கை நாடே.

12. ஒலிபுனல் நடுவ தாலு முயரிய மனைக ளாலும்
நிலவுமிழ் முடிகளாலும் நெடுந்தமிழ்க் கொடிக ளாலும்
அலகில்பொன் மணிக ளாலு மமைந்தபல் வளங்க ளாலும்
இலகுதல் நோக்கி மேலோர் இலங்கையென் றிசைத்தா ரம்மா.

13. முகர்பொரு ளொன்றோ குன்று மூவின மொடுநன் மக்கள்
நுகர்பொரு ளெல்லா மான்ற நுவல வரியற்றிக் கொண்டு
பகர்பொரு ளிவையா மென்னப் பயன்படப் பொலிந்தெந் நாளும்
நிகர்பொரு ளினவா யெங்கும் நிறைந்ததவ் விலங்கை நாடே.

---

9. வேய் - மூங்கில். கழை - கரும்பு. மற்றவை - மற்ற நாடுகள். 10. கன்னல்-கரும்பு. 11. கூலம்-தவசம், பயிறு. கூலம்-மாடு. நுணங்கியகாட்சி-கூரிய அறிவு. 12. முடி - மாடத்தின் உச்சி. இலங்கை-தீவு. 13. மூவினம்-ஆடு மாடு எருமை

14. கைத்தொழில் வணிகத் தோடேர்க் களத்தொழி லெனுநீப் பில்லா
முத்தொழில் களுமெல் லோரு முறையொடு பயில்கை யாலே
இத்தொழில் தெரியா தாரீங் கின்றெனச் செருக்கி நாளும்
எத்தொழில் களுக்குஞ் சான்று யிருந்ததவ் விலங்கை நாடே.

15. முத்தமிழ் வளர்க்கு மேலோர் முறைமையி னிறைமை தாங்கிப்
புத்தொளி பெருகி யெல்லாப் பொருளுநற் பொருள வாக
வைத்திழி மடிமை தன்னை மருந்துக்கு மறியா ராய
கைத்தொழி லாளர் வாழ்வு கவின்றதவ் விலங்கை நாடே.

16. கொள்வது மிகைகொ ளாது கொடுப்பதுங் குறைகொ டாதே
உள்வது செயல தாக வூதியங் குறையு மேனும்
எள்வது புரியா தென்று மியல்வது புரிந்து நேர்மை
வின்வதில் வணிகர் வாழ்வு மிகுந்ததவ் விலங்கை நாடே.

### வேறு

17. ஏராளர் கைவளம்போ லிடமாரக் குடம்பெய்த
காராலே மலையாறுங் கான்யாறு மடைகுளமும்
நீராலே நிறைவெய்த நிலமெல்லாந் தனைபட்ட
சீராலே நிறைவெய்துஞ் செய்யுளெனப் பொலிந்ததுவே.

18. மடிமையிடைப் படியாராய் வளம்பெருக வினையுநிலை
நெடுமையிலை மென்றூராய் நிலமெனுநல் லாள்மகிழ
மிடிமையற வுலகர்பசி வெருண்டோடப் பேருக்கம்
உடைமையரா யுழவர்நில முழவுதலைப் படுவாரே.

---

16. உள்வது-எண்ணுவது. எள்வது-இகழத்தக்கது. வின்றுதல்-நீங்குதல். 18. மடி-சோம்பல். மிடி-வறுமை.

19. வலங்கொடுநல் லாரிடித்த மாவினிடைச் செம்பாகைக்
கலங்கிடவார்த் தம்மாவைக் கருவிகொடு
கிளறுதல்போல்,
நிலங்குழைந்து மெதுவுறத்தண் ணீர்தேக்கிப் பதமாக்கி
அலங்கொடுசே றதுவாக அணிவயலை யுழுவாரே.

20. பைந்தழையை மிதித்துழக்கிப் பதம்படநன்
றும்மசித்துச்
செந்தமிழ்வாய்ச் செம்மொழியார் தீஞ்சுவைமாச்
சோறடல்போல்,
பைந்தழையை மிதித்துழக்கிப் பரம்படித்துப்
பழஞ்சேற்றைச்
செந்தமிழின் செம்பாகஞ் செய்தொழுங்கு செய்வாரே.

21. கொழுஞ்சாற்றி னிடைமேயுங் கொண்டலிளஞ்
சிப்பியிடை
விழுஞ்சேற்றின் துளிமுத்தாய் மிளிர்கவெனப்
பெய்யுதல்போல்,
உழுஞ்சாற்றி னுவந்துகட லுலகோம்பும் பெருக்காளர்
செழுஞ்சேற்றில் முளைக்கவெனச் செந்நெல்லை
விதைப்பாரே.

22. அஞ்சாய விளஞ்சிறகா லடைகாக்க முட்டையிளங்
குஞ்சாகி யுறைநீக்கிக் கொண்டுவெளிக்
கிளம்புதல்போல்,
மஞ்சாரும் வளவயலில் மருவியிள நீர்காத்த
செஞ்சாலி யுமிநீக்கிச் செழுமுளையாக் கிளம்பினதே.

23. வானின்ற வொருகுடிவாழ் மக்கள்தனித் தலியாகத்
தானின்று நனிவாழத் தான்வைத்தல் போல்நாற்றங்
காலின்று பெயர்த்தெடுத்துக் கவிழ்ந்தமுடி
திருத்திநறுந்
தேனின்ற வின்சொல்லார் செழுஞ்சேற்றி னடுவாரே.

---

19. அலம்-கலப்பை. 20. பைந்தழை-கீரை. மிதித்தல்-அமுக்குதல். மாவுடன்கீரையைக் கலந்து ஆக்கல். 21. சாறு-ஆறுபாய் ஆலைக்கருப்பஞ் சாறு. விழும்சேறு-நல்ல இனிமை. சாறு-விழா. 22. சாயல்-மென்மை. ஆர்தல் - பொருந்துதல், சாலி-நெல்.

24\. பலகுட்டி யொருதாயின் பாலுண்ட பயக்குறையால்
வலியற்றுப் போமாறோர் வளர்குழியில் வளமின்றிப்
பலநாற்றை நட்டில்லாப் பயனுடைய ராகாமல்
நலமுற்றும் பெறவொற்றை நாற்றாக நடுவாரே.

25\. வழிபொலிய மாணுக்கர் மனத்தகத்தே நட்டதமிழ்
மொழிபொலிய வறிவென்னு முளைகிளம்பித்
தழைப்பதுபோல்,
விழிபொலியப் பச்செசன்று விளைவொடுசேற்
றிடைநட்ட
குழிபொலிய விளநாற்றுக் குருத்துவிட்டுத்
தழைத்ததுவே.

26\. அருந்தமிழி னிடைகலந்த வயன்மொழிச்சொற்
கலைகளைந்து
தருந்தகைமை யோடுதனித் தமிழ்வளர்க்கும்
பெரியார்போல்,
அருந்தியுண வினைப்பயிரை யலக்கழிக்குங் களைகளைந்து
திருந்தியுர மொடுசெழிக்கச் செய்துபயிர் வளர்ப்பாரே.

27\. அசும்பாரும் பயிர்வளர்வுற் றருஞ்சூல்கொண்
டிரையுண்ட
பசும்பாம்பின் றோற்றம்போற் புடைகட்டிப்
பால்பிடித்து
விசும்பாருஞ் செல்வரெனத் தலைநிமிர்ந்து விழுக்கல்வித்
தசும்பாரும் பெரியாரிற் றலையிறைஞ்சிக் காய்த்ததுவே,

28\. ஆய்ந்துதமிழ்ச் சங்கத்தா ரருந்தமிழ்ப்பாக்
களைத்தொகுத்துத்
திந்தமிழின் பனுவல்பல செய்துலகஞ் செய்குதல்போல்,
காய்ந்தமணிக் கதிரறுத்துக் களத்தடித்துப்
பதர்கழித்துப்
போந்தமணிக் குவைதூற்றிப் பொலிவெய்திப்
பொலிவாரே.

---

27\. அசும்பு-சேறு. சூல்-கரு. தசும்பு-பொன், செல்வம்-
கல்விச்செல்வம்.

29. வாளெடுத்துப் பொருகளத்தே வலிமையொடு
தொலைகதொலையாய்
ஆளடித்து முடிகுலுக்கி யரசர்கள்போ ரிடுவதுபோல்,
தோளெடுத்துப் பொலிகளத்தே சுமைசுமையாக்
கதிரடித்த
தாளடித்து முடிகுலுக்கித் தகவொடுபோ ரிடுவாரே.

30. ஆளாலே பகைநீக்கி யதனாலே வளந்தேக்கித்
தாளாள ரெனவேசெந் தமிழாளர் சொல்லுதலேர்த்
தோளாளர் கொழுநுனியின் சுவையாலே
யெனிற்சுமைகொள்
வேளாளர் பெருமைதனை விரித்தோதப் படுமோதான்.

31. சொற்படுக்குஞ் சுவைமொழியார் சோறுக்கு
மரிசிதனைக்
கற்பொறுக்கித் தவிடொழியக் கழுவிநலங்
காணுதல்போல்,
மற்படுக்கும் பலன்கொடுக்கும் வளம்படுக்கு
நிலமதனைக்
கற்பொறுக்கி முட்பெருக்கிக் களமர்நலங் காணுவரே.

32. தொடிப்புழுதி கஃசாக வுணக்கிடினத் தொகுபுழுதி
பிடித்தெருவும் வேண்டாது பெரும்பயனுண்
டாக்குமெனும்
படித்துழுது புழுதியினைப் பலமுறைசெம் பாடாக்கி
அடிப்புழுதி மேக்குறப்பண் பாக்கிநலஞ் செய்வாரே.

33. பருவத்தே பயிர்செய்யும் பண்பறிந்து பைங்கூழ்நோய்
ஒருவத்தா னேயெருவிட் டுழுதுவிதைத் திட்டவிதை
கருவைத்த வுடனேநற் கதிர்காணு முறுதியுடைத்
திருவத்த ராய்வினைவு செய்துநலஞ் செய்வாரே.

---

30. தாள்-முயற்சி. சுமை-செற்சுமை, **31.** மல்-உடல் வலி.

34. மனப்பயிரைப் பொருண்மாற்றி மடியின்றிக்
குடிகொண்டு
முனைப்புயர வளர்த்துவரு முறையேபோற்
பெருக்காளர்
இனப்பயிரைப் போகமெலா மிடமாற்றிப் பயிர்செய்தே
இனித்ததமிழ்ப் பயனேபோ லிரும்பயன்கைக்
கொள்வாரே.

35. அருள்பதித்துப் பிறவுயிர்க்க ணன்புவைத்துப்
பசியென்னும்
இருள்பதைத்து வெருண்டோட விட்டுண்ணுங்
கடப்பாடர்
தெருள்பதித்த பாவினிடைச் செந்தமிழ்ப்பா
வாணர்கணற்
பொருள்பதித்தல் போன்றவர்நற் பொறுக்குவிதை
விதைப்பாரே.

36. கண்வளர்ந்து வளர்கவெனக் காதலிளங் குழவிதனைப்
பண்வளருந் தொட்டிலிடைப் படுக்கவைக்கும்
படியேபோல்,
மண்வளர்ந்து வெளிப்போந்து வளர்கவென
வுழுபடைச்சாற்
கண்வளர விதையினைக்கட் காவியர்சா லிடுவாரே.

37. செயிர்வளர விடங்கிடையாச் செழுமனையிற்
றகைமையுற
அயிர்வளர வமைசுண்ணத் தறைகள்பல
வமைக்குதல்போல்,
உயிர்வளர வுணவுபடைத் தூட்டுவிக்குங் காராளர்
பயிர்வளரப் புழுதியினைப் பாத்திபிடித் திடுவாரே.

38. அட்டிலிடைத் தொழில்புரியு மன்னையிளங் குழவிக்கு
வட்டிலிடை யடிக்கடிபால் வார்த்துவளர்ப் பதுபோலக்,
கட்டியநீர் பாத்தியிடைக் கருக்கொண்ட பயிர்வளர
அட்டிடுவா ரடிக்கடிநீர் ஆய்போலு மன்புடையார்.

---

34. மனப்பயிர்-அறிவு. முனைப்பு-ஊக்கம். இனப்பயிர்-ஒரே பயிர். 35. தெருள்-தெளிவு. 37. செயிர்-குற்றம். அயிர்-நுண்மை. 38. அட்டில்-அடுப்பறை. அட்டுதல்-நீர்பாய்ச்சுதல்.

39. பகைபட்ட போர்க்களத்தே பகைப்படையை விட்டுவைக்கும்
வகைபட்ட விறலில்லா மறமன்னர் போலன்றித்,
தகைபட்ட பயிருணவைத் தானுறிஞ்சிப் பயன்கொல்லும்
தொகைபட்ட களைகளைந்து தொகுவளங்கைக் கொள்வாரே.

40. தாலுட்டிப் பொரிகடலை தமையினமாக் கொளல்போலும்,
நூலோட்டிப் பாவினிடை நூலுடைசெய் வதுபோலும்,
சூலூட்டிப் பண்படுத்த தொகுபுழுதி யிடைகுறுக்குச்
சாலோட்டி முதிரையினைத் தவசமிடைப் படுப்பாரே.

41. அறிவாளர் குலம்பெருக வறிவிலியர் குலஞ்சிறுக
முறையாகப் பயில்வோர்க்கு மொழித்தேர்வு நடத்துதல்போல்
செறிவான நிலமிளகச் சிறிதகலத் திறலுடைய
நிறைவான பயனுதவ நெடும்பயிரை யுழுவாரே.

42. களையகப் பயிருழவான் கார்பொழியச் செழியபயிர்
வளையாது தலைநிமிர்ந்து வானோக்கி வளர்ந்துலகம்
உலையாது வயிறார வுண்டுமகிழ் கொண்டிடப்பல்
கிளையாகிக் கிளைதோறுங் கிளம்பினகாண் பசுங்கதிரே.

43. ஆழியா லுலகோம்பு மரசர்புத லனைவோரும்
நாழியா லுயிரோம்ப நன்செயினும் புன்செயினும்
மேழியா லுலகோம்பும் வேளாளர் விளைபயிரின்
காழியா லுயிரோம்புங் கதிரினிது காப்பாரே.

44. முதிர்வெய்தப் பாவிருக்க முடிந்ததுணி யறுப்பதுபோல்,
கதிர்கொய்து தாளிருக்கக் களத்தடித்துப்பொலிதூற்றி
எதிர்பெய்த தொழிலாளர்க் கினிதிந்து மனைசேர்த்துக்
குதிர்பெய்து விருந்தேற்றுக் கொண்டினிதுண் டிருப்பாரே.

---

39. விறல் - வலி. 40. தால்-நா. சூல் - கரு, விதை. முதிரை-பயறுவகை. 42. உலைதல்-வருந்துதல். 43. ஆழி-சக்கரப்படை. நாழி-படி. காழி-கதிரின் தாள். 44. எதிர்பெய்தல் - உதவுதல். குதிர்-தவசக்கூடு.

45. மன்செயலுக் கொருகுறையும் வாராமற் பெருவணிகர்
பொன்செயலுக் கொருகுறையும் புல்லாமல் மல்லாரும்
புன்செயிலு நன்செயிலும் பொதிபொதியாத்
தாஞ்செய்த
முன்செயலின் பயன்கொண்டு முறையாக வாழ்வாரே.

46. மன்னுயிரின் பசியென்னும் மாபாவி கெட்டோமென்
றுன்னவரு முலகமெனு முருள்பெருந்தேர்க் கச்சாணி
யன்னதொழி லுழுதொழிலே யாமென்று
பெரியோர்கள்
சொன்னபடி வேளாளர் தொல்லுலகம் புரப்பாரே.

47. இன்னபடி வளம்பலவு மியன்றுபழந் தமிழ்ப்புலவர்
சொன்னபடி நலம்பலவுந் தொகுதியுறச் சுடர்முடிதோய்
மன்னருட னேதமிழ மக்களொரு மனப்பட்ட
நன்னருட னேயிலங்கை நாடுபொலிந் திலங்கினதே.

நகர் - வேறு

48. கலங்குதல் லறிகிலாக் காப்பின் மேயெலா
நலங்களும் பொருந்திய நாட்டின் கண்ணெனத்
துலங்கிநம் மிறைமகன் றோன்றப் பெற்றநல்
இலங்கைமா நகரத னியல்பு காணுவாம்.

49. மாபெருந் தலைவர்கள் வாழ்ந்த தொன்னகர்
தாவரும் பெருவளந் தழைத்த பொன்னகர்
காவலின் காப்பெனக் கருதன்ற நன்னகர்
ஏவருந் தொழுதகு மிலங்கை மாநகர்.

50. கூடிய பெருவளங் கொளவந் தேறியர்க்
கூடிநம் மிறைவனைக் கொன்று நக்கலங்
கூடிய வரையிலுங் குலைத்த பாழ்ங்கொடும்
பீடணப் பாவியும் பிறந்த வின்னகர்.

45. மல் ஆரும-வளம பொருந்திய. 46. உன்ன-எண்ண. வரும உலகம-வளரும உலகம. 47. நன்னர்-நலம. 49. தா அரும-குறைவற்ற. கஞலுதல்-மிகுதல், செய்தல்.

51. இந்திர னொடுதிரா விடன்றன் பாலியும்
வந்தொரு தலைப்படு மிடத்தில் வானில
குந்தலை யுடையமுக் கூட லென்னுரு
சந்தடர் தருமலை தானி ருந்ததால்.

52. நாடொரு மூன்றுமா நாடு கூடல்போற்
கூடிடம் பொருந்திமுக் கூட லென்றவம்
தேடியல் கொடித்தெரு விலங்கை மாமகள்
நாடகம் பயிலுநன் மேடை போன்றதால்.

53. அணிமிகு மிலங்கைநாட் டகத்தி னுப்பமேனோர்
அணிமணி மேடைபோ லமைந்த வம்மலை
மணியணி தமிழக மங்கை நன்கலம்
புணரிய வொளிமுகம் போற்பொ லிந்ததே.

54. அருந்தமிழ் மக்களுக் காமி ராவணம்
இருந்தவே நுகர்ந்திடச் செய்யிராவணப்
பொருந்தகை வரைந்திடப் பெற்ற வாவணம்
பொருந்திய வாவணம் போலு மாலரோ.

55. இன்னுள விலங்கைத்தீ வின்றென் மேற்றிசில்
குன்றினுக் கரசதாக் குறிஞ்சித் தாரணி
மன்றலந் தமிழக மகளின் மார்பணி
ஒன்றிய முத்தென வொளிறு மாலரோ.

56. செம்மலைத் தாங்கியேர் திகழி ருக்கைபோல்
அம்மலை யிலங்கைமா நகரை யார்வொடு
தம்முது கெழிலுறத் தாங்கிப் பாங்கிளிற்
பொம்மலுற் றழிவிலாப் புகழின் மேயதே.

---

51. தலை-மலைமுடி. 54. இராவணம்-இரு ஆவணம்-பேருரிமை. இருமை - பெருமை, மிகுதி. இராவணன்-இரு. ஆவணன் (மக்கட்கு) மிக்க உரிமை யுடையவன். பேரிருமை யுடையவன். ஆவணம்-முறிச்சீட்டு, கடைத்தெரு. அம்முக்கூடல் இராவணனால் மக்கட்கு எழுதிக்கொடுக்கும் முறிச்சீட்டு (பத்திரம்)விற்கும் கடை போன்றது. 56. செம்மல்-தலைவன். 'தன்'-தம்மென்றுயது எதுகை நோக்கி. ஏர்-அழகு. இருக்கை-அரியணை.

### வேறு

57. நீரைத் தாங்கு நிலமங் நிலத்தினற்
சீரைத் தாங்குந் திருவனைத்தாங்குநல்
லோரைத் தாங்கு முரனுடை யேனென
யாரொப் பாரென் றறையுமக் குன்றமே.

58. நின்னைத் தாங்கு நிலமலை வோவெனில்,
பின்னைத் தாங்கி விளங்கு மணிமுடி
தன்னைத் தாங்கிய தாங்கிய தாங்கிய
என்னைத் தாங்குத லென்னரி துவென்னுமே.

59. கொடியிற் றுரிற் குலவுமுக் கூடலின்
முடியிற் சூடு முழுமணி போலதன்
நடுவிற் போந்து நலம்பொலி நன்னகர்
வடிவிற் சான்ற மலைமகள் போலுமே.

### வேறு

60. உளம்படு காதலன் நல்வர வோத
உளம்படு தோழியி னொண்கொடி யாடும்,
வளம்படு மாட மறுககன் றேடி
வளம்படு பாத்தி வயலினை மானும்.

61. சாலைக நேர்மலர் சார்நறு மென்கால்
சாலக நேரெதிர் சாலகம் புல்லும்;
சாலக நீர்தமர் தங்கை வழிந்து
சாலக நேர்பொதி சாலகஞ் செல்லும்.

62. மார்கழி மாத வயல்வளம் பட்ட
சேர்குல மோம்புஞ் செழுமனை தோறும்
மார்கழி வேரின் வருஞ்சல தாரை
நேர்கழு நீர்கழு நீர்வளர் விக்கும்.

---

58. தாங்கியவன்-இராவணன். 2. இலங்கை. 3 மலை. 60. மறுகு-தெரு. 61. சாலகம்-பூவரும்பு. சாலகம் நேர்மலர் - அரும்பலர்ந்த பூ. சாலகம் - சன்னல். சால் அகம்நீர்-நீர்ச்சாலிலுள்ள நீர். சாலகம்-சல தாரை. பொதிதல்-மூடுதல். 62. மார் - மார்பு. வேர் - வெயர்வை. கழுநீர்-அரிசி கழுவுநீர், செங் கழுநீர்ச்செடி.

63. அடரிதழ் மேய வடுக்கலர் போலப்
படரெழி லேய பலவறை புல்லுங்
கடிமனை கூடியேழ் காறு முயர்ந்த
கொடியணி மாடநீள் கொண்டலி னோங்கும்.

64. மன்றலஞ் சேர்புற வாய்மலர் தோய்ந்த
தென்றல் புகுந்து சிறுவர்க ளாடும்
முன்றிலி னீள்மர மொய்ம்மலர்ப் பந்தர்
ஒன்றி மலர்மண மூட்டி யுதிர்க்கும்.

65. புனைமணி மாடப் புதுமனை முன்றிற்
கனிமரம் பாடிக் கரும்பயில் மின்னார்
கனிதர வாடுதல் கண்டு ளுவந்து
கனிதர வுண்டு களிக்குவ ருள்ளம்.

66. பொற்றெருடி யேங்கப் புறமனை முன்றில்
உற்றினை யாதுநீ ரூற்றி வளர்த்த
சிற்றிடை போன்ற செழுங்கொடி முல்லை
முற்றிழை வாட முறுவலித் தாடும்.

67. அட்டிலை யேன மணிசெயல் போலத்
தட்டுமுட் டில்லஞ் சமைவுறும் பேராப்
பெட்டியொ டொண்சுவர்ப் பேழைசெம் பொன்னோ
பட்டொடு நன்கலப் பாங்கது செய்யும்.

---

63. படர் எழில் ஏய-மிக்க அழகு பொருந்திய.

64. மன்றல்-மணம். புறவாய்-வீட்டின் பின்புறவாயில். மணம் ஊட்டி மலர் உதிர்க்கும் என்க.

65. அயில்தல் - உண்ணல். கனிதர-இனிமையாக. மின்னார் கனிதரப் பாடியாடுதல் கண்டு உவந்து மரம் கனிதருமென்க. 66. ஏங்க - ஒலிக்க. இனையாது-வாடாது. முற்றிழை-பெண். முறுவலித்தல்-சிரித்தல், பல்போல மலர்தல். 67. அட்டில்-சமையலறை. ஏனம்-பாத்திரம். தட்டுமுட்டு-வீட்டுப்பண்டம். (அகப்பை முதலிய) பேராப்பெட்டி-பீரோ சுவர்ப்பேழை-அலமாரி.

68. ஆடமைத தோளிய ரங்கடு லூரில்
ஆடிய நீர்வெளி யாடிட யாணர்
கூடிய வாடு குளந்தனி லாடி
மேடையி னின்று விளக்குவ ரைம்பால்.

69. பாடக மாடும் படிநெடு நேரம்
நாடக மாடு நலங்கிளர் நல்லார்
ஆடக மாக வமைந்தசெய் குன்றங்
கூடக மாகக் கொடுபயன் கொள்வார்.

70. தொடியணி முன்கைச் சுரிகுழல் நல்லார்
மடியினிற் பிள்ளையை வைப்பது போல
உடுவென வொண்க லொளித்திடம் விட்டே
அடிபெயர்த் தேகுநித் தாடி மகிழ்வார்.

71. இத்தனை கூழிந்தாக் கூழிந்தா வென்று
புத்திடம் பாய்ந்தவர் போகுமுன வோடி
உத்திடை நின்றுள் ளுவப்பது பொங்க
முத்து நகைச்சியர் மூலை பிடிப்பர்.

72. காப்பணி மென்மலர்க் கைகளைப் பற்றி
மாப்படை போற்பெரு வட்டமாய் நின்று
தாப்புலி யானைத் தடுத்துமா காததும்
ஆப்புலி யாடி யகமகிழ் வாரே.

73. நீடுயர் பாங்கரி னின்று நிலஞ்செய்
பாடமை நுண்மணற் பாங்கரி னுங்கள்
ஆடமைக் கையை யழகுற வீசிக்
கூடியே குப்பாங் குதிகுதிப் பாரே.

68. அமை-மூங்கில். யாணர்-புதுநீர். ஐம்பால்-கூந்தல். 69. பயன - விளையாட்டு. 70 உடு - விண்மீன். இது-கல்லொளிதகல் 71. உத்து - நிறகுமிடம். 72 தா-தாவுகின்ற. புலி ஆள-ஆனைத்தாததும புலியாகிய ஆள். 73. ஆடு அமை - ஆடுகின்ற மூஙகில்.

74. தொட்டிடை யாடை தொடர்பவர் சிக்காக்
கட்டுவோர் கையைக் கடந்துமே கோகாய்க்
குட்டி பிடித்துங்; குறுநெடுங் தட்டுக்
கட்டியும் வெண்ணிலாக் காலங் கழிப்பர்.

75. ஓடி யொளித்து மொளிப்பவர் தம்மைத்
தேடியே கண்டுந் திரும்புவ ரோர்பால்;
மாட மறுகில் வளைப்படு கையார்
ஆடுவர் கிச்சுக்கிச் சாம்பரி யோர்பால்.

76. காம்பன தோளொடு கையுற வாட
வாம்பரி போல மணிச்சிலம் பாட
தூம்பன வாயர் துடியிடை கோட
ஆம்புரி தாண்டி யகமகிழ் வாரே.

77. ஒண்டொடி யோசை யொடுசிலம் போசை
மண்டல மிட்டு மயங்கிட வான
வெண்டிரை போல விரிந்த நிலாவில்
நொண்டி யடிப்பர் நுடங்கிடை நல்லார்.

78. குடுகுடு வென்று குடுவியே சென்று
நடுவிடந் தன்னை நணுக விடாது
படவளைப் போர்கை படாதுமே தொட்டுச்
சடுகுடுப் பான்விளை யாடுவர் தானே.

79. மணிநிழல் மன்ற மருங்கிடை நாளும்
இணிநிழற் செல்வச் சிறுவர்கள் கூடிக்
குணிலது கொண்டு குழிதனைப் புல்லி
அணுக விடாதடித் தாடுவர் புல்லி.

80. கொந்தொளி மாடக் கொடுமுடி நீழல்
செந்தமிழ் நாட்டுச் சிறுவர்கள் கூடிப்
பந்தயங் கட்டிப் பலவகை யான
பந்துக ளாடிப் பயன்பெறு வாரே.

---

74. இடை ஆடை தொட்டு-இடையிற் கட்டிய ஆடையைப் பிடித்துக்கொண்டு.
76. காம்பு-மூங்கில். தூம்பு-இசைக்குழல். கோட-வளைய. ஆம்-அழகு. புரி-கயிறு.
79. குணில்-குறுந்தடி. புல்லி-புற்குச்சி, புல்லியாட்டம்.
80. கொந்து ஒளி-மிக்க ஒளி.

81. வாய்ந்த மறவர் வகைபட வெல்லாம்
ஆய்ந்து பயிற்ற வணிகமுற் செல்வர்
தீந்தமிழ் பாடிச் சினப்புலி போலப்
பாய்ந்து சிலம்பம் பயிலுவர் நாளும்.

82. பைந்தமிழ் பாடிப் பரிசிலை நாடி
வந்தவர் நல்லிடை வாகைய ராகி
அந்தமி ழோர்க்கடை யாமணி வாயில்
கந்தெறி யானைக் களிற்றொடு செல்வார்.

83. மண்ணிய மேனி மணங்கொளப் பூசப்
பண்ணமை செந்தமிழ் பாடி நறும்பொற்
சுண்ண மிடித்துத் துடியிடை நல்லார்
கண்ணிய வுள்ளங் களிக்குவர் மன்னே.

84. தாமரை சூழனி தாமென நல்லார்
மாமுர சொன்றை வலமுறச் சூழ்ந்தே
ஆமரக் கோல்கொண் டடித்தெழு தாளத்
தேமுறப் பாடி யிழைப்பர்தெள் ளேணம்.

85. செந்தமிழ் பாடித் தெரிவையர் கூடி
உந்தி பறந்துள் ளுவக்குவ ரோர்பால்;
தெந்தன மென்னச் சிலம்பு புலம்பப்
பந்துக ளாடுவர் பாவைய ரோர்பால்.

86. ஒழுங்குற வேழ்முத லொன்றிறு வாக
வழங்குறு மெண்ணின் வகையுறப் பாடிக்
கொழுங்கனி போலக் குடங்கை படுத்துக்
கழங்குவர் தாடிக் களிக்குவர் நல்லார்.

87. எம்மனிர் மூன்றிதோ வேழ்மணி யென்று
பொம்மென வங்கை புறந்தர வீசிக்
கம்மெனக் காய்கள் கறங்கிளிற் போத
அம்மனை யாடு மரிவைய ராயம்.

---

81. சிலம்பம்-படைக்கலப் பயிற்சி.
83. மண்ணுதல்-குளித்தல். பொற்சுண்ணம்-மணத்தூள்.
84. இவ்விருவர் கை கொட்டி யாடுவதும் ஒருவகைத் தெள்ளேணமாம். 86. குடங்கை-உள்ளங்கை.
87. புறந்தர-பாதுகாக்க, கறங்கு-காற்றாடி. ஆயம்-கூட்டம்.

88. பின்னலும் வல்லியும் பின்னுமுன் சாடக்
கன்னலுங் கைப்பக் கனிதமிழ் பாடித்
தென்னையில் யாத்த செழும்புரி யூசல்
துன்னியே யாடுவர் தோகை மயிலார்.

89. முற்றிலிற் றிங்கள் முகத்தை மறைத்தே
தெற்றியி லேறிச் சிறுமிய ரேசக்
கொற்றவர் மானக் குறுநடைச் செல்வர்
சிற்றில் சிதைத்துச் செருக்கொடு செல்வர்.

90. சிற்றிலிற் பேதையர் செங்கழற் செல்வர்
துற்றிட வெண்மணற் சோறு படைத்தும்,
மற்றும் புதுக்குடி வாழ்க்கை நடப்பைப்
பெற்றவர் கண்டு பெருமகிழ் கொள்வர்.

91. வாழிய மாமனை வாயிடை நெல்லுண்
கோழி யெறிந்த கொடுங்குழை மைந்தர்
ஆழி தடுப்ப வலந்து நடைத்தேர்
பூழியின் வீழ்ந்து புலந்திடச் செய்யும்.

92 செந்தமிழ் வாணர் சிறுவர்கள் தம்மைச்
சந்தனத் தொட்டி சமைந்தகை வண்டி
குந்திட வைத்துக் குளிர்தரு மாலை
மந்தி யிழுத்து மறுகிடைச் செல்லும்.

93. செய்தனை நாளுஞ் சிறப்பொடு தாங்கும்
ஞாய்தனைத் தாங்கி நடப்பவர் போல
ஆய்தமிழ்ச் சேயர் அருந்தமிழ் நூலாம்
தாய்தனைத் தாங்கித் தருக்கொடு செல்வர்.

---

88. பின்னல்-சடை. வல்லி-பொற்கொடி. புரி-கயிறு.
89. முற்றில்-முச்சில் (சிறுமுறம்) தெற்றி திண்ணை. சிற்றில்-மணல்வீடு.
90. துற்றிட-உண்ண.
91. குழை-காதணி. ஆழி-சக்கரம். பூழி-குழைந்தசேறு, புழுதி. புலத்தல்-வெறுத்தல். மைந்தர் புலந்திடச் செய்யுமென்க.
93. ஞாய-தாய். தருக்கு-செருக்கு.

94. பூவையும் பைஞ்சிறைப் புள்ளு மொருங்கு
நாவலர் போல நயந்திசை பாடப்
பாவைய ராடப் பனிமதி மாடத்
தாவ வொடுவெரு கம்பலங் காணும். 94

95. மன்னிய வேழ்பரு வத்தரு முள்ளம்
உன்னிய வெல்லா மொழுங்குற வாடி
முன்னிலு முள்ள முதிர்குவ ரென்னில்
என்னினி மைந்த ரியல்பினைப் பேசல்.

96. கள்ளுறை கூர்தற் கருநெடுங் கண்ணாள்
வள்ளுறை சிந்தி வருந்தமெய்த் தோழி
அள்ளுறை வேல னதரிடைப் பட்ட
உள்ளுறை கூறி யுவப்புறச் செய்வாள்.

97. ஊமரை யொப்பு வொரேபிடி யாக
ஆமென லின்றி யழுங்குழ விக்குக்
காமுறு தக்க கனிமொழித் தாயர்
மாமதி காட்டி மகிழ்வுறச் செய்வர்.

98. தோலினர் புள்ளிற் றுனைபரி யாளர்
வேலினர் காவல் மிடைதெரு வெல்லாம்
ஆலின ராயிரண் டாற்றினை யல்லாப்
பாலினர் மேவும் பரிசினைக் கொண்ட.

## வேறு

99. உகைபடு கூந்தலுக் குவமை யாகிய
முகிலினுக் குதவுதல் முறைமை யாதலான்
வகைபடு மெழுநிலை மாடத் தின்னறும்
புகையினை மடநலார் புகுதச் செய்வரால்.

---

94. வெருகு-பூனை.
95. ஏழ்பருவம்-பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்.
97. வள்-மிக்க. உறை-நீர்த்துளி. அள்-கூர்மை. அதர்-வழி. உள்ளுறை-உள்ளுறையுவமை.
98. தோல்-யானை. துனைதல்-விரைதல். ஆலுதல்-ஆரவாரித்தல்.
99. உகைபடல்-வளர்தல்.

100. புக்கில ரெணமனம் புழுங்கு வோர்களைப்
பொய்க்கதை பற்பல புகன்றும், மெய்ப்பொருள்
தொக்கிய நகைச்சுவைக் கதைகள் சொல்லியும்
தக்கசெந் தமிழ்மொழித் தாயர் தேற்றுவர்.

101. உடைமையை நாடியே யூரை நீங்கினோன்
கடமையிற் றவறியே காலந் தாழ்க்கவக்
கொடுமையை யிதுவெனக் குறிப்பி னோரவே
மடமொழி யிறைச்சிமேல் வைத்துக் கூறுமே.

102. தாய்தனைப் பிரிந்தகந் தனித்த பேரிளஞ்
சேய்தனைப் பேணிடுஞ் செவிலித் தாய்சொலும்
ஆய்தமிழ்க் குரியபண் ணத்தி கேட்டுமே
வாய்தனைத் திறந்துதன் மகிழ்ச்சி காட்டுமே.

103. ஓட்டியே யழுகையை யுவந்த வாவொடு
கேட்டிடச் சிறுவர்கள் கிளந்து செந்தமிழ்ப்
பாட்டினு முரையினும் பயிலப் பாங்கொடு
பாட்டியர் விடுகதை பகரு வாரரோ.

104. தெருவிடைத் தயிர்த்தலைச் சிறுவர் தாயர்கை
ஒருவியே யகப்படா தோட்ட ங் கொள்ளுவர்;
பருகிட மறுத்துணைப் பந்தர் சுற்றியே
திருவமர் சிறுமியர் சினப்பச் செய்குவர்.

105. சென்றுடன் மீண்டவோர் தென்னம் பாளைக்கும்
வென்றிவண் பொருள்கொடு மீண்ட நம்பிக்கும்
தன்றமர் நீங்கிய தமிழ நங்கைக்கும்
மன்றல்செய் தேதமர் மகிழு வாரரோ.

106. உளத்திடை யொப்புமை யுருவந் தைத்திடக்
குளத்தெழு நிலவினிற் கூடிக் கும்பலாய்
அளித்தொடர் குழலியர் பாடி யாடிடும்
களத்திடை வழிநிலைக் காட்சி காண்பரால்.

---

101. உடைமை - பொருள். ஓர-தெரிய. இறைச்சி-கூறும் பொருளின் புறத்தே சொல்லும் குறிப்புப் பொருள். அது, கருப்பொருளாற் கூறுவது.
102. பண்ணத்தி-ஒருவகை இசைப்பாட்டு.

107. இலைகணி யாடையி னிலகு பாவைபோற்
குலமகள் றமிழ்மகள் கோலங் கொண்டுமே
கலகல வெனப்பறை கறங்க வாடலைப்
பலகணி வழியணை பார்த்து வக்குமே.

108. கமழ்தரு குழலியர் கடிகொள் மேனியர்
இமிழ்தரு துயிலறை யெளிமை யெய்தவெண்
குமிழ்தரு வளமணங் குடிமை கொள்ளவொண்
டமிழ்தரு மிலவிதழ் தழுவத் தூங்குவர்.

109. கட்டிலை யகன்றெதிர் காலை வந்ததும்
கெட்டிலா வாழையி னிலவு காலிள
வட்டிலை விருந்தினர் மருவ மங்கையர்
அட்டிலை யமிழ்துற வாக்கு வாரரோ.

## வேறு

110. மூன்றிலிற் குரவை யாட்டம் முடுக்கினி லிசைப்பா
ணாட்டம்
தென்றலிற் றமிழ்ப்பண் ணோட்டந் திண்ணையிற்
கற்றோர் கூட்டம்
மன்றிலிற் பல்கூத் தாட்டம் மனைதொறுந்
தமிழ்ப்பா நாட்டம்
ஒன்றலிற் றெருவ மாய்நா லுயர்தமிழ்க் கழக மாலும்.

111. கண்ணிய மணிபொன் னுடை கலன்மலர் சாந்த மேனம்
பண்ணியங் கனிகாய் பால்மோர் பலவகை யுணவுப்
பண்டம்
விண்ணியல் தரிபூ னென்றால் விற்பரும் வாங்கு வாரும்
அண்ணியே வென்று மோசை யலைகடல் போலு
மாதோ

---

109. கடி-மணம். எண்-எள்.
109. அட்டில்-சமையலறை. அமிழ்து-உணவு.
110. முடுக்கு-சந்து. பாண்-பாணர். மன்று-மரத்தடிப் பொதுவிடம்.
111. பண்ணியம் - பலகாரம். விண் இயல் - உயர்ந்த, சிறந்த. அண்ணி-நெருங்கி.

112. தாதயில் சுரும்புந் தேனுந் ததையகால் வகைய வாவிப்
போதினை யறிவித் தாய்நூற் புலவர்கள் நிலையை
யொத்து
மாதர்க ளொன்றோ காதல் மைந்தரு மவாவத் தக்க
கோதையு மலரு மல்குங் கொட்டிலைங் திணையி
ரேங்கும்.

113. வழக்குடை மருங்கில் வந்து வாங்குமி னெனவே கூறும்
ஒழுக்குடை யதுபோற் செந்தே னொழுக்குதீஞ்
சுவையி னூற்றம்
இழுக்குடை யதுவும் நீங்கா விலைமையி னளாவச்
செய்யும்
பழக்கடை யறவோ ருள்ளப் பான்மையிற் பொலியுந்
தானே.

114. கந்தெறி களிறு மானக் கலம்பல செலுத்திக் கொண்டு
வந்தய னுடர் பண்ட மாற்றியும் மதித்த செம்பொன்
தந்துமென் பெற்றோ மென்னத் தக்கபல் பொருளு
மேய
ஐந்திணை யவாவத் தோன்று மரும்பல சரக்குக்
கொட்டில்.

115. அரவுரி யிணைய வான்பா லாவிவெங் கிடமெல் லென்று,
மரவுரி கானஞ் சார மலர்க்கொடி மருங்கு சேர
விரவுற விரும்பல் வண்ணம் விளிம்பையோ வியங்கள்
நண்ண
நிரலுற விழைகொள் வாடை நெய்தொழிற் சாலை
யோங்கும்.

116. தையுறை குளத்துப் பூத்த தாமரைப் பூவைப் போன்ற
ஐயுறை தரும்பொற் பட்டும் அரிமயி ரொடுவெண்
பட்டும்
துய்யுறை மடியுந் தொக்க துணிக்கடை தோறுந் தைத்த
மெய்யுறை வடிவங் காட்டி விழைவுற வழைக்கு
மாதோ.

---

114. விலைமதிக்க முடியாததும் பல்வகையதும் ஆன தால் 'என்பெற்றோம்' என்றா ரென்க.

116. ஐ-மென்மை. அரி-மென்மை. துய்-பஞ்சு. மடி-ஆடை. மெய்யுறை-சட்டை.

117. ஒன்பது மணியும் செம்பொன் னுக்கடர்க் குலங்கள் வாரித்
தின்பது போல வூழூழ் சிறந்திடப் பதித்துச் சீர்சால்
மன்பதை யுறுப்புக் கெல்லாம் மறைப்பென வனப்புக் காலும்
மின்புதி யதுவந் தென்ன விளங்கணிக் கொட்டில் தோன்றும்.

118. வளைகொடு நறுநெய் நீவி வாளரந் துமியப் பண்ணிக்
களைவன களைந்து காணுங் கண்கவர் வனப்பிற் றாகத்
துளைவன துளைந்து திட்டித் தொடுகுழை யாழி பீலி
வளையொடு பிறவுஞ் செய்யும் வளையணிக் கூட மோங்கும்.

119. நெல்லுடைக் குதிர்க ளோங்கு நெடுநகர்க் குறுப்ப தான
கல்லிடைச் சுடுகற் சேர்த்துக் கவினுறக் கட்டப் பட்ட
இல்லிடைப் புழங்கற் கான விருவகைக் கலங்கள் செய்யும்
மல்லுடைக் களரிக் கூடம் வகைவகை வடிவங் காட்டும்.

120. மண்ணுழு படையுங் கான மரமுழு படையு மெய்யிற்
புண்ணுழு படையு நூலோர் புலமுழு படையு மில்லின்
கண்ணுழு படையு மற்றைக் கருவியுஞ் செய்யுங் கொட்டில்
எண்ணுழு படையோ டல்லு மிடையறு தியங்குந் தானே.

121. நூல்பிடித் தறுத்துச் சேத்து நுண்டுளைப் படுத்துப் பொத்திச்
சால்பிடித் துழுமே ரில்லஞ் சமைகரு விகள்தேர் பெட்டி
கால்பிடித் தமைத்த கச்சுக் கட்டிலுந் தட்டு முட்டும்
பால்பிடித் தியற்றுந் தச்சம் பட்டறை நெட்டி லேய்க்கும்.

---

117. அடர்-தகடு. ஊழ-முறை.
119. சுடுகல்-சுண்ணம். இருவகைக்கலம்-பொற்கலம், மட்கலம். பொன-செம்பு, பித்தளை முதலியன. மல்-வளம். களரி-பணிசெய்யிடம்.
120. உழுதல்-கிளறுதல், தொழில்செய்தல். எண் உழுபடை-அறிவு. எண்-எண்ணம். அல்-இரவு.
121. சேத்தல்-செதுக்குதல். பொத்துதல்-பொருத்தல்.

122. பாவைசெய் யகமு மொன்பான் படரொளி மணிகள்
கோத்துக்
கோவைசெய் யகமு மில்லைக் குறித்தநற் கோலஞ்
செய்யுங்
கூவைசெய் யகமு மோவக் கூடமும் பிறவும் வேண்டுந்
தேவைசெய் யகமுஞ் செல்வச் சிறப்பினை விளக்கிக்
காட்டும்.

123. மன்றமு மிளம்பூங் காவும் மறுகணை முடுக்குஞ் சீர்செய்
குன்றமு நறுநீ ராடு குளமுமா டிடமுங் கோணந்
துன்றொளி விளக்கு மாடந் தோய்நிலா முற்றந் தம்மோ
டின்றெனு மிலம்பா டின்றி யிலங்கின விலங்கை
மாஞும்.

124. அரசிய லுலுவல் காணு மகங்களோ டறந்தேர் மன்றும்
வரிசையி னொடுபா ராளு மன்றமு மொன்றுங் குன்றுப்
பரிசொடு கலைகள் தேரும் பல்கலைக் கழகந் தம்மோ
டுரைசெயற் குரிய வெல்லா மொருங்குமுந் துறவே
நின்ற.

125. முத்தமிழ் வளர்ச்சிக் கேற்ற முறைப்படி யமைக்கப்
பட்ட
ஒத்தவா டரங்குங் கேள்விக் குகந்தபா டரங்கு மாய்நூற்
கைத்திறத் தமைந்த வாய்மைக் கருவிக ளோடு
பாட்டாட்
டொத்திகை யரங்கு மேலோ ருளமெனப்
பொலியுந் தானே.

126. இந்நக ருலகின் கண்ண ரியன்றியல் பொடுமீக் குள்ள
எந்நகர் களுமொப் பாகா வெனத்தமிழ்ப் புலவர்
போற்றும்
நன்னகர்க் குரிய வெல்லா நலங்களும் பொருந்தி நாட்டு
முன்னக ராகிச் செங்கோன் முறையொடு பொலிந்த
தம்மா.

---

கருவியை ஏரொடும் கூட்டுக. பால்பிடித்து-பகுதிபபட. கெட்டில்-நெடுஇல்-பெருங்குடிவாழ்மனை. இடையறுது தொழில்நடை பெறுமென்க.

122. கூவை-செடிவகை. தேவை-தேவையானபொருள்.

123. மன்றம்-மரத்தடிப் பொதுவிடம். முடுக்கு-தெருக்கள்

127. இசைகுநர் கரிக வாழ்வுக் கேற்றதா வெறிநீர் சூழ்ந்த
உலகெலா முயர்வு தாங்கி யுள்ளபல் பொருள்க
ளெல்லாம்
நிலவியாங் கிருத்த லாலே நீண்மதி லிலங்கை மூதூர்
அலைகட லுலகங் காணு மாடிபோற் பொலியு மம்மா.

128. தமிழகக் குளத்திற் பூத்த தாமரைப் பூவின் சீரூர்
கமழிதழ்த் தெருவஞ் செந்தேன் கனிபொகுட் டண்ணல்
கோயில்
இமிழிசைச் சுரும்பின் மக்க ளினியபூந் துகளின்
செல்வம்
உமிழ்நறுந் தெளிவி னின்ப மொருங்குதுய்த் துவக்கு
மன்றே.

## மும்மதில்

129. அம்பர மிலகு பேரு ரகமிடை புறம தென்ன
மும்மையி னமைந்த மொய்ம்பின் முழுமுத லரண
மென்னும்
எம்மையு மிணையி லாத வெழின்மிகு கோட்டை
நாப்பண்
செம்மலின் றிருவே யென்னச் சிறந்துவீற் றிருக்கு
மம்மா.

130. புறமதிற் புறத்தே சூழ்ந்து பொலிதரு கிடங்கொன்
றந்தத்
திறமிகு மதிலைக் காக்குந் திறலென வமைந்து,
கொல்லும்
மறவரிற் றறுக ணுண்மை வலிமிகு முதலைக் கூட்டத்
துறையுளா யகன்றாழ்ந் தொன்றா ருவப்புற விளங்கு
மாதோ.

---

கூடும்மூலை. கோணம் - மூலை. இலம்பாடு-
இன்மை.

127. ஆடி-கண்ணாடி.

128. தெளிவு-தேன்.

129. மொய்ம்பு-வலி. எம்மையும்-எங்கும். செம்மல்-
தலைமை.

130. தறுகண்-அஞ்சாமை.

135. கழிமிகு வலியின் மேய கதவினுட் புறத்தீர் பாலும்
எழுமர நிலவு மந்த வெழுக்கத விடைசீப் பென்னும்
செழுமரந் துலாவின் மீது திகழுமக் கதவி னுள்ளே
முழுவலி மல்லர் நாளும் முனைப்பொடு காப்பர் மன்னோ.

136. வாயிலி னிரண்டு பாலும் வலிமிகு நிலவின் பக்கம்
ஆயதிண் சுவரி னூடே யமைந்தபே ரறைக ளந்த
வாயினுட் புகுதுந் தெவ்வர் மண்பட நுடலு மாண்மை
மேயபன் மறவ ரோடு மிகும்பல கருவி கொண்டே.

137. அம்மதிற் சுவர்மு கட்டி லருமுரட் பதண மென்னும்
சும்மைகொள் மதிலுள் மேடை சுற்றினு மமைந்தி
ருக்கும்,
அம்மதி லுண்மே டைக்கோ ரணியர ணெனப்பு றத்தே
கம்மியல் வலிய சுற்றுச் சுவரது காப்புச் செய்யும்.

138. வல்லிய மதிலுள் மேடை வளைவிலுப் பொறியுங்
கோலும்
கல்லுமிழ் கவண்வெங் கெய்யுங் கருவிரற் குரங்கும்
வேலும்
கல்லிடு கூடை காய்பொன் னுலையொடு கணையங் குந்தம்
புல்லிய புழையும் வாளும் புதைகவை கழுவி னோடே.

---

135. எழு-கதவுக்குப் புறத்தே நாட்டப்படுந்தூண். சீப்பு-குறுக்குமரம். துலாம்-துலாக்கட்டை. அதாவது, சீப்புக் கீழேவிழாதபடி எழுவுக்கும் கதவுக்கு மிடையில் குறுக்காக இடும் தடைக்கட்டை; இது, எழுவில் உள்ள துளையில் பாய்ச்சப்பட்டிருக்கும்.

136. நுடலுய-கொல்லும்.

137. சும்மை-ஒலி. கம் இயல்-தொழிலமைந்த.

138. வளைவிற்பொறி-வளைந்து அம்பெய்யும் விற்பொறி. கோல்-குத்துக்கோல். கல்உமிழ்கவண்-கல்வீசுங்கவண். வெங்கெய்-காய்ச்சி ஊற்றும்நெய். கருவிரல் குரங்கு-கரிய விரலையுடைய குரங்குப் பொறி. காய் பொன் உலை-செம்புமுதலியவற்றை உருக்கும்உலை. கணையம்-வளைதடி. குந்தம்-ஈட்டி. புழை-வெந்நீரையும், தீயையும் வீசுங் குழாய். புதை-அம்புக்கூடு. கவை-கழுத்தில்கொடுத்துக் கீழேதள்ளும் இரும்புக்கவை. கழு-இருப்புலக்கை.

139. ஆண்டலை யடுப்புந் தோய்பா கடுகுழி சியுங்கொல் லேறும்
தூண்டிலுந் தொடக்கு மொன்னார் தொடுகைகுத் தூசி யோடு
நீண்டுநூற் றுவரைக் கொல்லி சென்றெறி சிரலுந் திண்ண
பாண்டிலும் விழுங்கு பாம்பும் பணைபன்றி களிறோ டாடும்.

140. புலிகுடப் பாம்பு புள்ளூப் பொறியொடு தள்ளி வெட்டி
வலியரி நூலி னோடு மற்றுமிவ் வகைய வான
பலவகைப் பொறியி னோடும் பல்வகைக் கருவி யோடும்
ஒலிபடைக் கொட்டில் போல வுரமொடு விளங்கு மாதோ.

141. அம்மதி லுள்மே டைக்கீ ழம்பெயுந் துளைகள் வாய்ந்த
எம்மையுங் குறைவொன் றில்லா வேப்புழை ஞாயில் மேவும்,
இம்முறை யுறுப்பு மேய விடையக மதில்க ளான
மும்மையு மகழி சூழ மொய்ம்புடன் விளங்கு மன்னே.

---

139. ஆண்தலை அடுப்பு-ஆண்மகன தலைபோல மூன்று அடுப்புப போல் இணைந்துள்ளது. பாகு அடு குழிசி-எண்ணெய் காச்சவும், செம்பு உருக்கவும், சாணிகரைத்துக் காய்ச்சவும், அவை ஊற்றி வைக்கவும் ஆன மிடாக்கள். கொல்ஏறு-எருத்துப் பொறி. தொடக்கு-கழுத்தில் மாட்டியிழுக்கும் சங்கிலி. நூற்றுவரைக் கொல்லி-ஒரேவீச்சில் நூறுபேரைக் கொல்லும் பொறி. சிரல்-மீன்கொத்தி. பாண்டில் - கேடயம். பணை - மூங்கில் போன்ற இரும்புக்கம்பிகள்.

140. தள்ளிவெட்டி-மதில்மே லேறுவோரைக் கீழே தள்ளவும், வெட்டவும் ஆன கருவி. அரிநூல் பொறி-உடலை அறுக்கும் நூல்போன்ற பொறி. கருவி-கைக்கொடு தாக்குவது. பொறி-விசை கொடு தாக்குவது. இம்மூன்று பாட்டுகளிலும் கூறிய கருவிகளும் பொறிகளும் மதில்மேல் ஏறும் பகைவரைத் தடுத்தற்கும், அடர்த்தற்கும் மதிலுள் மேடையுள் உள்ளவையாம். இவற்றின் பயனை மதிற்போரில் காண்க.

141. எப்புழை ஞாயில்-அம்பெய்யுந் துளைகளையுடைய அறை.

142. பகைபட வகன்றாழ்ந் தாயம் புடைஇயவக் கிடங்கி னுப்பண்
மிகைபடக் குறைவி லாது விளங்குபல் பொருள்க ளோடு
வகைபட வமைந்த மும்மை மதிறழீஇத் திகழுங் கோட்டை
தொகைபடக் கடலி னுப்பண் டோன்றுநீர்க் கலம்போற் றோன்றும்.

143. அகமதிற் குலத்தின் பாங்க ரரசொடு கிளையும் வாழும்
அகமிடைப் படுமதிற்கண் அமைச்சரோ டனையோர் வாழ்வர்
தொகுவலிப் புறவே லிக்கண் டோய்வளப் புறஞ்சே ரிக்கண்
வகைபடச் சிறந்த பன்மைக் குடியெவரு மொருங்கு வாழும்.

144. பாடுநர் வருக பாடும் பாட்டியர் வருக பல்கூத்
தாடுநர் வருக நாற்பா வறைகுநர் வருக வென்றே
ஈடுறு கொடுவான் றாழ நிமிர்ந்துவா கோயின் மாடத்
தேமுழத் தாவல் மேய விருந்தயிற் கொடிகை காட்டும்.

145. இன்னணம் பலவுந் தன்னு ளுரிலங்கிடு மாடக் கோயில்
மன்னவர் மன்னனான மாபெருந் தலைவ ரெல்லாம்
தன்னைநேர் தாங்குடை யந்தத் தமிழ்ப்பயில் தமிழகத்தை
அன்னைபோ லினிது காத்தே யரசுவீற் றிருந்தா ரம்மா.

142. ஆயம்-புகில். நீர்க்கலம்-கப்பல்.
143. குலம்-கோயில். வேலி-மதில்.
144. பாட்டியர்-பாணமகளிர்.

தமிழகக் காண்டம் முற்றிற்று.

# 2. இலங்கைக் காண்டம்

## 1. இராவணப் படலம்

1. தண்டமி ழகத்தின் பண்டைத் தலைநக ராகிச் செல்வம்
   மண்டிய இலங்கை மூதூர் வரன்முறை கண்டாம்;
   மற்றத
   தண்டமி ழகத்தைக் காக்கத் தனிக்களத் தொருவ னாகி
   எண்டிசை புகழ விந்த இராவணன் இயல்பு காண்பாம்.

2. வழிவழி யிலங்கை மூதூர் மருவியே தமிழ கத்தை
   மொழிகுறை யின்றித் தம்பின் முறைபுரந் துரிய
   செல்வம்
   வழிதரத் தமிழர் போற்றும் மாபெருந் தலைவர் தங்கள்
   வழிமுறை யாக வந்தோன் விச்சிர வாவு வென்பான்.

3. அன்னவன் தேவி யான அணங்குகே கசியென் னன்னை
   முன்னவர் புகழை யெல்லாம் முகையலர் பட்டபோ
   தாக்கித்
   தன்னரும் புகழை யின்பத் தமிழர்வாழ் வதனுக் கீந்த
   என்னருந் தலைவன் தன்னை ஈன்றனள் இனிதின்
   மாதோ.

4. ஈன்றவ ருவந்து மக்கட் கிராவணன் இவனு மென்ன
   ஆன்றபே ரிட்டு நாளு மன்பொடு நலம்பா ராட்டி
   ஈன்றஞான் றினுமப் பெற்றோர் இனிதுவந் திடவே
   யான்ற
   சான்றவ னுக்க வெண்ணித் தாய்மொழி பயிற்று
   வித்தார்.

---

4. இராவணன்-பேருரிமை யுடையவன். இரு ஆவணன்; இரு-பெரிய. ஆவணம்-உரிமை. இராவணன்-பிறர்க் இல்லா அழகன்; பேரழகன்.

5. தமிழெனா ஆசான் சொல்லத் ததும்பிய மழலை வாயால்
தமிழ்மொழி யென்னும்; பின்னும் தமிழ்மொழி என்ன வெந்தாய்!
தமிழ்மொழி யெமது சொந்தத் தாய்மொழி யென்னும்; பின்னும்
தமிழக மென்ன எங்கள் தாயகம் என்னு மாதோ.

6. அமிழ்துணும் என்னில் அன்னை அப்பவே தமிழுண் டேளிவ்
வமிழ்துவேண் டாம்போ வென்னும்; அமிழ்தது தமிழ்தா னென்ன
அமிழ்தமிழ் தமிழ்தா மன்னுய்! ஆமது தமிழ்தா னென்னும்;
தமிழ்தமிழ் தாக வுண்டு தமிழ்மகன் வளரு மாதோ.

7. ஏடுகை யெடுக்கும்; அவ்வேட் டிதழ்கையில் விரிக்கும்; பெண்ணைக்
கூடுகை யடுக்கும்; செங்கோற் கொள்கையிற் பிடிக்கும்; அன்னை
நாடுகை எழுதும்; ஆயம் நன்னுகை நோக்கும்; நோக்கி
ஆடுகை தவிர்ந்த தென்கொல்! அருந்தமிழ்க் கொடியே யென்னும்.

---

6. அமிழ்து-பாலும் சோறும் பிறவுணவும். தமிழ் து அமிழ்து ஆக-தமிழ் உண்ணும் உணவாக, து-உண்ணுதல்.

7. இப்பாட்டு சிலேடை:—(1) ஏடு-சுவடி. இதழ்-தனி யேடு. பெண்ணைக்கூடு - பனையோலையால் செய்த எழுத்தாணிக் கூடு. பெண்ணை-பனை. கை அடுக்கும்-கையின் கண்வரும், எடுக்கும். அன்னை நாடுகை-தமிழ். ஆயம்-கயிறு. 'தமிழ்'என எழுதிக் கயிறு கோத்துள்ள துளைக்கு எழுத்தாணிவரவே, அவ்வாறமைந்துள்ள தமிழ்க்கொடியை நினைத்து இவ்வாறு கூறினென்க.

(2) கை ஏடு எடுக்கும்-கையாகிய மலரை எடுக்கும். அவ்வேடுகை இதழ் விரிக்கும்-அம்மலர் போன்ற கையின் விரல்களை விரிக்கும். பெண்ணை-தலைவியை. கூடுகை அடுக்கும்-கூடுதற்கு அருகணையும். செங் கோல்-நேரான தொய்யில் எழுதுங் கோல். கொள் கையில்-பிடிக்கு முறைப்படி. அன்னை-செவிலித் தாய். நாடுகை-தொய்யில். தொய்யிலைக் கண்டு

8. இன்னண மாசான் சொல்வ தியல்பினிற் கேட்டுங் கேட்ட
பொன்னெனப் பொலியு மேட்டில் பொருந்தவே யெழுதி யுந்தான்
தன்னைநேர் தானே யான தனித்தமிழ் மொழியைக் கற்று
மன்னவர் மன்ன னுளும் வரிசையிற் பயிலு மன்னே.

9. அலகுறு மெண்ணே டெண்மை யாமெழுத் தோடின் சொல்லும்
இலகுசெம் பொருளு மான வியற்றமிழ்க் குரிய வாலைப்
பொலியிலக் கியமு மத்தைப் பொருந்திலக் கணமு மான
பலபல நன்னூ லாய்ந்து பழுலிய வறிவின் மிக்கான்.

10. படர்தரு நமது முன்னோர் பயின்றநற் பழக்க மான
நடைமுறை தன்னை யின்னும் நம்மருந் தெரியச் செய்தே
கடைமுறை போய மாதொல் காப்பியங் கடலை மாந்தி
மிடைதரு புலவிர் தாய்மி மேக்கெழு முகிலை யொத்தான்.

11. பண்ணொடு திறமு மான பல்வகை யராக மேய
எண்ணிய லிசையை யவ்வவ் விலக்கண வரம்பு மீறாக்
கண்ணிமை புருவ மேறாக் கழுத்தசை யாபல் தோன்றா
உண்ணிய முறையாக் கற்றே யோரிசைப் புலவ னானான்.

12. ஆணிமு யலவன் கண்ணை யவிர்விளக் கொளிகொள் போர்வை
பூணியே வறுவாய்ப் பத்தர் பொலந்திவ வொடுவண் கோடும்
பேணியே நரம்பும் பண்ணிற் பிறங்குநால் வகைய நல்யாழ்ப்
பாணரோ டொருங்கு நாளும் பயின்றியாழ்ப் பாண னானான்.

---

கூட்டமுண்டென்று ஆராயுமென்க. தொய்யில்-தோளில் எழுதுங்கோலம். ஆயர்-தோழியர் கூட்டம். ஆடரமல் விறப்பதேன் பெண்ணே என்னும். தமிழ்க்கோடி-தமிழ்ப்பெண், இனிமையான பெண்.

10. படர்தல்-பரவுதல்; கடைமுறைபோதல்-முடிதல்; மேக்கு-மேல்.

11. பண்-இசை. திறம்-இசைக்கூறுபாடு. ஆரகம்-இசையறுத்துப பாடுதல். எண்ணியல்-அளவுபட்ட. உண்ணிய-உளளத்திற் பதிய.

12. அலவன்-நண்டு. நண்டுக்கண் போன்ற ஆணித்

13. பற்பல வகைய தாகப் பாகுபா டுற்ற கூத்தும்
சொற்படு பொருட்க ருத்துத் தோன்றுமெய்ப் பாடுந் தோன்றப்
பொற்படு தாளத் தோடு பொருந்திய நடிப்புங் கூடக்
கற்பன வெல்லாங் கூத்தி கண்டுவெள் கிடவே கற்றான்.

14. ஏடது கைவி டாதே யெனுமொழி கடைப்பி டித்தே
நாடொறுங் கற்றற் கேற்ற நன்னெறிப் படியே கற்றுப்
பாடியிற் புலவர் மெச்சப் பண்ணியற் புலவர் நச்ச
ஆடியற் புலவ ரச்ச வருமைமுத் தமிழுங் கற்றான்.

15. இருவகைக் கைகோ ளாக வியலகப் பொருளும், நேரிற்
பொருவகை யொழுக்கஞ் செய்கை பொதிபுறப் பொருளு மான
பொருளதி கார முற்றும் பொருந்தவே கற்று மக்கட்
கொருவு முவமை நீங்கி யுயர்ந்துமேம் பட்டா னன்றே.

16. பறையொடு குழலும் யாழும் பண்ணமைத் தியக்குந் தூய
முறையொடு பாட்டாட் டோடு முடித்திடுந் திறமுங் கற்று
மறைபடு பொருளில் லாது மனமொடு கையொன் றாக
இறையெனுந் தலைமைக் கேற்ப விறைவனாய் விளங்கி னானே.

17. அறம்பொரு ளின்ப மென்ன வாயமுப் பாலி னன்றாத்
திறம்படக் கற்றுச் செங்கோன் முறைமையுந் தெளிந்து மேலும்
மறம்படு பொருளா வெல்லாம் வகைபடக் கற்றே யாண்மை
திறம்பட வுயிரை யோம்பும் திறம்படப் பொலிந்தான் மாதோ.

---

துளை. வறுவாய்-நாவில்லாத வாய். பத்தர்-யாழ்த்தலை. திவவு-வார்க்கட்டு. நால்வகையாழ்-பேரியாழ், சிற்றியாழ், செங்கோட்டி யாழ், சுறவ யாழ்.

15. இருவகைக் கைகோள்-களவு, கற்பு.

17. திறம்-மார்பு. திறம்பட-இயல்பு பொருந்த.

18. தலையிடைக் கழகத் தாய்ந்து சான்றவர் தொகுத்து வைத்த
அலகிலாத் தமிழ்நா லெல்லா மறிஞரோ டொருங்கி ருந்து
நலமுட னைய்ந்தே யவ்வின் நற்பொருள் தெளிந்து மும்மைப்
புலவனைப் புலவர் போற்றப் பொருளெனப் பொலிந்தா னம்மா.

19. முந்தையோர் தேடி வைத்த முழுமுதற் செல்வ மான
செந்தமிழ் நூல்க ளெல்லாந் தெளிவுறக் கற்றுத் தேர்ந்து
தந்தையுந் தாயு மான்ற சான்றவ னென்று வக்க
மைந்தனுங் கண்டு தானு மனமகிழ் பூக்கு மாதோ.

20. இன்னணந் தமிழர் கோனு மியலிசை யொடுகூத் தென்னும்
துன்னுமுத் தமிழுங் கற்றுத் துகளறத் தேர்ந்த தொன்றோ
என்னினு மினிமை யான வேழிசை யமைந்த தான
தன்னிசை தழுவி னனோர் தமிழிசை நூலுஞ் செய்தான்.

வேறு

29. வில்லுந்தொடு நாணும்படு விசையும்படு திசையும்
புல்லும்படு கணையுந்தொடை புணரும்பல குணமும்
மல்லுங்கதிர் வேலும்பொரு வாளுந்தடு தோலும்
கல்லும்படி தாயின்புறக் கற்றேதெளி வுற்றான்.

22. காரும்பெரு மலையுமலை கடலும்பொரு களிறும்
பாருந்தன தொருகாலொடி படவேவரு பரியும்
தேரும்பொரு தகரும்பல திறலூர்தியும் பிறவும்
ஊரும்படி கற்றேயறி வுற்றேபெயர் பெற்றான்.

23. கடலும்படு வகழின்கடை கலியும்பொரு வலியும்
நுடலும்பெரு காலேணியு நூலேணியு மதின்சூழ்
அடலும்பெரு மலையுந்தரு வடரும்பொரு காடும்
உடலும்படி படையோடவ னுற்றேநனி கற்றான்.

29. நாண்-கயிறு. தொடை-அம்புதொடுத்தல். தோல்-கேடயம்.
23. கலி-போர். நுடலல்-பொருதல், நூலேணி-மதில்

24. இனியாரெனை யொப்பாரென வெதிர்கூவியே யிகலி
பனியேகிட வியல்பேபொரு பகலோனென முரணி
இனையேறென வரியேறென விடையேறென விடறித்
தனியேதனை நிகர்வாரறத் தானேதனி யானான்.

25. வாளென்படு மொருவாவுடல் வலியென்படு மணிகொள்
ஆளென்படுந் துணையென்படு மறிவென்படு முடலும்
கேளென்படும் வழிவந்திடு கிளையென்படு முயிர்வாழ்
நாளென்படு மென்றேபகை நடலம்பட வார்ப்பான்.

### வேறு

26. இன்னண மிருவகைக் கல்வி யீண்டியான்
கன்னவில் வலியுடைக் கவவுத் தோளினான்
தன்னல மின்றியே தமிழர்க் காகத்தன்
இன்னுயிர் கொடுக்கவு மிருக்கு மேன்மையான்.

27. நாற்றிசை விளக்குறும் புகழு நாளுற
மாற்றுயர் பொன்னென வயங்கு மேனியான்
போற்றியே பெற்றவர் புனைந்த பேரினுக்
கேற்றபே ரழகினான் இனிமை நோக்கினான்.

28. ஐயமில் காட்சியா னறிஞர் காப்பனான்
கையுடைப் பொருள்பிறர் கைய தாக்குவான்
வையகத் தீயென வழங்கு மாண்மையான்
பையகத் தேபொருள் பார்க்குந் தூய்மையான்.

---

ஏறடியைப் பற்றும் கொக்கியுள்ள கயிற்றேணி. அடலல், உடலல்- பொருதல்.

24. இனைஏறு-வருத்துங்காளைமாடு. அரி-சிங்கம்.

25. என்படும்-என்செய்யும், என்னபயன்படும். கேள்-நட்பு. வழிவந்திடு கிளை-மறக்குடிச்சுற்றம். நடலம்-நடுங்கல்.

26. கல்நவில்-மலைபோன்ற. கவவு-உறுதி.

27. இராவணன் - பிறர்க்கில்லாத அழகுடையவன், பேரழகன்.

28. காட்சி-அறிவு. வை-வைக்கோல். பை அகத்தே பார்த்தல்-சுருக்குப்பையைத் திருப்பிப் பார்ப்பதுபோலப் பொருள்களை உள்ளூற ஆராய்தல்.

29. உடனுறு துணைபகை யோடு சேறினும்
கடலெனப் பகைமதில் கவிந்து கொள்ளினும்
படையிழந் துடலுநர் பாடி தங்கினும்
அடல்குறிக் கினுங்கலங் காத நெஞ்சினன்.

30. குடிபழி யஞ்சுசெங் கோலன் மெய்ந்நெறி
தொடுதுலை நாவெனச் சூழுஞ் செம்மையன்
படுபயன் வேட்டிடாப் பகலின் பண்பினன்
நெடுநிலைப் பொறையினன் நிறையின் காவலன்.

31. அன்னைபோல் மன்னுயிர்க் கருளு மன்பினன்
தன்னையே தான்பொருந் தனியொ ழுக்கினன்
முன்னையோர் போற்றிய முறை புரப்பவன்
பின்னையோர் கடைப்பிடி பிறங்குஞ் சீர்மையான்.

32. அன்புட னுலகின ரரசன் காப்பினுந்
றுன்பிலா தின்னலந் துய்ப்ப ராதலான்
மன்பதை களுக்குடல் வாட்கை மன்னனே
என்பதை யுணர்ந்ததற் கேற்பக் காப்பவன்

33. சான்றவ ராக்கிய தமிழின் பாவலன்
ஆன்றவ ராக்கிய வறத்தின் காவலன்
ஈன்றவ ராக்கிய வியல்பின் மேவலன்
போன்றவ ராக்கிய புரப்பின் மாவலன்.

34. தாய்மொழி தாயினுந் தகவிற் போற்றுவன்
ஆய்மொழி யாளர்த மன்புக் கேற்றவன்
காய்மொழி யாவதுங் கடிந்து மாற்றுவன்
வாய்மொழி தப்பிடா வகையி னாற்றுவன்.

35. அருளுடை யந்தணை ராக்கு நல்லவை
பருகிசை மேவியாழ்ப் பாணர் நாவவை
மருவிய முத்தமிழ் வாயின் றிஞ்சவை
பெருகிய பயன்படு பெரிய பொற்குவை.

---

29. உடலுநர்-பகைவர்.
30. துலை-தராசு. நிறை-அடக்கம்.
32. மன்பதை-மக்கள்.
33. போன்றவர்-தன்போன்ற முன்னோர்.

36. மிக்கொக்க பகுத்தறி வுடைய மேதகு
மக்கட்கு வேண்டிய மாட்சி யாவையும்
தொக்கொக்க வேதமிழ்த் துறைப டஇயகன்
மக்கட்கு மிக்கனாய் வயங்கி னனரோ.

37. மருங்கெலாப் பெருந்தமிழ் மக்கட் காத்திடும்
இருந்திய பருவமுஞ் சேரத் தந்தையும்
பொருந்திய மணிமுடி புனைந்து செல்வனை
அருந்தமி ழகந்தலைக் கரச னாக்கினன்.

38. குணிமணி மறியவெண் குடைநி ழற்றவே
மணிமுடி புனைந்தயல் மன்னர் போற்றவே
அணிமணிப் பொன்செய்நல் லரசு கட்டிலில்
இணையிலா விராவண னினிதி னேறினன்.

39. நல்லதுந் தியது நாடி நாடொறும்
அல்லது நீக்கியே நல்ல தாக்கியே
மல்லலந் தாமரை மாலை தாங்கியே
கல்விவர் தோளினு லினிது காத்தனன்.

40. குருந்தமிழ் மொழிபுனை கும்ப கன்னனும்,
திருந்திலாப் பீடணன் என்னும் தீயனும்,
கருங்குழல் செய்யவாய்க் காம வல்லியும்
பெருந்தமிழ்க் காவலன் பின்னர்த் தோன்றினர்.

## 2. உலாவியற் படலம்

1. இவ்வகை தமிழகுக் கேம மாகிய
ஓவ்விய படியெலா முதவித் தன்னெனச்
செவ்விய முறைசெயப் போந்த செம்மலுக்
கல்வியற் குறுதுணை யாக்க வேண்டியே.

---

36. மிக்கொக்க - மிகுந்தொத்துள. மேதகு - மேன்மை யான. மாட்சி-குணம். வயங்குதல்-விளங்குதல்.

38. அரசுகட்டில்-அரியணை.

39. மல்லல்-வளம்.

1. ஓவ்விய-ஒத்த. இயல்-ஆட்சி.

2. மைபட நீர்மலி வானின் மீவளச்
செய்பட வாக்கிய செந்நெற் செம்பயன்
தைபட வுழைப்பினைத் தகைய தாக்கியே
கைபட வுழவர்கள் களிப்பின் மிக்கனர்.

3. நிலவள மாயசெந் நெல்லொ டேனைய
பலவகைக் கூலமாம் பயன்கைக் கொண்டவர்
பொலிவுற வேபுதுப் பொங்கல் வைத்துமே
ஒலிமிக விழவயர்ந் துவப்பின் மிக்கனர்.

4. காதலிற் கலந்துளங் களித்த காதலர்
போதுறு குழவிகண் டுவத்தல் போல்வயல்
மீதுறு விளைவுகொள் மேழிச் செல்வர்கள்
பேதுறு களிப்பினைப் பேச வேண்டுமோ ?

5. உழைப்பவர் தங்களுக் கோய்வு வேண்டலான்
மழைப்பய னுதவிய மலையைக் கண்ணுறத்
தழைப்பவ ருளத்தொடு தானுந் தூதனாய்
விழைப்போடு நடந்திள வேனில் வந்ததே.

6. இலைவளம் வாய்ந்துகூர்ந் திலகும் வேல்வளம்
சிலைவளம் வாள்வளஞ் செறிந்து செந்தமிழ்க்
கலைவளங் கண்டுளங் களிக்குஞ் சிந்தையான்
மலைவளங் கண்டிட மனத்தி லெண்ணினன்.

7. தானினை கருத்தினைத் தமிழர் காணுற
வானினம் வெருவிட வண்ட ரோடுமொய்
தேனினம் மருவிடச் செறியு மூவெறி
யானையின் மிசைமுர சறைவித் தானரோ.

---

2. தைமாதத்தில் உழைப்பின் பயனை கைபடக் களித்தனர். செய்-வயல்.

4. பேதுறுதல்-மயங்குதல்; தெளிவற்றகளிப்பு.

5. விழைப்பு-விருப்பம். இளவேனில் சித்திரையில் தொடங்கும். மாசிபங்குனியாகிய பின்பனிக் காலமும் மலைச்செலவுக் குரியதாம்.

6. இலை-வேலின் இலைவடிவான தலை. சிலை-வில்.

7. வண்டு-ஆண்வண்டு. தேன்-பெண்வண்டு. மூவெறி-வாய்மூக்கு குறிவழியொழுகும் வெறிநீர்.

8. முரசறைந் தூரியவன் மொழிந்த நாள்வர
அரசரு மமைச்சரு மனைய செல்வரும்
வரிசையி னுயர்தமிழ் மக்கள் யாவரும்
அரசவை யிதுவென வணியின் மேயினர்.

9. கரியரும் பரியருங் காலிற் சென்னரும்
பெரியருஞ் சிறியரும் பெருங்கட் சிற்றிடைக்
கருங்குழன் மகளிருங் கணவன் மார்களும்
அருகுறு சிறுவரு மாக மேவினர்.

10. புலவரும் பாணரும் பொருநர் யாழரும்
பலவகைக் குழலரும் பறையர் கூத்தரும்
சிலைநுதல் விறலியுந் தீஞ்சொற் பாட்டியும்
மலைவளங் கண்டிட வந்து கூடினர்.

11. நின்றிருந் தேத்திடு நிலைகொள் சூதரும்
ஒன்றிடு நாழிகை யோர்ந்து சொன்னரும்
அன்றெழிந் துயர்கணக் காய ரோடுடன்
துன்றுமெய் காப்பரும் வந்து சூழ்ந்தனர்.

12. மறவரும் மறவரின் மனையுந் தாயரும்
சிறுவரு முறுவொடு சிறந்த நண்பரும்
இறைமக ளிலங்கையு ளிடங்கொ டாதெனப்
புறமதிற் புறத்தினும் போந்து மொய்த்தனர்.

13. வாழ்கநந் தாய்மொழி வாழ்க நந்தமிழ்
வாழ்கநந் தாயகம் வாழ்க நல்லறம்
வாழ்கநந் தலைமகன் வாழ்க வோவென
ஆழ்கட லொலியினு மார்த்த ரெங்கணும்.

14. தோடுளை நரம்பெனத் தொகுதி பட்டுள
மாறியல் கடந்தநன் மங்க லத்தவாய்
ஓறுகு பல்லிய மொலிப்பத் தேவியை
நாறலரி தாரணி நாளை யொத்தவே.

---

10. பொருநர்-பிறர் கோலமிட்டு நடிப்பவர். விறலி-கூத்தி. பாட்டி-பாடுபவள்.
11. நின்றேத்துவோர் - சூதர். இருந்தேத்துவோர்-மாகதர். இருமையுமேத்துவோர் - வேதாளிகர். அறுதல்-மாறுபடுதல். கணக்காயர்-ஆசிரியர்,
14. தோல்துளை நரம்பு-தோற்கருவி, துளைக்கருவி,

15. அராவணை விடமருண் டகலுஞ் சாயலார்
பராவண மெனுமிசைப் பாட்டின் கூட்டொலி
தராவண வியவகத் தமிழர் தங்களுக்
கிராவண னிவனென வியம்புக் காலுமே.

16. எங்கணுந் தமிழ்க்கொடி யீட்ட மூய்தர
மங்கல வொலிதலை மயங்கு மாயிடை
தங்களைத் தாங்கர் தமிழ ரார்ப்புறத்
திங்கள்வெண் குடைநிழல் சிறப்பத் தோன்றுன்.

17. கண்டன னிறைவனுங் கண்க ளிக்கவே
தண்டமிழ்க் கொடிக்குமுன் றலைவ ணங்கினன்
கொண்டனன் மகிழ்ச்சி'யெங் குலத்த ராகிய
வண்டமிழ் மக்களே வருக' வென்றனன்.

18. இவனம திறையெனு மீங்கு நின்றுபோய்
அவனம திறையெனு மாங்க கன்றுபோய்
உவனம திறையெனு மூங்கு வேறிலா
திவனவ னுவனம திறையென் றார்க்குமே.

19. தொக்கவ ரின்னணந் தொகைஇய வின்புறீஇ
ஒக்கலுந் துணைவரு முறவு மாகிய
தக்கதந் தாய்மொழி பேசுந் தண்டமிழ்
மக்களு மிறைவனும் வழிக்கொண் டாரரோ.

---

நரம்புக்கருவி. மாறுஇயல்கடந்த-ஒன்றிய ஓசையவாய். ஓல்தரு, ஓல்-ஒலி. நாறு அணி தார்-மணமபொருந்திய அழகிய மாலை.

15. அரா-பாம்பு. அணைவிட-நெருங்கிட. சாயல்-மயிற்சாயல். பராவணம்-வாழ்த்தப்படும் பொருள். தரு-இசைப்பாட்டு. அணவிய-பொருந்திய. பராவணம் எனும் இவன் தமிழர் தங்களுக்கு இராவணன் என-பரவப்படும பொருளாகிய இவன் தமிழர்க்கு மிக்க உரிமையுடையவன் என்று. இயம்-வாச்சியம்.

16. மூய்தர-மூட. தலைமயங்கல்-கலத்தல்.

18. உவன்-நடுவிலுள்ளவன். அணித்தும சேய்த்தும் நடுவும் கண்டோர் கூற்று. ஊங்கு-எல்லா இடத்திலும்.

19. ஒக்கல்-சுற்றத்தார். துணைவர்-உடன்பிறந்தார்,

20. பாடுவர் தமிழிசை பாடி யின்புறீஇ
ஆடுவர் தாமுநா டகரென் றூர்த்தெழீஇ
ஓடுவ ருவப்பினு லோடி வந்துபின்
கூடுவ ராய்த்தமிழ்க் கூட்டஞ் செல்லுமே.

21. இன்னண மாயவ ரீறி லின்பராய்
அன்னவ ராழ்கட லகழைத் தாண்டியே
பன்னலந் தோயவன் பாயி லங்கையாம்
பொன்னகர் பின்னுறப் போயி னாரரோ.

22. யாணரும் பழையது மியைந்தி யாவினும்
மாணருந் தலைநகர் வாழ்த்திப் போர்த்தொழில்
பூணரும் புனைதமிழ்ப் புலவ ரோடியாழ்ப்
பாணரும் வழிநடை பாடிச் செல்வரால்.

## வேறு

23. பருகப்படு மடுவிற்பல பகுதிப்படு கரையில்
இருவப்படு சிறுகொக்கின மிரையிற்பட வஞ்சி
அருகிற்படு வயலிற்புகி யமையச்சிறு கயல்கள்
மருவப்படு பழனப்புனல் மருதத்தினை கண்டார்.

24. இலையைப்பெரு சிறுகால்கிழித் திடநெக்குறு வாழைக்
குலையுற்றொரு தலைகாட்டுபு குமரிப்புன லுண்டு
பொலிவுற்றெழு கழையிற்படு பூவாலினை யாட்டக்
குலவப்புறு மருதத்திணை குதிரைக்குல மானும்.

25. ஏனின்னமு மிலமைத்தமி ழினிமைப்படு கன்னல்
தானன்னது தந்தோரிறை வந்தானவ ரோடு
நானின்னமிழ் தேயோவவர் நவியாதிள வேனில்
காலண்ணிய பூவாயவெண் கவரிக்குலம் வீசும்.

---

22. யாணர்-புதுவருவாய்.
24. கால்-காற்று. நெக்குறுதல்-கிழிபடல். கழை-கரும்பு. குலவு அப்பு-மிக்கநீர்.
25. கன்னல் தான்-கரும்பானது. அன்னது தந்தோர்-தனக்குத் தமிழாகிய இனிமையைத் தந்தோர். தமிழர் பேசிய தமிழாற் கரும்பு இனிமையடைந்து அதற்காக உதவுகின்றதென்க. அமிழ்து-சாறு. கான்-மணம். அமிழ்தேயோ-சாறுமட்டுமா.

26. தண்டாமரை மலரைத்தமிழ் நீரொடொரு தையல்
கண்டேமுக மெனவேயிரு கையான்மறை தருமவ்
வண்டார்குழல் முகமோர்முழு மதியென்று மயக்கங்
கொண்டேயவி முரலுஞ்செழு குமுதக்குல மலரும்.

27. தெங்கம்பொழில் கண்டன்பொடு நிருமித்தரு மிளநீர்
பங்கொன்றவ ரைந்தாறெனப் பருகக்குலை வாழை
இங்கெம்மி லுமேலோவுணு மெனவேகுலை குலையாய்த்
தொங்கும்பழ முண்டேகளி கொண்டேவழிச் சென்றார்.

28. பொன்னைப்புரை புன்னைச்சிறு புதுவீதரு பொடியால்
தன்னைக்கொழி பொன்னாக்கியே தமிழ்தந்திடு தமது
மன்னைப்பெரு மன்போடெதிர் வரவேற்கவே கானல்
நெக்நற்படு புலவற்றிடு நெய்தற்றிணை கண்டார்.

29. சங்கந்தரு தமிழுண்டது தவறென்று தெளிந்தேன்
இங்கொன்றிய விறையேயினி யென்றுந்தலை வையேன்
அங்கன்றது கொண்டேபொறுத் தருள்கென்றொலி
கடலும்
சங்கந்தரு முத்தந்திறை தருமாயிர மடங்கே.

30. தப்புக்கிறை யாகக்கடல் சங்கந்தரு முத்தம்
ஒப்பித்தது முறைபோவத னுரிமைச்சினை யான
அப்புத்தரு பொருள்கொள்கென வன்போடுயர் கழியும்
உப்புத்தர வுற்றேசின மற்றேவிடை பெற்றார்.

31. பெருகாதலன் வரவேயெதிர் பெறுகாதலி மானக்
கருவார்நறு மலருங்கவி கலையுங்கயி லேந்தி
வருவீர்வரு வீரென்றெதிர் வரவேற்றிட வெதிர்கான்
முருகார்நறு வீசூழிய முல்லைத்திணை புக்கார்.

---

26. தமிழ்நீர்-இனிமையான நீர். மதியைக் காணின் குமுத மலரும்.
27. மேலோ-கொடையிற்சிறந்தவரோ.
28. பொடி-பூந்துகள். கொழிபொன்-பூந்துகள் கலந்த மணல். நெக்கல்-சேற்று. புலவு-புலால் நாற்றம்.
29. (இறை)கொண்டு அன்று அது பொறுத்தருள்க-அன்று தமிழ நாட்டையுணட் குற்றத்தைப் பொறுத்தருள்க.
30. அப்பு-நீர்.
31. கருஆர்-கருப்பொருந்திய. முருகு-தேன். வீ-பூ.

32. உள்ளத்தினை யுணர்வோடிய லுயிரீரு முகப்போர்
கள்ளத்தினை யடையப்புடை கமழுஞ்சிறு கையால்
வள்ளத்தினை யேந்தித்தரு மதியைக்கவர் தமிழப்
புள்ளத்தனை யிசைபாடிடும் பூப்பந்த ரிருத்தும்.

33. பூவிற்புனை பொன்னூலிடை போகத்திகழ் பச்சைப்
பாவிற்புனை பட்டாடைகொள் பச்சைத்தொடி யாரின்
காவிற்புனை புள்ளோடறு காலும்பல கனியும்
பூவிற்புனை தேனும்பெறு புதுமைச்செயல் காட்டும்.

34. விசும்பிற்பொலி மீன்போலவு மிடைநீல விரிப்பிற்
றசும்பிற்பொலி தருமேலவர் தாமேவுதல் போலும்
பசும்புற்றரை மிசைமாவினம் பசும்புற்றினுங் காட்சி
அசும்புற்றிடு நீரோடையி னருகிற்கொடு காட்டும்.

35. கொன்றைக்குழ லொடுவேய்ங்குழற் குரல்கேட்டின
நிரையும்
மன்றிற்புக வம்மாவென வருகைச்செயல் கண்டு
கன்றுக்கல வெருவுற்றல கனிவுற்றவை யிசையின்
இன்றுக்கென விறையுந்தமி ழிசைமேன்மையை
யெண்ணும்.

## வேறு

36. மழையினு விலையை நீத்து வருபனி யதனாற் கூர்த்து
நுழைவெயி லதனாற் பூங்காய் நுற்றியே பழுக்குங்கானம்
பழையதைப் பூப்பால் நீத்துப் பண்பினாற் கருப்பமுற்றிக்
குழவியைப் பெற்றே யின்பங் கொள்ளுமீர்ங்
குழலே போலும்.

---

32. இயல்உயிர் - இயங்குகின்றஉயிர். கள் அத்தனை அடைய - தேன் அவ்வளவையும் பெற. புடை-பக்கம். சிறுகை-பூந்தாள். வள்ளம்-பூவட்டில். மதி-அறிவு. புள-வண்டு. உகப்போர்-காதலர். கள்ளம்-களவு. காதலர் இயற்கைப் புணர்ச்சி பெற பூப்பந்த ரிருத்து மென்றுமாம்.
33. பூ-பூவேலை. தொடி-வளையல். புள். பறவை. அறுகால்-வண்டு.
34. மிடைதல் - செறிதல். விரிப்பு - கம்பளம். தசும்பு-பொன். மா-விலங்கு. அசும்பு-நீரூறுதல்.
35. மன்று-ஆதொழு. வெருவுதல்-அஞ்சுதல். கனிவு-உருக்கம். இன்துக்கு-இனிமையைப் பருகி.
36. கூர்த்தல்-தளிர்த்தல். நுற்றி-முற்றி. பண்பு-புணர்ச்சி.

37. ஐயணி கனியைக் கொம்பர் அயிழ்ந்துறழ் பவளச் செவ்வாய்
மையணி கண்ணார் கொள்ள வளைந்துமே கொடுக்குங் காட்சி
நெய்யணி காணப் போந்த நேர்மை நல்லார் கையில்
கையணி சேயைத் தாயுங் களிப்பொடு கொடுத்தல் போலும்.

## வேறு

38. ஆயும்பொருள் பலவுந்தக வாய்ந்தேமகிழ்ந் தினிய
காயும்பொதிர் கதிரும்முதிர் கனியுந்நறுங் கிழங்கும்
தோயுந்தயிர் பாலுந்தகு சுவைகண்டுறு நாவும்
ஓயும்படி யிறையோனுட னுண்டேவழிக் கொண்டார்.

39. சோலைப்படு மருவிக்கொடி தூதாகவே தென்றற்
காலைத்துணை யாகக்கொடு கனிமாமலர் தூவ
மாலைப்படு குறிஞ்சித்தலை வருவீரென வேபைங்
கோலக்கிளி வரவேற்கவே குறிஞ்சித்திணை யுற்றார்.

40. கலையுற்றொரு பலவின்சுளைக் கனியைக்கொடு மந்திக்
கிலையிட்டுமே யுணவேண்டிட விகல்விட்டது நின்ற
நிலைவிட்டுமே வந்துண்டிட நீள்வால்மகிழ் மேற்கு
மலையுற்றனர் தமிழுக்குயிர் வழங்குந்தமிழ் மக்கள்.

## வேறு

41. அறையிடை வீழ்தரு மருவி நீர்த்தொடர்
இறைமக னெழினலத் தீடு பட்டுமே
நிறைமலர்த் தொடையலை நயந்து நீள்மலைக்
குறமகள் சூட்டிடுங் குறிப்பிற் றோன்றுமே.

---

37. ஐ-மென்மை. நெய்யணி-ஈன்றவள் நெய்தேய்த்து நீராடுதல்.
38. பொதிர்தல்-நிறைதல்.
39. கொடி-தொடர். கணி-வேங்கைமரம். மாலைப்படு-மாலைபோல்மலர்ந்து. அல்லது, மால் ஐபடு-முகில் மிகப்படிந்துள்ள.
40. கலை-ஆண்கருங்குரங்கு. இகல்-ஊடல். நீள்வால்-குரங்கு.
41. அறை-பாறை. நறை-தேன், மணம்.

42. இம்மென வொலிபட விழியு நீர்த்திரள்
செம்மலைக் கண்டுளெஞ் சிறப்பத் தன்னெழில்
பொம்மலுற் றினிதினிற் பொலியப் போர்த்திடும்
அம்மலை மகளின்மே லாடை மானுமே.

43. துன்றறை வீழ்ந்துறத் துவளு நீர்த்தொடர்
குன்றவர் தம்மிளங் கொடிக்கு நன்றென
வென்றெறி முரசினன் விரும்பிச் சூட்டிய
மன்றலந் தொடையலை மானத் தோன்றுமே.

44. வீங்கிய சாரலின் மிசைய வேங்கையின்
ஓங்கிய பூஞ்சினை யுதிர்த்த வொண்மலர்
பாங்குள துறுகலின் பாங்கர் தூய்தர
வேங்கையென் றிளம்பிடி வெருவி யோடுமே.

45. படக்கென யாக்கிளை யொடிக்கப் பாங்குறும்
மடப்பிடி நடுக்குற மறித்து மற்றதன்
இடத்துற வணைத்துநன் கினிதுண் டின்புறக்
கடக்களி றாட்டிடுங் காட்சி காண்பரால்.

46. பேரிளங் கன்றினைப் பிடியும் யானையும்
நீரிடை நிறுத்தியே நீண்ட கைகளால்
சீரிய வுடம்பெலாந் தேய்த்துத் தேய்த்துமே
பூரிநீ ராட்டிடும் புதுமை காண்பரால்.

47. இன்பொடு கைமக விணைந்து தூங்கவே
பின்பொடு முன்பொடு பிடியும் யானையும்
வன்பொடு கைகளால் வலியப் பற்றியே
அன்பொடு ஊசலாட் டயர்தல் காண்பரால்.

48. ஓங்கிய பாறையி னுயரத் தேறவே
தேங்கிய பிடியினைத் திசைக்கை பற்றியே
வாங்கவே தாயினீள் வாலைப் பற்றியே
போங்குழக் கன்றதன் புதுமை காண்பரால்.

---

42. பொம்மல்-பொலிவு. பருத்தல்.
43. துன்று அறை-நெருங்கிய பாறை. உற-மிக.
44. வீங்கிய - உயர்ந்த. துறுகல் - உருண்டைக்கல். பிடி-பெண்யானை.
45. மடம்-இளமை. கடம்-வெறி.
46. பூரி-மிகுதி.
47. பின்பொடு முன்பொடு-பின்னும் முன்னும்.
48. திசை-நீண்ட. குழக்கன்று-இளங்கன்று.

49. தடவரைக் கவரிடைத் தவிக்கும் வேங்கைகள்
அடர்தரு பூஞ்சினை யரும்பி மேக்குறப்
படரென நீண்டதம் பறிக்கை யாற்கொடு
கடகநீ ரூற்றிடுங் காட்சி காண்பரால்.

50. ஓட்டிய கொடிகளா லோங்கு பூஞ்சினை
கட்டியே நறுமணங் கமழும் பூக்களை
இட்டுமே மந்திதன் னிளைய குட்டியைத்
தொட்டிலிட் டாட்டிடுந் தோற்றங் காண்பரால்.

51. புல்லியே மரக்கிளை பொருந்த மந்திகள்
வல்லிபோ லாடியக் கரையின் வாதுறீஇக்
கல்லிடை யருவியைக் கடக்குங் காட்சியைக்
கொல்லெனச் சிரித்துமே கூடிக் காண்பரால்.

52. வீந்திட மந்தியும் மென்கட் பார்ப்பினை
ஏந்தியே கடுவனு மினத்தர் கையிரீஇச்
சாந்திருந் தறையிடை வீழ்ந்து சாதலைத்
தீந்தமிழ்க் காதலைத் திருப்பிக் காண்பரால்.

53. ஆகிய வகையெலா மனைப மூக்கிடக்
கோகுல வரங்கிடைக் கூத்தி மானவே
தோகையை விரித்திளந் தோகை யாடலை
ஓகையோ டினிதுகண் டொருங்கு வப்பரால்.

54. ஊகிய சாயல்கண் டுடம்பை நோக்குவர்
தோகையைக் கண்டுதந் துகிலை நோக்குவர்
ஆகுகண் கண்டய லார்கண் நோக்குவர்
பாகினு மினியசொற் பாவை மாரரோ.

---

49. கவர்-வெடிப்பு. தவித்தல்-வாடல். மேக்குறல்-வளர்தல். படர்-ஏவலாளர். பறி-நீரிறைக்கும் கருவி. கடகம்-யானைக்கூட்டம்.

51. வல்லி-கொடி. வாது-மரக்கிளை. உறீஇ-உற்று.

52. கடுவன்-ஆண்குரங்கு

53. கோகுல அரங்கு-அரசவைமேடை. ஓகை-மகிழ்ச்சி.

54. ஊகிய-பொருந்திய. ஆகுகண் - தோகையிலுள்ள கண்.

55. மருப்பொடு தூங்குகை வாங்கி யோங்குவான்
பொருப்பென வருகரி பொன்றக் கோட்புலி
பருக்கென மருப்பிடை பாய்தல் கண்டுமே
சுருக்கென மறவர்கள் தோளை நோக்குவர்.

56. சந்தகில் வேங்கையிற் சமைந்த கொத்திறல்
சொந்தமீ தருவிநீர் தோய்த்து வீசியே
செந்தமிழ் மழலைவாய் சிரித்துச் சீரிள
மைந்தரும் மகளிரு மகிழ்ந்து செல்வரால்.

57. மாணுறு முருகிய மழையி னார்ப்பவே
கோணுறு குறிஞ்சியாழ் குழலொ டார்ப்பவே
பாணர்கள் குறிஞ்சிவாய் பாடப் பாங்கினிற்
காணுறு பிடமெலாங் கண்டு சென்றனர்.

58. வென்றெறி முரசொலி வெண்சங் கின்னொலி
ஒன்றிய பறையொலி நரம்பி னுள்ளொலி
மன்றலங் குழலொலி மறவ ரார்ப்பொலி
குன்றொலி யொடுதொகு குழுறி யார்த்தவே

59. ஏடெழுத் தாணியா ளியன்ற தாய்க்கொடி
நீடிய வானிடை நிமிர்ந்து குன்றுறை
வேடுவர்க் குரைத்திட விரைந்து முன்புறந்
தோடுபைங் கிளியின மொத்துத் தோன்றுமால்.

60. இன்னபல் காட்சிகண் டினிய செந்தமிழ்
மன்னவர் மன்னனு மற்றை மக்களும்
பொன்னென வேங்கைவீ பொலியுஞ் சாரல்விட்
டின்னல மிகுந்தவோ ரிடத்தை மேயினர்.

61. குன்றுறழ் யானையுங் குதிரை யீட்டமும்
வென்றியி னார்ந்திடு விலங்கின் கூட்டமும்
நின்றுயர் மரங்களி னிரல வாய்க்கொடக்
குன்றமும் பாசறைக் கோலங் கொண்டதே.

---

55. மருப்பு-கொம்பு. வாங்கி-வளைத்து. பொருப்பு-மலை.
57. கோண-வளைவு.
61. விலங்கு-மிடாய் முதலியன. நிரல-வரிசையாக.

## வேறு

62. ஆடரங்குந் துயிலறையு மவைக்களமு மடைப்பளியும்
பாடரங்கும் பல்வகையாம் படைக்கலக்கொட்
டிலும்பலியக்
கூடமுஞ்செந் தமிழ்பயிலுங் கூடமொடு வகைவகையாப்
பாடியமைத் திராவணனோ டொருங்கிருந்தார்
பழந்தமிழர்.

63. தினைமாவுஞ் செந்தேனுந் தேமாவின் தீங்கனியும்
இனியபல வின்சுளையு மின்சுவைய நறுங்கிழங்கும்
சுனைநீரோ டைவனவெண் சோறுகறி யுங்குழம்பும்
வினைவகைய வினைபலவாம் விருந்துண்டு களித்தனரால்.

64. சந்தனத்தைப் பூசிடுவார் தாம்பூலந் தின்றிடுவார்
அந்துவர்வா யார்குழலுக் ககிற்புகையை யூட்டிடுவார்
செந்தமிழைப் பாடிடுவார் சிறுபகடி யாடிடுவார்
எந்தமிழோ ரிருப்பினுக்கிங் கேதுவமை கூறுவமே.

65. வையுறைவேல் மாமன்னன் வந்துள்ளா னெனக்கேட்டு
மையுறையும் மலைப்பொருளு மணப்பொருளு
மாப்பறமும்
கையுறையும் புள்ளினமுங் கனிபூந் தேன் பொரிகிழங்கும்
கையுறையாக் கொடுபோந்து கண்டுவந்தார் குன்றவரே.

66. ஊங்கவனை யுடனிருத்தி வாழியருங் கேளைவழுத்தி
முந்தையர்தம் மின்னுயிரின் முந்தையதாய்
முறைபோற்றி
வந்ததமிழ் மொழியான வழிவந்த தாய்மொழியை
எந்தயரே போற்றிவருகின் றீரோ? வெனக்கேட்டான்.

---

62. பல்இயம்-பலவகை இசைக்கருவி.
63. ஐவனம்-மலைநெல்.
64. அம்-அழகிய. துவர்-பவளம். பகடி-விகடம்.
65. வை-கூர்மை. பறம்-தட்டி. கையுறையும்புள்-பழகினபறவை. கையுறை-காணிக்கை.
66. ஊங்கு-மிக.

67. ஆமென்று ரவ்வளவே யடையாரைக் குடியோடிப்
போமென்று வலிகாட்டிப் புகழ்பூத்த வரைத்தோளான்
காமன்றே வுயிர்வாழ்வின் நல்வாழ்வுப் பயன்பெற்றோர்
ஏமொன்று மலைவாணிர் குறையென்றே
வெனமகிழ்ந்தான்.

68. மற்றவரும் பெருங்குன்ற வாணருட னனவாய்
உற்றநலை மத்தனையு மொருங்கறியப் பரிமாறிச்
சற்றுமன மகலாநந் தாய்வாழி யெனக்கூறிக்
கற்றவருங் கற்றவருங் கலந்துகளித் தனகளித்தார்.

69. ஒத்தபிறப் பினராய வுயர்ந்தோங்கு மலைநாடர்
'வைத்தலைவேல் மாமன்னு' வண்டமிழைத்
தாய்மொழியா
ஒத்தவெமக் கென்குறையோ? வுடனுறையும்
பெருவாழ்வை
வைத்ததுவே யமையுமென வணக்கமுடன்
விடைகொண்டார்.

70. ஆங்கவர்சென் றதன்பின்ன ரழகியபன் மலர்கொய்தும்
பாங்குடனே யணியணியாப் பலவிளையாட் டுகளயர்ந்தும்
தேங்கியநீர்ச் சுனைகுடைந்தும் தெளிவெய்த
மனக்கொண்டார்
ஓங்குபெருஞ் செல்வத்தா லுலகோம்புந் தமிழ்நாடர்.

71. பூங்கொடியின் பாடணைந்த பூங்கொடியார் கைபடவப்
பூங்கொடியும் புறங்கொடுத்துப் பூங்கொடியா
ரடிவணங்கும்
பூங்கொடியே யதுவானும் பூங்கொடியைப் புறங்கண்ட
பூங்கொடியார்ப் பணியாத புகன்மறவ ருளரேயோ?

72. வேங்கையினை ரொண்பூவை வெடுக்கென்று
பறித்தொருத்தி
பாங்கொடியான் மகட்பெறவே பகைகொண்டு கைநீங்கி
வேங்கையிடை யொதுங்கினையோ மெல்லரிப்பொன்
சுணங்கெனவே
ஆங்கெறிய வயனின்ற வவள்கொழுநன் நகைநக்கான்.

---

67. ஏம-காவல்.
71. புகல்-வெற்றி. புறங்கொடுத்தல் - வளைத்துப் பூப்பறித்தல்.
72. அரி - நிறம். சுணங்கு - மாதர் உடலில் படரும் தேமல். வேங்கைப் பூவைத் தேமலென மயங்கினர்.

73. காதலியின் விரலென்று கமழிதழிச் செங்காந்தட்
போதினைத்தொட் டிடவொருவன் பொன்னாழி
விரல்விரித்தப்
போதினைத்தா வெனவவனப் புதுமையினாற்
செம்மாந்தப்
போதினையும் விரலினையும் பொரீஇக்கண்டு
புறம்போவான்.

74. தண்சுனைநீ யெய்பறித்த தையலவை தம்மழகான்
கண்சுவைபோ யெழிலவெனக் கண்சிவந்து கைவிடுப்ப
ஒண்கழலோன் றொழுதிரக்கு மொளியகல்கூம்
பலர்காட்டிக்
கண்கலங்கே லெனத்தணிந்து காதலனோ டாங்ககலும்.

## வேறு

75. பொன்னெனப் பொலிவுறும் பூங்கட் செல்வரும்
இன்னின விடந்தனக் கேற்றி திஃதெனத்
தொன்னலங் கவினிய தொடையல் சூட்டியே
அன்னமென் னடையின ரழகு காண்பரால்.

76. கெண்டை யுண் கண்ணியர் கிழவர் சூட்டிய
தண்டரி றிசையெலாந் தழுவித் தண்ணென
வண்டினம் பாடுதே மலர்செய் பஃறொடை
கொண்டெளிர் நறியபூங் கொம்பிற் றோன்றுவர்.

77. ஊடலி னன்றியிவ் வொருமைக் காலையும்
ஆடவர் பெண்களுக் கடிமை யேயெனத்
தோடணி குழையர்பூங் தொடையல் சூட்டியே
பாடமை தலைவரைப் பணியச் செய்வரால்.

---

73. செம்மாத்தல்-மிகக்களித்தல்

74. தொழுது இரத்தல்—காலடியில் கிடத்தல். கூம்புதல்—குவிதல். அழகிழந்து காலடியிற் கிடந்த கூம்பிய பழம்பூவைக்காட்டி, இவையும் அவ்வாறுமெனச் சினம் போக்கினை.

76. கிழவர்-கணவர். தேம்-தேன்.

77. தோடு- காதணி. குழை- காது. பாடு- பெருமை. மாலையேற்கத் தலை வணங்குவரென்க.

78. குறுநடைச் சிறுமியர் குற்ற பூக்களை
நறுமலர்க் குழலுடை ஞாயர் தைஇத்தர
மறுவறத் திகழ்தரு மரஞ்செய் பாவைக்குச்
சிறுமணித் தொடைநலி சிறப்பச் சூட்டுவர்.

79. கும்பலி னின்றிரு கொடியா ளர்செலீஇ
அம்பல மெழிலுற வாடும் பாவைபோல்
வம்பவிழ் மலருக மாறிக் கைபிடீஇத்
தும்பிலி பறந்துகண் சுழல நோக்குவர்.

80. சந்தன நிழலிடைத் தமிழ மங்கையர்
பந்தயம் வைத்துயர் பணையங் கைக்கொளப்
பந்துவந் தாடலைப் பரணங் காத்திடும்
செந்தினைக் குறத்தியர் திரும்பிக் காண்பரால்.

81. அறத்தினை வாழ்த்தியு மறத்தின் மீதமிழ்த்
திறந்தியல் செம்மலின் றிறத்தை வாழ்த்தியும்
சிறுத்திடைப் பெருத்தகண் செங்கை வெண்பலார்
குறத்திய ரொடுதழீஇக் குரவை யாடுவர்.

82. தனித்தமிழ் வாய்ச்சியர் தலைதந்த செந்தினைப்
புனத்திடைப் பரண்மிசைப் பொருந்திக் கல்லெறிந்
தினைத்தசெந் தமிழிசை யிசைத்து நீக்கலான்
உனித்தலை யிலக்கிளி யோடுங் கூடுமால்.

83. ஒசிந்தநுண் ணிடைச்சிய ரொத்த காதலர்
கசிந்ததேங் கொத்திடைக் கமழுங் கொத்துற
இசைந்தளி தொடர்தர வியல்பின் யாத்தநற்
பசுந்தழை தரவுடீஇப் பசந்து காண்பரால்.

---

78. குற்ற-பறித்த. ஞாயர்-தாயர். தைஇ-தொடுத்து. மணி-அழகு.
79. அம்பலம்- ஆடரங்கு. வம்பு- மணம். உக- விழ. தும்பிலி-இருவர் கைமாறிப் பிடித்துப் பம்பரம் போற் சுழன்றாடுதல்.
81. குரவை- எழுவரேனும், ஒன்பதின் மரேனுங் கைகோத்தாடுதல்.
82. தலைதந்த-செறிந்த. உனித்து—உற்றுக்கேட்டு.
83. ஒசிந்த— வளைந்த. கசிந்ததேம் கொத்து—பூந்தேன் உருகிவழிந்துவந்து பட்ட தழைக் கொத்து. கமழுங்கொத்து—பூங்கொத்து.

84. பருவமு முருவமும் பண்பு மொத்துள
ஒருவனு மொருத்தியு முயர்ந்த வேங்கையின்
பெருநிழ லெதிர்ப்படும் பெரிய காட்சியைக்
கருங்குழல் காதலன் களிப்பக் காட்டுமால்.

85. தாவருங் குறக்குடித் தமிழ வாய்ச்சியர்
காவரு மனத்தரு நயந்து கைக்கொளப்
பூவருந் தேனொடு பொருந்து செந்தினை
மாவிருந் தூட்டியே மகிழு வாரரோ.

வேறு

86. பண்ணென விளிக்குஞ் சொல்லார் படையெனப் பொலியுங் கண்ணார்
விண்ணெனத் திகழும் பாலார் மின்னென வொளிரும் பூணார்
உண்ணென வூட்டுங் கையா ரொத்ததந் துணைவ ரோடு
தண்ணெனக் குளிர்ந்து காட்டுந் தடஞ்சுனை யாட லுற்றார்.

87. ஓடியே யொளிப்பா ரோடி யொளிப்பரைப் பிடிப்பா ரொன்றாய்க்
கூடியே குதிப்பா ரெட்டிக் குதிப்பரைத் தடுப்பார் கண்ணை
மூடியே முனைப்பாய் நீருள் மூழ்குவர் மூழ்கு வாரைத்
தேடியே பிடிப்பா ராகத் தினைத்துநீ ராடு வாரே.

88. செவ்விய கலவைச் சாந்தந் தெறித்துநீர்ப் படுக்கு வாரும்
அவ்வனைக் கைக ளால்நீ ரள்ளியே யிறைக்கு வாரும்
கொவ்வைவா யானீர் மூக்கிக் கொழுநர்மேற் றாவு வாரும்
இவ்வகை பலவுஞ் செய்தே யினிதுநீ ராடு வாரே.

---

86. படை—வாள், வேல். விண்—முகில். ஐம்பால்—கூந்தல்; முடி, குழல், கொண்டை, பனிச்சை, சுருள் என ஐவகையாக முடிக்கப்படுவது.

87. தினைத்தல்—மகிழ்தல்.

88. கொவ்வை—கோவைப்பழம். மூக்கி—மொண்டு.

89. தாமரை மலரைச் சூழ்ந்து தயங்குசை வலத்தைக்கண்டு
காமுறு வனப்பி னுடன் கருங்குழல் சூழப்பெற்ற
ஏமுறு முகமென் றெண்ணி யெடுத்ததை விடுத்து வெட்கிப்
போமொரு காளை தன்னைப் பூவையர் பகடி செய்வார்.

90. சோனைவார் குழலி னார்தஞ் சூழலி னுப்ப ணின்றாள்
தானையம் பூக்கள் சூழ்ந்த தாமரைப் பூவைப் போலும்
மீனினஞ் சூழ நின்ற வெவ்கதிர் மதியம் போலும்
கானக மயிலாற் சூழ்ந்த மானையும் போல நின்றாள்.

91. துடியிடை யொருத்தி கைகாற் றுவண்டுமேல் வரமாட் டாது
வடிவுடைக் கையை நீட்ட மலைக்கையாற் கரைசேர்க் கின்றான்
மடுவிடை வீழ்ந்து நீந்தி வரமுடி யாமற் சோரும்
பிடியினைக் கரையிற் சேர்க்கும் பெருங்களி றொத்தா னம்மா.

92. திரையுடை யுடுத்து முத்தச் சிறுநகை புரிந்து செந்தா
மரைமுக மலர்ந்து நீல மலர்விழி விழித்துத் துற்றும்
சுரையளி வாய்ப்பண் பாடிச் சுரிகுழ னாரம் பின்னி
வரையகற் சுனையக் குன்ற மகளெனத் தோன்றல் காண்பார்.

93. ஈங்கிவ ராக வேழம் மிறைவனு முயர்வான் றோய
ஓங்கிய குறிஞ்சிக் குன்றத னுள்ளடல் வளங்கள் முற்றும்
பாங்கொடு தமிழின் றென்மை பழுத்தநா வலர்கள் நேரில்
வழங்கிய புனைந்து காட்ட வுவந்துகண் டிருந்தா னம்மா

---

89. தயங்குதல — விளங்குதல. சைவலம் — பாசி. காமுறு — விரும்பப்படும். ஏமுறுதல்—மகிழ்தல்.
90. சோனை—கார்முகில். வார்—நீண்ட. சூழல்—கூட்டம். தானை—தொகுதி.
91. துடி—உடுக்கை.
92. திரை—அலை. நகை—பல். துற்றும்—உண்ணும். சுரை—தேன். நாரம—பாசி.
93. வழங்கியே—வழக்கத்தோடு.

94. எண்படும் புகழின் பாலா ரிவ்வகை விளையாட் டார்ந்து
காண்டரு மலையின் காட்சி காணலோ டமைகி லாது
வேண்டிய கருவி கட்கும் விறகிற்கும் மனைவாழ்க்
கைக்கும்
ஆண்டுள மரங்க ளோடவ் வணிமலைப் பொருளுஞ்
சேர்ப்பர்.

## 3. காட்சிப் படலம்

### வேறு

1. தானி னைத்ததை முடிக்குநந் தமிழிரா வணனும்
தேனி னித்தசெந் தமிழருந் திகழ்தரக் கூடி
நானி லத்திலு முலவிய நடைமுறை நவின்றும்
வானி னித்தவண் டார்குழல் வரன்முறை வகுப்பாம்.

2. முல்லை யேமுத லாகிய நானில முதலின்
எல்லை யாகிய தமிழக முழுவது மியன்ற
முல்லை மாநிலந் தனிலொரு முல்லையை யாண்ட
தொல்லை யோர்வழி வந்தமா யோனெனுந் துயோன்.

3. முன்னை யோர்முறை புரந்தவா றேதனி முதலாய்
அன்னை போலவு மப்பனைப் போலவு மருமைத்
தன்னை போலவுந் தண்டமிழ்த் தாய்நனி யுவப்ப
பொன்னை யோர்வறி யோல்புரப் பேயெனப் புரந்தான்.

4. கருவி டத்திலே பொதுநலம் புரிதலைக் கற்றோன்
உருவெ டுத்ததுந் தமிழையின் னுயிரெனப் பெற்றோன்
ஒருவி டத்திலுந் தவறறி யாதுயர் வுற்றோன்
இருவி டத்தொரு விடத்திருந் தான்றிரா விடனே.

5. சேர சோழருஞ் செந்தமிழ்ப் பாண்டியர் தாமும்
மாரி போற்றமி ழகத்தைமா மன்னர்கீழ்ப் புரக்க
மூரி யோர்முறை போகவே முறையொடு புரக்குஞ்
சேரர் கீழ்த்திரா விடத்தொரு முல்லையிற் றிகழ்ந்தான்.

---

3. தன்னை — அண்ணன்.
5. மூரியோர் — முன்னோர்.

6. எல்லை யற்றபல் வளமிகுந் தியல்திரா விடத்தில்
அல்லை யுண்டுயர் குமரியின் வடகிழக் கமைந்த
முல்லை நாட்டினற் றலைநக ராகிய முகிறோய்
எல்லி வெள்குறு மாடநீள் முதிரையி லிருந்தான்.

7. பூத்த முல்லைநன் னாட்டினர்க் கொருதனிப் புகலாய்
ஆத்தொ கைக்குமப் பொருட்குமோ ரழிவில்பே
ரரணாய்க்
காத்து வந்தமா யோனெனுங் கலைவலோன் றலைவி
பூத்து வந்தவோர் நறுமணத் தாரிழுயிர்ப் பொற்பூ.

8. அப்போற் பூவினை யன்னை யுந் தந்தையு முலகில்
ஒப்புக் கோர்பொரு ளின்றென வுயிரென வுயிரின்
செப்புத் தானெனச் செப்பினைச் செய்பொரு ளென்ன
மப்புத் தானறு மணியெனப் போற்றியே வளர்த்தார்.

9. அகழெ ழுந்தசெந் தாமரைப் பூவழ கழியத்
திகழ வந்தவெண் மதியெனத் திகழ்தர வளர்ந்தாள்
புகழி ராவணன் றேவியென் றுலகினர் போற்ற
இகழி லாதொளி ரிளமதி திருவயிற் றிருந்தாள்.

### வேறு

10. தண்டாமரை மலரோகனி தமிழோதமி ழகமோ
உண்டோர்மன முள்ளூற வுவக்குந்தெளி தேனே
கண்டோகனி யோவேறெது காணேமென வேதான்
வண்டார்குழல் என்றேபெயர் வைத்தார்மன மொத்தே.

11. தாயாகிய தூய்மொழிச்சிறு வாயாகிய மழலைச்
சேயாகிய தானுந்தரு தெளிவாகவே நாளும்
வாயாகிய கையாகிய மனமாகிய பூவுங்
காயாகிய கலையாகிடக் கற்றேயுயர் வுற்றாள்.

---

6. அல்—இருள். எல்லி—ஞாயிறு.
7. பூத்து உவந்தள.
8. செப்பு—சிமிழ். மப்பு—மாசு.
9. அகழ்—குளம். இளமதி—மாயோன்மனைவி.
11. மழலை—குழந்தைச்சொல். வாய் கை மனம் ஆதல்—படித்து எழுதி உணர்தல். பூ—கல்வி.

12. ஏனோவித் தனைநாளென வெண்ணாதியல் கற்றாள்
தேனோவொத் ததுவாமெனத் தேறாதிசை துற்றாள்
ஆறாதித் தனைபாகென வறியாநடம் பெற்றாள்
தானேமுத் தமிழாகிய தாயாமென லுற்றாள்.

13. தோலுஞ்சுவை யாழுந்தொகு துளையுங்கனி வாயும்
நாலுந்தனை நீமுந்தியோ நான்முந்தியோ வெனவந்
நாலும்புதி தாகும்படி நுணுகிக்கழி நுணுகி
பாலும்புரை யாவின்மொழி பயிலிப்பய னுற்றாள்.

14. பாவைக்குல மெல்லாமவள் படிமைக்குற வாடும்
கோவைக்குல மெல்லாமவள் குதலைக் கிடை நாடும்
காவிக்குல மெல்லாமவள் கண்ணுக்குற வாடும்
பூவைக்குல மெல்லாமவள் புள்ளுக்குல மாகும்.

15. புள்ளுக்குல மெல்லாமவள் பூவைக்குழல் கூடும்
எள்ளுக்குல மெல்லாமவள் இமைகட்கிடை நாடும்
வள்ளைக்குல மெல்லாமவள் அள்ளுக்குற வாடும்
கிள்ளைக்குல மெல்லாமவள் கிளவிக்குல மாகும்.

16 அன்புக்கொரு தாய்மிஞ்சிய வருளுக்கொரு தந்தை
தென்புக்கொரு தனையுள்ளிய தெளிவுக்கொரு சுற்றம்
இன்புக்கொரு குறவித்தொகை யிளிமைக்கொரு நன்னூல்
என்புக்கொரு வுயிராமிவை யெல்லாமவ ளானாள்.

---

12. ஆறாது-நீங்காது. பாகு-பிரிவு.
13. தோல-தோற்கருவி. துளை-துளைக்கருவி. வாய-மிடற்றுக்கருவி. நுணுகி-நுட்பமாக. கழி-மிக. பயிலி-பயின்று.
14. படிமை-வடிவு. குதலைக்கிடை-பேசுமிடத்து இதழிடம். காவி-கருங்குவளை. புள்-பழகியபறவை.
15. புள—வண்டு. பூவைகுழல்—பூவைத்த கூந்தல். இமைகட்கு இடை—மூக்கு. வள்ளை—ஒருகொடி. அள—காது. கிள்ளை—கிளி. கிளவி—சொல்; சொல்கற்கும்.
16. தென்பு — வலி. தனை — தன் ஐ — அண்ணன். உள்ளிய—எண்ணிய. என்பு-உடல்.

17. அயனுக்கய லோடித்தன தன்னைக்கொரு முத்தும்
இயலுற்றரு கோடித்தன தெந்தைக்கொரு முத்தம்
செயலிப்படி யாகத்துணை திகழிற்படு பெண்மைப்
பயனைப்பெறு மங்கைத்திரு பருவத்தினை யுற்றாள்.

வேறு

18. பொன்னை வேங்கையின் பூவை யிளந்தளிர்
தன்னை வானிற் றகதக வென்றொளிர்
மின்னை யொத்தொளிர் மேனியைத் தாங்கியே
தன்னை யொத்துத் தயங்கி யியங்கினாள்.

19. விண்ணை யுண்டு விளங்கொளி மேவுண்டு
தண்ணை யுண்டு தளிரொடு பூவுண்டு
பண்ணை யுண்டுறை பாட்டளி காவுண்டு
கண்ணை யுண்டு கமழ்திரு மேனியாள்.

20. நீரை வைத்து நிவந்து துவள்கருங்
காரை வைத்துக் கருமணல் வைத்திருள்
சேர வைத்திருஞ் சைவலஞ் சேர்த்தளி
ஊர வைத்த வொளிர்கருங் கூந்தலாள்.

21. மதியை வைத்து மதிகண்டு வாடிடாப்
புதிய தாமரைப் பூவை யருகினிற்
பதிய வைத்துப் பளிங்கி னொளியினைப்
பொதிய வைத்துப் பொலியு முகத்தினாள்.

22. பிறையை வைத்துப் பிறையிற் படிந்துள
கறையை நீத்துக் கருங்குழற் கற்றையை
மறைய வைத்து மரையின் பொலிவினை
நிறைய வைத்து நிலவுமிழ் நெற்றியாள்.

23. சிலையை வைத்துச் சிலையி னடிப்புறம்
கொலைய வாளயில் கொன்னஞ் சுமைகயல்
கலையி னோடளி காவி யரிக்குலம்
நிலைய வெள்ளென நீள்கருங் கண்ணினாள்.

---

18. தயங்கி—விளங்கி.

23. அயில்-வேல். கொல் நஞ்சு. கலை-மான். அரி-கோடு.

24. எள்ளி னாகிய வின்னிளம் பூவினை
யெள்ளிச் சண்பகத் தின்மணந் தோய்தரக்
கள்ள விழ்குமிழ் கண்க ளிடையினிற்
கொள்ள வைத்த கொழுவிய மூக்கினாள்.

25. வள்ளை நீள்கொடி வைகிய மெல்லிலை
எள்ளி யுண்கண்க ளென்னு மிணைக்கயல்
துள்ளி யாடுந் துலங்குபொன் னூசல்போல்
உள்ள மீர்க்கு மொளிமணிக் காதினாள்.

26 முருக்கை வைத்தம் முருக்கொடு செந்துவர்
இருக்க வைத்தே யிதழ்விரி யாம்பலை
நெருக்க வைத்துட னெட்டுக் கோவையைப்
பொருக்க வைத்துப் பொலியுஞ்செவ் வாயினாள்.

27. முத்தைக் கோத்து முழுத்துவர் வள்ளத்து
வைத்துப் பின்னு மணமுகை முல்லையை
ஒத்தி ருக்க முருந்து மொளிநிலாப்
பொத்தி வைத்துப் பொலிவுறும் பல்லினாள்.

28. தேனும் பாகுந் தெளிவுஞ் சுவைக்கனி
யான சாறு மடிக்கரும் புந்தலை
யானின் பாலு மலாவின் சுவையெலாம்
மானி லாத வகையவின் சொல்லினாள்.

29. புலமொ ரைந்தும் பொறிகளைந் துந்திகழ்
தலையைத் தாங்குந் தலைவ னானகையால்
நிலைய பூகமே நீயெவன் நாலிலைத்
திலையெ னக்கெதி ரென்னுங் கழுத்தினாள்.

30 இன்ப சுங்கரும் பைமடித் தேயதன்
மூன்பு தாமரை மொய்முகைக் காந்ளின்
முன்பு பைங்கிளி மூக்குத் துவர்கொள
அன்பு டன்விருந் தாற்றிடுங் கையினாள்.

---

24. கள்-தேன. குமிழ்-குமிழம்பூ.
26. கெட்டுரு-நல்லநிறம.
27. துவர்-பவளம். முருந்து-மயிற்பீலி.
28. தலை ஆன்-சிறந்த மாடு.
29. பூகம்-கமுகு.
30. மடித்த கரும்பு கைக்கும், தாமரை உள்ளங்கைக்கும, காந்தள் முகை விரலுக்கும், கிளிமூக்கும், பவளமும் உகிருக்கும் உவமை.

31. ஈனும் வாழை யிளங்குலைச் செவ்விதழ்
மானும் பொற்படா மென்று மறைத்தலான்
தேனுங் கண்டுந் திகைக்குமின் சொல்லினாள்
தானுங் கண்டிலாத் தன்னிகர் மெய்யினாள்.

32. சொல்லை வென்ற துடியென் னிடையினும்
சில்லை யென்றழைச் சிற்றிழை யின்வகிர்
நல்லை யென்றுபி ணுடியம் மாவுரு
இல்லை யென்றே யிடைநுண் ணிடையினாள்.

33. பொன்னை நேர்மரைப் பூவுஞ் செயலையும்
என்னை நேரிலே மென்றுகக் கண்டுமே
இன்னி சைச்செஞ் சிலம்பு புலம்பிடும்
அன்னம் வெள்கு நடைமெல் லடியினாள்.

34. வானுங் காடு மலையு மறிகடல்
தானு நீர்மலி தண்பணை யும்பயில்
நானி லந்தனைத் தாங்கி நமதிறை
தானுந் தாங்குந் தமிழகம் போன்றனள்.

35. இன்ன தன்மைய ளாவ விறைவியும்
தொன்ன லம்புணர் தோழியர் தம்மொடு
மன்னி யேவிளை யாடி மகிழ்வுறீஇ
நன்ன லம்புணர் நாள்கழித் தாளரோ.

### வேறு

36. தன்னுயிர்போல் மன்னுயிரைத் தனிக்காக்கு
மாயோனுந் தமிழர் சூழ
மின்னியலு மழைமுகிலும் விழைந்துகுடி
புகுந்திருந்து வெறுமை யின்றிப்
பொன்னியலும் பொருள்பலவு மருளுடையார்
மனம்போலப் பொலியப் பெய்ய
மன்னியலு மருவிபல நின்றிழியுங்
குன்றமுற வழிக்கொண் டானே.

---

32. இடைதல்-வருந்துதல்.
33. செயலை-அசோகந்தளிர். என்னை-என்ன. இழை விழக்கண்டு சிலம்பு புலம்பு மென்க
34. பணை-வயல். உவமைப் பொருள்கள் நானிலத்தன வாகலும், தமிழகம நானிலத்தையுடைத்தாதலும் அறிக.

37. தன்குலத்துக் கொருகொடியாய்த் தமிழ்க்கொடிபோற்
றகைவாய்ப்பத் தமிழர் போற்றும்
பொன்கலத்துப் பொதிகமர்ந்து நுண்ணியசிற்
றிடைநுடங்கப் பொருவி லாளாய்
மின்குலத்துத் திகழ்மதிபோற் றோழியர்சூழ்
தரத்தமிழ்க்கோர் விளக்க மாகி
நன்கலத்த ளாகியவண் டார்குழலி
யொடுதாயும் நயப்பச் சென்றாள்.

38. முருகியலே டெழுத்தாணி மருவுதமிழ்க்
கொடிநுடங்க முரச மார்ப்ப
வெருவிடப்புள் விலங்கினங்கள் பறைபலவுங்
கடலொலிப்ப வெண்சங் கூதத்
திரடிரளா யிருபாலுஞ் செந்தமிழோர்
புடைசூழத் திகழ்கா லிங்கி
வரையிருந்து நிலம்படரு மருவியஞ்சா
ரலைக்கடந்து மலையுக் கானே.

39. புக்கவனு மலைச்சாரல் பின்னாக
முன்னுடிப் புயல்போற் சென்று
தொக்கமலை வளம்பலவுங் கண்டுதமிழ்த்
திராவிடராந் தொழுதி சூழத்
தக்கதமிழ்க் குலஞ்சூழத் தமிழர்கள்மா
பெருந்தலைவன் றங்கி யுள்ள
பக்கமலைச் சூழலிடைப் பாடியமைத்
தினிதிருந்தான் பகையொன் றில்லான்.

40. ஆங்கிருந்த மாயோனு மிராவணன்வந்
திருத்தலைக்கேட் டவாவி னோடு
பாங்குடையார் புடைசூழப் படைவகைக்கை
யுறைகொண்டு பரிவாய்ச் சென்று
வீங்குகடல் முப்புடைசூழ் தமிழகத்தைத்
தன்னுயிரின் மேலா வெண்ணித்
தாங்கிவருந் தமிழர்கள்மா பெருந்தலைவ
னிருக்கையதைச் சார்ந்து கண்டான்.

---

38. முருகு-அழகு. திரள் திரளாய்.

41. கண்டவனுங் கொண்டுசென்ற கையுறையைத்
திருமுன்பு கனிவாய் வைத்துத்
தண்டமிழோர் பெருந்தலைவ! தமிழ்வாழ்க
வாழ்கவெனத் தமிழர் கோனும்
வண்டுலவு முல்லையந்தார் மாயோய்!நந்
தமிழ்வாழ்வென் வாழ்வே நீயும்
கொண்டகுறை யிலவேயென் றுடனிருத்தி
நலமெல்லாங் கொளக்கொண் டானே.

42. இனித்திடுசெந் தமிழ்மொழியைத் தாய்மொழியாக்
கொண்டுபயின் றினிது வாழும்
தனித்தமிழர்க் கொருநாளுங் குறையுண்டோ?
துயில்கொள்ளாத் தரியார் தம்மை
நினைத்தபடி யுயிருண்ணு நீளிலைவேற்
பெருமன்னு! நினது காப்பின்
வினைத்திறம்வா ழியவென்று மாயோனுந்
தலைமகன்பால் விடைகொண் டானே.

43. சென்றவனுந் தமிழ்வாழுந் திராவிடரோ
டொருங்குகுழீஇச் செறிகார் மேயும்
குன்றமதன் பலவளமுங் கண்டுமகிழ்ந்
துரியரொடு கூடி யாடி
ஒன்றியசெந் தமிழரொடு மலைவிருந்துங்
காவிருந்து முவப்பி னுண்டே
என்றுமிலா வுளமகிழ்வோ டேழிசைச்செந்
தமிழ்ப்பயன்றுய்த் திருந்தா னிப்பால்.

### வேறு

44. இவ்வாறிவ ராகிட வேகிளியும்
ஒவ்வாதிவ ளோதுவ வோதவெனச்
செவ்வாய்திற வாது தியங்கிடவே
அவ்வாய்திறந் தேசொலு மாய்மொழியாள்.

45. ஒன்றாகிய தோழிய ரோடுசெவீஇக்
கன்றோடு கரும்பிடி யானையது
சென்றாடு செழுஞ்சுனை தேனொழுகுங்
குன்றூடு நினைவு குறித்தனளே.

---

43. தமிழ்வர்ழுந்திராவிடர்-புலவர். இப்பால்-அதன பிறகு.

44. தியங்கிட-வருந்த. அவ்வாய்- அழகியவாய்.

46\. கொய்வார்சினை வேங்கை குலைகுலையாய்ப்
பெய்வார்குழன் மீது பிறங்கிடவே
கைவாரி மலர்ந்த கருங்குவளை
மைவாரிய கண்மலர் வாய்பொதிவார்.

47\. விரைமேவிய சந்தன மெல்லிணரை
வரையாடு மடுத்திட வாய்தருவார்
விரலோடு பொருத்தியே மென்முகையைப்
புரையாதொழி காந்தள் புறத்திடுவார்.

48\. மையாடு மலைக்குற மாதரொடு
கையோடுகை மாறி வரிக்கயலை
வையாகிய வேல்விழி யாலடுவார்
துய்யாவென வாடுவர் தும்பியியே.

49\. சந்தோடு ததைந்த தடம்பொழிலிற்
பந்தாடி மகிழ்ந்திடு பைங்கிளியார்
கொந்தோடு குளிர்ந்திடு வேங்கையிடை
வந்தாடுவர் குன்ற வரிக்குரவை.

50\. மஞ்சள்ளிய மாதவி நீழலிடை
நெஞ்சள்ளிய நீடிசை பாடியடு
நஞ்சள்ளிய வேல்விழி நன்னுதறே
னஞ்சொல்லியர் கும்மி யடித்திடுவர்.

51\. மலையுஞ்சொல வண்டமிழ் பாடிமணிக்
கலமிஞ்சு சிலம்பு கறங்கிடவே
பொலமஞ்சிறை பைங்கிளி பூவைமயிற்
குலமஞ்ச வடிக்குவர் கோலாட்டம்.

---

47\. இணர்—பூங்கொத்து. காந்தள் முகையைப்புறத்திடுவார்.

49\. ததைந்த-நெருங்கிய. கொந்து-கொத்து. வரிப்பாட்டு.

50\. மஞ்சு - முகில். மாதவி - குருக்கத்தி. நன்னுதல் தேன் அம் சொல்லியர்.

51\. கறங்குதல்-ஒலித்தல்.

52. இல்லாவிடை யாரினை யாவெதிரா
மல்லாடுவர் போலிசை வாய்பாடிக்
கல்லோலிட வேயெறிந் கைகொட்டிச்
சில்லோதிய ராடுவர் தெள்ளேணம்.

53. கற்றைக்குழல் காட்டியே திங்கள்முகம்
மற்றைப்புற மாக வலங்கொடுதோள்
பற்றித்தமிழ் பாடியே யிவ்விருவர்
சுற்றிப்பறந் தாடுவர் தோணோக்கம்.

54. நாவல்லி நயந்து நயந்துதமிழ்ப்
பூவல்லி பொருந்துவ பாடியிள
மாவல்லி மலர்ந்த வகைவகையாம்
பூவல்லியர் கொய்து புதுக்குவரே.

55. உண்டோவிலை யோவெனு நுண்ணிடையார்
வண்டூத மலர்ந்திடு மாமலரின்
செண்டோடு தொடுத்த செழுந்தொடையல்
வண்டார்குழ லாள்குழல் வைக்குவரே.

56. வடிவேல்விழி மானை வழிப்படவும்
மடியாமதி வால்வினை யாடிடவும்
வெடியாமலர் வேங்கையி னொண்சினைதாழ்
கொடியூசலி னாடுவர் கொம்பனையார்.

57. விண்பொத்திய விங்கிருள் மென்குழலார்
பண்பொத்திய செந்தமிழ் பாடியிள
மண்பொத்திய பாவை வலம்பெறுவார்;
கண்பொத்தியே கண்டு பிடித்திடுவார்.

---

52. இடையார் - இடை இளையா-வருந்த. கல்-மலை. ஓல் - எதிரொலி. சில் - குளிர்ந்த. ஓதி-கூந்தல். தெளளேணம் - இவ்விருவர் எதிர் நின்று கை கொட்டி யாடும் ஆட்டம்.
53. தோணோக்கம்- இவ்விருவர் முகமாறித் தோள்களைப் பிடித்துக்கொண்டு சுற்றிப்பறந்து பாடியாடுதல்.
54. வல்லி-அகவிதழ். பூவல்லி-பூப்பறித்துக்கொண்டு பாடும்பாட்டு.
56. வால்மதி-சடையும முகமும். வெடியா-வெடித்த.
57. மணவில் பாவைசெய்து கல்லொளித்தல். வலம் பெறுதல் - ஒளித்த கல்லைக் கண்டுபிடித்தல் வலம்-வெற்றி.

58. வளையார்ந்து மலர்க்கரத்தின் விரலிடை
வளையாடுங்கை மங்கைய ரன்னமென
விளையாடுவ ரோடுவர் கூடுவர்பின்
விளையாடுவர் பைங்கிளி மேவுறவே.

59. கண்டேகுற மாதர் களித்திடவே
கொண்டாடியே தோழியர் கொட்புறவே
தண்டாமரை வாழ்மட வன்னமென
வண்டார்குழல் மாது தனித்தனளே.

60. தனியான தமிழ்க்கொடி யாங்கொருபூம்
புனமாதவி நீழ லிருந்தனள்பின்
கனியான தமிழ்ப்பயிர் காத்துவரும்
இனியானை யெதிர்ப்படல் பேசிடுவாம்.

வேறு

61. பாடியி லிருந்திடு பழந்தமிழர் கோனும்
நாடியவை நண்ணவிளை நல்குமுயிர் நண்பர்
கூடிவர வேமழை குவிந்துவிளை யாடும்
கோடுதொறு வேங்கைமலர் குன்றினிடை சென்றான்.

62. செந்தினை கறித்திடு சினக்கிளி றுகைப்பர்
பொந்திலில் விளித்துழறு புள்ளினை நகைப்பர்
சந்தன வினர்க்கொடுயர் சாமர மிசைப்பர்
மந்திநுனி யேறிய மரக்கிளை யசைப்பர்.

63. தாவிவரு நீருவி தாண்டியே குதிப்பர்
காவினிடை மாமயில் களிப்பரவை காண்பர்
பூவையொடு கிள்ளையின் புதுக்குவரி கேட்பர்
மாவினிளம் பிஞ்சுகொடு மாதுளை யடிப்பர்.

64. பன்றிகொடி வள்ளிகள் பறிப்பதை யொறுப்பர்
குன்றினுழை யேறுகள் குமுறுமொலி கேட்பர்
கன்றினொடு யானைகள் கடுகுவது காண்பர்
வென்றிவரி வேங்கையை விரட்டியே சிரிப்பர்.

---

58. வளை-சங்கு. விளை-விளைநிலம், இளைபபுனம.
59. கொட்புற-சூழ.
61. கோடு மலைமுகடு.
63. பரவை-ஆடல். புதுக்குவரி-புதுப்பாட்டு.
64. நுழை-குகை. ஏறு-சிங்கம்.

65. தட்டைகவ ணோடுகுளிர் சான்றதழல் கொண்டு
விட்டகல வேகதிரை மெல்லியல ரோட்ட.
ஒட்டியுற வேபுனம தொய்யென வெருண்ட
தட்டிவழி யேகுவர் தருக்கொடரி மான.

66. மானினை வெருட்டுவர் மயிலினை யழைப்பர்
தேனினை யொழுக்குவர் செழுந்தினை கொறிப்பர்
பூநனை பறிப்பரொரு பூஞ்சினை யசைப்பர்
ஏனினு மினைப்பல வியற்றிய நடப்பர்.

67. கண்ணிய படிக்கினிய கண்டுமே களித்து
பண்ணியல் பொதிக்கிளவி பாங்கினமர் குன்றம்
நண்ணியொர் குளக்கரையில் நண்பர்க ளிருப்ப
அண்ணலுந் தனித்தொரு வணிப்பொழி லடைந்தான்.

### வேறு

68. கண்ணுக் கினிய பூம்பொழிலைக்
கண்டே யின்பங் கொண்டவனும்
பண்ணுக் கினிய குறும்பாட்டுப்
பாடக் கேட்டுப் பரிவெய்தி
வண்ணக் கிளியின் மொழியேயோ
மணிவாய்ப் பூவைக் குரலேயோ
எண்ணற் கினிய செந்தமிழி
லிசையோ குழலி லின்சுவையோ.

---

65. தட்டை-கவண், குளிர், தழல்-இவை கிளிகடி கருவிகள். தட்டை - மூங்கிலை ஒருபகுதி கணுவுக்குப் பக்கமாக நறுக்கிப் பலபிளவாகப் பிளந்து ஓசையுண்டாகத் தட்டுதல். குளிர்-மூங்கில் சிம்பை வளையும்படி மெல்லிதாகச்சீவி ஓசை யுண்டாகச் சுழற்றிவீசுதல். தழல்-பனையோலையை இருதலையும் முடிந்து ஒரு கோலை விற்போல்வளைத்து அதன் இருதலையினும் மாட்டி,கோலில் கயிற்றைக் கட்டி வீசி ஓசையுண்டாக்குதல். வெருண்டு புனத்தினிடம் செல்ல அதட்டுவரென்க.
66. நனை-முகை.
67. கண்ணிய-எண்ணிய. பண் இயல் பொதி கிளவி-இசையிலக்கணம் பொதிந்த சொல்லையுடைய வண்டார் குழலி.
68. பரிவு-அன்பு.

69. குழலோ யாழோ செந்தேனைக்
குடிக்குஞ் சுரும்பி னின்னிசையோ
எழிலார் குன்றக் குறக்கொடியி
னிசைச்செந் தேனோ வெனவுள்ளம்
உழலா நின்றே கண்களிக்க
வுள்ள முவக்கச் செவிகுளிரக்
கழலோ னோரப் பாட்டுடையார்க்
காணச் சென்றா னத்திசையே.

70. செல்லச் செல்ல வின்னிசையுஞ்
சிறுகிச் சிறுகிச் செவிகேட்ப
இல்லைப் போலு முளபோலு
மிதுவென் கனவோ நனவேயோ
சொல்லச் சொல்லத் தவிழிசையைச்
சுவைத்துச் சுவைத்துச் செஞ்செவியும்
புல்லிக் கொள்ள விடபின்றிப்
புறம்விட் டனவோ வெனவயர்த்தான்.

71. ஆடூ உ வொருவன் றனைநோக்கி
யணித்தா வருத லதுநோக்கி
தோடார் குழலு மெழுந்திருந்து
துகிலை நீவி யணிதிருத்தி
ஏடார் பொதிப்பூந் தொடைதிருத்தி
யிருள்சூழ் கொண்ட குழறிருத்திப்
பாடோர் புதர்ப்பூக் கொய்வாள்போற்
பைம்பொற் பாவை யெனநின்றாள்.

72. ஐயப் பட்டே யின்னிசைவந்
தடைந்த திசையே யவன்சென்று
பொய்யிற் பட்ட விடையாரப்
பொலிவிற் பட்ட பொன்பட்டால்
மெய்யப்பட்ட வுடையுடுத்து
நிழலிற் பட்ட நிழல்போற்பூக்
கொய்யப் பட்டுத் தனிநிற்குங்
கொம்பின் பக்கங் குறுகினனால்.

---

70. அயர்த்தான்-ஐயப்பட்டான்.
71. ஆடூஉ-ஆண். தோடு-பூ. ஏடு-இதழ். ஓர்பாடு-ஒருபக்கம்.
72. நிழலில் பட்ட நிழல்-நிழலின் நிழல்.

73. தன்னை யறியா தேயுள்ளந்
தடுமா றிடவே வழிப்பயணப்
பொன்னை யிழந்தா ரேபோலும்
புகலாய் வைத்த பெரியபொருள்
தன்னை யிழந்தா ரேபோலுந்
தவறு செய்தார் தமைப்போலும்
இன்னா தொன்றுந் தோன்றாம
லேமாப் புற்றங் கெதிர்நின்றான்.

74. முன்னும் பின்னும் பார்த்திடுவான்
மூலை முடுக்கை யோர்த்திடுவான்,
தன்னைத் தானே நோக்கிடுவான்,
தளிப்பூங் கொம்பை யசைத்திடுவான்,
மன்னை வாழி என்றிடுவான்,
வாய்க்குள் ளேமுணு முணுத்திடுவான்,
என்னை யிதுபித் தோவென்பான்
இவ்வா றனைந்து முடிவாக.

75 காலை மலரும், மணநாறுங்
காந்தள் மலரும், வண்டூதும்
மாலை மலரும், இளம்பாலை
மலரும், அலைவாய்க் கழிக்கானல்
சோலை மலரும் தமிழ்பாடும்
சுரும்பர் மயங்கத் தொடுத்திட்ட
மாலை மலரை எதிர்நின்ற
வண்டார் குழலைக் கண்டானே.

76. கண்டான் மனமு மிருகண்ணுங்
கருத்து மொருங்கே பறிகொடுத்துத்
தண்டா மரையின் செந்தேனைத்
தமிழ்வாய்ப் பெண்டே னதுவண்ண

---

73. புகல்-அடைக்கலம். ஏமாப்பு-இறுமாப்பு.
74. ஓர்த்தல்-ஆராய்தல். மன்னைவாழி - நிலைபெற்று வாழ்வாயாக.
75. காலைமலர்-தாமரை-மருதம். காந்தள்-குறிஞ்சி. மாலைமலர்-முல்லை. பாலைமலர்-பாலை. கானல்சோலைமலர்-நெய்தல். மலர-போல. ஐந்நில மலராலும் தொடுக்கப்பட்ட மாலைபோல நின்றாள் என்க. இது, காட்சி.

வண்டார் தன்வெறு வாய்சப்பும்
மலிநீர் பழனத் திருநாடன்
கண்டே யவள்கண் தன்கண்ணைக்
காணா நின்று களியுண்டான்.

77. உள்ளப் படையோ டயலானுக்
குணர்வு மடிமைப் படவடிகள்
தள்ளத் தரியாத் தடுமாறித்
தலைமை கொன்றே அயலார்க்குக்
கள்ளப் படையோ டடிமையதாய்க்
கடமை தவறி முதல்கொன்ற
எள்ளப் படுமவ் விரண்டகனை
இன்றே யொத்து நின்றனே.

78. யாரோ, இவள்தான் எவ்வூரோ,
அயலோ, இக்குன் றினளோதான்,
பேரே தோயா ரோவிவளைப்
பெற்றோர், பருவ முற்றனளோ?
ஓரே னேனே யதுவன்றி
ஒப்பொன் பானு முடையாளோ?
காரோ மானுக் கருங்குழலாள்
கருத்து மெதுவோ? அறியேனே.

79. வண்டா ரோல மிடுகின்றார்,
மணிப்பொன் னணியார் மொய்க்கின்றார்,
உண்டே தொய்யில் உவக்கின்றார்,
ஒண்கழு நீரார் ஒக்கின்றார்,
கண்டே கண்ணார் நிலநோக்கிக்
கயலிற் பிறழ்ந்தே களிக்கின்றார்,
தண்டா நின்றஞ் சும்மிவளோர்
தமிழ்ப்பெண் ணரசி யேயாவாள்.

---

77. முதல்-அண்ணன். இன்றே-இப்போதே. முன்னும் பின்னும் இல்லை என்பதாம்.

78. ஓரேன்- தெரியேன். ஒப்புமை பத்தையும் தொல்காப்பியப் பொருளதிகார மெய்ப்பாட்டியல் 25-ம் சூத்திரத்தில் காண்க. ஒப்புமை ஒன்பான்-உருவு ஒழிந்த ஒன்பது. மாறு-ஒப்பாகா. இது, ஐயம். களவியல்-3. இப்பாட்டின் கருத்து-தொல், களவு. 4 வது சூத்திரத்தின் குழந்தை உரையின் படி அமைந்தது.

79. தண்டா நின்று-நீங்காது நின்று. இது, தெளிதல், களவு- 4.

80. மாலை தொடரும், அளியோட்டும்,
மலர்க்கை கொண்டு முகந்துடைக்கும்,
காலை நிலத்தே நனிதேய்க்கும்,
கண்ணை யுறுத்துங், கையுதறும்,
மேலை யாடை தனைத்திருத்தும்,
விம்முங் கனைக்கும் இவ்வாறு
பாலை நிகர்க்கு மொழியாட்குப்
பறிப்பி னுரைப்பான் குறிப்புரையே.

81. தண்ணஞ் சுனையின் நீராடுந்
தகையள் போல நடுக்குற்றே
உண்ணுங் கரும்பி னிருகைகள்
உயர்த்தி முயங்குங் குறிகாட்டும்,
வண்ணந் துவரென் றுவமிக்கும்
வாயோ திமங்கண் டஞ்சுநடைப்
பெண்ணு நம்மைப் பிரிகில்லாப்
பெய்நீர் போலு முணர்வினளே.

82. என்னை நோக்கா தியானோக்க
இருகண் கொண்டு நிலனோக்கும்,
பொன்னி னன்ன நுதல்வியர்க்கும்,
புறந்தோன் றாதுள் ளேசிரிக்கும்,
தன்னின் உள்ளச் சிதைவடக்கும்,
தகைய மடமைக் குணமுடையாள்;
இன்னு மென்ன இதிலையம்!
இன்றே வாழ்வை வென்றேனே.

---

80. பறிப்பு-வெளிப்பாடு. இது, தலைவன் குறிப்புரை களவு-5.

81. இது, தலைவன் கூற்று. முயங்குதல்-கூடுதல். ஓதிமம் - அன்னம். பெய்நீரபோல உணர்வு - புதுக் குடத்திலூற்றிய நீர் கசிதல்போல உளக் குறிப்பை வெளிக்காட்டுதல். இது, தலைவி குறிப்புரை. களவு-27.

82. இது, கூடல் விருப்பம். களவு-6. மடமை-சொன்னதைக் கொண்டு அதை வெளிக்குக் காட்டாத பெண்மைக் குணம். 82, 83, 85, 87 பாட்டுக்களில் முறையே மெய்ப்பாட்டியல் 13, 14, 15, 16 சூத்திரங்களில் கூறப்படும் 15 மெய்ப்பாடுகளும் வருதல் காண்க.

83. போதை நாடி இங்கின்று போதா யெனவே
வண்டோச்சிக்
கோதை தோள்தொட் டேநுதலுங் குலவ; முடிதா
னேயவிழக்,
காதி னின்று மணித்தோடு கழல, வளையோ
டணைதிருத்திப்,
பேதை பலகா லுடையுடுத்துப் பெட்டே பயிர்ப்பில்
பட்டாளே.

84. பொன்னே மணியே பூங்கொடியே
புள்ளார் குழலே நின்னையர்
தன்னே ரம்பாற் கொல்யானை
தன்னை யெய்து போக்குவரால்
மின்னே மயிலே மடமானே
வேங்கைப் புலியே யோநானும்
இன்னே நின்று போகாம
வீரம் பால்நீ யெய்தாயே.

85. ஒடுக்க நின்றே பிறைநுதலு
முளரோ தியுந்தொட் டேநீவ;
உடுக்க வுடுக்க வுடையவிழ
வுடுத்து வுடுத்துக் கைசலிக்கும்,
தொடுக்க நின்ற வரைஞானுந்
தோளா டையும்பல் கால்திருத்தும்,
எடுக்க வெடுக்க வியையாமே
யேமுற் றில்லா வலிகாட்டும்.

86. பூங்கைப் போதால் முகமதியம்
பூத்த குவளை மலர்மூடும்
பாங்கிற் பூத்த பூங்கொம்பிற்
பதுங்கி மறையு மதுகண்டு
தூங்க லின்றி யேமேவார்
துடுக்குத் துடுக்கென் றேகிடக்க
ஓங்கு மாண்மைக் கதிர்வேலா
னென்றுந் தோன்றா திரங்குவனால்.

---

83. போது-பூ. போதாய்-போ. குலவ-தடவ. பெட்டு-விரும்பி. பயிர்ப்பு-புதிதாக ஒன்றைக் கண்டவிடத்து மனங்கொள்ளாமை. (களவு-11: 1, 2.)
84. இன்னே-இங்கே. ஏரம்பு-கண்கள. (கள-11: 5)
85. உளர்தல் - அசைதல். ஓதி - கூந்தல். ஏமுற்று-செருக்குற்று.
86. இது, 'இடையூறு இளைத்தல், நீடுநினைந்திரங்கல்'

87. காரைப் போர்த்த முகமதியங்
கவிழ்ந்து நாணி யிருகையுஞ்
சேரக் கட்டித் தழுவுதல்போற்
செய்து மயிலுஞ் செம்மாக்க
நீரைத் தேக்கி நிலந்திருத்தி
நெல்லுண் டாக்குந் தமிழ்நாடன்
'பீரைப் போர்த்த கொடிநின்னைப்
பிரியேன் பிரியே' னெனவுரைத்தான்.

88. நின்னைத் தந்த விக்குன்றும்
நீண்ட பொழிலு மிக்காலும்
உன்னைப் போல நணுகியெனக்
குளாநா ளளவு முறவாக
பின்னைத் தந்த திருமேனி
வேலைத் தந்த மையுண்கண்
பொன்னைத் தந்த பூந்தேமற்
பூப்பே யுந்தன் காப்பென்றான்.

89. போது போதாய்ப் போயூதிப்
பூந்தா துண்ணும் பொறிவண்டே
மாதர் கூந்தல் போலுள்ள
மணக்கும் பூநீ கண்டாயோ
கோதை சுமந்தே யுடலிளைத்தாள்
குழலை நீத்திவ் விடம்விட்டுப்
போதல் துணிந்த வென்னோடு
போதா யோநீ புகல்வாயே.

90. என்னு முன்னே யுடனடுங்க வினையே னுன்னைப் பிரிந்திருக்க
என்று வாபோ வின்றேபோ லிங்கு நாளை வாரேனேல்
தன்னோர் துயர மயலாரைச் சார்ந்து பின்னுந் தன்னோருக்
கின்னா செய்யுங் கொடியோரி னின்னா விடரை நண்ணேனோ?

---

எனனும் (கள-11:4,5) துறைகள்.

87. செம்மாத்தல்-மிகக்களித்தல். பீர்-பசலைநிறம்.
88. நணுகி-நெருங்கி. தேமல்-சுணங்கு.
89. கோதை-மாலை. (கள-10)
90. தலைவியுடல் நடுங்கினாள். இன்னா-துன்பம்.
இன்னா இடர்-கடுந்துன்பம். (கள-10)

91. என்று தேற்றித் தமிழ்நாட னினியா டன்னைத் தன்னாயம்
சென்று கூடச் செலவிட்டுச் செல்லு முள்ளந் தனையுரனால்
ஒன்று கூட்டித் தன்கண்ணை யொல்லுந் துணையா வுடன்கூட்டிச்
சென்று கூடச் செலவிட்டுச் சென்றாள் காணா னின்றானே.

## வேறு

92. அன்னவ ளாயஞ்சேர்ந் தாடல் கண்டுமே
தன்னிரு கண்களுந் தமிய ராய்வரப்
பொன்னியல் பாவையைப் புலம்ப விட்டுநீர்
இன்னண மெதற்குவந் தீரென் றேசினான்.

93. ஏசிய பின்னவ னிரக்கங் காட்டியே
பாசிழை நிலைமையைப் பார்த்து வந்துபின்
ஊசலா டியவுள மொடுக்கிக் கொண்டுதன்
நேசர்கள் தங்கிய நிலையை யெய்தினான்.

94. அற்றைநாட் போலவே யலங்கல் மார்பனும்
மற்றைநா ளும்பசு மயிலை முற்றைநாள்
பெற்றவப் பொழிலிடைப் பெற்று மற்றுமப்
பொற்றொடி யோடுளப் புணர்ச்சி யுற்றனன்.

95. உண்ணிய பெருமையோ டுரன்கொள் நம்பியும்
அண்ணிய மடம்பயிர்ப் பச்சம் நாணமென்
றெண்ணிய பெருங்குணத் தியன்ற நங்கையும்
கண்ணிய படியுளங் கலந்தொன் றாயினர்.

---

91. ஆயம்-தோழியர் கூட்டம். உரன்-கடைப்பிடி, அடக்கம், கலங்காது துணிதல் முதலியவலி. கண்ணைக் கூட்டிச் செல்லும்படி அவட்குத் துணையாக விட்டானென்க. ஒல்லும்-பொருந்திய.

92. தமி-தனி. புலம்ப-தனியாக.

94. உளப்புணர்ச்சி - மெய்யுற்றுப் புணராது உள்ளத்தே காதலன்பு கொள்ளுதல்.

95. இது, இடந்தலைப்பாடு.

96. கண்மணி போலவன் கருதப் பெற்றவப்
பெண்மணி பாலுளம் பிரிந்த தன்மையால்
விண்மணி போலொளி விளங்கு மேனிமா
சுண்மணி போலொளி யுயங்கி னானரோ.

97. அன்னவன் நிலைமையை யறிந்த தோழர்கள்
ஒன்னலர்க் குடைகிலா வுரனு முன்னொடு
மன்னிய பெருமையு மடங்கச் சீரிழந்
திந்நிலை யுற்றமை யென்கொ லென்றனர்?

98. உற்றவா றுரைக்கவவ் வுரிமை யாளரும்
மற்றவள் நிலையினை யறிந்து மன்னனைச்
சொற்றது தவறெனத் துணைமை செய்திடப்
பெற்றவள் காதலைப் பெருக்கி வந்தனன்.

99. மாதமிழ் விளங்குற வருமி ராவணம்
தாதவிழ் பூம்பொழிற் றகழி தன்னிலங்
கோதையின் காட்சியாங் குளிர்ந்த நெய்யினால்
காதலங் கொழுந்துவிட் டெழுந்து காழ்ப்புறும்.

## 4- கைகோட் படலம்

1. சந்தடர் பொழிலிடைத் தமிழர் வாழ்வுற
வந்தந மன்னனும் வாட்க ணங்கையும்
முந்திய காட்சியின் முறைமை கண்டனம்;
எந்தைய நிறைவியி னியல்பு காணுவாம்.

2. கடிகமழ் சோலையிற் கண்ட காதலன்
வடிவவள் மனத்தொரு வடிவு கொண்டதால்
துடியிடை காதலந் துணைவன் றன்னையோர்
நொடிபிரி கினும்பொறு நுணிய ளாயினள்.

---

96. விண்மணி - சூரியன். மாசு உண்மணி. மாசு-அழுக்கு. உயங்குதல்-வாடுதல்.
98. இவையிரண்டும் 'பாங்கற் கூட்டம்.' 'பெருக்கி வந்தனன்' என்பது தோழியிற் கூட்டத்தை.
99. இராவணம-விளக்கு. தாது-பூந்துகள். தகழி-விளக்கின் அகல். காழ்ப்புறல்-உறுதியாக நின்றெரிதல்.

3. பிரிவெனும் வெம்மையாற் பிதிர்ந்து வாடியும்,
வரவெனுந் தண்மையால் வளங்கொண் டோங்கியும்
விரிமலர்க் குழல்கனி விரும்புஞ் செய்யவாய்ப்
பரிபுர வடியிளம் பயிரை யொத்தனள்.

4. கொடியொரு நாளெனும், கொடியிந் நாளெனும்,
விடிபக லேயெனும், விடியி ராவெனும்,
மடிதுயி லேயெனும், மடிக ணேயெனும்
கொடியிடை நடைமுறை கூறுந் தன்மையோ?

## வேறு

5. பிரிந்தார்க்கோ ரூழியாப் பியுயார்க் கொருநொடியாத்
தெரிந்தோ தெரியாதோ செய்யுநீட் பேரிரவே!
பரிந்தார்க் குதவாது பரியார்க் கடிவருடி
நெரிந்தார் குடிபோல நீயு நெரியாயோ.

6. அற்றார்க்கோ ரூழியா வுற்றார்க் கொருநொடியாக்
கற்றோகல் லாதோ கழியுநீட் பேரிரவே!
உற்றார்க் குதவா துண்ணு தொளிகொள்ளா
நிற்றார் பொருள்போல நீயுந் தொலையாயோ.

7. செறிந்தார்க் கிமையாச் செறியார்க்கோ ரூழியா
அறிந்தோ வறியாதோ வாகுநீட் பேரிரவே!
முறிந்தார்க் குதவாது முறியா ரொடுகூடும்
நிறந்தார்ப் படைபோல நீயு மழியாயோ.

8. ஐதோ பெரிதோ வறியாமல் நீளிரவே!
வைதேனென் றென்றோடு வஞ்சினநீ கொள்ளாமே
கைதோய் சிறுகுழவி போலநீ கண்ணோட்டம்
செய்தே சிறுபோதிற் சென்றென்னைக் காப்பாயே.

---

4. இவை புணர்விலும் பிரிவிலும் நிகழ்ந்தன. புணர்வு-கொடி இந்நாள், விடிபகல், மடிதுயில். மடி-சோம்பல். மற்றவை-பிரிவு. கண்ணேமடி-கண்ணே தூங்கு.

5. ஊழி-நெடுங்காலம, வர்ழ்நாள். பரிந்தார்-அன்பர். நெரிதல்-கெடுதல்.

7. நிறம-இயல்பு. தார்-ஒருவகைப் படைவகுப்பு.

8. ஐது-சிறிது. கண்ணோட்டம்-இரக்கம்.

9. பழக்க முடையார்தம் பங்காளிப் பிள்ளைகளாய்க்
கிழக்கு வெளுக்காமுன் கீச்சுக்கீச் சென்றுகத்தி
உழக்குநீள் வாலாட்டு மொண்காரிப் புள்ளினங்காள்!
வழக்க மொழிந்தின்று வாராத தென்கொல்லோ!

10. மக்களுக்குஞ் செய்தொழிற்கும் வளர்நட் பதுவாகத்
தொக்கிருக்கும் பேரிருள்போய்த் தொலையப் பொழுதுவர
ஒக்கிருக்கு நீடிரவோ டோடச் சிறைபுடைத்துக்
கொக்கரக்கோ வென்றெழுந்து கோழிகாள் கூவீரோ

11. வண்டூதும் பூங்குமுத மலர்காள்நீர் கூம்பீரோ
கண்டா ருளத்தோடு கண்கவரு மாதர்முகத்
தண்டா மரையேநீர் தாழ்செங் கழுநீரே
வண்டார் புடைசூழ வந்து மலரீரோ.

12. மதியே புதியோரை மதிக்கு மதியில்லா
மதியே யொருநீ மதியோவன் றன்றுசிறு
மதியே செழுந்தமிழ வாயசொல்லு மென்மொழியை
மதியே யிலையெல் வரப்படையோ டோடுவையே.

13. நானிப் படிவருந்த நல்காது நாட்பூக்கும்
வானிற் பொலியும் மதிக்குத் துணையான
மீனப் படையீர்! விலகீ ரிலையேல்செங்
கோனப் படிவரினுங் கொட்ட மொழிந்திடுமே.

14. வண்டார் மரைமலர மக்கள் மனங்குளிரக்
கண்டார் கலிதாழக் கழனி களிகூர
ஒண்டா ரிருட்படையோ டோட வெனைப்போன்றூர்
கொண்டாடச் செங்கதிரே குணவானிற் றோன்றாயோ.

---

9. காரிப்புள்-கரிக்குருவி.

12. மதியே புதியோரை-மதித்தற்குரிய பெருமை பொருந்திய புதியோர்-காதலர். நீ ஒருமதியோ-நீமுழுமதியன்று எல-ஞாயிறு படை-விண்மீனினம்.

13. செங்கோன் - செம்மையான தலைவன், சூரியன். வரினும். அப்படி-அங்கே. கொட்டம்- குறும்பு.

14. கலி-வருத்தம் ஒண்டார்-பகைவர். குணவானில்-கீழ்வானத்தில், குணமுள்ளவன் போல.

15. தாவேந்தி யேமுன் றமிழுண்ட குற்றத்தால்
மூவேந்தர் போற்றும் முகிழா விளையதமிழ்ப்
பாவேந்தர் நோகப் பழிகொள்ளும் வான்குடிபோல்
ஓவென் றலறி யொழியாயே பாழ்ங்கடலே.

16. அலையு மொலியவியா, அம்மதியும் போய்த்தொலையா,
கொலைய விரவுங் குடியோடா வாயினுமென்
னிலையை யறியாது நீங்களுந்தான் றுஞ்சீரேல்
உலையுமெனக் கிங்குதுணை யுண்டோ மழைக்கண்காள்!

17. பொன்னடரிற் செய்பூப் பொலிபுதிய வட்டிலிலே
இன்னடிசிற் பாலோ டினிதூட் டுவனின்னே
கன்னங் கறுத்தபெருங் காக்கைச் சிறுபிள்ளாய்!
மன்னர்க்கு மன்னன் வரவே கரையாயோ.

18. செந்தமிழ்ப் பண்பாடுஞ் செவ்வாய்ப் பசுங்கிள்ளாய்!
வந்தென் னலனுண்டு வாரா தலர்செய்யும்
சந்தங்கொள் வேங்கைத் தமிழ்க்குன்ற வாணனுக்கின்
றெந்தன் நிலைமை யினிதெடுத்துச் சொல்லாயோ.

19. தாரார் குறிஞ்சிமலர்த் தண்குன்ற வாணனைநீ
பாராத கண்கொண்டு பார்த்துப் பசுந்தோகை
நேரா விரித்தாடி நெஞ்சை யுளப்படுத்தி
வாரா யுடனழைத்து வண்ணப் பசுமயிலே.

20. கொலைவாணர் போலென் குடிக்குப் பழியாக்கி
உலவா வுடம்புடையே னுள்ளங் கொடுசென்ற
கலைவாணர்க் கென்றன் கருத்தைத் தெளிவாக
மலைவாழு மாமுகில்காள்! வழிக்கண்டாற் கூறீரோ.

21 கல்லார்ந் தமையாது கைநீங்கிப் பூம்பழன
நெல்லார்ந் துயர்செல்லும் நீண்டசிறைப் பெண்புறவே!
வில்லார்ந் தெழுவுறழ்கை விடலைக் கடைபுதவத்
தில்லார்ந் தொருதமியே யிருக்குநிலை யோதாயோ.

---

15. முகிழா-குவியாத, குன்றாத.
17. அடர்-தகடு.
18. அலர்-ஊரவர்பேசும் பழிப்புரை.
19. பாராதகண்-தோகைக்கண்.
20. உலவா-வாடிய. வரைதற்குறிப்பு.
21. எழு-தூண். புதவு-கதவு. இது, பிரிவுக்குறிப்பு.

22. துள்ளிக் குதித்துத் துவண்டு விளையாடி
வெள்ளத் தடங்கண்ணார் விழிபோன் மருண்மானே!
உள்ளத்தைக் கொண்டேயா னேவா திருந்தேங்கப்
பொள்ளெனச் சென்றார்க்கென் புதுநிலையைக் கூறாயோ.

23. வகிர்ந்த பனங்கிழங்கின் வாயசெங் காளாய்!
புகுந்தென் னலனுண்ட புனன்மருத வூரனுக்குத்
தகுந்த திதுவேளை தான்வாரா தேயொழியின்
மிகுந்த வளமுன்றில் மிதியாதீ ரென்றுரையாய்.

24. வெண்டா மரைவாழும் வெள்ளைச் சிறையனமே!
உண்டே யெனதுநல மொளித்தகடற் சேர்ப்பனுக்கு
வண்டார் குழலொருத்தி மலர்க்கண்முத் தாடியதைக்
கண்டே னெனவுள்ளங் கனியச் சொலுவாயே.

25. என்னைத் தனியேவிட் டென்னலமுண் டேசென்றான்
தன்னைத் தொடர்ந்தகன்ற தாழா மடநெஞ்சே!
உன்னை யவனுக் குறவாக்கி யேவைத்த
என்னைப் பிரிந்தவுன திழிதகைமை யென்கொல்லோ!

26. அன்னவனைக் காட்டென் றம்மா வெனைக்கொத்தித்
தின்னு மடநெஞ்சே! செழுங்குன்ற வாணனிடம்
என்னை விடுத்தே யெழீஇ இச்செல் குவையாயின்
உன்னோ டிருகண்ணு முடன்கொண்டு சென்றீவாய்.

## வேறு

27. பிரியே னென்றான் வாய்மொழி பொய்யிற் பிரியாதே,
உரியா ரெல்லா மூரலர் தூற்றற் குரியாரே,
பெரியா ரெல்லாங் காவல் படுப்பிற் பெரியாரே,
தெரியா வந்தான் சொல்லிய தொன்றுந் தெரியேனே.

---

22. இது, இருத்தற் குறிப்பு.
23. இது ஊடற் குறிப்பு.
24. இது, இரங்கற்குறிப்பு.
25. கண்காட்டென்று கொத்தித் தின்கிறது கொண்டு செல் என்பதாம்.

28. மழையே லாதான் கைபுனை வண்ண மலர்கொண்ட
தழையேய் யென்றாள் தோழியு நானுந் தட்டில்லேன்,
உழையா நின்றா ருள்ள முவக்கு முறையீதோ?
கழையே தின்றார் வேம்பி லினிப்புக் காண்பாரோ!

29. விருந்தே யென்று லன்னையு மேலா வேய்பெண்பாள்,
அருந்தே னென்றால் தேனிது கொஞ்ச மருந்தென்பாள்,
மருந்தே தென்றால் தோழியு மேனோ வாய்பேசாள்,
பொருந்தா விந்த வாழ்வை யளித்தான் பொல்லாதான்.

30. ஊரே தென்றா ளொள்ளிலை வேலா னூர்சொல்லப்,
பேரே தென்றான் பேரழ கோனும் பேர்சொல்ல,
ஓரா தென்னெல் லாமோ கேட்டென் னுளமோடு
பேரா நின்றான் வாரா னின்னும் பிழையென்னே.

31. அன்னை யுரைத்த மாதவி நீழ லணுகாமுன்
என்னை யடுத்தே பிரியே னென்ற வெமதன்னை
என்னை யுரைத்த மொழியுண ராம விகலார்போல்
அன்னை யயிர்க்க நின்றன னீதோ ரறமேயோ.

32. சிறையே செய்தார் நெஞ்சினை விட்டுச் சிறியேனை,
நிறையே யென்னைத் தனியழ விட்டு நீங்கிற்றே,
குறியே செய்து புள்ளின மென்னைக் குறைகாணும்,
இறையே யின்னு மெத்தனை நாளோ விதுதானே.

---

28. உழைதல்-வருந்துதல். உறை-மருந்து. கழை-கரும்பு.

31. அன்னை-தோழி. என்னை-தலைவன்.
என்னை-என்ன காரணம். அன்னை-செவிலி.
அயிர்த்தல்-ஐயுறுதல்.

32. சிறை-அடக்கம். புள்ளினங் குறைகாணலாவது-பறவைகள் தாமாகவே எழுந்த ஒலி கேட்டுத் தலைவி வந்நாளென வந்துபார்த்துத் தலைவியைக் காணாது வெறுங் களங்கண்டு தலைவன் வருந்திச் செல்வான். பின்னர்த் தலைவி சென்று தலைவன் வந்துபோன குறிகண்டு வருந்துவள். இது, அல்ல குறிப்படுதல். (கள-42) இது, இருவர்க்கும் நிகழும்.

33. நல்லது சொன்னாற் சீறி விழுவாள், நாணுங்கை
சொல்லவி தென்றோ நாண மடுக்கும், தொடைதந்த
நல்லவன் வந்தால் என்மன மேனோ நகைகொள்ளும்,
தொல்லையை நீந்துந் தோணி யெனக்குத் தோன்றாதே.

34. என்னே நாற்றம் மேனியி லே,கண் ணிவ்வாட்டம்,
பொன்னே யேன்வினை யாடாய், பாலும் புசியாதேன்,
இன்னே தனியா யிங்கடை, யேன்றா யொடுதுஞ்சாய்
என்னே தோழியர் காண வுரைப்பா ளோநாண.

35. அன்னயவ னென்றாற் பழியதி லில்லை, யன்றேபோல்
இனியவன் வந்தா லென்மன மேனோ விடருண்ணும்,
தனியிட மேனோ வென்னை விடாது தடைசெய்யும்,
எனினுமே யுருவங் காணி லுவக்கு மியல்பென்னே.

36. வரைந்தே கென்றால் தோழி யிடத்தும் வாய்பேசான்,
பொருந்தா வணியும் பூவுஞ் சாந்தும் புலமூண்ணும்,
வருந்தா வுள்ளம், செந்தமி ழாலென் வாய்பேசா,
தெரிந்தே வந்து மாவது செய்யார் தெரியாரே.

37. கொழுகொம் பில்லாக் கொடியெவ் வாறோ கொடியாருக்
கெழுகொம் பாகிப் பூத்து மணந்தே யிளங்காயாய்
கழகம் பெறவே தீங்கனி தந்து களிப்பிக்கும்
கொழுநன் படராப் பெண்கொடி படராக்
கொடியன்றோ?

38. தாயோ துஞ்சாள், நோயறி யாவத் தாய்துஞ்சின்
நாயோ துஞ்சா, நிலவொடு பொல்லா நாய்துஞ்சின்
வாயோ துஞ்சாக் காவலர் துஞ்சின் மலர்துஞ்சும்,
போயே தொலையென் றுளது முண்மைப் பொருளன்றே.

---

33. (மெய்-16)
34. (களவு-23) உரைப்பவள் உயிர்த்தோழி.
35. (மெய்-17)
36. (மெய்-18)
37. கொடியார்-கொழுகொம்பு நாட்டார். கழகம்-கூட்டம்.
38. மலர்-கண். 'போயேதொலை'யென்றது-உடன் போக்கு. அன்று மறுத்தவள் இன்று இற் செறிப்புற்றுக் கூறினள்.

39. முன்னிகழ் வென்னெல் லாமோ வின்ன முறையோதிப்
பொன்னெம் பாவை யின்னெழில் வேட்கும் பூங்கொம்பும்
அன்னம் பிரியப் பேடையை யந்தோ வருளில்லார்
தன்னந் தனியே சிறையினி லிட்ட தகையாளுள்.

40. உண்ணுள் பாலு மூட்டாள் கிளியு முளமாரப்
பண்ணுள் யாழும் பாடா ளிசையும் பழகாயம்
நண்ணுள் குரவை நாடாள் பாவை நற்பூவை
எண்ணு தெண்ணிப் புண்ணு வாள்பக லிரவெல்லாம்.

41. பொன்னும் மணியும் புனையாள், பூவும் பொன்னுடையும்
என்னிவ் வென்றே யெறிவா, ளேவைக் குறியாளே,
முன்னங் காணும் பொருள்களை யெல்லா முத்தாடித்
தன்னந் தனியே யோவம் போலத் தனிநிற்பாள்.

42. தோழியர் கூடிப் புனமயில் போலச் சூழ்தந்து
வாழியர் காணு முகமதி யேபிறை மதியென்ன
ஏழிசை பாடுஞ் செந்துவர் வாயா லெம்பீரே!
வாழியர் நீரே யம்மதி போல மகிழ்ந்தென்னும்.

43. தூதிடை செல்லாப் பேதை புனக்கோ தூவென்று
மாதுளை முத்தை வாரி யிறைந்து மணிமுத்தக்
கோதை தெறித்துப் பைங்கிளி போங்கக் கூடிட்டு
ஊதை யலைப்பப் பேதுறு கூந்த லொடுசெல்வாள்.

44. வண்ட லிழைத்துத் தோழியர் கூடி வாவென்ன
வண்ட லிழைத்துக் கொண்டொரு தோகை மயிலென்ன
வண்ட லிழைத்துக் கதிர்முக் கினும் மணல்முன்றில்
கண்ட லிழற்கீ ழாழி யிழைத்துக் கைகோவாள்.

---

39. வேட்கும்-விரும்பும்.
40. பழகு ஆயம்-பழகிய தோழியர் கூட்டம்.
41. ஏவு-ஏவுதல்; தோழியரை ஏவுதலும் ஏவாள்.
42. நீரே அம்மதி போல மகிழ்ந்து வாழியர் எனனும்.
43. தூ-இகழ்ச்சி, ஊதை-காற்று. பேதுறுதல்- அலைதல்.
44. வண்டல்-விளையாட்டுச் சிற்றில். வண்டல்-சந்தனக் குழம்பு. இழைத்தல் - நெகிழ்த்தல் - அழித்தல். வண்டு-சங்கு. அல்-துன்பம். வண்டு அல் இழைத்து-சங்கு வருந்தி. கண்டல்-தாழை. ஆழியிழைத்தல்-கண்ணை மூடிக்கொண்டு, பெருவிரலை

45. மெய்விறல் காட்டி யாடியே முடிவில் மெலிவுற்றுப்
பொய்விறல் காட்டி யாடிடும் விறலி போலம்மா!
செய்விர லாழி சிதைந்து எழுந்த திருவன்னாள்
கைவிர லாழி யீங்கலை கொள்ளக் காண்பாளே.

46. வாயுங் கண்டுரை யாடா தோவுற, வார்க்கின்பம்
பாயுங் கண்டு மருந்தாள், மேலி பையென,மை
தோயுங் கண்டுஞ் சாதே, மனமுந் துயர்கொண்டே,
ஆயுங் கண்டுகொ ளாத வுருவ மதுகொண்டாள்.

47. வையணை வேலும் பிறபடை யொடுபன் மலரொவ்வா
மையணை யிருகட் கலடமலர் முத்த மணிசிந்த
ஐயணை கொள்ளா தேநிலை யார வனமன்னாள்
கையணை யாக வேயொரு நாளுங் கழிவிப்பாள்.

48. இன்று மென்னெல் லாமோ பித்திய ரேபோலத்
தன்னந் தலியா விட்டவள் போலத் தான்செய்யத்
தன்னரிய வொத்த தோழிய ரஞ்சித் தாய்க்கோத
அன்னையு நொந்து தோழியர் தம்மோ டாய்வுற்றாள்.

49. என்னே யிவளுக் கெய்திய நோய்தா னிதுவாக
என்னோ தெரியோ மென்செய் கோமென் றேநொந்து
தன்னேர் காதற் றோழியி னோடு தாங்கூறிப்
பொன்னே டவளை விட்டெல் லோரும் புறம்போந்தார்.

---

ஊன்றிச் சிறுவிரலால் மணலில் வட்டமிடுதல். தொடங்கிய கோட்டில் வந்து பொருந்தினால் காதலன் உடனே வருவான் என்பது. 'கூடலிழைத்தல்' எனவும் பெயர்பெறும். இது, காக்கையைக் கரையச் சொல்வதுபோல, பிரிவாற்றாமையால் செய்வது.

45. விறல் - மெய்ப்பாடு. விறலி - ஆடினி. விரலாழி- மோதிரம். மோதிரத்தின் மீது ஈ உட்கார்ந்தால் காதலன் விரைவில் வருவானெனப் பார்ப்பாள்.

46. கண்டு-கற்கண்டு. ஒவுற-ஒழிய. பை-பசுமை-பசலை. ஆய்-செவிலி.

47. வை-கூர்மை. ஐயணை-ஐந்துவகையான படுக்கை. அவை-சிறுபூளை, செம்பஞ்சு, வெண்பஞ்சு, சேணம், அன்னத்தூவி. சேணம்-மயிர்கழியாத தோல்.

## வேறு

50. காதலந் தோழி யுள்ளக் கருத்தினை மறுக்கி லாது
மாதியான் மனத்துட் கொள்ள மடத்தகை மயிலே
யின்னென்
றோதுக வதனை யாவ துஞற்றுகே னென்னப் பொன்னும்
ஈதவர் பிரிவே யென்ன வியலறத் தொடுநின் றனே.

51. அன்னவள் செவிலிக் கோத வவளனைக் கோத நற்றாய்
தன்னருங் கொழுநற் கோதத் தமிழிரா வணனே யானால்
என்னயாம் பேறு பெற்றே மெண்ணமுற் றுறுக வேமா
மன்னனை விருந்தேற் றுண்மை வரன்முறை யறிது
மென்றான்.

52. உற்றதைத் தோழி மார்சென்
றோதலு மாயோன் செல்வி
வற்றிய மேனி விம்ம, மதிமுகம் நிலவு காலப்,
பொற்றொடி யிறையைத் தின்னப்
பொம்மலுற் றவனை யெய்தப்
பெற்றவள் போல வின்பம்
பெற்றவள் நாளும் பெற்றாள்.

53. மற்றவள் செயலைக் கேட்ட
மன்னனு மினியென் னையம்
பெற்றவர் நாமே பெண்ணைப்
பெற்றபே றுறுதி பெற்றேம்;
கற்றவர் களிக்கு மேன்மைக்
கலைவலோ னனந் தங்
கொற்றவன் கருத்தெ தன் றன்று
குறித்தறிந் திடுவோ மென்றான்.

54. அண்ணலு மமைச்சர்க் கோத
வவருநல் லதுவே யென்னப்
பண்ணிடைப் படர்ந்து பாணி
பற்றியே யாழிற் பாய்ந்து

---

50. உஞற்றுதல்-செய்தல். அறத்தொடுநிற்றல்-உள்ளதை உரைத்தல்.

51. அனை-நற்றாய். வரன்முறை - நடந்தவாறு. இது, மகன் கருத்தறியக் கூறினான்.

52. இறை-முன்கை. பொம்மல்-பெருத்தல்.

54. பாணி-தாளம். பெட்பு-விருப்பம், இங்கே உடம்பாடு.

தண்ணுமை தழுவிச் செல்லுந்
தமிழிசை வலோர்க்கு நந்தம்
பெண்ணியல் போதி யன்னுன்
பெட்பினைப் பெற்று வாரும்.

55. என்றுமே யமைச்சர் தம்மை யேவவன் ஞரு மந்தக்
குன்றுபின் ஞக வேகிக் குலமகன் குன்ற ராகித்
தன்றமர் வருக வென்னத் தமிழ்க்கொடி வரவேற்கப்போய்
மன்றலந் தாரி ஞனைக் கண்டுயே வணங்கி ஞர்கள்.

56. மன்னவர் மன்னன் கண்டு வருகென வுடனி ருத்தி
அன்னவர் வந்த தென்னென் றவாவுடன் கேட்க வன்ஞர்
மன்னவன் கருத்தைச் சொல்ல மற்றவன் வருந்தித் தேடும்
பொன்னது தானே வந்து பொருந்திஞற் போலின் புற்ருன்.

57. மதிவலி யமைச்சர் காள் நும் மன்னவன் கருத்து முற்றும்
புதிதல யானு முங்கள் பூவையுங் கண்டு காதல்
முதிரின மதனை மன்னன் முடிவுறச் செய்வ தன்ஞன்
எதிரிய கடனே யாகு மெனக்கும துடன்பா டென்ருன்.

58. அவ்வுரை செவிபு காமுன் னமைச்சர்க ளரசை வாழ்த்திச்
செவ்விய வறிவி ஞேர்க்கே செய்வதீ தென்று காண
ஓவ்வுமஃ தன்றி நேர்மைக் குடன்படு வார்க ளன்றி
அவ்விய நெஞ்சத் தார்க்கீ தடுக்குமோ வதுவு மன்றி.

59. வலியவந் தலைனென் றெண்ணி மறுப்பரின் றேலீ தென்ன
எலியொரு புலியைச் சொந்த மேற்கவெண் ணுதலே போல
இலையவ னமக்கொப் பென்றே யிகலுவ ரிகலார் தங்கள்
வலிதொலைத் துயர்த்த வேலோய்! மதியன்றே பெருமைத் தோழன்.

57. எதிரிய-எறற.
58. ஓவ்வும-பொருந்தும். அவ்வியம்-பொருமை.

60. தண்டமி முகத்தை முற்றுந் தனிக்குடை நிழலிற் காவல்
கொண்டநின் பெருமைக் கேற்ற குணமுமொத் திருத்தல் யாருக்
குண்டுநின் றலைமைக் கேற்ற வொப்பிலா வெங்கள் மன்னன்
பெண்டினைக் காதல் கொண்ட பெருமையே பெருமை யென்றார்.

61. பெருமையீ தொன்று மில்லைப்
பிரிவுவேற் றுமைய தின்றி
ஒருமையாய் நன்னீர் போல
வுயர்ந்தசெந் தமிழின் காதல்
பெருமையுஞ் சிறுமை யென்னும்
பிரிவிலா தாண்பெண் ணுள்ளத்
தொருமையே, தமிழ ரெல்லா
மொருகுலக் காய்க ளன்றோ ?

62. ஒருவனு மொருத்தி யுங்கண் டுருவொடு பிறவு மொப்பின்
இருவரி னுள்ளத் தேநின் றெழுதரு முண்மைக் காதல்
பருகிய கண்க ளூடு பாய்ந்துளந் தம்மை யாத்தே
இருமையை யொருமை யாக்கும் யாங்களு மவ்வா றேனும்.

63. ஆதலி னெனக்கு முன்ன ரமைச்சரே யுங்கள் மன்னன்
காதலின் சிறப்பி னோடு கடமையு மறிந்து மேலோர்
ஓதிய படியே யென்பா லுங்களை விடுத்தா னீதில்,
பேதைமை யின்று; பெண்ணைப் பெற்றவர் கடன தாமே.

64. என்றுமே யினைய கூறி யெனக்குரி யானை யெற்கே
மன்றல்செய் திடவி சைந்த மன்னற்கென் வணக்கங்கூறி
நின்றது புரிவீ ரென்று நெடியனு யவரோ டுண்டே
அன்றிலி னியற்கை யானு னமைச்சருந் தொழுது போனார்.

---

62. யாத்தல் - கட்டுதல். ஒப்புமையை - மெய் - 25-ல் காண்க.

64. நின்றது - இனி ஆகவேண்டியது. அன்றிலின் இயற்கை-பிரிவாற்றாமை. அன்றில் இணைபிரியாத காதலன்புடைய ஒரு பறவை.

65. அன்னவர் சென்ற பின்ன ரருந்தமி ழரசர் கோனும்
பொன்னையு மென்னையு மொன்றாய்ப் பொருத்துநா ளெந்நன் னாளோ
அன்னது வாழ்க வென்றே யனைத்தையு மறந்தன் னாளை
உன்னினா னுள்ளக் கோயி லுள்ளுரு வெளிப்பா டானான்.

### வேறு

66. ஒப்புடைய விருவருளத் தரும்பி நோக்கு
மூயர்நோக்கத் திடைமலர்ந்து காட்சி யென்னும்
ஒப்பரிய பெரும்பொருளா விளங்கா யாகி
ஊடலுணர் வெனும்பொருளா னறுங்கா யாகித்
தப்பரிய மணவினையாற் கனிய தாகித்
தனியறத்தி லிடைப்பிரிவாற் சுவைத்தேன் சொட்டும்
கப்பியசெந் தமிழ்க்காதற் கனியைப் போலோர்
கனியுண்டோ வென்காதற் கனியே! யென்றான்.

### வேறு

67. என்றவ னிருக்கப் பொன்னை யீன்றவ னிறைவன் மாட்டுச்
சென்றவ ருடன்பாட் டோடு திரும்புவ ருண்மை யாக
என்றவ னிருக்கச் சென்றோ ரின்முகங் காணு முன்னர்
நன்றது கனியோ காயோ நவில்கெனக் கனியே யென்றார்.

68. மற்றவர் சென்ற வாறும் மன்னனைக் கண்ட வாறும்
உற்றதைக் கேட்ட வாறும் உள்ளதை யுரைத்த வாறும்
கொற்றவ னுடம்பாட் டோடு கூறியே விடுத்த வாறும்
தெற்றென வுரைத்தார் வேந்துந் திருமணங் கண்டே னென்றான்.

69. அங்கதை மற்றெல் லோரு மறிந்துமே யுவகை பூத்து
மங்கல மணநன் னாளின் வரவெதிர் பார்த்தி ருந்தார்;
திங்களை முகத்தால் வென்று தேனையின் சொல்லால் வென்ற
நங்கையின் மகிழ்ச்சிக் கொப்பு நானறி கின்றி லேனே.

---

66. ஊடல்-அன்பின் பெருக்கால் இருவர்க்கு முண்டாகும் ஐயப்பாட்டால் காதலர்க்கு ஏற்படும் மனவேறுபாடு. உணர்வு-அது தீர்தல்.

# 5. திருமணப் படலம்

1. பொருவரு மொப்பின் மிக்க பூவையும் போர்வல் லானும்
ஒருவரை யொருவர் கண்ணுற் றுளந்தரு காத லாலே
திருமிகு மாயோன் செல்வி செய்தியை யினிது
சொன்னும்:
மருவிய காத லாரின் மணவினைச் சிறப்பைச் சொல்வாம்.

2. புனைமலர்ப் பூங்கொம் பென்னப் பொன்னியல் பாவை
யென்ன
வனையுமோ வியமே யென்ன வளர்மகள் மணத்தை
யுன்னிப்
பனையிடைத் தோன்றும் வம்புப் பாளைபோற் பருவ
மன்றி
மனையிடைப் பெயர மாயோன் மனக்கொடு பெயர
லானன்.

3. பாடியைக் கலைத்து முல்லைப் படைகளைத் திரட்டி
யின்பங்
கூடிய வுறவி னேடுங் கொழுந்தமிழ்க் குடிக ளோடும்
பீடுயர் அருவிக் குன்றம் பின்னதா முன்ன தாக
ஆடுநீள் கொடிமா டஞ்சூழ் அணிமிகு முதிரை புக்கான்.

4. புக்கவ னறிவுங் கேண்மைப் பொறுப்புநல் விருப்புஞ்
சேரத்
தொக்கநல் லமைச்ச ரோடு சூழ்ந்துநன் மணத்துக்
கேற்ற
தக்கநன் னுளைத் தேர்ந்து தரிழ்மரு மகனே டான்ற
ஒக்கலோ டுரியோர்க் கெல்லா மோலையும் போக்கி னனே.

5. போக்கிய பின்ன ரந்தப் பொருவறு முதிரைக் கோனும்
ஆக்கியா வனவே யெல்லா மயலவ ரவா வுற் கேற்பத்
தேக்கிய செல்வந் தங்குந் திருநக ரணிமி னென்று
மாக்களி றதன்மே லானை மணிமுர சறைவித் தானே.

6. முரசொலி யதுகேட் டந்த முதிரைமா மக்க ளெல்லாம்
விரைசெயும் பொருளாற் பூவான் மிளிர்மணி
யொடுசெம் பொன்னுல்
உரசுபொற் சுண்ணந் தன்னு லொப்பனை செய்தார்
தங்கள்
அரசியின் மணமே யென்று வுணிவியா ரெவர்தா னம்மா.

---

2. வம்புப்பாளை-காலமல்லாக் காலத்தில் தோன்றும்பாளை.
6. உரசுதல்-பூசுதல்.

## வேறு

7. குன்றினி லுயர்மாடக் கொடியணி தெருவெல்லாம்
கன்றொடு குலைவாழை கமுகொடு கொடிமுல்லை
இன்றமிழ் மணமாவி னிலையொடு குலைதெங்கு
மன்றலி னிணர்சாந்தம் மருமல ரணிவாரும்.

8. மண்சுதை யதுகொண்டு வாயிலி னிடுவாரும்
வெண்சுவ ரதுசுண்ணம் வெள்ளென வணிவாரும்
கண்கவர் கொடிமாடங் கதிர்மணி புனைவாரும்
தண்பொழி லனபந்தர் தடவழி யிடுவாரும்.

9. பூந்தொடை புனைவாரும் புதுமல ருதிர்வாரும்
சாந்தது தெறிவாருந் தண்பனி தூஉவாரும்
நாந்தற வகிலோடொண் ணறும்புகை யிடுவாரும்
ஏந்தொளி யதுகாலும் முத்தணி புனைவாரும்.

10. இறையென வரைவாரு மிறைவியை வரைவாரும்
அறமென வரைவாரு மன்பென வரைவாரும்
முறையொடு தமிழ்வாழ்க முயல்கென வரைவாரும்
நிறையுற வினகோலம் நெடுந்தெரு விடுவாரும்.

11. ஆடியி னொளிகாலு மழகிய சுவரெல்லாம்
ஓடிய விழியுண்ணும் ஓவியம் புனைவாரும்
நீடிய மனைதோறும் நிலவுமிழ் படமோடு
கூடிய வேடாணிக் கொடியினை நடுவாரும்.

12. தொலையுயர் நெடுவாயிற் றோரண நடுவாரும்
மலையென வுயர்கூட மன்றம திடுவாரும்
நிலவுமிழ் நீண்மாடம் நெடுநிரை யிடுவாரும்
கலைமலி நகரெங்குங் கைவினை செய்வாரும்.

13. நீணகர் மறுகாரும் நெடுமதி லகமெங்கும்
ஏணிக ளிடுவாரு மயலறை தொடுவாரும்
தோணிய படியெல்லாந் தொகைவகை விரியாக
மாணுற நகரெங்கும் மணவணி செய்வாரே.

---

7. மன்றல்-மணம். இணர்-கொத்து. மரு-மணம்.
8. சுதை-சுண்ணாம்பு.
9. தூஉ-தூவுதல். நாந்துதல்-நனைதல். நாந்து அற-ஈரம் போக.
11. ஆடி-கண்ணாடி. படம்-ஓவியச்சீலை. ஆணி-எழுத்தாணி.

14. இன்னணை மிதன்மேலு மெழினக ரவரெல்லாம்
பொன்னினு மணியானும் பூவினு மருவானும்
மன்னிய வணிசெய்ய வளம்படு பொருளானும்
உன்னிய படியெல்லா மூரணி செய்வாரே.

15. ஈனிய படியெல்லா மிணையிலி புனையூரைப்
பூநிறை காவென்கோ புனன்மலி கடலென்கோ
நாநிறை புலவோர்செய் நற்றமிழ் நூலென்கோ
நானில மதுவென்கோ நகரென் கோதானே.

16. மின்னியல் மணிபொன்றால் விளங்கணி கலனாலும்
மன்னிய வுடையாலும் மருவொடு மலராலும்
உன்னிய படியெல்லா மொப்பனை செய்வாரும்
பொன்னியல் சிறுவர்க்குப் புதுவது புனைவாரும்.

### வேறு

17. தொய்யில்க ளெழுது வாருந் தொடிபுதி தணிகு வாரும்
ஐயெனுங் கரிய கூந்தற் ககிற்புகை யூட்டு வாரும்
மையது கூட்டு வாரும் மலர்விழி தீட்டு வாரும்
செய்யகை நீட்டு வாருஞ் செம்பஞ்சை யூட்டு வாரும்.

18. மாவிருந் துண்ணு வாரும் மனைவளம் பண்ணு வாரும்
பாவிருந் துண்ணு வாரும் பண்ணியந் தின்னு வாரும
காவிருந் துண்ணு வாருங் கடிநகர் நண்ணுவாரும்
கோவிருந் துண்ணு வாருங் கோயிலை யண்ணு வாரும்.

19. இப்படி நகர மக்கள் எண்ணிய படியாங் கெல்லாம்
ஒப்பனை செய்து கொண்டுள் ளுவப்பொடு தமிழ்க்
கெல்லாம்
நப்பெருந் தலைவி யான நங்கையின் மணஞ்செய் நன்னாள்
இப்பவென் பதுவுஞ் சோர்ந்தே யேக்கழுத் தியங்கினாரே.

---

15. ஈனிய-தோன்றிய.

17. தொய்யில்-தோட்கோலம். ஐ-அழகு, மென்மை. செம்பஞ்ச-செம்பஞ்சுக் குழம்பு.

19. ந-சிறந்த. சோர்ந்து-மறந்து. ஏக்கழுத்தம்-இறுமாப்பு.

20. வான்கவிந் தென்ன நீண்ட மணவறைப் பந்த ரிட்டுத்
தேன்கவிந் தலர்ந்த தொங்கல் மணியொடு தெளிய நாற்றி
மீன்கவிந் தென்னத் தூய வெண்மணல் பரப்பி நாப்பண்
கான்கவிந் தென்னப் பூச்செய் கடிமண வறையுங் கண்டார்.

21. எழுதெழில் மாடத் தும்ப ரேற்றிய கொடிக ளெல்லாம்
முழுதுல களிக்கு மண்ணல் முடியிருந் தடியின் காறும்
அழகினைக் காணப் புட்க ளடைந்தன போலும், நல்லார்
பழுதற விறகு கொண்டு பறப்பது போலுந் தோன்றும்.

22. ஒருதுளி யிடமு மின்றி யூரெலாம் புறம்பு முள்ளும்
விரிகதி ரொடுமீன் போல விடிவிளக் கெரித லாலே,
இரவொடு பகலொன் றாக இறைதிரு மணஞ்செய் நன்னாள்
வரவறி யாது மக்கள் மயங்கியே யியங்கி னாரே.

23. அண்ணலின் முடங்கல் பெற்ற வரசரு மற்றை யோரும்
துண்ணென வுவகை பூப்பத் தொடுகழ லோனை வாழ்த்திக்
கண்ணிய கருத்தி னோடு கடிமணங் காண வேண்டி
எண்ணமுஞ் செயலு மொன்றி யெழுச்சிமேற் கொண்டா ரம்மா.

24. பழந்தமிழ்ச் சேர சோழ பாண்டிய ரெனுமுக் கோவும்
செழுந்தமிழ் காக்குஞ் செல்வச் சிற்றர சருமற் றோரும்
எழுந்தனர் மணத்தைக் காண வெழுந்தபல் லியத்தி னோசை
எழுந்தன படையி னார்ப்பாங் கெழுந்தன கொடிமீ தார்ப்பே.

25. கரியினை யூரு வாருங் காலினிற் சேரு வாரும்
பரியினை யூரு வாரும் பல்லக்கி லேறு வாரும்
வரிமணித் தேரூர் வாரும் வண்டியூர் வாரு மாக
நிரல்பட வரச வெள்ளம் நிலவரை நெளியச் சென்ற.

---

20. நாற்றி-தொங்கவிட்டு. நாப்பண்-நடுவே.
25. கால்-காறு. நிரல்-வரிசை.

26. ஆடவ ரரியி னார்ப்பர் யானைக ளிடியி னார்க்கும்
கோடுகள் வளியி னார்க்குங் குழலினஞ் சுரும்பி னார்க்கும்
மூடுசங் கெழிலி யார்க்கும் முரசினங் கடலி னார்க்கும்
ஊடிய வார்ப்பின் சும்மைக் குவமையென் சொல்வே
னம்மா.

27. பாடியு மாடி யும்பூப் பறித்துமார்ப் பரித்தும் பேர்த்தும்
ஆடிய லரச ரீட்ட மணியணி யாகச் செல்ல
ஏடெழுத் தாணி மேய விருந்தமிழ்க் கொடியி னீட்டம்
ஓடிமுன் காண்பே மென்றே யும்பரிற் பறந்து செல்லும்.

28. அருநகர்க் குன்ற நீங்கி யருந்தமி ழரச வெள்ளம்
வருவழி யாற்றிற் பாய்ந்து வயங்குகா னிலம்ப ரந்து
பெருகிய காட்சி யென்னும் பெரும்பயன் படச்சு ருங்கித்
திருவமர் மாயோன் செல்வத் திருநகர்க் கடல்புக்
கன்றே.

29. மன்னவ ரொன்றோ மற்றும் வண்டமி ழகத்து வாழும்
பன்னல மொருங்கு வாய்ந்த பழந்தமிழ் மக்க டம்மோ
டின்னிய லிசைகூத் தென்ன வியலுமுட் புலவர் தாமும்
தென்னவன் வாழ்க வென்று திருநகர் புகுந்தா ரம்மா.

30. ஆங்கவர் தமையேம் றன்போ டவரவர் தகுதிக் கேற்ற
பாங்கினி லிருக்கை நல்கிப் பண்பொடு விருந்து மாற்றித்
தேங்கிய புகழா னிற்பச் செந்தமிழ்ச் செல்வ ரந்த
ஓங்கிய நகர முள்ள முடைபடும் படியு றைந்தார்.

31. தமிழருந் தமிழ்வாழ் வாருந் தமிழ்மொழி வளர்ப்ப
தோடு
தமிழரின் றலைவ ராகித் தமிழகந் தனைக்காப் பாரும்
தமிழநங் கையரும் வந்து தங்கலாற் றமிழன் சீரூர்
தமிழராம் பொருள்சேர் காட்சிச் சாலைபோற் பொலிந்த
தம்மா.

---

26. கோடு-கொம்பு. வளி-காற்று. எழிலி-முகில், ஊடிய-மாறுபட்ட. சும்மை-தொகுதி.

32. ஈங்கிவ ராக வாய்மைக் கிருப்பிட மாகச் செங்கோல்
தாங்கியே தமிழ கத்தைத் தனிக்குடை நிழற்கீழ்த்
தங்கத்
தீங்கறி யாது மக்கள் செந்தமி ழின்பந் துய்க்கப்
பாங்குடன் புரக்கு மண்ணல் பண்பினை யினிது
காண்பாம்.

33. மலையிடைத் தனியாக் கண்டு
வண்டமிழ்க் காதல் கொண்டு
நிலவிய காட்சி தந்து
நெஞ்சினைக் கவர்ந்து சென்ற
தலைவியின் றந்தை சிந்தை
ததும்பிய முடங்கல் கண்டு
விலையிலாப் பொருளைப் பெற்ற
வெறியன்போ லுவகை பூத்தான்.

34. பூத்தவன் காத லென்னும் பொருளினைத் தந்து தன்னைக்
காத்தவள் தன்னை நேரிற் கண்டதே போல வந்த
மூத்தவன் செங்கை தந்த முடங்கலை முத்த மிட்டே
பாத்தனைப் பயிலு முள்ளம் பண்படப் பதித்துக்
கொண்டான்.

35. கொண்டவன் மதிவ லோரைக்
கூவியே மகளின் வாழ்க்கை
கண்டவன் முடங்கல் காட்டிக்
கருத்தையு முரைக்க வன்னோர்
தண்டமி ழிறைவா வாழ்க
தாழ்க்கிலேம் பயண மீதோ
கொண்டன மெனவெல் லோர்க்குங்
கூறின ரவரு மார்த்தார்.

36. மின்னியல் மதியந்தன்னை வெண்முகில் மறைத்தல்
போலப்
பொன்னினு மணியி னாலும் பூவினும் பொன்பட் டாலும்
இன்னிய வொளிமை வாய்ந்த வெழிலுல வுருவை மூடி
மன்னுயிர்த் தந்தை தன்னை மணமக னாக்கி னார்கள்.

---

33. வெறியன்-வறியவன்.

37. மணமகற் கோலம் பூண்ட மாபெருந் தலைவன் றன்னைக்
குணமொடு குறியும் வாய்த்த கோக்களி றதன்மே லேற்றி
இணையிலா விறைவன் வாழ்க வெனத்தமிழ்ப் பெரியார் வாழ்த்த
மணமுர சியம்பப் பாடி வறிதுற வழிக்கொண் டாரே.

38. மன்றலந் தொடைய லோடு
மணியணிக் கலன்கள் பூண்டு
வென்றிகொ ளரச யானை
மிசைச்செலு மிறைவன் றோற்றம்,
குன்றின்மேற் களிற்றி யானை
குழாத்தொடு கனியும் பூவும்
ஒன்றிய கோடு தாங்கி
யுயர்ந்துசெல் லுதல்போன் றம்மா.

39. மாமகன் வாழ்க காதல் மணமகள் வாழ்க மாயோன்
கோமகள் வாழ்க காதற் குன்றமும் வாழ்க வென்றே
போமவர் தாமோ வென்றே போமொலி கேட்டுக் கேட்டுக்
கோமகர் வாழ்க வென்றக் குன்றமும் வாழ்த்து மம்மா.

40. காரணி யணியாய்ச் செல்லுங்
காட்சிபோல் யானை செல்லும்
தேரணி யணியாய்ச் செல்லுந்
திரையெனக் குதிரை செல்லும்
ஊரணி யணியாய்ச் செல்வ
தொப்பவே யூர்தி செல்லும்
தாரணி யணியாய்ச் செல்லுந்
தகையினின் மகளிர் செல்வர்.

41. முடியெலா மின்னிற் செல்லும் முகமெலா மதியிற் செல்லும்
அடியெலாம் விரைவிற் செல்லும் அகமெலாங் களிப்பிற் செல்லும்
வடிவெலா மறைத்துச் செல்லும் மணமகன் வருகை தன்னைக்
கொடியெலாம் பறந்து முன்போய்க் கூறுவே மென்னச் செல்லும்.

---

38. கோடு-மரக்கிளை.

42. சந்தன மணத்திற் செல்லுந் தாமரை முகத்திற் செல்லும்
கொந்தலர் குழலிற் செல்லுங் குவளைகள்* விழியிற் செல்லும்
மைந்தர்கள் வனப்பிற் செல்வர் மங்கையர் முனைப்பிற் செல்வர்
இந்தவா றின்னு மிவ்வா றிராவண னுறவு செல்லும்.

43. பூணுவா ரணியுஞ் சாந்தும் புதுக்குவா ருடையு மேலும்
காணுவார் பனிங்குஞ் சிப்பும் கருதுவார் முன்னும் பின்னும்
காணுவா ரயலுந் தம்மு நயக்குவா ருடையும் பூணும்
வேணவா வியல்பை முற்றும் விளக்குவார் மகளி ரன்றே.

44. ஆடியே செல்லு வாரு மருந்தமிழ் பாடு வாரும்
ஓடியே மீளு வாரு மோவெனக் கூவு வாரும்
ஊடியே விலகு வாரு முணர்ந்துபின் கூடு வாரும்
தேடியே காணு வாருந் தெரிவரு மாய்ச்செல் வாரே.

45. இன்னண மவர்கள் செல்ல விராவண னியல்பின் முன்னர்க்
கண்ணிளுற் கருத்தைக் கௌவிக் காதலைக் கொடுத்தீங் தாள்பால்
எண்ணமுஞ் செயலு மெல்லா மேகெனச் செலவி டுத்தே
பண்ணியே வைத்த செம்பொற் பாவைபோற் களிற்றிற் சென்றான்.

46. குன்றம்பின் னாகக் குன்றக் கொடிவழிச் சார னீங்கிச்
சென்றுசான் றோர்க ளுள்ளச் செறிவினிற் றிகழ்ந்து யர்ந்த
குன்றன மாடக் கோயிற் கொடியது வருக வென்ன
மன்றல முரச மார்க்கும் மணிநக ரதனைக் கண்டார்.

---

42. முனைப்பு-ஊக்கம்.

43. அயலாரையுந் தம்மையும் ஒத்துப்பார்த்துத் தாமவருக் கீடில்லையென நாணுவர். நயத்தல்-விரும்புதல்.

47. கண்டது நங்கை கோலங் காணுவா னுள்ள மீர்ப்பக்
கண்டெனு மொழியார் தங்கள் கணவரைக் கொத்தித்
தின்று
கொண்டுசென் றின்க ளென்று கொடித்தெரு வதனைச்
சென்று
கண்டனர்; முல்லைக் கோனுங் கண்டுவந் தெதிர்கொண்
டானே.

48. மாலையுங் கலியு மேனை மங்கலப் பொருள்க ளேந்தி
மாலையி னுடங்கு நல்லார் வரத்தமிழ் மக்கள் சூழ
மாலையில் வேலான் வந்து வருகென மணம கற்கு
மாலைவேய்ந் தெதிர்கொண் டம்பொன் மணிதெரு
வதனிற் சென்றார்.

49. மின்னென விளக்கந் தோன்ற விசும்பெனக்
கொடிகள் தோன்றப்
பொன்னென முத்தமாலை பொருந்தநாற் புறமுந்
தொங்கத்
தன்னென வுயர்ந்து நீண்ட தவளவெண் குடைகள்
வானிற்
றுன்னுபன் னூறு திங்கள் தோன்றின போலத்
தோன்றும்.

50. கொல்லியங் தேனை யெள்ளிக் குளிர்ந்துமெல்
லென்ற தான
சொல்லியர் பேச யாழும் சுவையழிந் தறு மென்னில்,
பல்லிய மவர்கள் பாடும் பாட்டினுக் கிடைமு ழங்கல்
வல்லியின் மணத்தைக் காண வாவெனக்
கூவல் போலும்.

51. வினையிடை தவிர வெங்கும் வெளியிட மிலாது போக
மனையிடை யிருந்த மாதர் மறுகிடை வந்து தங்கள்
மனமென வன்ன மென்ன மானென்ப் பாவை யென்னப்
புனமயி லென்னப் போந்து பொம்மெனச் சூழ்ந்து
மொய்த்தார்.

---

48. மால்-மிகு. அயில-கூர்மை; ஐயில் என்பது திரிந்தது
49. முத்துமாலை-நிலவுக்குவமை.
51. வினை-வீட்டுவேலை. இடைதவிர்தல்-நீங்கல்.

52. மானினங் கானை நீத்தும் வண்டினம் மலரை நீத்தும்
பானறு மரைமீ னீரைப் பகைத்துநஞ் சரவை நீத்தும்
கூரிய வாள்வே லம்பு கொட்டிலை நீத்தும் வந்தே
தேனனார் முகங்க ளென்னுந் திங்கள்மீ தேறிப் பார்க்கும்.

53. மங்கைய ரின்ன ராக மைந்தர்சும் மாவிட் டாரோ
எங்குமே யிடாரின் றாக வெழுச்சியின் பிடித்துத் தள்ள
உங்கொளி பொருடே டுங்கா லொளிபெறு விழியார் போலத்
திங்களை மீன்பல் கோடி திரண்டுசூழ்ந் தனபோற் சூழ்ந்தார்.

54. மாடிமீ தேறு வாரும் மதின்மிசைத் தாவு வாரும்
ஓடியே முன்செல் வாரு மொருவர்மீ துந்து வாரும்
சாடியே தள்ளு வாருந் தள்ளிமுன் செல்லு வாரும்
ஆடவ ரவாவுஞ் செய்ய வழகனைக் காண லுற்றார்.

55. உயர்மரந் தாவு வாரு மொய்யென வேவு வாரும்
இயலறை சேரு வாரு மேணிமே லேறு வாரும்
அயலிட மதுவின் றாக வணிநிலா முற்றத் தேறிச்
செயலற வின்றிக் கண்கள் செறிப்பறி வுறக்காண் பாரே.

56. கண்ணிணை களிப்பக் காண்பார், கைகுவித் திறைவா வென்பார்,
உண்ணிக ழுவகை பொங்க வூமர்போ லோவென் றார்ப்பார்,
மண்ணிய கலவை யோடு மலர்பனி நீரி றைப்பார்,
எண்ணிய தறியா தன்றே ரெதேதோ செய்வா ரம்மா.

57. நங்கையர் குழாங்க ளெங்கும் நரும்புகை யூட்டிச் செல்வார்.
மங்கலப் பொருள்கள் தாங்கி மணப்பொருள் வீசிச் செல்வார்,
தெங்கொடு கலியும் பூவுந் திகழ்தரத் தாங்கிச் செல்வார்
சங்கின மொலிப்ப வேவெண் சாமர மிரட் டிச்செல்வார்.

---

52. மான முதலியன கண்ணுக்கு வமைகள். பானல்-கருங்குவளை.

53. உங்கு-நடுவிடம.

55. செயல் அறவு இன்றி - இமையாது. செறிப்பு அறிவு உற - காட்சியினபம பெற.

57. சங்கு-வளையல்.

58. இன்னண மிவர்க ளாக வினியகண் காட்சி நல்கி
மன்னவர் மன்ன னுன மணமகன் குன்றி னின்று
துன்னரி யிழிதல் போலத் தோவிழி இ விடுதி புக்கான்,
மன்னனு முவகை பொங்க மணவிருந் தாற்றி னுனே.

59. ஒளிமிகு மணியின் கண்மா சோடிடக் கழுவு மாபோல்
அளிமுரல் குழலி னுளை யருமண நன்னீ ராட்டி
வெளியபஞ் சாடை யாலே மெல்லெனத் துவட்டிப் பின்னர்
நளிகருங் குழற்குத் தூய நறும்புகை யூட்டி னுரே.

60. அல்லியை மறைக்கும் புல்லி யதற்கழ கென்னு மாபோல்
வல்லியி னழகை முற்றும் மறைப்பதை யெண்ணு தின்புச்
சொல்லியர் சுமக்க மாட்டாச் சுடர்மணிக் கலன்கள் பூட்டி
எல்லியை யொளிசெய் வார்போ லெழிலினுக் கெழில்செய் தாரே.

61. புதியவால் மதியம் போலப் புரிகருங் குழலை வாரி
முதுகிடைப் படிந்து லாவ முருக்கித மொருத்தி பின்னி
மதியெனில் மறுவெங் கென்று மயங்குவ ரென்னக் கண்டார்
புதியவும் மதியின் மீது பொற்புறப் பொட்டு மிட்டாள்.

62. ஒருங்குயி ருண்ண வாளு மொள்ளிலை யொளிர்கொல் வேலும்
பெருங்கொலை நஞ்சு மூட்டிப் பிடித்தமைக் கண்க ளான
வரும்பகை கெடத்தற் காப்பா மருங்குறு துணைமை யாகக்
கருங்குழ லொருத்தி வள்ளைக் காதிடை மணித்தோ டிட்டாள்.

---

58. துன்னுதல்-பொருந்துதல். அரி-சிங்கம். தோல்-யானை.
59. நளி-செறிவு.
60. அல்லி-பூவின் அகவிதழ். புல்லி-புறவிதழ். எல்லி-சூரியன்.

63\. துன்னிய மயிரின் கற்றை யொடுமலர்ச் சுமைபோ ருந்
இன்னலுற் றழுங்கு மென்ன விலகுபூண் பிடித்தாற்
போலக்
கன்னியின் கமுகு போன்ற கழுத்திடைத் திருத்த மாகப்
பொன்னடர் வல்லி தம்மைப் புனைந்தன ளொருபொற்
பாவை.

64\. கன்னிகை கரும்பைத் தின்று களவுசெய் அதனுக் காகப்
பொன்வளை விலங்கு பூட்டிப் பொருந்தியகாப்பு மிட்டுத்
துன்னிய சுவைகொள் வாயிற் றுருத்திய வுடைமைக்
காக
மின்னிய பவளத் துண்டை விரலிவிட் டாளோர் பூவை.

65\. பொற்றொடி யொடுபூங் கோதை பொன்மணிக் கலன்கள்
தாங்கிச்
சிற்றிடை யொடியு மென்று செம்பொற்பட் டாடை
தன்னை
முற்றுறச் சுற்றிக் கட்டி மோசம்போ னும்போ
மென்றே
வெற்றிகொள் காப்ப தாக மேகலை யதன்மே லிட்டார்.

66\. வாடைமென் குழலாள் செல்லும் வழியிடை
யெதிர்ப்பா டாகும்
ஆடவ ரிரியல் போக வடியினிற் சிலம்பை யிட்டுச்
சேடியர் கூடி யின்னுஞ் செய்வன செய்து பூவைக்
காடியி னழகு காட்டி யணிவன வாணிந்தா ரம்மா.

---

63\. கற்றை-திரள். அடர்-தகடு; இது, தகட்டு வடிவான கழுத்தணி. வல்லி-சங்கிலி, கொடி.

64\. இது, சிலேடை. கன்னி கை. கன்னிகை-பெண். கரும்பு-கைக்குவமை. காப்பு - பொற்காப்பு, காவற் கூட்டம். துருத்துதல்-திணித்தல். பவளத்துண்டு இதழுக்கு ஒவ்வாமை யால் வாயிடம் போகாதிருக்க விரலிவிட்டாள். பவளத்துண்டு-மோதிரம்.

65\. மேகலை-இடையணி, எண்கோவைமணி.

66\. வாடை-மணம். இரிதல்-விலகல். ஆடி-கண்ணாடி.

67. முடிமுத லடியின் காறு
முறைப்படி மென்பூங் கொம்பார்
சுடர்மணிக் கலன்கள் பூட்டிச்
சுமக்கெனப் பூவுஞ் சூட்டி
இடையொடி படுமென் றேங்கி
யிரங்கிநூ புரம்பு லம்பக்
கொடியிடை யொடியாத் தாங்கிக்
கொண்டுமே கூட்டிச் சென்றார்.

68. பொலம்படு பசுங்கட் டோகைப்
புனமயி லினங்கள் சூழச்
சிலம்பவித் திலகும் வெள்ளைச்
சிறையுடைச் செங்கா லன்னம்
சலம்படு செழுந்தேன் பாய்செந்
தாமரைக் குளம்புந் தென்ன
வலம்படு பூங்கொம் பன்னாள்
மணவறைப் பந்தர் புக்காள்.

## வேறு

69. நங்கையையு நம்பியையு நன்மணப்பொன்
னிருக்கையின்கண்
தங்கிடவே பணிதிருத்தித் தையலின்பெற் றோர்வந்து
'எங்குலமே! யுன்மனம்போ லின்றேமுன் காதலற்கே
மங்கலமா மனைவாழ்க்கைத் துணைவர்களாய்
வாழ்கெ'ன்றார்.

70. வாழ்கவெனப் பெற்றோர்கள் வாழ்த்தாமுன்
றமிழரெலாம்
வாழ்கதிரு மணமக்கள் வாழ்கபெருந் தமிழ்க்காதல்
வாழ்கமா பெருந்தலைவன் வாழ்கமா பெருந்தலைவி
வாழ்கநா ளுமெனவாழ்த் திமகிழ் பூத்தனரே.

71. நின்றாங்கு நீரோடு நீர்கலந்தாற் போலநீர்
ஒன்றாய்த் தமிழ்க்காத லோங்கி யுளங்கலந்தே
பொன்றாப் பொருளியலின் பொருளின் றுறைதோய்ந்தே
இன்றேபோ லென்றுமினி தின்புற்று வாழ்வீரே.

---

67. நூபுரம்-சிலம்பு.
68. பொலம்-பொன். சலம்-நீர். சலம்படுகுளம். வலம் படு-வலமாக.

72\. என்றவர்கள் வாழ்த்தினு ரேத்தினர் பூப்பெய்தார்
ஒன்றிய பல்லியமு மோவென்ற வேகடலின்
மன்றங் கமழு மணமாலை தோள்மாற்றித்
துன்று மணவாழ்க்கைத் துணைவர்க ளானாரே.

73\. தண்டமிழ்த் தாயகத்தைத் தாங்கற் குறுதுணையாக்
கொண்ட தமிழ்த்திருவைக் கூடி மகிழ்ந்தினிது
பண்டவழுஞ் செந்தமிழ்போற் பல்லாண்டு வாழ்கவென
வண்டமிழ் வாணரெலா மங்கலம் பாடினரே.

74\. கான்பூத்த நறுமலருங் கடற்கானற் கழிமலரும்
தேன்பூத்த மரைமலருஞ் செழுங்குறிஞ்சித் தேமலரும்
தான்பூத்த பொன்மலருந் தமிழ்மக்கள் தூவியதால்
மீன்பூத்த விசும்பென்ன விளங்கியதே மணப்பந்தர்.

75\. ஆர்த்தனமங் கலமுரசம் ஆர்த்தனமங் கலச்சங்கம்
ஆர்த்தனபல் லியமெங்கும் ஆர்த்தனபூந்
தொடைவண்டர்
ஆர்த்தனபூ வையுங்கிளியும் ஆர்த்தனசெந்
தமிழ்மலர்வாய்
ஆர்த்தனவந் நகர்முழுதும் ஆர்த்தனபே ரலைகடலே.

76\. வந்திருந்த தமிழரெலாம் வரிசைபல வகைநல்கிச்
செந்தமிழின் றிறம்வாழ்த்திச் சிறப்பமண விருந்துண்டு
தந்தமது திருநகர்க்குத் தாஞ்சென்றார் விடைகொண்டே
பைந்தொடியும் ஐந்தகனும் பலநாளங் கினிதிருந்தார்.

7\. ஆங்குபல நாள்கழிய வண்ணலுந்தன் மாமனிடம்
பாங்குடனே விடைபெற்றுப் பலவரிசை யினனாகி
ஓங்கியவந் நகர்நீங்கி யுரியவர்கள் புடைசூழப்
பூங்கொடியோ டினிதிலங்கைப் பொன்னகரம்
போய்ப்புக்கான்.

---

73\. பண் தவழும்.

75\. அலை அலைகடல் போல் ஆர்த்தன.

76\. ஐந்தகன்-தமிழகன், தமிழுணர்ந்தோன். ஐந்து-ஐந்திலமும், எழுத்து முதலைந்தும்.

78. தேன்பூத்த நறுந்தொடையல் திசைமணக்குஞ் செழியதமிழ்க்
கோன்பூத்த மலர்வண்டார் குழலியொடு வரக்கண்டே
ஊன்பூத்த வுயிரெல்லா முளம்பூத்த வுணர்வினவாய்
வான்பூத்த மதிலிலங்கை மகிழ்பூத்து வயங்கினதே.

## 6. ஊர்மகிழ் படலம்

### வேறு

1. நனிமகிழ் பூத்தவந் நகர மாந்தர்கள்
இனையன செய்வதென் றிறுதி யில்லராய்
அனையினுஞ் சிறந்தபே ரன்பின் மிக்கராய்
மனமுறத் தலைவரை வாழ்தெ டுத்தனர்.

2. இறைவியைப் பெற்றநம் மிறைவன் வாழ்கென்பர்
இறைவனைப் பெற்றநம் மிறைவி வாழ்கென்பர்
இறைவியைப் பெற்றவ ரினிது வாழ்கென்பர்
இறைவனு மிறைவியு மியைந்து வாழ்கென்பர்.

3. துறைமலி யகப்பொருள் தோய்ந்து வாழ்கென்பர்
அறமலி மனையற மன்பின் வாழ்கென்பர்
நிறைவளந் தேங்கியே நெடிது வாழ்கென்பர்
குறைசிறி தின்றியே கூடி வாழ்கென்பர்.

4. எண்ணிய பொருளெலா மியைந்து வாழ்கென்பர்
கண்ணிய கருத்தெலாங் கனிந்து வாழ்கென்பர்
உண்ணிகழ் பொருள்வெளி யுற்று வாழ்கென்பர்
தண்ணிய கைவளந் தழைத்து வாழ்கென்பர்.

5. செய்வதுந் தவிர்வதுந் தெரிந்து வாழ்கென்பர்
உய்வது முறுவது மோர்ந்து வாழ்கென்பர்
கைவரும் பொருளெலாங் கண்டு வாழ்கென்பர்
பெய்வது போலறம் பெய்து வாழ்கென்பர்.

6 முப்பொருட் பெரும்பயன் முற்றி வாழ்கென்பர்
ஒப்பிய பொருளெலா முற்று வாழ்கென்பர்
தப்பெது மின்றியே தழைத்து வாழ்கென்பர்
மெய்ப்பொரு ளுணர்ந்துமேன் மேலும் வாழ்கென்பர்.

---

5. உய்தல்-நீங்குதல உறுதல-அடைதல்.
6. முபபொருள-அறம பொரு ளினபம.

7. தக்கது செய்தறந் தழைத்து வாழ்கென்பர்
ஒக்கலோ டுண்டினி துவந்து வாழ்கென்பர்
புக்கவில் லறப்பயன் பொருந்தி வாழ்கென்பர்
மக்களைப் பெற்றுள மகிழ்ந்து வாழ்கென்பர்.

8. முந்தையோர் போற்றிய முறையின் வாழ்கென்பர்
தந்தைதாய் போற்றியே தகையின் வாழ்கென்பர்
செந்தமிழ் போற்றியே சிறந்து வாழ்கென்பர்
எந்தையே யெம்மையே யினிது வாழ்கென்பர்.

9. கோதையைத் தந்தவக் குன்றை வாழ்த்துவர்
போதினைப் பூத்தவப் பொழிலை வாழ்த்துவர்
மாதினை மதித்தவம் மதியை வாழ்த்துவர்
பாதுகாத் தளித்தவப் பகலை வாழ்த்துவர்.

10. நங்கையைப் பயந்தவந் நகரை வாழ்த்துவர்
மங்கையை வளர்த்தவம் மனையை வாழ்த்துவர்
மங்கலம் பொலிந்தநன் மணத்தை வாழ்த்துவர்
தங்களூர் அடைந்தநாள் தன்னை வாழ்த்துவர்.

11. இன்னண மிவர்கள்வாழ்த் தெடுத்திச் செய்தியைச்
சொன்னவர் கேட்டவர் துணைபு ரிந்தவர்
இன்னவா றெனவெடுத் தியம்பி னோர்க்கெலாம்
பொன்னையு மணியையும் பொழிந்து வந்தனர்.

12. புதியவத் தமிழ்மணம் புணர்ந்த காதலை
இதுவெனத் தமிழக மெவருங் காணவே
முதுதமிழ் மொழியினால் மொழிந்த ருள்கெனப்
பொதிபொதி யாய்த்தமிழ்ப் புலவர்க் கீந்தனர்.

13. உற்றவ ருரியவ ருகந்த நட்பினர்
கற்றவர் கற்பவர் கலைஞர் வல்லவர்
பெற்றவர் பெரியவர் பிறருந் தம்மனை
உற்றுமே பெருவிருந் துண்டு வந்தனர்.

---

9. கோதை, போது-தலைவி. மதி-மாதம்.

14. ஊரகம் பொருந்திய ஊரி னோர்களும்
சீரகம் பொருந்திய திருவி னோர்களும்
நீரகம் பொருந்திய நிலத்தி னோர்களும்
ஊரகம் பொருந்தவே யுண்டு வந்தனர்.

15. அனையென வுளங்கொளா வன்பு பொங்கவே
புனைமணி மாடநீள் பொன்ன கர்க்குளே
எனையரு முவப்பிலா ரில்ல ராகவே
மனையகந் தோறும்பொன் மாரி பெய்தனர்.

16. கடிநகர் புனைந்துலாக் காட்சி காணவே
அடைவுட னுளர சலுவ லோடுகைப்
படுதொழி லகங்களும் பணையும் பள்ளியும்
விடுமுறை யாக்கியே விழவ யர்ந்தனர்.

17. அண்ணலம் பெருமனை யகன்றெ ருவெலாம்
சுண்ணமுஞ் சாணமுந் துதையத் தூநிலா
நண்ணியே சுவைபட நக்கும் பான்மைபோல்
தண்ணியே வெண்பொடி சாந்தந் தூவினர்.

18. நடைவழி யாக்கிய நறிய காடுபோல்
மடைவளம் பொலிமனை மன்றந் தோன்றவே
படுகுலை வாழையும் பாக்கு மேனவும்
தொடுகுலை பூங்கொடி துதைய நாட்டினர்.

19. வாரணந் தொடுபடா வளைந்து வான்றொடும்
நீரண வியமுகில் நிலவிக் கண்படும்
ஊரண வியபகை யுயிர்கொள் வாயெலாந்
தோரணங் கட்டியே துலங்கச் செய்தனர்.

---

14. ஊரகம்-கிராமம்.

16. பணை-வயல்.

17. அண்ணல்-பெருமை பொருந்திய. துதைதல்-செறிதல்.

18. மடை-சோறு. மன்றம்-மரத்தடிப் பொதுவிடம். மனைகள் மன்றம் போல் தோன்ற.

19. வாரணம்-யானை. அணவிய-கலந்த, அடைந்த, வாய்-வாயில்.

20. உலாவருங் காட்சியை யொருங்கு கண்டுமே
எலாவருந் தெரிவுற வெழுதி வைக்கவே
நிலாவிரி மதியென மாட நீடொறும்
குலாவிடு பழந்தமிழ்க் கொடியை நாட்டினர்.

21. ஏவருங் கண்படா திருக்க வென்றுமே
கோவைவாய்க் கொடியனார் கோலமிட்டுயர்
மாவரு மகன்மனை மறுகெ லாந்தமிழ்
ஓவியச் சாலைபோ லொளிரச் செய்தனர்.

22. உணக்கிய வகிற்புகை யூங்கு மூட்டியே
கணக்கில வாகிய கலவைச் சாந்தொடு
பிணக்கிய நறும்புனல் பெய்து பெய்தொரு
மணப்பொரு ளகமென மணக்கச் செய்தனர்.

23. பாத்தொறும் பொருட்பயன் படத்தொன் றுலவர்
கோத்தபன் னூலையுங் குடைந்து கற்றுமே
மூத்தறி வேயென முனைப்பொ டந்நகர்
பூத்தபூங் காவெனப் பொலியச் செய்தனர்.

24. புலங்கெழு மியதமிழ்ப் புலவர் பாப்புனை
நலங்கெழு மியதமிழ் நாவின் றன்மைபோல்
வலங்கெழு வேலவன் வாழ்வு மேயதொல்
விலங்கலை யிலங்குமா றிலங்கச் செய்தனர்.

25. முதியரு மிளையரு முகையின் றாயரும்
பதமுறு விரிமலர்ப் பருவ மேயரும்
இதுதக விலைவெனு மிகழ்வை யோட்டியே
புதியது புனைந்தொரு புதிய ராயினர்.

26. ஏடுகை கொள்ளுவ ரிசைப்பக் கோட்குவர்
பாடுவர் பண்ணொடு பாடக் கேட்குவர்
ஆடுவ ரினியகூத் தாடக் காண்குவர்
பீடுற முத்தமிழ் பெருக்கி யார்ப்பரே.

---

20. நீள்மாடம் தொறும் எனமாற்றுக. ஏடெழுத் தாணி யுண்மையால் எழுது மென்க.

21. ஏவரும் - [illegible]. மா-குதிரை, யானை.

22. உணக்கிய-வறண்ட, பிணக்கிய-கலக்கிய. நறும் புனல்-மணநீர்.

25. இளையர், முகைப்பருத்தவர், மலர்ப்பருத்தவர், முதியர் என முறை செய்க.

26. கோட்குவர்-கொள்ளுவர்.

27. பண்பொடு நானிலம் பரந்து வாழ்வுறும்
நண்பருஞ் சுற்றமு நயந்த மற்றரும்
கண்பெறுங் காட்சியைக் காண வேண்டியே
விண்பொரு மாடநீ ளிலங்கை மேயினர்.

28. அணிநகர் மக்களிவ் வாறி ருக்கவே
மணிநெடுந் தேர்மிசை மயிலொ டேறியே
குணிகுண மாயொளிர் கோயில் வாயில்விட்
டிணையிலா னகன்தெரு விடத்து மேயினன்.

29. மாறுகொ டும்பரை மறைப்ப வெண்குடை
வீறுகொ டவற்றுயர் மேவ வொண்கொடி
ஏறெனப் பல்லிய மிசைப்ப வண்ணலும்
ஆறென வகன்தெரு வதனிற் சென்றனன்.

30. புதியநீ ராற்றிடைப் போருந் தோணியில்
மதியொடு செங்கதிர் மருவிச் செல்லல்போல்
பொதியவிழ் பூந்தொடைப் பொன்னன் னாளொடு
சிதைவிலா வழகனுந் தேரிற் சென்றனன்.

31. வடிமணித் தேர்மிசை வயங்கித் தோன்றிடும்
கடிகமழ் நாளிலக் கவினப் பூப்புனை
தொடையணி யழகனை த் துதைந்த லர்ந்தபூங்
கொடியுட னிருவிழி குளிரக் கண்டனர்.

32. கனியொடும் வெளியதேங் காய்ப ழத்தொடும்
நனியொளி விளக்கொடும் நறும்பு கையொடும்
இனியவெற் றிலையொடு மேந்திக் கூந்தலார்
மனைதொ றும் மனைதொ றும் வழிபட் டாரரோ.

33. ஆடவ ரோவிலை யரிவை மார்களும்
கூடுறு சிறியருங் குழல்வெ ளுத்தரும்
மாடிதொ றிருந்தவர் மலர்க்கை தூக்கியே
கூடைகூ டையாய்மலர் கொட்டி வாழ்த்தினர்.

---

28. குணி-பொருள். குணம்-பண்பு; பொருளெல்லாம் பண்புடன் விளங்குப.

31. கவின-அழகிய.

34. திருவிளக் கொடுபுகை சிதறும் பூக்களாற்
கருமுகி லிடையிரு கதிரைச் சூழுமீன்
பொரிசுட ரதுபடப் பொரிந்து வீழ்தல்போன்ம்
பெருமகன் றிருவொடு பெயருங் காட்சியே.

35. முத்தமிழ்ப் புலவரு முறையி னுக்கிய
அத்தமிழ்க் கருவியோ டாடல் பாடலை
இத்தனை காலமா வியையப் பெற்றிலா
அத்தனை பயனுமின் றடையப் பெற்றரே.

36. கும்பலாய் வாழ்கெனக் கூடி வாழ்த்தவே
நம்பனு மூரெலாம் நயந்து காணவே
வம்பவிழ் தொடையொடு வயங்கித் தோன்றுபூங்
கொம்பொடு குலமணிக் கோயில் புக்கனன்.

## 7. மனையறப் படலம்

1. ஆந்தமிழ்க் காதலை ரளித்த காட்சியை
மாந்தியே களித்தவூர் மகிழ்ச்சி கூறினும்;
சாந்தணி கோதையுந் தடக்கை வேலனும்
சேர்ந்துசெய் மனையறச் சிறப்பைக் கூறுவாம்.

2. கண்ணிய காட்சியாங் களவு வாழ்க்கையில்
உண்ணிகழ்ந் தோங்கிய வொருமைக் காதலர்
எண்ணிய படிநிறை வேறிற் றுமெனில்
மண்ணிடை யிவர்க்கினி மதிப்பு வேண்டுமோ?

3. காதலை யொழுங்குறக் கற்ற காதலர்
காதல ராயினர் கருத்து மொன்றினர்
காதலின் களவெனுங் கடலை நீந்தியக்
காதலின் கற்பெனுங் கரையை மேயினர்.

4. சீருற மணவினை செய்மெய்க் காதலர்
ஓருட லோருயி ருளமு மொன்றிடப்
பேரொடு பேருறப் பேரு மொன்றியே
நீரொடு கலந்தநன் னீரைப் போன்றனர்.

---

34. புகை-முகில். விளக்கு-விண்மீன். தூவுபூ-வீழ்மீன். இறைவனும இறைவியும்-ஞாயிறு திங்கள். இருகதிர்-ஞாயிறு திங்கள்.

3. கற்பு-இல்லறம்.

4. பேர் ஒன்றல்-'காதலர்' எனல்.

5. தாமரைத் தாரணி தமிழ நம்பியும்
தாமரைப் பூமுகத் தமிழ நங்கையும்
காமுறு காதலங் கயிற்றிற் கட்டிய
தாமரைப் பூந்தொடை தன்னைப் போன்றனர்.

6. மடத்தகை வல்லியும் மதிவ லானுமோர்
நொடிப்பொழு தகலினு நோன்மை யில்லராய்ப்
பிடித்தெழு காதலாற் பிணிக்கப் பட்டொரு
படத்தினி லெழுதிய பாவை போன்றனர்.

7. இவளுள மவனுக்கோ ரிருக்கை யாகவும்
இவனுள மவளுக்கோ ரிருக்கை யாகவும்
இவனவ ளெனும்பெய ரேகக் காதலர்
இவரெனும் பெயருட னிலங்கி னாரரோ.

**வேறு**

8. படையெலாம் வென்ற கண்ணியை மதியைப்
பழித்தசெம் முகத்தியை முன்னர்
அடையவோர் கொடியோ ராண்டினிற் கழித்து
மடைபெற முடிகிலா தயர்ந்த
தடையதாங் களவைக் கடந்துநன் னெஞ்சு
தளையவிழ்ந் திடப்புணர்ந் தின்னர்
இடையறு தின்ப நுகர்ந்துயர் கற்பி
னியல்பினை யினிதுகண் டனரே.

9. மண்ணவர் தமக்கோர் மாசிலா மணியாய்
மாபெருந் தலைவரா மவர்கள்
தண்ணெனக் குளிர்ந்து குறுகிடிற் பிரியிற்
றழலென வெதும்புகா தலினால்

---

6. நோன்மை-பொறுமை. படம்-ஓவியச்சீலை.

8. தளை-கட்டு. இன்னர் - இப்போது (கற்-5:1) கற்கற்பியல்.

9. புலவியாவது-காதல் பற்றிக் காதலர்க்கேற்படும் சிறுமன வேறுபாடு; அப்புலவி அரும்பு மலர்வது ஊடல் எனப்படும்; ஊடல் முதிர்தல் துனி எனப்படும். ஒருவர்க் கொருவர் அதன் காரணத்தைக் கூற உணர்ந்து அது நீங்கிக் கூடுவரென்க.

உண்ணிகழ் புலவீ யரும்பல ராகி
　　　　பூடலாய் முதிர்ந்தது துனியாய்
நண்ணியே புணர்த்த வுணர்ந்துமே தணிந்து
　　　　நயந்துமே கூடிவாழ்ந் திருந்தார்.

10. படத்திலே யெழுதி வைத்தபொற் பாவை
　　　　பண்பிலே யிவட்குநா மென்றே
அடித்தலம் பணிய விரங்கியே யதனை
　　　　யங்கையா லெடுத்துமே னிறுத்தும்
மடத்தகை மயிலே புனத்துறை மானே
　　　　மனையறம் நடத்திடு முறையெவ்
விடத்தினிற் கற்ற யெனக்கென வுற்ற
　　　　யென்றுமே மகிழ்ந்திடு மண்ணல்.

11. நல்லவை யுரைத்தும் நாவொடு மொழுகும்
　　　　நன்மனை யறத்திலின் வழுவா
தல்லவை கடிந்தும் பெருந்துணை புரியு
　　　　மறிவர்தம் வாய்மொழி யதனைப்
புல்லியே வரம்பு கடந்திடா தியல்பு
　　　　பொருந்திநல் லொழுக்கினைக் கைக்கொள்
வல்லியே யுன்னை மனைவியா யடைந்த
　　　　வாழ்வினுக் குவமைநல் வாழ்வே.

12. காணுதற் கரிதாய்க் காவலோ பெரிதாய்க்
　　　　களவெனக் கண்டவர் பழிக்க
நாணுதற் குரிய தென்றுமே யுள்ளம்
　　　　நைந்துநொந் துருகிய வதுவே
பூணெனப் பூணும் பொன்மணிக் கலனைப்
　　　　பொறுத்திடை நுடங்குபொற் பாவாய்!
மாணுறத் திகழு மனையறந் தன்னை
　　　　வகுத்துத வியபெரு வள்ளல்.

---

10. பலர் ஏவல் செய்ய வளர்ந்தவள் கீழே விழுந்த படத்தை எடுத்து அது இருந்தவிடத்தில் வைத்ததை வியந்து கூறியது. (கற்-5: 3,4)

11. (கற்- 3.)

12. களவே மனையறத்தை யுதவிய வள்ளல் ஆம். பழித்தல்-அலர் தூற்றல். பொறுத்தல்-சுமத்தல். (கற்-5)

13. அன்றிது தகாதென் றுரியகா ரணத்தோ
டறைந்துமேற் கோளுட னதையே
இன்றிது தகுமென் றன்றெனக் குரைத்த
விரண்டையு மாங்கெதிர் மறுத்தே
ஒன்றெனக் கொண்டு மயங்கிடப் பார்ப்பா
னுரைத்திடுங் கூற்றினைப் பார்க்கின்
நன்றெது தீதி யாதெனத் துணியா
நறுநுதா லென்னுள நலியும்.

14. காதலங் கயிற்றா லொன்றுற விறுக்கிக்
கட்டியே பிணைபிரி யாமல்
நீதற நீநா னெனப்படா தொன்றா
சேர்ந்தவ ரேமனை யாரென்
றோதுவர் பொருணூ லுளப்பட வாராய்ந்
துண்மைகண் டுவத்தியற் பெரியோர்;
ஆதலா லொருவர்க் குறுவது பிறர்க்கு
மாகுமென் றறிபசு மயிலே.

15. மாந்தளிர் மேனி சுமந்திடை நொசியும்
மறுவிலா மலர்முக மதியுன்
காந்தளங் கையாற் றொட்டதோர் வேம்புங்
கரும்பினின் சுவைமிகு சாற்றின்
ஆய்ந்துமுக் கனிகள் பிழிந்ததிந் தெளிவி
னளியினங் கூட்டுசெந் தேனின்
கய்ந்தநல் லாவின் பாலினு மினிக்குங்
காரண மறிகிலே னெல்லும்.

16. பொருந்திய வுரிமைச் சுற்றமோ டுள்ளம்
புணரிய நண்பர்க ளமக்கும்
விருந்தினர் தமக்கு முழைத்துமூ ணின்றி
மெலிபவ ரொடுபொரு ளிழந்து
வருந்திவர் தவர்க்கும் புலவரை யருக்கும்
மனையவ ரேதுணை யென்று
பெருந்தமிழ்ப் பொருணூற் பெரியவர் மொழிவர்
பிறைநுதற் பேரமர்க் கண்ணே.

---

13. அன்று-களவுக்காலத்தில் (கற்-36)
14. பொருள் நூல்-அகப்பொருள நூல். (கற்-5.7)
15. நொசிதல்-வளைதல் (கற்-5. 8)
16. அமர்தல்-விரும்புதல். (கற்-5:9)

17. படுகுளி ரதனில் விறுவிறென் றுள்ள
பச்சைமட் குடப்பனி நீரைத்
தொடநடுங் குவள்போ னடுங்கினை யன்று;
தொடத்தொட வப்பனி நீரே
கடுவெயி லதனி லின்புறுத் தாங்கு
கைபடக் களிக்கிறா யின்று
மடமொழி யிதன்கா ரணந்தெரி யாது
மயங்கினே னெனநகை யாடும்.

18. அன்றுநான் விருந்தென் றுன்மனை வரநீ
யயலவள் போலகஞ் சென்றாய்
ஒன்றிய தாயும் வேம்பென வெறுத்தா
ளுறவுமாங் கேமனை யொளித்தாள்
இன்றுநீ யுண்ணு முண்ணுமென் றூட்டி
யினிக்குத லெனக்கிறும் பூதே;
அன்றுநான் கண்ட பெண்மணி நீயோ
வல்லளோ வெனநகை யாடும்.

19. நோயெனத தாயன் றையுறத் தோழி
நுன்றனை நோக்கவே நீயும்
வாயிலா வூமா யினமண மென்னில்
வந்துவண் டார்குழ லென்றா?
தாயதை யோட்டத் தயங்குவா ளென்றா,
தந்தைதாய் சொன்மறா ரென்றா?
சேயிதழ் வெண்பற் கருங்குழற் பசும்பொற்
செறிதொடி யெனநகை யாடும்.

---

17. அன்று - களவுக்காலத்து இயற்கைப் புணர்ச்சி முதலியவற்றில். (கற்-5:10)

18. உடபொருள்.-அகஞ்சென்றாய்-மனைபுக்காய், குறியிடம் புக்காய். உறவு-தோழி. மனை ஒளித்தாள்-என்னை மனையிடை ஒளித்து வைத்தாள். இனிக்குதல்-இனிமை யுண்டாக்கல். இறும்பூது-வியப்பு.

19. நோய்தீரு மருந்து மணம் (மணவினை) என்னில், குழல்வண்டு ஆர் என்றா-கூந்தலில் அம்மணத்திற்காக வண்டு மொய்க்குமென்றா. 'வண்டார்குழல்' எனப் பெயர் கூறியவாறு. தாய்-செவிலி. ஓட்டத்தயங்குதல்-வரைவையுடன்படல். தந்தை நற்றாயின் சொல்மறார். இது, நீ அறத்தொடு நிற்கின் தோழி செவிலிக்கும், செவிலிநற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் அறத்

20. வேலினை*யெடுக்கச் சொலாமுன மன்றுன்
விழியெனுந் தாமரை முத்த
மாலையை யுனது மார்பினி லிடவே
வாகைநீ சூடினை யென்றவ்
வேலினை யெறிந்து தோற்றவன் போல
வெருண்டுமே பெயர்ந்திடா நிற்கம்
மாலையை யெடுத்தென் வெருவினைத் தவிர்த்த
மறத்திநீ யெனநகை யாடும்.

21. அன்றுநான் றந்த தழையுடைக் கிடா
வன்னமே வடவரை யோட்டி
வென்றிகொ டிலங்கை மாநகர் முன்றில்
மேவவு நரவர் சூழ
மன்றலந் தொடையல் சூட்டினை தாரிழ
மக்கள்செய் நன்றியை மறவார்
என்றுதொன் னூல்கள் நுவன்றிடு மதனுக்
கிலக்கியம் நீயென வுவக்கும்.

22. அன்னையன் றம்மா வாவெனக் கூவி
னுவென வாய்திற வாயாம்;
அன்னையின் றம்மா வென்னுமுன் மாமி!
யாவதென் னென்றரு கணைந்தே
இன்னது சொல்லு மென்பதை யெண்ணு
வேவலிற் றிறம்பிடா வெந்தன்
அன்னமே யிளமா னன்றுநீ பெண்ணு
யானையோ வெனநகை யாடும்.

---

தொடு நின்று மணமுடிப்பர். அன்று மணத்தை விரும்பாமல் களவொழுக்கத்தை விரும்பியா பேசாமலிருந்தாய், என நகையாடிய வாறு.

20. தலைவன வேலை யெடுக்கப பகைவயிற் பிரிவெனக் கொண்டு கண்ணீர் உதிர்த்தாள. அவள் வருந்துதற கஞ்சிய தலைவன் வேலை யெறிந்து செலவொழியக் கணணீரைத் துடைத்து சேர்க்க அச்சம நீங்கினள. முத்தமாலை-கண்ணீர். (கற்-6.24)

21. இது, தசரதன் முதலியோரை யோட்டியது. (கற்-6, 31)

22. அன்னை-செவிலி. இரண்டாவது அன்னை - தலைமகன் தாய். அன்று நீ இளமான். இன்றுநீ இளமான அன்று; பெண்கரி; யானை என இகழ்ந்த வாறு. அன்று சிறுவள். இன்று பெண் ஆய் ஆனையோ-பெண் ஆகினையோ. ஆய்-ஆகி.

23. வாயிலைப் பகைபோல் மறுத்தனை யெல்லா!
மறுத்தபோல் மறுநொடி தனிலவ்
வாயிலை யேற்றுக் கொண்டெம தெல்லா!
மறுத்தமை பொறுத்தரு ளென்றுன்
சேயிதழ் திறந்து பெருங்குவை முத்தந்
திறைகொடுத் துறவினைக் கொண்ட
ஆயிழை யுன்பே ராண்மையே யாண்மை
யாருனை யொப்பரென் றறையும்.

24. புன்னையங் காய்செய் தவற்றினுக் குன்னைப்
புலந்தமை பொறுத்தெனை யளித்த
பொன்னனைப் பொலியும் பூவையே யுன்றன்
பொறுமையே பொறுமைகொல் யானுன்
றன்னையென் செயினும் பொறுப்பையால் நானத்
தவற்றினுக் கொருசிறி தஞ்சேன்
என்னவின் னனமுன் னிகழ்ந்தமை கூறி
யிருவரு முளங்களி கூர்வார்.

25. பூவையோ டொருங்கு தேர்மிசைச் சென்று
புனல்விளை யாடியும் புதுப்பூங்
காவொடு கான லாடியும் பலவாக்
களித்தினு மின்புறு தக்க
யாவுமே வுறவில் லாதன வின்றி
யறம்பொரு ளின்பமு முற்றிப்
பாவலர் பாட்டின் பொருளுமப் பாட்டின்
பயனுமா யினிதுவாழ்ந் திருக்க.

---

23. எல்லா-முறைப்பெயர். முதலில் தலைவன் தலைவியையும், இரண்டாவது தலைவி தலைவனையும் விளித்தது. இது, இன்று- கணவன் மனைவியை 'இல்லே, அல்லே, எல்லே' என வழங்குகிறது. முத்தம்-பல்.

24. புன்னைக் காய்கள் தாமாக நீரில்விழ அது தலைவி செய்த குறியெனச்சென்று தலைவியங் கில்லாமையால் புலந்தனென்க. இது, அல்ல குறிப்படல். அன்று வறுங்களங் கண்டு பின்னர் உற்றபோது புலந்தமை. (கற்-ꟻ.13)

25. யாவும் மேவுறவு இல்லாதன இன்றி-யாவுமெய்தி. (கற்-60)

26. திங்களைப் பழித்துத் தாமரை குவித்துத்
தெளிவுற விளங்குசெம் முகத்து
மங்கையுங் கருப்ப முற்றொரு பத்து
மாதமு நிறைவுறத் தமிழர்
தங்களுக் குயிரி னுறையுளாய் வாழுந்
தமிழகத் திறைவனுய் விளங்க
மங்கலம் பொருந்தப் பழந்தமி ழுலகம்
மகிழ்வோர் மைந்தனை யீன்றாள்.

27. என்றவக் குழந்தை திருமுக நோக்கி
யிறைவியும் பெருமகிழ் பூப்ப
ஆன்றவன் பெரிது மகிழ்ந்துமே தாய்நெய்
யாடிய பிறகுமூ மூத்த
சான்றவ ரோடு கூடியே மதியைத்
தரித்திரு குவளையும் பூத்த
மான்றரு மணியே! செங்கதிர்ச் சேயோன்!
வருகெனத் திருப்பெய ரிட்டான்.

28. செங்கதி ரொளியிற் சிறந்துசெவ் வென்று
திகழ்தரு நிறமுடைச் சேயோன்
மங்கலம் பொருந்த வளர்மதி போல
வளர்கெனத் தமிழர்கள் வாழ்த்தப்
பொங்கொளி வேலோன் பொதிபொதி யாகப்
பொன்னையு மணியையும் வீசி
மங்கையுந் தானுங் காதலங் கனியாம்
மகனொடு மூவரா யிருந்தான்.

## 8. அரசியற் படலம்

### வேறு

1. ஐய நுண்ணிடை யழகியு மழகனுங் கூடிச்
செய்ய வேண்டிய செய்துநஞ் சேயனை யீன்று
வைய மாக்கிய மனையறச் சிறப்பினை வகுத்தாம்;
ஐயன் செய்யகோ லரசியற் சிறப்பினை யறைவாம்.

---

27, செங்கதிர் சேயோன்-செங்கதிர் போன்ற சேயோன். (கற்-5. 14, 15)
28. (கற்-5. 15)

2, முறையு மின்சொலு மீகையு முனைப்பொடு முயலும்
பொறையுங் குற்றமில் லாமையுஞ் சான்மையும் புரப்போர்
குறையை நீக்குமெண் காட்சியுங் குளிர்மையே முதலா
இறையெ னும்பெயர்க் கேற்றவா றிருந்தன னிறைவன்.

3. இயற்றி யொண்பொருள் வரும்வழி கண்டவற் றீட்டி
முயற்சி யோடவை காத்தவை முறையொடு குடிகள்
செயற்றி றம்பட வகுத்துமே செந்தமிழ்ப் பொருணூல்
பயிற்று நன்னெறி பயிற்றியே பெரும்புகழ் படைத்தான்.

4. ஆய காலமோ டிடன்வலி முதலன வறிந்து
தூய ராய்ச்செயும் வினைக்குரி யார்களைத் துணிந்தே
ஏய வவ்வினைப் பயனையு மியல்புற நாடி
மேய நல்வினை புரிந்திடும் வினைவலி மிக்கான்.

5. அறிவின் மிக்கநல் லமைச்சரைச் சூழ்ந்துய ரொற்றால்
அறிய வேண்டிய வறிந்துநன் காய்ந்தற நெறியின்
மறதி சோம்பலை மருந்துக்கு மறிந்திடா வகையில்
முறையு ரந்தனன் றமிழக முழுவது முறையோன்.

6. இயன்ற மட்டிலு மிராவண னெனும்பெயர்க் கேற்பப்
பயின்று மக்களெல் லோருமுப் பெரும்பொருட் பயனை
இயன்று பேதைமை யிருள்கெட வறிவொளி யெய்த
முயன்று நாடொறுந் தமிழ்க்குலம் விளக்கிடு முதல்வன்.

7. சிற்ற ரசருந் திருவுடை மூவரு முறையே
பெற்ற தாயினும் பெட்புற வறநெறி பேண
மற்றை யோர்களின் மாபெருந் தலைவனும் மக்கட்
கொற்றை யச்சமு மின்றியே காத்தன னுரவோன்.

---

2. முனைப்பு-ஆண்மை. எண்-எளிமை.

6. முப்பொருள்-அறம்பொரு ளின்பம். இயன்று-பொருந்தி. இராவணன - பெருரிமையுடையவன, (குல) விளக்குப் போன்றவன். இராவணம - விளககு. பேருரிமையுடையவன் என்பதற் கேற்பப பயனைப் பொருந்தவும், குலவிளக்குப் போன்றவன் என்பதற்கேற்ப இருள கெட அறிவொளி எய்தவும் முயன்று தமிழ்க் குலத்தை விளக்குபவன்,

8. இங்க ணேசர்முறை சேரினில் முறைசெய்த் திறலோன்
தங்கு மண்டப மமைத்தன னென்றது தனியா
எங்கு மேமுறை யின்மையோ டிகலுமாங் கிலையால்
அங்கு வந்தொரு குடிகளுங் கால்மிதித் தறியார்.

9. ஆண்டிடு னுக்கொரு முறைதமி ழகவர செல்லாம்
ஆண்டு வந்தர சியனவை முறைகளை யாய்ந்து
வேண்டி யாவையும் வகுத்துமே வகுத்ததை மேனாள்
ஆண்டு மேகுடி காத்துவந் தானம தண்ணல்.

10. அன்ன பேரவை தன்னிலே யருந்தமிழ் புரக்கும்
மன்ன ராகிய புலவரும் வந்தினி திருந்து
தன்னி கர்தமிழ் மொழிவளர் தகவினை யாய்ந்து
மன்னர் மன்னவன் மனக்கொளச் செய்வது வழக்கம்.

11. அந்த நாள்வர வமைச்சரு மலரவர் களுக்குச்
செந்த மிழ்த்திரு முடங்கலாற் றெரிவுறச் செய்ய
வந்தி யாவரும் வான்றொடு மணிமதி லிலங்கை
எந்தை வாழ்திருக் கோயிலைக் குறுகின ரிருந்தார்.

12. வினைவ லார்களு மமைச்சரும் வேண்டுவ செய்ய
இனிய தாமரை மலர்ந்தெதிர் பார்த்தவ ரிருப்ப
அனைய மண்டப மணுகிமா மேடையி லமைந்த
புனையி ருக்கையிற் பொன்னொடும் பொலிந்தனன்
புகழோன்

13. அவையி ருந்தவ ரெழுந்துமே வணங்கிட வண்ணல்
'நவையி லீரம ருகநல மோவெனா நயந்தே
இவைய நல்வர வாருக' வெனவுயர் முகமன்
சுவையகூறியே தொடங்கினன் றுலங்குதொல்லவையே.

14. செல்வ மில்லவர்க் கிவ்வுல கிலிற்சிறப் பிலையச்
செல்வ மோசிறப் புறுவது கல்வியாற் றெளிவாம்;
கல்வி யில்லவர் செல்வத்தாற் கணிப்புற விலையால்
கல்வி யேசிறப் பாகுமற் றதனிலுங் காண்பீர்.

---

9. மேனாள்-பின்னர். ஆண்டு-கையாண்டு.

13. இவைய-இவ்வேவந்தது. சுவைப-இனிமையாக.

15\. சென்று புல்லுணு மானினுங் கீழ்ப்புலே செல்வம்
என்ற போதிலும் பகுத்தறி விலாமையா லியாரும்
நின்ற வானினை மகனென வழைப்பது நிலத்தில்;
ஒன்று கல்வியில் லாருமவ் வானினை யொப்பர்.

16\. குறைந்த ழிந்துபோய் வெறுமையிற் றுயருற வீழ்ந்தும்;
நிறைந்த செவமுங், கொடுக்கினு நிறைவுறு மென்றிக்
குறைந்தி டாமையாற் கல்வியே குறைவிலாச் செல்வம்
அறைந்து போயின ராமென வறிவுநூற் புலவர்.

17\. புலவர் பாடிலாப் பழந்தமிழ்ப் புரவலர் பெயரை
நிலவு லகினிற் கேட்பதுண் டோநெடு நீரில்,
இலகு தாமரைப் பூமண மொடுமிற மின்றேல்
உலகில் யாரதைப் பூவென வடையின்றி யுரைப்பார்?

18\. தன்பெ யர்குறித் தோதிடாத் தற்குறி தன்னை
இன்ப துன்பமோ டுண்பினுக் கிருப்பிட மாகி
என்பெ னும்பெயர் தாங்கிய தென்பதல் லாமல்
மன்ப தைக்குளோர் மகனென வழைப்பது மதியோ?

19\. முன்னை யோர்நடை முறைகளை முறையொடு புலவர்
இன்ன வென்றியாத் திருத்திய பழந்தமி ழியனூல்
தன்னை யாய்ந்துபொன் னென்னவர் தகுதியில் வாழப்
பன்னு கல்வியல் லாலெவை துணையுறும் பார்க்கின்.

20\. சொல்லி லின்பமுஞ் சொற்பொரு ளின்பமுஞ் சொல்லிற்
செல்லு சொன்னடை யின்பமுஞ் செறிந்தசொற்
பொருளைக்
கல்வி யின்புறுங் கருத்தின தின்பமு மொருங்கே
புல்லி யின்புறுத் தற்குறி தமிழகப் பொறையே.

---

17\. அடை-அடைமொழி. 'பூவுக்குத் தாமரையே' என்பதறிக.

18\. குறித்து-எழுதி. ஓதிடா - படிக்கத் தெரியாத. என்பு-உடம்பு. மன்பதை-மக்கட் பரப்பு.

19\. பன்னுதல்-புகழ்தல், சொல்லுதல்.

20\. கல்வி-ஆழ்ந்துநோக்கி. புல்லி-பொருந்தி. பொறை-சுமை,

28. தாய ருந்துமென் றாட்டுபா லுண்டவர் தாயாள்
சேய ருந்துமென் றாட்டிய தாய்மொழி தேரு
தேயி ருந்துவா ளுள்வழி தேகழித் திருத்தல்
வாயி ருந்தும்பே சாமூமு ஊமையின் வகையே.

29. இத்த கையமேம் பாடுற வீறதி யாவின்
பத்த தாயவொண் கலையயாண் பெண்ணிரு பாலும்
ஒத்த தாயராய்க் கற்றறி வுற்றிடச் செய்தல்
அத்த கையகாப் புடையர்நீங் காக்கட னாகும்.

30. கற்றி லாதமக் கட்கடை யேதுயர் காலும்
குற்ற மென்பத னுறைவிட மாதலாற் குற்றம்
அற்று மக்களின் புற்றுவாழ்ந் திடச்செய வாவும்
வெற்றி வேலவர் கல்வியைப் பெருக்குதல் வேண்டும்.

31. அப்பெ ருந்தொழிற் கரசர்சிற் றரசரே யன்றி
ஒப்ப ருந்தமிழ்ப் புலவருஞ் செல்வரு முரிமை
செப்ப ருந்தமிழ் மக்களெல் லோருமே சேர்ந்து
தப்ப ருந்தொழி லெனமுனைப் பொடுசெயல் தகவாம்.

32. பொருளு மேவலு மாண்மையும் பொருந்தியே யிருந்தும்
தெருளு நூலறி விலாதவர் செயலொடு வாழ்தல்
இருளு மப்புமீ ரெழிலியு மிணைந்தவோ ரிரவில்
மருளு மூமுகல் வதிருடைக் குருடுசெல் வழக்கே.

33. பழியைப் போற்றுதல் மூடர்கள் செயல்;பழி யொழியும்
வழியைப் போற்றுதல் மேலவர் செயல்;வழி வருதாய்
மொழியைப் போற்றுதல் முகத்தினுக்கழகுசெய்யிரண்டு
விழியைப் போற்றுதல் போன்மென மேலைநூல்
விளம்பும்.

---

30. ஆவுதல்-விரும்புதல்.

31. தப்பு அரும-தவற முடியாத.

32. தெருளல்-தெரிதல். மப்பு-மந்தாரம். ஈரெழிலி-மழை கொண்ட முகில். மருள-மயக்கவுணர்வு. வதிர்-செவிடு. அறிவு மயக்கமும் ஊமுஞ் செவிடுமுடைய குருடு. வழக்கு-முறைமை யாகும்.

34. கண்ணி ரண்டன்ப வெண்ணையு மெழுத்தையுங் கற்றோர்
எண்ணெ ழுத்துளா ரறிவுக்க ணென்றுட னேமுக்
கண்ண ராகியே மக்களின் றலைமையைக் காண்பர்
எண்ணெ ழுத்தறி விலாரையெவ் வினத்தினிற் சேர்ப்பாம்.

35. உறுப்பி னிற்சிறப் புடையது கண்ணென வுவப்பிற்
சிறப்பு மேயதைக் கண்ணெனச சேர்ப்பர்;கட் புலனை
மறுப்ப தாரருங் கண்ணினுஞ் சிறப்புடன் மதிக்கும்
உறுப்ப தாமிதை முதற்செயு முழைப்பினை யுலகில்.

36. ஆகை யாற்றமிழ் மொழியினை யையமில் லாமல்
சேகை யோடெலா மக்களுங் கற்றிடச் செய்தல்
ஓகை யோடுறும் பகைவரை வெங்கிட வோட்டி
வாகை சூடிய தாகுமா மன்னருக் கென்றான்.

37. என்று சொல்லவும் பேரவை யிருந்தவ ரெல்லாம்
நன்று நன்றுபே ரண்ணலே நல்லவோர் விதுவே
ஒன்று மொன்றுமென் றுவப்புற, வண்ண லு மேலும்
நின்ற யாவையு மெடுத்தியம் பிடமன நேர்ந்தான்.

38. முந்தை யோர்நனி முயன்றுமே யியன்றநன் முறையிற்
செந்த மிழ்த்தனிச் சொற்களாற் செய்ததொன் னூலாந்
தந்தை தாயன விலக்கண விலக்கியந் தம்மை
மைந்த ராகிய நாம்நனி போற்றுதல் மரபாம்.

39. இயன்ற மட்டிலு முதியவே டுகள்பெயர்த் தெழுதி
முயன்று செம்பொருள் படவுரை யெழுதிநன் முறையின்
பயன்ற ரும்படி மக்களுக் கோதியும் பழைய
நயன்ற ருந்தமிழ் நூல்களைப் போற்றுதல் நலமாம்.

---

35. முதல் செயல்-முதன்மையாக-மேம்பட்ச் செயல்.

36. சேகை-செம்மை, நன்றாக. ஓகை-உவகை. வெங்-முதுகு. வாகை-வெற்றி.

37. ஓர்வு-கருத்து. ஒன்றும்-பொருந்தும்.

### வேறு

40. முன்னோர்கள் கையாண்ட மொழிவழக்கும்
பொருள்வழக்கு முதிய வாகிப்
பின்னுளி லிருப்போர்க்கு விளங்காமற்
பொருளையும் பிறக்கு மானால்
முன்னூலி னியல்சிறிது மாறாமற்
பொருள்விளங்க முறைமை யாக
அந்நாளுக் கேற்றபடி வழிநூல்செய்
தேபோற்ற லமைவ தாகும்.

41. அற்றையநூல் களைப்போற்ற லோடமையா
தந்நூல்க ளமைவோ டாய்ந்து
கற்றவையின் கருத்துணர்வோ டைந்திணையி
னியற்கையொடு கலந்த நல்லோர்
இற்றையநாட் கேற்றபடி யிலக்கியமு
மிலக்கணமு மிசையுங் கூத்தும்
பொற்றகைய பலப்பலவாப் புதுநூல்கள்
செய்துமொழி போற்றல் வேண்டும்.

42. தாய்மொழியாந் தமிழ்நிலத்தைப் புலத்தோரா
னன்குழுது தகுந்த வித்தாம்
ஆய்மொழிநெல் லதைவித்தி யணியென்னு
நல்லெருவிட் டமைவ தான
பாய்பொருளா நீர்பாய்ச்சிப் பாவென்னும்
பயனுதவிப் பரிந்து காக்கும்
வாய்மொழிச்செந் தமிழ்ப்புலவர் தமைப்போற்றித்
தாய்மொழியை வளர்க்க வேண்டும்.

43. தன்னலமென் பதையறியார் பொதுநலநன்
கலம்பூண்டு தமிழர்க் கெல்லாம்
சொன்னலமும் பொருணலமுஞ் சுவையகருத்
தின்னலமுந் தோய்ந்த பாவாம்
நன்னலஞ்செய் தேதமது குடிநலத்தோ
டுடனலமு நாடா தேனைப்
பொன்னலமும் புனையாது தமிழ்வளர்க்கும்
பெரியாரே புலவ ராவர்.

---

42. அமைவு அது ஆன - தகுதியான. பாய் - பரந்த. பரிந்து-அன்போடு.

43. சுவைய - சுவையை யுடைய. சுவை - மெய்ப்பாடு. குடி-குடும்பம.

44. அத்தகைய தமிழ்ப்புலவர்க் கில்லையெனுங்
கவலையென்று மணுகா வண்ணம்
எத்தகைய் பொருளொன்று மவர்விரும்பும்
பொருளவர்க்கே யியைந்த தாக்கிக்
கைத்தகைய பாணரையுங் கூத்தரையு
மவ்வரோடு கலந்தா ராக்கி
முத்தமிழை நனிவளர்த்தல் மன்னவர்க்குஞ்
செல்வருக்கு முறைமை யாகும்.

45. பொதிபொதியாய்ப் புலவருக்குப் பொருள்கொடுத்து
முன்னோர்கள் போற்றி னார்கள்
அதுநமக்குங் கடப்பாடா மெனவவையோ
ரெங்கடனு மதுவா மென்றார்;
முதுமொழிவாய்ப் புலவர்களு மம்முறையின்
யாஞ்சிறிது முரணோ மென்றார்;
மதிவிரும்புங் குடையானு நின்றதனை
யினிதெடுத்து வழங்க லானான்.

46. புதுமைக்கும் பழமைக்கு முரணின்றி
யொன்றாகப் பொருந்த வேகம்
முதுமக்க ளொழுக்கமெலா முட்கொண்டு
திகழ்ந்துலகை மொழிநூற் கெல்லாம்
இதுமிக்க தெனக்கொண்டு கருத்தொடுணர்
வதுபொங்கி யெழவுள் ளத்தே
பதியத்தொல் காப்பியத்தைத் தமிழரெலா
மெழுத்தெண்ணிப் படித்தல் வேண்டும்.

47. நால்வகைய தகையாழி னரம்புவழி
யிசைபரவி நடந்து செல்ல
நூல்வகைய வமைத்தியக்குந் திறலோடு,
துளைவழியே நுணுக்க மாக
மேல்வகைய விசையெழுங் குழலூடு
புகச்செலுத்த மேன்மை யோடு
பால்வகைய பலபறையு மறைந்திடவு
மெல்லோர்க்கும் பழக்கம் வேண்டும்.

---

44. கைத்தகைய-கையின் தகுதிவாய்ந்த,

47. அமைத்தல் - நரம்புகட்டல். பால்வகைய - பல வகைப்பட்ட.

48. ஏவறிய வியலாப்பச் சிஙுங்குழவி
யுங்குழைந்துள் ளெழுச்சி பொங்க
நாவடக்கிக் கேட்டின்புற் றுறங்கும்,விலங்
கினம்புள்ளு நயந்து கேட்கும்,
மேவியபன் மனக்கவலை பறந்தோடும்,
மேவாரும் விழைவா ரென்றால்
பாவிசையின் சிறப்பறிந்து பயிலாதா
ரின்பொன்றும் பயிலா தாரே.

49. பாட்டறியா ரப்பாட்டைப் பண்ணோடு
பாடலொடு, பாடி யாடும்
ஆட்டறியா ரவ்வாட்டைப் பாவிசையைப்
பாடலுட னாடக் கண்டு
கேட்டறியார், பாட்டாட்டுக் குரித்தான
மூக்கருவி கிழமை யோடு
கூட்டறியார் வாழ்விலிடை யின்பமெனுஞ்
செம்பொருளைக் கூடா தாரே.

50. பண்ணமைய மூவகைய கருவியொடு
தொகப்பாடிப் பழக வேண்டும்,
கண்ணமைய வகத்தெழு மெண்சுவையுங்
காண்போர்க்குக் கருத்து ளாக
எண்ணமைய பலகூத்து மினிதாடிப்
பழகியவை யிணையி லாது
மண்ணமைய வளர்த்தோங்கச் செயல்தமிழர்க்
கெலாமொருவா மரபே யாகும்.

51. கைத்திறத்த வாய்த்திறத்த கருத்தொருமித்
தியக்குபல கருவி யோடு
மெய்த்திறத்த விறற்றிறத்த வாடலொடு
பண்ணமைய விரும்பிப் பாடும்
உய்த்திறத்த விசையோடு பாத்திறத்த
வியலோடுள் ளுருகக் கற்றே
முத்திறத்த தமிழ்வளர்த்து முன்னோரின்
வழிகாத்தல் முறைமை யாகும்.

---

48. ஏவு-கட்டளை. பா-பாத்தல.

49. மூக்கருவி-தோல், துளை, நரம்புக்கருவி.

50. தொக - பொருந்த. எண்சுவை - வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், பெருமிதம், நகை. ஒருவா-நீங்கா. மரபு-முறைமை.

51. கைத்திறத்த - தோல், துளை, நரம்புக்கருவிகள். விறல்-மெய்ப்பாடு. உய்த்தல்-செலுத்துதல்,

52\. என்றுரைத்துத் தமிழ்க்கழகத் திசைவளர்க்கு
மிசையாளை யினிது நோக்கக்
குன்றுரைத்த குவவுத்தோட் குலப்பாண்டி
நாடாளுங் கோட்டி யார்ப்ப
நின்றுரைப்பான், றிசையெல்லா மிசைவளர்க்கு
கொடியோனே நிலவு போலச்
சென்றுறைக்குந் தாய்மொழியை வளர்த்துவர
லேயெனது செங்கோ லாகும்.

53\. தன்னேருந் தமிழ்வளர விலக்கியமு
மிலக்கணமுந் தகுதி யாக
முன்னோர்கள் செய்துவைத்த முதற்சங்க
விடைச்சங்க முதுநூ லெல்லாம்
பொன்னேபோற் போற்றியிருந் தமிழரெலாங்
கற்றுநலம் பொருந்தி வாழ
என்னுளீங் கியன்றபடி செய்துவரு
கின்றேன்ம னிணைத்தாய் போல.

54\. எப்போது நடந்துவரு வதுபோன்றே
தமிழகத்தி னெல்லாப் பாலும்
தப்பேது மில்லாத புலவர்கள்செய்
தேகொணருந் தமிழ்நூல் தம்மை
ஒப்பாரு மில்லாத முத்தமிழி
னறிஞர்பல ரொருங்கு சூழ
இப்போது மரங்கேற்றி வருகின்றேன்
சிறப்புடனே யிதுவு மன்றி.

55\. ஓங்குதமிழ்ச் சங்கத்தே முத்தமிழின்
கரைகண்டே யுயர்வு பெற்ற
பாங்குடையார் தமைக்கொண்டு முத்தமிழு
முறையாகப் பயிற்று வித்தே
ஆங்குபயின் றோர்தம்மைத் தமிழகமெல்
லாமனுப்பி யன்னோர் தம்மால்
தேங்குபுகழ் முத்தமிழும் பயிற்றுவிக்க
வேற்பாடு செய்துள் ளேனால்.

---

52\. கோட்டி-அவை. உறைத்தல்-மிகுதல்.

53\. இணைத்தாய்-செவிலி.

56. அன்னவர்தம் வாழ்வியலுக் காவனவெல்
லாம்புரிவ தாலே யன்னோர்
தன்னலமென் பதுவின்றித் தாய்மொழியை
வளர்ப்பதுவே தமது நீங்கா
மன்னியநீள் கடனென்று குன்றமர்த்
தமிழ்வளர்த்து வருகின் றார்கள்;
முன்னருமோர் செலவின்றி யேபயின்று;
ரஃதான்று முறைமை யாக.

57. பாடிவரும் புலவர்க்கு வேண்டியவேண்
டியவாங்கு பரிசி லீந்தும்,
பாடியவப் பாட்டுகளை யொருங்குதொகுத்
தெல்லோரும் படிக்கச் செய்தும்,
கூடியதோர் வழியெல்லாந் தாய்மொழியாந்
தமிழ்மொழியைக் குறையொன் றின்றி
வாடியதோர் பயிர்வளர்க்கும் வகைவளர்த்து
வருகின்றே னெனமற் றோரும்.

58. நாங்களுமவ் வறேதாய் மொழிவளர்த்து
வருகின்றோம் நற்றா யன்ன
ஓங்குபுகழ் நாவலர்க்கு மனமுவப்பப்
பொருள்கொடுத்து முயர்வு செய்தும்
பாங்குடைய செவிலியைப்போ லெனச்சொலவி
ராவணனும் பழன மீது
தேங்கிவளர் கரும்பயின்ற றெனமகிழ்ந்து
மேனின்ற செய்தி சொல்வான்.

59. சீர்துக்கின் மக்களுக்கீண் டுணவைவிடச்
சிறந்ததொரு செல்வ மின்றால்
நேர்பார்க்கி னவ்வுணவும் நீராலே
யமையுமதால் நிலந்தாழ் பக்கம்
நீர்தேக்கி நிலந்திருத்திப் பயிர்விளைத்துப்
பசிப்பிணியை நிலவா தோட்டல்
பார்காக்கும் வேந்தருக்கு முதற்கடமை
யாகுமெனப் பழநூல் சாற்றும்.

60. தாளாண்மை யொடுநாளுஞ் சலியாம
லருளுருவந் தாங்கிப் பாங்கின்
நாளாண்மை யொடுநடக்க மக்கள்பசிப்
பிணியின்றி நலமாய் வாழ

வேளாண்மை யொடுவரூஉ மினம்போற்றி
யுலகோம்பும் வேளா ளர்க்குத்
தோளாண்மை யொடுநிலங்காப் போர்காவற்
றுணைவரெனத் தொன்னூல் கூறும்.

61. ஆகையினால் வேளாண்மை யெனுமொழியி
னுட்பொருளை யறிந்தே நாளும்
ஓகையினால் தாளாண்மை யோடுலக
நிலைபெறவே யுழுவோர் செங்கை
வாகையினால் ஆளாண்மை நடைபெறுத
லன்றிமுடி மன்னர் தங்கள்
ஈகையினால் ஆகாமை யறிந்துலகஞ்
செயலரசர்க் கியல்பா மன்றி.

62. ஒருவந்த தமிழ்மக்க ளொருவருமே
யொருவர்பசித் துழல்கை யின்றித்
திருவந்த வொருநிகரா யினிதுண்டு
நனிவாழச் செய்த லோடு,
கருவந்த தகவுடையார்க் கலுவலருக்
தவறுதலாய்க் கறுத்தே யாதும்
வெருவந்த செய்யாம லினியனவே
செயலரசர் மேற்கோ ளாகும்.

63. மன்னவர்க்கா வுள்ருலக மக்களெனு
மெண்ணமதை மறந்தே மன்னர்
அன்னவர்க்கா வுளரெனுமெய் நிலையுணர்ந்து
குறையொன்று மடையா வண்ணம்
முன்னவர்க்கா வனசெய்து புறங்காத்தல்
மன்னவர்க்கு முறையே யாகும்;
பொன்னலர்க்கா வகம்பொலியு மீயுயர்மூன்
வேலிபயிர்ப் புறங்காப் பன்றோ?

---

60. தாளாண்மை - விடாமுயற்சி. நாள் ஆண்மை யொடு நடக்க-வாழ்நாள் தடையின்றி நடைபெற. மூவினம்-ஆடு மாடு எருமை.

61. வேளாண்மை - உதவி, பயிர்த்தொழில். ஓகை-உவகை. ஈகை-பொன-கொடை.

62. ஒருவந்த-ஒருமையான. திருவந்த ஒருநிகராய்-ஒரே நிகரான செல்வத்தையுடையவராய். கறுத்து-சினந்து. வெருவந்த-குடிகள் அஞ்சத்தக்க காரியம். மேற்கோள்-கொள்கை,

64. நாற்றிசையு மிசைபுகுமூ ரகமேயோர்
நாட்டினுயிர் நாடி யாகும்
பேற்றையறிந் தூர்மக்க ளொற்றுமையாய்
வாழ்க்கைநலம் பெருகி வாழ்தற்
கேற்றமுறை தனின்மக்க ளுடன்பாட்டோ
டெச்செயலு மியற்றி நாளும்
போற்றிநலம் புரிகுவதே யூராளர்
கடமையெனப் பொருணூல் கூறும்.

65. முறையற்ற படிநடந்து நோய்க்கிடங்கொ
டாதபடி மூதூ ரெல்லாம்
அறைவுற்ற நலவழியின் படிநடந்து
நாடொறு'நோ யற்ற வாழ்வே
குறைவற்ற செல்வ'மெனும் மொழியதனைக்
கடைப்பிடியாய்க் கொண்டே வாழ்நாள்
நிறைவுற்று மக்களெல்லாம் நல்வாழ்வு
பெறச்செயலே நெறிமை யாகும்.

66. சோம்பலின்று விளைமையைவீண் கழிக்காம
லெதிர்காலத் துணைமை யாகித்
தேம்பழன மதுபோலத் திருவாக்கிப்
பெருவாழ்வீற் செறித்தே யுள்ளக்
கூம்புதலை யவர்வித்துத் தாய்நாட்டுப்
பெருஞ்செல்வக் குவையார் தொம்பை
யாம்பலகைத் தொழில்புதிய முறைபயின்றெல்
லோருமுயர் வடைய வேண்டும்.

67. வேலையதற் கேற்றபடி செய்பொருளின்
மதிப்பமைத்தவ் வேலைக் கேற்ற
கூலியது பெற்றுமன வெழுச்சியுடன்
தொழில்வளர்க்குங் கொள்கைத் தாகிச்
சோலையிடைத் தேனுண்ணுந் தும்பியெனத்
தொழிலாளர் தொழுதி யுள்ளச்
சாலையிடைப் பேருவகை நடமாடச்
செயலரசர் தமக்கேற் பாகும்.

---

64. ஊரகம்-கிராமம். (பலசிற்றூர்கள் கொண்டது)
65. நலவழி-சுகாதாரம்.
66. குவை-குவியல். தொம்பை-நெற்குதிர், பணப்பெட்டி.

68. உய்த்துணர்வி னோடுலக வழக்கமது
தலைப்பெய்தே யுணர்ந்தா ராய்ந்த
புத்துணர்வி னுளுள்ள முடையமுது
தமிழ்மக்கள் புதுவாழ் வெய்தற்
கெத்தகைய துறையினுநன் னுகரிகப்
பெருங்கரையி னினிதே யேற
வைத்திடுத லேயறிவர் முதற்கடமை
யாகுமென வகுத்தே பின்னும்.

69. போர்த்தொழிற்கு மனைவாழ்க்கைப் புதுத்தொழிற்கும்
நல்லுணவைப் போற்றிக் காக்கும்
ஏர்த்தொழிற்குங் குடித்தொழிற்கு மேற்புடைய
கைத்தொழில்க ளியல்பின் மிக்க
சீர்த்தொழிற்கண் படச்செய்தல் நிலங்காப்போர்
தமக்குரிய செயலே யென்று;
நீர்த்தொழிற்குச் சிறந்தானை முகநோக்க
வவனெழுந்து நின்று சொல்வான்.

70. உலகிலிலா மணப்பொருளு மணியணியுஞ்
சங்கணியு முலகம் போற்றும்
இலகிடுபொற் பட்டினொடு மயிர்நூல்பஞ்
சாடைமுத லியன்ற வெல்லாம்
கலநிறையக் கொடுவெளிநா டுற்றிறக்கிப்
பொன்சுமந்து கரையை நோக்கிப்
பலகலங்கள் வருவதும்போ வதுமொழியாக்
கடலையென்றும் பார்க்க லாமே.

71. நானிலத்துப் படுபொருளும் மரக்கலங்கள்
கொடுபோந்து நனிகூர் நல்கும்
மேனிலத்துப் படுபொருளுந் தலைமயங்கி
யொருவருக்கும் விலக்கின் றுகிக்
கோனிலத்துப் படுபொருள்போற் றமிழகமெல்
லாங்கொண்டு கொடுக்க நாளும்
வானிலத்துப் படுபொருளி னொளிபோலப்
பொருளுலையா மனையொன் றின்றே.

---

மேல்-மேற்கு. கோன்நிலம்-அரண்மனை. வான்நிலத்துப் படுபொருள்-சூரியன்.

72. எனவணிகன் மொழியவிறை யியல்வணிக
 ரேறேபொன் னில்லா தெந்த
வினைபுரிய வியலுமதால் வாணிகமு
 முழவினொரு வினையே யாகும்;
புனல்வளமு நிலவளமும் பொருள்வளமுங்
 கடல்வளமும் பொருந்தி மேலும்
மனவளமு நிறையவுள தமிழருக்கீ
 தொருகுறையும் வருவ துண்டோ?

73. கல்வியொடு நிலவளமுங் கைத்தொழிலும்
 வாணிகமுங் கலந்தா ராய்ந்தே
நல்வகையி னவையினிது நடக்கும்வகை
 தனைத்தேர்ந்து நாடாள் வோருக்
கொல்வனவெல் லாங்கூறி யொருங்காய்ந்து
 மனங்களிகூர்ந் துவகொள் மன்னன்
சொல்வளஞ்சே ரிசையரங்கு மாடரங்குந்
 தனித்தனியே சுவைத்தான் மன்னே.

74. புலவருக்கும் பாணருக்கும் விறலியர்க்கும்
 கூத்தருக்கும் பொருந ரோடே
இலகுமிசைக் கருவியர்க்குந் தகுதியுறப்
 பரிசில்பல வியல்பி னீந்து
நிலவுபொலி யோன்பிரியா விடையோடு
 பலசிறப்பும் நேர்ந்தெல் லோரும்
செலவினிது தமிழகத்தைத் தேவியொடுங்
 காத்துவந்தான் சிறப்பின் மன்னே.

இரண்டாவது
இலங்கைக் காண்டம் முற்றிற்று.

---

72. உழவின் ஒருவினை - உழவுபோலச் சிறந்த தொழில்.

# 3. விந்தக் காண்டம்.

## 1. விந்தப் படலம்

### வேறு

1. அரசரும் புலவரு மமைச்சு மண்ணலும்
அரசிய லாய்ந்தத னமைவு கண்டனம்;
உரைசெயு மிக்கதைக் குறையு ளாகிய
விரைசெறி மரமடர் விந்தங் காணுவாம்.

2. மல்லலந் திராவிட வடக்குப் பாங்கரில்
வல்லமர் விந்தமா மலைத்தென் சாரலில்
வல்லியு மரங்களு மாவும் புட்களும்
புல்லிய பெருநிலம் பொருப்பி னின்றது.

3. முல்லையுங் குறிஞ்சியு முறைமை தப்பியே
புல்லியே யிருமையைப் போக்கி யொன்றென
எல்லியின் பகையதா யிருளின் சேக்கையாய்
அல்லவர் மனமென வமைந்தி ருந்தது.

4. சந்தன மரங்களுந் தழைத்த வேங்கையும்
கொந்தலர் செடிகளுங் கொடியு மாம்பலும்
பொந்துறு புதர்களும் புல்லும் புல்லியே
விந்தமு மணமலி விந்தம் போலுமே.

5. இலையெனுங் குழலிடை யிணரைத் தாங்கியே
அலையரு விகளெனு மாடை பொத்தியே
மலையகற் சுனைமலர் மலர்ந்து நோக்குற
மலைமகள் நிற்பபோல் வயங்கு மாயிடை.

---

1. விரை-மணம்.

2. மல்-வளம். வல்-வலி, மேடு. வல்லி-கொடி. பொருப்பின்-மலைபோல.

3. எல்லி-சூரியன், பகல். அல்லவர்-வஞ்சர்.

4. ஆம்பல்-மூங்கில். விந்தம-காடு.

5. இணர்-பூங்கொத்து. வயங்கும்-விளங்கும்.

6. பாவரு மருவிநீர் பாய்ந்து செல்லுதல்
தாவரு மலைமகள் தனது செல்வமாம்,
மாவையும் புன்னையும் வடவர் கோட்புருக்
காவலி லென்றழுங் கலுழ்ச்சி போலுமே.

7. பல்விலை வல்லிகள் படர்ந்த வாயிடைச்
செல்லியர் காறடத் திருகி வீழுதல்
கொல்லிய கட்டிய குறவர் கணணியில்
பல்லுழை மானினம் படுதல் போலுமே.

8. புதரென மரமெலாம் பொதுளி மொய்த்தலான்
மிதவிய பசும்படாம் விரித்தல் போறலாற்
கதிர்புக விடம்பெறுக் கலுழ்ந்து செங்கதிர்
அதரினை நீங்கியே யகன்று செல்லுமே.

9. கானிடை நறுமணங் கமழுந் தூயவெண்
பூநிறங் கண்டிதென் புதிய நம்மவர்
ஆனவின் னிறத்துட னவிர்கின் றாரென
வானிடை மீனினம் மதியை நோக்குமால்.

10. மதியமும் வெண்ணிற மலரின் றோற்றங்கண்
டிதுவென நம்முட னிகலிப் போரிடப்
புதயவோர் பெரும்படை போந்த தென்றுளம்
பதைபதைத் தெழுந்துதன் படையை நோக்குமால்.

11. முடித்திடு வேமென முனைந்து வெம்புலி
அடித்திட வரவெதி ரழன்றி யானைகள்
பிடிக்குலம் வெருவுறப் பிளிறு மோசைகேட்
டிடிக்குல முறுமியே யிரியல் போகுமே.

---

6. பாவரும - பரந்துவரும் கோட்புரு - கொள்ளை, கலுழ்ச்சி-கண்ணீர்.

7. கால்தட்ட, கணணி-வலை. உழை-ஒருவகைமான்.

8. புதா-புல. பொதுளி-தழைத்து. மிதவிய-மிதந்துள்ள. கலுழ்ந்து-அழுது.

9. மதி மீனகளின தலைவனுகையால் பார்த்தன.

10. இகலி-பகை கொண்டு.

11. இரியல்போகும-அஞ்சியோடும்.

12. கழையொடு பிறபிரங் கலித்து வானுறத்
தழையொடு மலரினர் தந்தந்து நுண்கதிர்
நுழைதரு புழையற நுணங்கு காட்டினை
மழையென பின்னினும் மருவி வாழுமே.

13. மடலொடு தழையிலை மலரும் பொங்கரும்
இடைவெளி யின்றியே யிருண்டு கம்மென
அடர்தர வங்குமிங் கசையுங் காட்டினைக்
கடலென முகிலினங் கவிந்து வாழுமே.

14. துன்னிய விலைமரந் துன்தந்த காட்டினை
மன்னிய படியலை மருவி யாங்குறும்
பன்னிறப் பூக்களைப் பகையென் றெண்ணியே
வெந்நிடு வானவில் வெருவி யோடுமே.

15. கோவையொண் கனிகளைக் கொத்துங் கிள்ளைகள்
ஓவியஞ் சுவைகெடு முருவு மோங்குபொற்
பாவையு மிகழ்வுறும் பண்பு மேகலைக்
கோவைய ரிதழிடைக் கொஞ்சல் போலுமே.

16. நீடிய பூஞ்சினை நிமிர்ந்து கைக்கொடு
கோடுயர் களிறுகள் குன்ற மேற்செவல்
மாடமீ துயர்த்திட வண்கை யாடவர்
ஏடணி கொடிபிடித் தேறல் போலுமே.

17. கடுநடை மடங்கலைக் கண்ட யானைகள்
பிடியொடு குன்றிடைப் பெயர்ந்து செல்லுதல்
அடன்மிகு தமிழருக் கஞ்சி மாதர்க
ளொடுவட வாரிய ரோடல் போலுமே.

---

11. கலித்து-எழுச்சியுற்று. புழை-துளை. நுணங்குதல்-செறிதல்.

13. மடல்-மூங்கில் முதலியவற்றின் இலை. பொங்கர்-கொம்பு.

14. வெந்நிடு-முதுகிட்டு, தோற்று.

15. பண்பு-அழகும், ஒளியும்.

17. மடங்கல்-சிங்கம்.

18. பூக்களுங் கனிகளும் பொருந்து காய்களும்
தேக்கிழங் கொடுநறுந் தேனுஞ் சாந்தமும்
மாக்களும் புட்களு மணியும் வேய்நெலும்
காக்குமக் குன்றமங் காடி போலுமே.

19. இனையபல் காட்சிக ளின்னு மெண்ணில
புனைபட வுரைத்திடப் பொழுது கண்டிலம்
அனையசீ ரிடத்தினி லங்கு மிங்குமாய்
வனைபழந் தமிழர்கள் வாழ்ந்து வந்தனர்.

20. அழைபடு தொலைவினி லவர்கள் வாழ்ந்ததால்
கழைபடு தமிழர்கள் கலப்பு நின்றுபோய்
இழைபடு செந்தமி ழியல்பி னீங்கியே
பிழைபடு கொடுந்தமிழ் பேசி வந்தனர்.

21. ஆயிடை யுந்தமி ழகத்த தாயினும்
சேயிடை யொடுதமிழ்ச் செறிவு மின்மையால்
மீயுயர் மலையரண் விறலிற் காத்தலான்
தாயிடைப் பிரிந்தர்போற் றனித்து வாழ்ந்தனர்.

22. கோப்புடை யவிர்மதிக் குடையி னீழனீத்
தாப்புடை வாழ்ந்துவந் தவர்கள் தங்களைக்
காப்பவ ரின்றித்தங் களுக்குத் தாங்களே
காப்பவ ராகித்தற் காத்து வந்தனர்.

23. அலகுற வோம்புபே ரரச ரின்மையாற்
பலசிறு நாடுக ளாகப் பாகுபட்
டுலவுறு கோட்டைக ளுடைய தாய்ப்பல
தலைவரை யுடையதாய்ச் சமைந்தி ருந்ததே.

---

18. வேய்-மூங்கில். அங்காடி - கடைத்தெரு.
19. வனை-அழகிய.
20. அழை படு தொலை-கூப்பிட முடியாத தொலைவு. கழை-இனிமை. இழைபடுதல்-ஒழுங்காதல்.
21. சேயிடை-தொலைவிடம். விறல்-வலி.
22. கோப்பு-அலங்காரம். ஆயிடை-அங்கே.
23. அலகு-வரையறை. உலவு-கேடு.

24. சிதறிய பல்சிறு நாடு சேர்ந்ததாய்
முதரிய பெருவள மொய்த்து முத்தமிழ்
ததரிய தமிழகந் தன்னி னின்றுமே
விதரியே யிருந்ததவ் விந்த நாடரோ.

## 2. ஆரியப் படலம்

### வேறு

1. நாய கத்த தமிழக விந்தமாம்
சேயி டத்த சிறப்பினைக் கண்டனம்;
ஆயி டைப்புகுந் தாரிய ரென்பவர்
மேயி டுக்கண் விளைத்தமை காணுவாம்.

2. மஞ்சு கண்படு விந்த வடக்கினில்
துஞ்சு தண்பனி தோய்மலைத் தெற்கினில்
எஞ்ச நின்ற இடைப்படு பாங்கரில்
வஞ்ச நெஞ்சுடை ஆரியர் வாழ்ந்தனர்.

3. நனிமி குபழங் காலையந் நஞ்சனர்
பனிம லைவட மேற்குள பாங்கரில்
கனிதொ டர்சுரங் காமெனக் காடலைந்
திரிது வந்தன ரிங்கென வோதுவர்.

4. அன்னர் வந்தவ ணுற்றபின் னந்நிலம்
தன்னி கர்தமிழ்த் தாயை விலக்கியே
துன்னு பல்வளந் தோயுந் தமிழகம்
தன்னி னின்று தனித்திட லானதே.

5. மன்னி யங்குமுன் வாழ்ந்தநன் மக்களை
உன்னி வந்ததம் மூறிய சூழ்ச்சியால்
வன்னி லம்படு மட்குடம் போற்சிதைந்
தின்ன லுற்றடி மைப்பட வெற்றினர்.

6. அடங்கி யாரியர்க் காளடி மைப்பட
மடங்கி வாழ்ந்த பழங்குடி மக்களுக்
கிடங்கு சூத்திரப் பட்டம திட்டனர்;
அடங்கி லாரை அரக்கரென் றனர்.

---

24. ததரிய-செறிந்த. விதரி-நீங்கி.
2. மஞ்சு-முகில். கண்படுதல்-தங்குதல்.
5. எற்றினர்-நன்னிலையிலிருந்து கீழே தள்ளினர்.
6. இடங்குதல்-ஒடுங்குதல்.

7. இன்ன தன்மையை யாற்றியே யன்னவர்
சொன்ன தன்மையச்-சொல்லுத லோட்டவர்
இன்ன தன்மைய ரென்றவ ரேமுனும்
சொன்ன நூல்வழி யேயிவை சொல்லுவாம்.

8. தன்ன லமது தாங்க லாற்பிறர்
எந்த வேழம தீங்கிடா ரென்னினும்
பொன்னி னோடு பொருள்கட் டுப்பிறர்க்
கின்னல் செய்வதி லொப்புயிலாதவர்.

9. உட லுழைப்பிலா துண்ணுதற் கெண்ணுநர்
படைவ லியதி லாது படைவலி
உடையர் தம்மையு மூறிய சூழ்ச்சியால்
அடிமை யாக்கித் தலைமைகொ ளவ்வியர்.

10. தாங்க ளன்றி யெவருந் தலைவராய்
ஓங்கல் காண வுடன்படா வுள்ளத்தர்,
தாங்க ளேயறி வாளர் தமையலா
ரோங்கை யென்றெண மூழ்கிய சூழ்ச்சியர்.

11. பண்டு தொட்டய லாரின் பருப்பொருள்
கொண்டு தங்கள் குலத்தொழி லாமென
உண்டு வாழ்வத லாலுரி மைப்பொருள்
கண்ட தில்லையோர் காணியு மில்லையால்.

12. தங்கி யோரிடந் தன்னில் நிலைத்திரா
தங்கு மிங்கு மலைந்து திரியுநர்,
எங்கு செல்லினு மெப்படி யாயினும்
தங்கள் வாழ்வு தமக்கெதுஞ் செய்யுநர்.

13. பேற்றிற் கேற்பப் பறப்பி னிடைப்படும்
ஏற்றத் தாழ்வுடை யீரிரண் டாமின
வேற்று மைப்பட லோடவர் மேவுறு
ஈற்றி னிற்ப டினப்பிரி வும்முளார்.

---

9. அவ்வியர்-பொறாமைக்காரர்.

13. ஈற்றினிற் படுவோர்-மேல்நால்வரும் கலந்து பிறந்த கலப்புக் குலத்தினர்.

14. கன்னி மக்களுங் கன்னி மணந்தயற்
றுன்னி மக்களுந் தோட்டுணை யற்றவோர்
பன்னி மக்களும் பாங்குடை மக்களா
மென்ன வெட்கமி லாதுரை யிம்பியர்.

15. பகுத்து மக்கட் படைத்த படைப்பின்
முகத்து மார்புந் தொடையு முந்தினும்
வகுத்த நால்வரும் வந்தன ரென்றும்பின்
தொகுத்த நால்வருந் தோய்கலப் பென்பர்.

16. மேல்வ குப்பினர் கீழ்கொளல் மேவுங்கீழ்ப்
பால்வ குப்பினர் மேல்கொளல் பாவமென்
றேல்வ குப்பிதே லாவகுப் பிதென
நால்வ குத்துக் கொடுமைசெய் நொய்யவர்.

17. கடையி னத்தின ரோடு கலப்பினர்
அடிமை பெற்றவ ராகையி னிலவர்
முடிமை பெற்ற முதல்வர் மூவருக்
கடிமை யுற்றவர் கற்றலு மற்றவர்.

18. ஒட்டி யோரினத் துற்ற வுரியரை
எட்டி நில்லென் றிகழ்ந்தவர் வாழ்வினை
மட்டந் தட்டி மதிப்பொடு சூத்திரப்
பட்டங் கட்டிப் பழித்திடு பாவிகள்.

19. கடமை யற்றக் கடைக்குல மக்களை
வடிமை விற்றுயிர் வாழ்பணிப் பெண்பெறும்
அடிமை மக்க ளெனச்சொல வன்னரும்
சுடுமை யற்றுத் தொழும்பர்க ளாயினர்.

20. ஒருவர் சும்மா விருந்துண் டுடுப்பவர்,
இருவர் காப்பவர், மூவ ரிரும்பொருள்
தருவ ரீட்டித், தகுந்தொண் டதுசெய்து
வருவர் நால்வரென் றாக்கிய வன்கணர்.

---

14. அயல்துன்னி-அயலினைக் கூடியவள். தோள் துணை-கணவன். பன்னி-பெண். இம்பியர்-ஒழுக்கமற்றவர்.

15. முதல்-அடி.

19. வடிமை - வடிவு, உடல். பணிப்பெண் - வேசை, சுடுமை-சொரணை. தொழும்பர்-அடிமை.

20. ஒருவர் முதலியன முறையே - ஒன்றாங்குலம்,

21. மூத்த ராய முதலவர் மூவர்க்கும்
பூத்த வன்பிற் பொருமைய தின்றியே
பாத்து நாளும் பணிவிடை செய்தலே
சூத்தி ரர்தொழி லாமெனுஞ் சூழ்ச்சியர்.

22. கூலி யின்றியுஞ் சூத்திரக் கும்பலை
வேலை வாங்கலாம் வேதிய ரேனெனில்,
வேலை செய்திட வேதியர்க் கேயிவர்
ஞால மீது பிறந்தனர் நாயனார்.

23. முன்ன ராமுயர் மூவரைச் சூத்திரக்
கன்னி கூடல் கடமையே யாகுமாம்;
பின்னர் முன்னவர் பெண்களைக் கூடிடில்
அன்ன ரைக்கொலை செய்தலே யாவதாம்.

24. இல்லை விட்டகன் றேகி வலிதெனைப்
புல்லு மென்ற முதற்குலப் பூவையைப்
புல்லுஞ் சூத்திரன் பொன்றிட வாண்குறி
கொல்லு கென்னுங் கொடுந்தொழி லாளரே.

25. வலிய வேதியர் மக்களி லோருயிர்
குலைய வேகொலைக் குற்றமே செய்யினும்
செவ்வுக் கீந்தய லூரிற் செலுத்துதல்,
தலையை மொட்டை யடித்தலே சாலுமாம்.

26. ஆய்த லின்றியோர் சூத்திர னைக்கொலை
வேதி யன்செயில் வேத மறிந்தவோர்
வேதி யன்கொள வெண்ணிற வாக்கள்பத்
தீத லேயதற் கேற்ற வொறுக்கையாம்.

27. முதற்கு லத்தா முனிவுறச் செய்குறை
எதற்குஞ் சூத்திரர்க் கீவிரக் கின்றியே
பதைக்க வுள்ளம் படுவன் கொலையொடு
கொதிக்க வின்னுயிர் கோறலே தக்கதாம்.

---

இரண்டாவகுலம் எனவும். (பிரம க்ஷத்திரிய வைசிய சூத்ர) கலப்புக் குலத்தையும் நாலாவதுடன் கொள்க.

21. பூத்த-மிக்க. பாத்து-பகுத்து.
26. ஒறுக்கை-தண்டனை.

28. மாந்தர் தம்மை வகையுறக் காத்திடும்
வேந்த னன்றியவ் வேதியர் தாங்களே
வாய்ந்த குற்ற வழக்கினைத் தீர்த்திடல்
ஆய்ந்த நூன்முறை யாமெனு மல்லவர்.

29. சூத்தி ரர்பொருள் சேர்க்கிற் றொழுதகு
மூத்தர் துன்பத்துள் மூழ்குவ ராதலான்,
பூத்த வப்பொருள் பூசுரர் கொண்டுமே
பாத்து வாழுதல் பண்பெனும் பாவிகள்.

30. அருமை யாம்பொருள் யாவுமே தங்களுக்
குரிய வென்று முலகினர்க் கன்னவை
அருளி னானுகர் வாக்கியு ளேமென்றும்
பொருளி லாது புளுகிடும் பொய்யர்கள்.

31. துன்னும் பூசுரத் தொண்டினைச் சூத்திரர்
பின்னர் நீப்பினிப் பேருல கங்கெடும்;
அன்ன ரையொறுத் தப்பணி யாக்கலே
மன்ன வன்கட னாமெனும் வஞ்சகர்.

32. நாற்கு லத்தவ ருக்குமக் கஞ்சனார்
பாற்ப டுத்த குலத்தொழில் பாங்குடன்
ஏற்ப டுத்தபோ லென்று நடந்திடக்
காற்ப டுத்தலே மன்னன் கடமையாம்.

33. பேறு பெற்ற தமிழர் பிறப்பொருங்
கூறு பட்ட வொழுக்க முடையவர்
மாறு பட்டு வகைவகை யாகிய
வேறு பட்ட வொழுக்க மிகுத்தவர்.

34. ஆள்வி னைக்குறு மான்முத லாகிய
நாள்வி துப்ப நடக்கு முயிர்களைக்
கேள்வி யற்றவை கீழவை யென்றுமே
வேள்வி யென்றுகொன் னுண்ணும் மிதவையர்.

---

29. பாத்து-பங்கியுண்டு.
30. நுகர்தல்-அனுபவித்தல்.
33. ஒருங்கு கூறுபட்ட-ஒன்றாக கூறிய.
விதுப்பு-நடுக்கம். மிதவை-உணவு.

35. பொய்யை மெய்யெனப் பொத்திப் புலவினைச்
செய்யுந் தீயினைத் தேவர் களுக்குறைப்
பெய்யும் வேள்விய தென்னப்பொய் பேசியே
உய்யு மூனுட னுண்டு வருபவர்.

36. பின்னர் மேன்மை பெறவும் பிறர்தமை
அன்ன ரோவென வஞ்சி மதிக்கவும்
அன்னர் தம்வர லாறென வம்மருள்
சொன்ன பொய்யில சொல்லுது மின்னனே.

37. இன்பு றுதக வெய்த விரும்பலும்
துன்பு றுதக தோய வெறுத்தலும்
மன்ப தைக்கியல் பாய மனாநிலை
என்ப தையுணர்ந் தேயதற் கேற்பவே.

38. இன்ப மிக்க திளமை கெடாதது
துன்ப மற்றது தூக்க மிலாதது
தென்பு மிக்கது செம்பொன் னிலத்தது
மன்ப தைக்கலா வானவர் வாழ்வது.

39. தருவொ டானுந் தருமுளத் துற்றதை
மருவுஞ் சாவா மருந்துமோர் நோயிலைக்
கருவு மில்லைக் கவலையு மில்லையாற்
பொருவி லாதது பொன்னுல கென்பது.

40. இளமை தீர்கிலா தென்று மெழினல
வளமை யோடு வனப்பி னியன்றவா
வுளம கிழவின் பூட்டு மியல்பமை
அளவு மேய வரம்பையர் வாழ்வது.

41. இன்னு மின்புறங் கேற்றவை யாவையும்
மன்னி யின்றவை யென்னும் வழக்கிலாப்
பொன்னு லகிற் பொருந்திவாழ் தேவர்கள்
என்னுங் கண்க ளிமைத்த லிலாதவர்.

---

38. தென்பு-இனிமை, அழகு, மனத்தெளிவு.

39. தரு - கற்பகத்தரு முதலியன. ஆன் - காமதேனு. உளத்துற்றதை தரும்-விரும்பியதைக் கொடுக்கும். சாவா மருந்து-அமிழ்து. பொருவு-ஒப்பு.

40. இயன்று அவா வு உளம்-

41. என்னும்-என்றும்.

42. எண்ணி யவுரு வோடுல கெங்கணும்
நண்ணி வார்மன நாடிய யாவையும்
பண்ணு வார்மன் பதினொரு மூவராம்
விண்ண வர்வழி யெவிரோர் தாமென்பர்.

43. மூவ ரோடறு மூவரு முப்பத்து
மூவ ரெண்டிசை மூதருந் தாங்குமிப்
பூவர் தம்மைப் புறந்தர வுந்தபூத்
தேவ ரென்றுபொய் செப்பும் புளுகர்கள்.

44. இன்ப மற்ற திழிஞர்கள் வாழ்வது
துன்ப மிக்கது தோய்புன் மலத்தது
புன்ம லப்புழுப் புல்லியே நச்சுயிர்
தென்பு லத்திடர் செய்யு நிரயமே.

45. ஈவி ரக்கமி லாத கொடியவர்
கூவக் கூவக் கொலைபுரி வன்கணர்
ஆவி யைக்கொ டலைப்பவர் வாழ்துயர்
ஓவி லாத நிரய வுலகமே.

46. அறம்பு ரிந்தவர் பொன்னுல காளுவர்,
மறம் புரிந்தவர் வைகுவர் வல்லிருள்;
அறந்த மக்களித் தன்பொடு பேணுதல்,
மறந்த மைமதி யாமையென் வஞ்சகர்.

---

42. பதினொரு மூவர்-முப்பத்துமூவர். 12 சூரியர். 8வசுக்கள். 11 உருத்திரர். முப்பத்து மூன்று கோடி யென்பர்.

43. மூவர்-அயன், அரி, அரன். அறுமூவர்-சாரணர், சித்தர், விஞ்சையர், பைசாசர், பூதர், கருடர், கின்னரர், இயக்கர், கந்தருவர், சுரர், தைத்தியர், நாகர், ஆகாசவாசர், போக பூமியர், முனிவர், நிருதர், கிம்புருடர், விண்மீன். எண்டிசை மூதர்-எண்டிசைகாப்போர்-இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். மூதர்-முதியோர்-தங்கள் முன்னோர். பூவர்-இவ்வுலகினர். புறந்தருதல் - பாதுகாத்தல். பூவில் வாழ்தலால் பூதேவர். பூ-உலகம்.

44. நிரயம்-நரகவுலகம். மலப்புழு, நச்சுயிர் முதலியன இடர் செய்யும் தென்புலத்தது நிரயம்.

46. ஆளுதல்-இன்புற்று வாழ்தல். இருள்-நிரயம். மறம்-பாவம். என்-என்றுகூறும்.

47. ஆக்க வும்பின் னழிக்கவும் வல்லதா
வீக்க தீமொழி மேவுதம் மேலவர்
நீக்க மின்றி நிலைத்தவ ரென் றுமுத்
தீக்கை யாளரென் றும்புகல் தீக்கையர்.

47. தேவ ரோடுமத் தேவர்க்குந் தேவராம்
மூவ ரோடு முனிவர் தொடர்புகொண்
டாவ தாக்கி யவரிங் கிவரங்கும்
போவ ரென்றும் புளுகும் புரட்டர்கள்.

49. தேவர் தங்கள் திருவிறக் கமென்றும்
தேவ ரோடு திருமண முண்டென்றும்
மாவும் புள்ளு மரமென்று மற்றுயிர்
யாவும் பேசின வென்னு மளப்பர்கள்.

50. தாய்க்கு லத்தினர் தம்மையே தேவர்க
ளாக்கி மக்கள்செய் யாதன செய்ததா
வாய்க்கு வந்த படியெலா மக்களை
ஏய்க்க வேபொய் யியம்புமே மாற்றினர்.

51. இயலி லாதவை யெண்ணிலை தம்மவர்
செயல தாக்கித் தெறித்துப் பழங்கதை
பயில வாக்கிப் பகுத்தறி வோட்டியே
மயல வாக்கி மதிப்படை வஞ்சகர்.

52. இன்னு மென்னென வோவள வின்றியே
முன்னுக் குப்பின் முரண்படச் சொல்லியே
அன்ன யாவுந்தெய் வத்தொடர் பானதம்
முன்ன வர்செய லென்றிடு மோசகர்.

---

47. வீக்க-விரைந்து பற்றல்ல. தீமொழி-சாபம். மேலவர்-முனிவர். முத்தீ-ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசையங்கி. தீக்கையா-தீய ஒழுக்கமுடையவர்.

49. திருவிறக்கம்-அவதாரம் அளப்பர்-பொய்யர்.

50. தாய்க்குலத்தினர்-தமமவர்.

51. இயல் இலாதவை-தகுயற்றவை-மக்களால் செய்ய முடியாதவை. பழங்கதை-புராணம. மயல-மயக்கமுடைமை.

53. ஒன்ற தன்மதிப் புற்ற நொடியிலே
பொன்ற நின்ற புனுகு புரட்டுகள்
ஒன்றி லாதெடுத் தோதிட முற்படின்
சென்ற தேயொரு தீயநூ லாகுமே.

54. அறைய வேண்டுமோ வன்னரே செய்தன
மறையி னோடு மனுமுத னூல்களிற்
குறையி லாது கொளக்கொள ஊறல்போல்
நிறைய வுள்ளன கண்டைய நீங்குமின்.

## வேறு

55. அத்தகை யவட வாரியர் தம்மில்
மூத்திய கல்வி முதியவர் சில்லோர்
மைத்தலை தோய மணித்தலை காய்விந்
தத்தினை நாடித் தனித்தனி வந்தார்.

56. வந்தவர் தம்மை மணித்தமிழ் மக்கள்
அந்துவ ராடையு மங்குடுக் கையும்
கொந்திய நீடவக் கோலமுங் கண்டே
எந்தவூர் யாவ ரெனவின வுற்றார்.

57. மாடுயர் விந்த வடக்கினி லுள்ளோர்
தாடக வாற்றுந் தவநிலை யாளர்
நாடியே யுங்கணன் னாட்டினைக் காணக்
கூடினே மென்று குறிப்பி னுரைத்தார்.

58. ஆயவர் தம்மை யருந்தமிழ் மக்கள்
தாயினு மன்பு ததும்ப வழைத்துப்
போயவ ரில்லிற் பதுவிருந் தாற்றி
நேயர்கா ளிங்கு நிலைக்குக வென்றார்.

---

53. பொன்ற நின்ற-பொன்றும் தீயநூல்-அச்செயலெல்லாம் தமிழர்க்குத் தீமையே யாதலின் தீமையைக்கூறும் நூல்.

54. ஊறல்-ஊற்று.

55. தலைமணி காய்-மலைமுகட்டில் மணிகள் ஒளிவீசும்.

56. துவர்-காவி. குடுக்கை-சுரைக்குடுவை, சிறு செம்பு. கொந்திய-மிக்க.

57. தாடக-முயற்சித்த தமிழ் தெரியாதாகையாற் குறிப்பால் கூறினர்.

59. அங்கவர் தம்முட னன்பி னளாவித்
தங்கி யிருந்து தமிழ்மொழி கற்றும்
மங்கல மேய வளம்பல கண்டும்
எங்கிது போலென வெண்ணி யுறைந்தார்.

60. அங்ஙன மேயவ ரப்புற நாட்டில்
தங்கி யிருந்த தமிழர்க ளோடும்
பொங்கிய வன்பு பொருந்த வளாவி
எங்க ளவரென வின்பொ டிருந்தார்.

61. இன்னவ ரிங்ஙன மின்பொ டிருப்ப
முன்னவர் போல முறைமுறை யாகப்
பின்னருஞ் சில்பல பேர்க ளடைந்து
நன்னலஞ் சேர்புற நாட்டி லுறைந்தார்.

62. மற்றவர் தம்மையும் வண்டமிழ் மக்கள்
முற்றிய வின்ப முகத்துட னேற்றுப்
பெற்றவர் போலப் பெருவிருந் தூட்ட
உற்றவ ராக வொருங்குற வாழ்ந்தார்.

63. ஆயிடை யுள்ள வரசர்க ளோடும்
போயுற வாடிப் புலம்பெய ராத
நேயர்க ளாகி நிழலென நீங்காத்
தாயினு மன்பு தழைப்பெற வாழ்ந்தார்.

64. என்னிவர் தங்க ளிணையிலி யன்பு
தன்னைநம் மூரவர் தானறி வாரோ?
பொன்னல வின்னும் புதியவர் வேண்டின்
இன்னுயி ராயினு மீகுவர் போலும்.

65. கண்மையி னோடு கருவினி லேயே
வண்மையு மன்பும் வருவிருந் தோம்பும்
தண்மையுஞ் சால்புந் தகைமையு நண்பும்
உண்மையில் மேயவ ரொண்டமிழ் மக்கள்.

---

65. கண்மை - இரக்கம். வண்மை-கொடை. தண்மை - மென்மை.

66. நன்னலமேயுவோர் நாளிலே யீங்கு
துன்னிட வுள்ளந் துணிந்தது போலும்,
மன்னியே யீங்கு மகிழ்வொடு வாழ்தற்
கென்னினி யென்றவ ரெண்ணியே வாழ்ந்தார்.

67. இப்படி நாள்பல வேகவே சில்லோர்
அப்புற நாட்டி னகன்றக நாட்டின்
உப்புற மெங்கணு முற்றவர் பின்னர்
நப்பெரு செந்தமிழ் நாட்டையுங் கண்டார்.

68. தாவில் வளத்த தமிழக மெங்கும்
மேவியே யின்பம் விழுத்தக வெய்திப்
பாவல ரோடும் படிப்படி யாகக்
காவல ரோடுங் கலந்துற வானார்.

69. செந்தண்மை பூண்டு திகழுயிர்க் கெல்லாம்
பொந்திக ளென்னப் பொதுநலஞ் செய்யும்
அந்தண ரென்னு மறிவர்க ளோடும்
சிந்தை கலந்து தெளிந்துற வானார்.

70. அருந்தியே நல்விருந் தாய்தமிழ் கற்றும்
பொருந்தவே யாரியப் பொய்க்கதை சொற்றும்
இருந்தன ரிப்படி யேபல ரின்னும்
பொருந்தவே வந்து புதுக்குடி யானார்.

71. மூப்பின ரான முதியரே யன்றி
ஏர்ப்படு மேனி யிளையரும் போந்து
சீர்ப்படு காதலர் சீர்ப்பட வாற்றும்
பார்ப்பன வேலையும் பார்த்தனர் சில்லோர்.

72. இங்ஙனம் நாள்பல வேகிட வேக
மங்கல மக்கள் மனையொடு போந்து
கொங்கலர் கானற் குடிசைகள் கட்டி
இங்குமங் காக விருந்துமே வந்தார்.

---

66. மன்னி-நிலையாக.
67. உப்புறம-நடு. ந-சிறந்த.
69. பொந்தி-உடல்; உயிர்க்கு உடல் போன்றவர்.
72. கொங்கு-மணம், தேன்.

73. இன்னணம் நந்த மிராவணன் றோன்றும்
முன்னர்பல் லாண்டுகள் முன்னர தாகப்
பின்னரு முன்னரும் பின்னரு மாக
இன்னல் விளைத்த வியல்பினைக் காண்பாம்

### வேறு

74. இவ்வகையவ் வடவர்மனைத் துறவிகளாய்த்
தமிழ்கற்று பின்னூ லாய்ந்தும்
செவ்வியதென் றுரியப்பொய்க் கதைபுகன்று
மந்தணர்போற் செம்மை பூண்டும்
எவ்வியல்புந் தம்மியல்பென் றேபயின்றுந்
தமக்குரிய வியல்பை யார்க்கும்
ஒவ்வியதாம் படியெளிதி லங்குமிங்குஞ்
சிலகூறி யுவப்புண் டாக்கி.

75. தஞ்சமய நெறிகளைச்செந் தண்மையுட
னறனிழுக்காச் சால்பு தாங்கும்
நெஞ்சுடைய வறிவரொடு புலவருமாங்
கிருக்குமென நினைக்கு மாறு
விஞ்சியதஞ் சூழ்ச்சியினாற் சுவையொடுகற்
பனைக்கதையா விளம்பி யந்த
நஞ்சனைய வஞ்சகர்கள் மன்னரையு
மவர்களொடு நம்பச் செய்தார்.

76. நீங்கரிய வுறவினுந்தோ ழமைகொண்டு
முடியரசும் நிலைனுள் வோரும்
ஓங்குதமிழ் நாவலரு மந்தணரு
மற்றவரு முவப்பக் கூடி
யாங்கிருப்ப வன்னொரு மந்தணரி
னினமாக வயன்மை நீங்கப்
பாங்குடனே தம்மவரீங் குறற்கான
வழியையெலாம் பார்த்து வந்தார்.

---

73. பின்னரும்-தோன்றிய பின்னரும். முன்னும் பின்னும்-மறுபடியும் மறுபடியும்.

74. செம்மை - புலவுண்ணாமை முதலியன. இயல்பு-ஒழுக்கம்.

75. விஞ்சிய-மிக்க. அவர்கள்-அறிவரும், புலவரும்.

76. கூடியாங்கு-கூடி. "ஆரியர் குடியேற்றத்துக்கும்,

77\. இங்கிவரிப் படியாக வகநாட்டில்
வாழ்ந்துவர; இலைவேய் குச்சிற்
றங்கிமனை மக்களொடுந் தனியாயும்
புறநாட்டிற் றழைப்ப வாழ்ந்தோர்
அங்குறையுந் தமிழரிடந் தவநிலையா
ரெனக்கூறி யவர்கா ணாமல்
தங்கள்குலத் தொழிலான கொலைத்தொழிலும்
புலைத்தொழிலுந் தாமேற் கொண்டார்.

78\. அதையறிந்த பழந்தமிழ ரீதென்ன
கொடுமையென வன்னா ராய்ந்து
புதைபொருளாய்ப் பொய்பொதிந்த புன்மையதாம்
புதுமையினைப் புளுகிக் கட்டுக்
கதையினைமெய்க் கதையென்று நம்பிடவே
வேள்வியென்றுங் காணா வானிற்
சிதைவறியா திருக்கின்ற தேவருண
வாமென்றுந் திரிபாய்ச் சொன்னார்.

79\. ஈதென்ன புதுமையநா மூண்பதுபோய்
வான்வாழ்வார்க் கெவ்வா றாணும்
சூதிதுவே வானோரை யெங்குகண்டீர்
ஒல்லுவதோ சொல்லும்? மேலும்
ஏதெனினுங் கொல்லுவது பொல்லாதாம்
புலையுண்டீங் கிருப்ப தேலாப்
போதுதிர்நுந் தாயகத்தே யிலைப்புலையென்
றுவீங்கு பொருந்து மென்றார்.

80\. அன்னாரு மிலையென்றே தலைமறைவாய்
நிலவுயிரை யந்தோ கொன்றே
முன்னேபோ லுடல்கொழுக்க வுண்டதுட
னமையாது முறையொன் றில்லார்
பின்னாளில் வெளிப்படையா யுயிர்கொன்று
வேள்வியது செய்தே யார்க்கும்
இன்னாத செய்தறியாத் தமிழ்நாடர்
பெரும்பகைக்கோ ரிலக்கா னார்கள்.

---

ஆரியக்கலைவளர்ச்சிக்கும ஆரிய முனிவர்கள் திரைமறைவில் இருந்துகொண்டு முக்கியமான உதவிபுரிந்து வந்தார்கள்."
(இராவணப்பெரியார்-59-பக், H. S. பூரணலிங்கம் பிள்ளை.)

85. நெஞ்சிலுறவில்லாத வடமன்னர்
முடிவில்வெரிந் நெஞ்ச மாகப்
பஞ்சுபடாப் பாடுபட்டுப் பறந்தோட
முனிவருளம் பதைத்துப் பாங்கில்
வஞ்சனைசெய் தேதமிழ மன்னர்களை
யொழிக்கவிருள் மனக்கொண் டவ்வா
றஞ்சினவர் போனடித்தை யோகூடிக்
கெடுத்தார்க ளயலா ரம்மா.

86. இன்னுகை தமிழருள வாற்றமிழ
மன்னவர்த மிறுவாய் கண்டும்
அன்னார்மெய்க் காப்பின்றித் தனித்தவிடத்
தடுத்தொழித்து மன்னார் வாழ்ந்த
பன்னூறு கோட்டைகளை யெரியூட்டிப்
பாழ்படுத்தும் பழிக்கஞ் சாதார்
உன்னுத கொடுமையெலாஞ் செய்துதமி
ழரசர்களை யொழித்தா ரந்தோ.

87. மெய்வகைய வலவேது மறியாத
தமிழ்மக்கள் விடுபா டாகிச்
செய்வகைய வினவென்று தெரியாமற்
றுயிழுந்த சேய்போ லேங்க
ஐவகைய சூழ்ச்சிகளி லொருசிறிதுந்
தவறுமலவர்கை யாணவே
உய்வகைய விந்தநாட் டரசர்களைப்
பெரும்பாலு மொழித்தா ரம்மா.

88. ஈங்குவட வாரியர்கள் செய்நன்றி
கொன்றவருக் கியல்பா யுள்ள
ஓங்குமிழி குணஞ்செயலால் வருகவெனக்
கொண்டுவிருந் துவக்க வூட்டி
நீங்கரிய வுறவினராய் நிலைத்திருக்கச்
செய்ததனை நினைததுப் பாரா
தாங்குகொலை வேள்வியினுல் தமிழர்குலப்
பகைவர்களா யமையுங் காலை.

---

87. ஐவகைச்சூழ்ச்சி-நட்புபபிரித்தல், நட்புக்கூட்டல், அடுத்துக்கெடுத்தல், பொருட்கேடு, ஆராயாது செய்தல்.

89. கொலைவளத்துக் குலகினிடை நடமாடு
முயிர்கொல்லுங் கொடுமை வாய்ந்த
புலைவளத்துக் கமைவேள்வி யதைப்போக்கித்
தமிழகத்தைப் புனித மாக்க
மலைவளத்துக் கிடைபொலியும் இடைவளநா
டதைக்காத்து வருமூ தாட்டி
கலைவளத்துக் கறிவுதருந் தாடகைப்பேர்த்
தமிழரசி கருத்துட் கொண்டாள்.

90. கொண்டகருத் தினைமுடிக்குங் குறிப்புடையா
ளதற்குதவி கொள்ள வேண்டி
உண்டுகொழுத் தாரியர்செய் புலைத்தொழிலோ
டருந்தமிழர்க் குறுற்றுந் தீங்கை
எண்டிசையும் பரவுதமி ழகமுழுது
மொருகுடைக்கீ ழினிது காக்கும்
திண்டிறல்சேர் தென்னிலங்கை இராவணற்குத்
தூதுவரால் தெரிவித் தாளே.

91. தென்னிலங்கை யடைந்துதமிழ்த் தூதுவர்கள்
ஆரியர்செய் தீமை யெல்லாம்
இன்னதென வுள்ளபடி யெடுத்துரைக்க
மாமன்ன னினிது கேட்டுத்
தன்னுறவுக் கிடையூறு செய்வடவர்
பெருங்கோட்டந் தமைய டக்கி
மன்னுதமிழ்ப் பெருமக்கள் தமையினிது
காத்தருள மனத்துட் கொண்டே.

92. ஆன்றதமிழ் மறவரொடு சுவாகுவெனும்
படைவலனை யனுப்ப; வன்னான்
தேன்றவழு மலர்க்காவந் திகழுமிடை
வளநாட்டைச் சென்று கண்டு
மீன்றவழு மணிமாடத் தெருக்கடந்து
திருக்கோயில் மேவி நாளும்
சான்றவர்கள் புகழ்ந்தேத்தும் தாடகையைக்
கண்டுதொழத் தமிழ்மூ தாட்டி..

93. வருகவென வரவேற்று முகமனுரைத்
திலங்கையர்கோ மானைப் போற்றித்
திருவுடையீர்! ஒருபுடையா யென்மகன்மா
ரீசனுக்குத் திடமாய் நீங்கள்

தருவளரு மிடைவளத்தைக் காப்புடையீ
ராயமர்ந்து தமிழ்வாழ் மக்கட்
கொருகுறையு மில்லாமல் ஆரியர்கொன்
றுண்ணும வொழிப்பீ ரென்றாள்.

94. அரசிதிரு மொழிப்படியே யாங்காங்கே
யருங்காவ லமைத்தே யன்னார்
கரிசனமா யிருந்துகொலை புரியாது
மவர்சோமக் கள்ளுண் ணாதும்
வரிசையுட னேகாத்து வருகையிலே
தமிழர்பகை வாங்கத் தந்த
பரிசெனவே கோசிகப்பே ராரியனும்
வேள்விநிலை பண்ணுங் காலை.

95. அதையறிந்த தமிழரசி யாள்விட்டுத்
தடுப்பவவ னகலா னாக
அதையவர்கள் வந்துசொலப் படைத்தலைவ
னிளவலுட னங்குச் சென்று
முதியவிது முறையல்ல உயிர்கொன்று
பகைதேட முயல வேண்டாம்
இதையொழிதி யெனவவனு மில்லையெனப்
பெயர்ந்ததற்பி னியற்ற லானான்.

96. கொதிக்கின்ற நெய்யினிலே யிட்டுவறுத்
துணவுயிரைக் கொல்லும் வேலை
பதைக்கின்ற அவ்வுயிரைக் காப்பாற்றத்
தாடகையும் படையோ டேகிச்
சிதைக்கின்ற வுயிர்களை யவிழ்த்துவிட்டு
நெய்காயுந் தீய வித்துப்
புதைக்கின்ற வயிறெரிய வேள்விசெய
முடியாது புறம்போ மென்றாள்.

97. அம்முனியு முளநொந்தவ் விடத்தைவிட்டுத்
தம்மவரோ டகன்றான், பின்னர்
இம்முறையே தன்னாட்டி லிடைவேள்வி
யெனும்புலைமை யில்லா வண்ணம்
செம்மையுடன் பார்த்துவரத் தாடகையுந்
தனிக்காப்புச் செய்தே காத்தாள்
இம்முறையி னீங்காக; இனிவடக்கில்
தசரதன தியல்பு காண்பாம்.

# 3. தசரதப் படலம்

## வேறு

1. ஆமி தென்றறி யாவட வாரிய ரடைந்து
காமு றுந்தமி ழகமதி லமைந்தமை கண்டாம்;
கோம கன்பெரு கோசல நாடெனக் கொண்ட
காமு கன்புதுத் தசரதன் இயல்பினைக் காண்பாம்.

2. மரம டர்ந்தமா விந்தமா மலையதன் வடக்கில்
பரவி வாழ்ந்தனர் ஆரியர்; அவர்வளர் பதியில்
சரயு வென்றிடும் பேரியாற் றங்கரை தன்னில்
அரண மைந்ததொன் றுருமா லயோத்திமா நகரம்.

3. அவ்வ யோத்தியில் குறுநில மன்னனா யமர்ந்தே
எவ்வ மின்றியே யாண்டபேர்த் தசரத னென்பான்
கொவ்வை வாய்மொழிக் கோசலை யெனுங்குறுங் கொடியைச்
செவ்வி தாய்மணம் புரிந்துநன் மனையறஞ் செய்தான்.

4. கன்னி கோசலை யோடவன் காதலிற் களித்துச்
சொன்ன காமநூல் முற்றுறு துறைபொலாந் தோய்ந்தே
அன்ன வாறுநாள் செல்லவே குறுநில மாளும்
மன்னன் மாமகள் சுமத்திரை தன்னையும் மணந்தான்.

5. இருவ ரோடமர்ந் தின்புற லோடமை வில்லான்
பருவ மங்கையர் சிலரொடு மின்பினைப் பகிர்ந்தே
மருவி வாழ்ந்தவன் வருகையில் தனதுதோள் வலியால்
அருகி ருந்தபல் நாட்டையும் வென்றுயர் வடைந்தான்.

6. மறைவ லோர்மறை முறையென வகுத்தவவ் வழியே
நிறைய வேள்விகள் செய்துமன் னூர்குடி நிறையக்
குறைவி லாப்பொருள் கொடுத்துமே குறுநில மன்னர்
திறைகொ டுத்திறை யாக்குபே ரரசனாய்த் திகழ்ந்தான்.

7. இன்ன வாறவன் பெரும்பொருட் கிறைவனா யெழிலார்
துன்னி யின்னலச் சுவைதர வின்பிலிற் றோய்ந்தும்;
அன்ன மென்பணைக் கோசல நாட்டிறை யாயும்
முன்னர் மன்னனாய்த் தசரதப் பெயரொடு வாழ்ந்தான்.

8. அருமை யானபே ரரசுறு மடைந்துசிற் றரசர்
பெருமை யாகவே வணங்கிட வுளமகிழ் பெருக
ஒருமை யானசிற் றரசரின் மருகனென் றேனும்
உரிமை வாழ்வினை யிழிவென வெறுத்திடு முளத்தான்.

9. வடிவ மங்கையர் பலருட னிருவரை மணந்தும்
அடிய சைந்துடல் தளர்கிழப் பருவம தடைந்தும்
படியி லேதனை யொத்தவோர் மன்னவன் பயந்த
கொடியை வேட்டிட வேண்டுமென் றுளத்திடைக்
குறித்தான்.

10. குறித்த கொள்கையை முடித்திட மனத்திடைக்கொண்டு
செறித்த பல்வளஞ் சேர்ந்தநா டனைத்தினுந் தேடிப்
பறித்த முல்லையில் வண்டெழுந் தின்னிசை பாடும்
மறித்த வேல்விழிக் கேகயன் கொடியென மதித்தான்.

11. உள்ள வாறவன் எண்ணிய படியமைந் துளத்தைக்
கொள்ளை கொண்டதக் கேகயன் கொடியெனக்
கொண்டே
அள்ளு மொய்வளக் கேகய மன்னனை யண்மிக்
இன்னை மென்மொழிப் பாவைகை கேசியைக் கேட்டான்.

12. கேட்ட மன்னவன் நாணுறக் கேகயன் கிளப்பான்,
வேட்ட பல்வகை வெள்வியாற் பெரும்புகழ் வேய்ந்த
கோட்ட மில்மனக் கோசல நாட்டுயர் கோவே!
வாட்ட டங்கருங் கண்ணியைக் கொடுத்திட மறுக்கேன்.

13. மன்னர் மன்னவ! வுனையலால் நங்கையாம் மண்ணில்
பின்னர் யாருளர் என்மகட் குரியவர் பேசில்?
இன்னு முன்னருந் திறலினுக் கேற்றவ னெனது
கன்னி யென்பதை யறிந்தவட் கொடுப்பதென் கடனே.

14. சுருண்ட மென்குழற் செய்யவாய்க் கருவிழித் தோகை
இரண்டு பேர்களை மணந்துளாய்; இருக்கினு மெந்தன்
மருண்ட மான்விழி மங்கையக் குறுநில மன்னர்
இரண்டு பேர்பெறுஞ் செல்வமென் பதிற்றடை
யென்னே?

---

11. மொய்-நிறைந்த.
12. வாள் தடம கண்-வாளபோன்ற பெரியகண்.

15. மன்னர் மன்னவ! என்குலக் கொழுந்தினை மதித்தே
அன்ன ரோடொரு நிகருறக் கொடுத்தலு மழகோ?
பின்னு மூத்தவள் பிள்ளையன் றேமுறை பிழையா
மன்ன னுருவன் கோசலை யாண்டிட மதிப்பாய்.

16. பெருமை யின்றியும், பெற்றெடுத் திடுமுதற் பிள்ளைக்
குரிமை யின்றியும் மனைவியென் றழைத்திட வுனக்கென்
அருமை யாய்வளர்ந் தென்குலம் விளக்குமென் னன்பை
இருமை மேற்கொடுத் திடேனெனக் கிளந்தன னேந்தல்.

17. இன்ன வாறுகே கயனவ னெதிர்மறுத் திடவே;
உன்னு மோர்பொருள் கைவரப் பெற்றிடா வொருவன்
என்ன வேதச ரதனொரு துணிவிலா தினைந்து
பொன்னை யெவ்வகை யடைகுவே னெனமனம் புலம்பி.

18. யாது சொல்லினு மதன்படி நடக்குவே னிலவா
போதை வென்றவாய்க் கொடியிடை வரிசிலைப் புருவச்
சூத மென்றளிர்க் குளிருடல் தளிரடிச் சுவைத்தேன்
மாதர் மெல்லியல் தனைக்கொடுத் தென்குடி வளர்ப்பாய்.

19. கரிச னத்துடன் தசரத னிவ்வகை கழற,
அரச கேட்டியுன் சொற்படி முடிக்குவை யாயின்
வரிசை யாகவுன் கோசல நாட்டையென் மகட்குப்
பரிச மாகவின் றேதரின் மணமுமப் பரிசே.

20. பெருமை யானவுன் நாட்டையுன் வலியினல் பெரிதும்
அருமை யானவுன் முயற்சியா லீட்டினை யதனுல்,
உரிமை யானதே கொடுத்திடக்; கொடுப்பதா வொப்பித்
தருவ துண்டெனில் நானுமென் கொடியினைத் தருவேன்.

21. என்று நன்மொழி புகன்றிடக் கேகயன், ஏந்தல்
நன்று நன்றியா னப்படி யேயெந்தன் நாட்டை
இன்றை யேயுன தின்மொழிக் கினிதனக் கீவேன்
மன்றல் செய்தெனை வாழ்விப்பா யென்றனன் மன்னன்.

---

16. இருமைமேல்-இருமனைவிகளிருக்கப் பினனும்.
17. இனைந்து-வருந்தி.
18. சூதம்-மாமரம்.

22. உறுதி கூறவே கேகயன் சரியென வொத்துப்
. பெறுதி யென்றனன்; தசரத னுளமகிழ் பெருகி
அறுதி யாகவோர் நாட்குறித் தந்நா ளதனை
அறைதி யென்றன னின்றையே மணமுர சதனை.

23. சோனை வார்குழல் துடியிடைப் பிடிநடைத்
துவர்வாய்த்
தேனை வார்தருங் கிளிமொழி பெருமணத் திருநாள்
ஏனை நாளல வீரிரு நாளையே யென்று
யானை மேலணி யானைமா மணமுர சறைந்தான்.

24. முரச றைந்தநல் லுள்வர முதுநக ருள்ளார்
வரிசை யாகநல் னகரையொப் பனைசெய மணித்தார்
அரச ரோடுற வேனரும் போந்திய லழகுப்
பரிசி தேயென வந்தமர்ந் தார்மணப் பந்தர்.

25. பல்வி யங்கறங் கிடமறை யோர்மறை பாட
வல்லி யைத்திரு மணமக ளாய்க்கொடு வந்தார்;
மல்ல லங்தொடைத் தசரதன் புதுமண மகனாய்
நல்வி யன்றில கிடுமண வறையதை நண்ணி.

26. செந்த முற்கரி யாகவுன் றிருவனள் பெற்ற
மைந்த னுக்குரித் தாகெனக் கேகயன் மகட்குச்
சொந்த நாட்டினைப் பரிசமாத் தூயநீர் வார்த்துத்
தந்து நின்றிடக் கேகயன் தன்மகட் டந்தான்.

27. பெரிய னைகே கயன்றரு வரிசையைப் பெற்றே
அரிவை யோடவன் அயோத்திமா நகரினை யடைந்து
மருவு மூவரோ டினும்பல மாதரை மருவி
இருவி சும்பிடை மதியமீன் போற்பொலிந் திருந்தான்.

## 4. மகப்பேறு படலம்

### வேறு

1. மாகயற் கண்ணி செல்வ மனைப்பெருங் கிழத்தி வாகைக்
கேகயன் செல்வி யான கிளிமொழிப் பாவை யோடும்,
தோகைகோ சலையி னோடும், சுமத்திரை யொடுமற்
றுள்ள
பாகெனு மொழியா ரோடும் பயனுகர்ந் திருந்தான்
மன்னன்.

---

26. கரி-சான்று.

2 ஒள்ளிலை வேலான் மாத ரொடுதிளைத் துலவா வின்பும்
கிள்ளியே நுகர்ந்து தொண்டு கிழவனு மாயுமே யன்னான்
கள்ளவிழ் குழலார் காமக் களிப்பிய ரொருத்திக் கேனும்
பிள்ளைக ளில்லா தன்னான் பெருந்துயர்க் கடலு
ளாழ்ந்தான்.

3. சொற்றிறம் பழுத்து மூத்த சுமந்திரன் என்பா னோடும்
மற்றைய வமைச்ச ரோடும் குலகுரு வசிட்ட னோடும்
முற்றிய சூழ்ச்சி வல்ல முதியரே! எல்லாப் பேறும்
பெற்றுளேன் ஏனும் பிள்ளைப் பேறது பெற்றி லேனே.

4 பொன்னுள ரேனு மற்றைப் பொருளுள ரேனும்
பின்னர்
என்னுவர் பிள்ளை யில்லா ரெனுமுது மொழிபொய்
யாமோ?
முன்னுள துன்ப மெல்லாம் முறையொடு போக்கி
யின்பம்
இன்னிளஞ் சிறுவ ரல்லால் யாவரே கொடுக்க வல்லார்?

5. உண்ணும்போ துவப்பை யூட்டும், உறுபொரு ளில்லை
யென்றுள்
எண்ணும்போ துவப்பை யூட்டும், இளைதுடல்
களைத்து வேலை
பண்ணும்போ துவப்பை யூட்டும், பகையிடத் தாழ்ந்து
சீற்றம்
நண்ணும்போ துவப்பை யூட்டும் நற்பொருள் மக்க
ளன்றோ?

6. மக்கள்மெய் காண்டற் கின்பம், மழலைச்சொற் கேட்டற்
கின்பம்,
மக்கள்மெய் யதைமுத் தாடி வகைபடச் சுவைத்தற்
கின்பம்,
மக்கள்மெய் தீண்டற கின்பம், மருமண முகர்தற் கின்பம்
மக்களைப் புலனுக் கின்பம் வழங்கியே மயக்கு வாரே.

7. தோள்வலி யாலே வேண்டும் தொகுவளந் திரட்டி
யொன்னார்
வாள்வலி யதனை யோட்டி மன்பதை காவா நின்றேன்;
'ஆள்பவ ரின்றி விட்டே யகன்றனன்' எனுஞ்சொல்
லேகக்
கேள்வியில் வல்லீர்! நல்லீர்! இளக்குவீ ரெனவே
மன்னன்.

8. மற்றிவை யுரைக்க மன்னன் வசிட்டன்மன் னவனைப்
பார்த்துக்
கொற்றவா! அகத்துட் கொண்ட குறைதனை
யொழித்தின் பாக்கும்
நற்றிற மதனை வேதம் நவின்றுள ததனை யானும்
சொற்றிடக் கேட்பா யென்று சுவையுறச் சொல்ல
லானான்.

9. யாதெனில், பிள்ளை யில்லா ராங்கதை யடைய முன்னாள்
வேதம துரைத்த மேலோர் விளக்கமாய்ப் பின்னோர்க்
காக
ஓதியே வைத்துப் போனார் உரியதோர் குதிரை வேள்வி;
கோதிலாய்! அதனைச் செய்து குலத்தினை விளக்கு
வாயே.

10. மாமுனி யிதனைக் கூற மற்றவ ராமா மென்னத்
தாமரைத் தாளைப் போற்றித் தசரதன் எந்தாய்; ஆக்கம்
ஆமதைச் செய்யத் தக்கார் யாரென, மைந்தா! கேளும்
கோமுனி யொருவ ருள்ளார் பெயர்கலைக் கோடராகும்.

11. என்னவே வசிட்டன் கூற எங்குளார் எனவே மன்னன்,
மன்னவ! அங்க நாட் டில் வாழ்கிறு ரெனவ மைச்சன்,
அன்னரை யானே சென்றிங் கழைத்துமே வருவே
னென்று
மன்னவன் கூறிச சென்று முனிவனை யழைத்துவந்தான்.

12. மகப்பெறு குதிரை வேள்வி முற்றுற வசிட்டன்
சொல்லும்
வகைப்படி யமைச்சன் செய்ய; மன்னருக் கோலை
போக்கித்;
தொகைப்படு மறவர் சூழச் சுற்றுற நாட்டை யெல்லாம்
அகப்படப் பரியு மாங்கோ ராண்டினிற் சுற்றி மீண்ட.

13. அடைகரை யுடையப் பாயும் அரும்புனற் சரயு வாற்றின்
வடகரை யதனில் வல்லோர் வகுத்தனர் வேள்விச்சாலை;
தடவரை யானைத் தானைத் தலைவரா மரச வெள்ளம்
இடவரை யறையில் லாமல் இடந்தொறு நிறைந்த
தம்மா!

14. சுற்றமு நண்பும் வேள்வித் துறைபயில் குருக்கள் மாரும்
மற்றுள பிறரும் வந்து வானக மீன்போல் நோக்கார்;
பொற்றொடி மாதர் சூழப் புரவல ரெழுந்து காணக்
கொற்றவன் பூவா மூன்று கொம்புட னங்குப்
போந்தான்.

15. மூவெழு யாகத் தூணில் முறையொடு குதிரை யாமை
ஆவொடு பாம்பு மாடும் அளவிலாப் புள்ளுந் துள்ளித்
தாவணி யதனிற் பட்டுத் தத்தளித் திருந்த; கண்டார்
யாவரும் வியக்க வேள்வி யாண்பரி விளங்கிற் றம்மா!

16. மறைப்படி யமைத்த வேள்விச் சாலையில் வகுத்த வேத
முறைப்படி சடங்கை யெல்லாம் முன்னின்று
முதியோர்க் கொண்டு
நிறைப்பட வரிசை யாக நெடியவர் செய்த வாறே
குறைப்பட லின்றி முற்றும் கொழுங்கலைக் கோடன்
செய்தான்.

17. காரெழு முறைர்ச வென்கோ! கலைகட விறைச்ச
வென்கோ!
பேரிடி முழக்க மென்கோ! பின்னெதை யன்ன
தென்கோ!
சீரிய புலவுங் கள்ளுஞ் சிக்குமென் றுரக்கப் பாடும்
ஆரியர் மறையி னோசைக் குவமையா னறிகி லேனே.

18. ஆரியர் சோமச் சாற்றை யறப்பிழிந் தெடுத்துத் தேக்கிச்
சீரிய முறையிற் காய்ச்சிச் சிறந்தகள் ளாக்கி னார்கள்;
காரிய முழுது முற்றுப் பெறக்கலைக் கோடன் மன்னு!
நேரிழை மூத்தாள் தன்னால் நிகழ்சடங் கதுவொன்
றுண்டால்.

19. உரியதைச் செய்வி ரென்ன, உற்றவர் நண்பர் மற்றோர்
அரசர்க ளமைச்சர் வேள்வி யாசிரி யன்மா ரெல்லாம்
பரிசெனக் கண்கள் காணப் பார்ப்பதற் கவாவி நிற்கும்
வரிசையி னிடையே மூத்த கோசலை மாறும் வந்தாள்.

---

15. தாவணி-மாடுமுதலியன கட்டுங்கயிறு.

20. இசைபெறு வேள்விக் காக இயற்றியவ் விடையி னிற்கும்
திசைதொறுஞ் சென்று மீண்ட சிறந்தவாண் குதிரை தன்னை
வசையறு கூர்வாள் கொண்டு கோசலை யென்னு மானும்
விசைகொடு மூன்று வெட்டில் வெட்டியே வீழ்த்தி னாளே.

21. விழுமிய கதிர்வாள் கொண்டு வெட்டியே வீழ்த்தப் பட்ட
கொழுவிய குதிரை தன்னைக் கோசலை யந்தக் கங்குல்
முழுமையுங் கணவ னோடு முயங்கிடு முறையே போலத்
தழுவியே கழித்தாள்; மற்றைச் சடங்கெலா முடிந்த பின்னர்.

22. வெட்டிய குதிரை யோடு வேறுபல் குதிரை தம்மை
வெட்டியே காய்ந்த நெய்யில் வேகவைத் தெடுத்து நன்னெய்
சொட்டிடப் பகிர்ந்தெல் லோரும் சுவைபட மென்று தின்று
அட்டிய சோமக் கள்ளை யருந்தியே களித்தா ரம்மா!

23. ஆங்குள மூந்நா றுவும் ஆடுபன் னூறும் பாம்பும்
தேங்குநன் னீர்வாழ் யானை முதலிய சிலபன் னூறும்
தூங்கிறைப் பறவைக் கூட்டத் தொகைவகை விரியிற் கொன்று
பாங்கொடு பொறித்துத் தின்று பருகினர் சோமக் கள்ளும்.

24. இங்ஙனம் பலநாள் செல்ல இருந்தவர் புலவுங் கள்ளும்
நுங்கியே களித்தார்; வேள்வி நூனெறிப் படியே மன்னன்
மங்கைமூ வரையும் வேள்வி வகுத்தவா சான்மூ வர்க்கும்
அங்கையிற் பிடித்து வேள்விக் காணிக்கை யாகத் தந்தான்.

25 முனிகலைக் கோட ேளாடு மூவரும் மூவ ரோடு
கலிமொழி பேசிக் கூடிக் கலந்தனர்; கரும்பங் கொள்ள
அலையவர்க் கிடாப் பொன்கொண் டரசன்பால்
விடுத்துச் சென்றார்;
மலைவியர் பெறுகா ளாக மக்களைப் பெற்றா ரம்மா!

26. நங்கைகோ சலையா மாறும் ராமனென் பாலைப்
பெற்றாள்;
மங்கைகை கேசி பெற்றாள் பரதனை; மற்றோர் மின்னாள்
தங்குலைக் குமணா ேளாடு சத்துருக் கனையும் பெற்றாள்
மங்கல மாக நான்கு மக்களும் வளர்ந்தா ரம்மா!

27. வளர்ந்தனர் தவழ்ந் திருந்து மணிநடை பழகி யோடித்
தளர்ந்தமென் னடையை நீங்கித் தகுங்கலை பயின்று
பின்னர்
அளந்தறி யரசக் கல்வி யடங்கக்கற் றுண்மை யெய்தி
இளந்தளிர் முதிர்ந்து காளைப் பருவமுற் றிருந்தா
ரம்மா!

## 5. தாடகை கொலைப் படலம்

1 நாடிய குதிரை வேள்வி நடத்தியே யயோத்தி மன்னன்
தேடிய நான்கு பிள்ளைப் பேற்றினைத் தெரியக் கண்டாம்;
தாடகை யெனும்பேர் பெற்ற தாழ்மூழ தாட்டி தன்னைக்
கோடிய சிலையி ராமன் கொன்றதோர் கொடுமை
காண்பாம்.

2. தன்மதி யமைச்ச ரோடு தசரதன் தமது மக்கள்
நன்மண மதனைப் பற்றி நாடியே யிருக்கும் போது,
கன்மன முடைய பாவி கவுசிகன் வரவே, மன்னன்
தொழ்முனி வருக வென்று தொழுதுநல் லிருக்கை
தந்தான்.

3. மன்னவன் முனியை வந்த வரவினை வினவ அன்னான்
மன்னவ! வுனது மைந்தர் நால்வரில் வலியோ னான
முன்னனை யனுப்பி யான்செய் முதுமறை வேள்வி
தன்னை
இன்னலி லாது காப்பாய் எனவிறை யுள்ளஞ் சோம்பி.

4. அருமறை முனிவ! மக்கள் நால்வரில் அவனை யெந்தன்
பெருகிய வுள்ளத் தன்மைப் பெற்றுளான் பிரிந்தன்
னனை
ஒருகொடி தரியேன்; வேள்விக் கூறுசெய் குநர்யா
ரென்ன
இருகிய மனத்தான் மன்ன! செந்தமி ழகத்தை யாளும்.

5. இறைமகன் இலங்கை வாழும் இராவணன் விந்தங்
காக்க
நிறுவினான் கொடிய ரான சுவாகுமா ரீசன் என்னும்
வெறியரை; அவர்கள் யானும் வேள்விசெய் திடவி
டாமல்
இறுவரை வந்து வந்து தடுத்தன ரெனவே மன்னன்.

6. இந்நிலந் தனிலே யந்த இறையிரா வணன்முன் நிற்கும்
மன்னவ ருளரோ? யானும் வலியனோ அவன்முன் நிற்க?
அன்னவ னுடனே யன்றோ அடல்வலி மறவ ரோடும்
முன்னுற வெதிர்க்க வென்றால் முடியவே முடியா
தையா!

7. ஆகையால், எனது மூத்த அழகனை யாங்குக் கூட்டிப்
போகயா னனுப்பேன்; வேள்வி தடுத்திடும் பொறியி
லாச்சு
வாகுமா ரீசன் என்பார் தம்மொரு வரிலே னையா!
ஓகையி னொடுபோர் செய்ய உம்மொடு வருவே
னென்றான்.

8. வருமுனி சினப்பக் கண்ட வசிட்டன்மன் னவனை
நோக்கிப்
பெருமகன் றனக்கு நல்ல பேறிவர் வரவ தாகும்
ஒருமன முடனே மன்ன! உடன்செல வனுப்பு கென்ன
திருமகன் இளையா னோடு செம்மலை யனுப்பி னானே.

9. தந்தையை வணங்க மைந்த! தவமுனி யுடனீ யேகி
விந்தகா டடைந்து வேள்வி காத்திவண் மீள்வா யென்ன
எந்தையே! யிதோசெல் கின்றே னெனவடி தொழுது
பொல்லா
வெங்தொழில் புரியப் பாவி விடைகொடு புறப்பட்
டானே.

---

5. இறுவரை-கடைசிவரை.
7. ஓகை-உவகை.

10. தானெனத் தருக்கிக் கோசி தன்னொடுந் தம்பி யோடும்
மாநக ரயோத்தி நீங்கி மலைகளுங் காடு நீந்தி
வானையூ டுருவிச் செல்லும் மரமடர் விந்தச் சாரல்
தானடைந் ததையுந் தாண்டித் தமிழகச் சாரல்கண்டார்.

11. ஈங்கிவர் சிலநா ளேகி இடைவள நாட்டைக் கண்டு
மாங்குயில் கூவப் பூவை வண்டமி ழிசைத்தேன் வாக்கும்
ஓங்கிய மரங்கள் சூழ்ந்த வொருமலர்ப் பொழிலில் தங்கிப்
பாங்குட னியற்கைச் செந்தேன் பருகியாங் கிருக்கும் போதில்.

12. ஆரிய முதியோர் தம்மா லரியவிற் றொழில்ப யிற்றி
ஆரிய வடிமை யாக்கி யருந்தமி ழரசைப் போக்கி
ஆரிய வடிமை யின்கீ ழருந்தமி ழகத்தை யாக்கி
ஆரியர் வாழ்வ தாக வாக்கவே யாக்கப் பட்டான்.

13. இயக்குந ரியல்பிற் கேற்ப இயங்கிடும் பொறியே போல
இயக்குமா ரியருன் னோரி னியல்புபோ லியங்கு நீரான்
பயக்குறை யொன்று மின்றிப் பகையின்றிப் பெண்ணொன் றாலும்
தயக்கமில் லாது கொல்லும் தசரத ராமன் எந்தாய்!

14. சந்தடர் விந்தச் சாரல் தனையிரு கண்ணால் கண்டு
மைந்தனு மகிழ்ந்தே னோவாப் பல்வகை வளங்கள் மேய
இந்தநன் னாட்டை யாள்வோர் யாரவர் வரலா றென்ன
விந்தக மெவர்க்குச் சொந்தம்? விளக்கமா யுரைப்பீ ரென்றான்.

15. அடிமையின் வாறு கேட்ப அவாவழுக் காறு சீற்றம்
மடமைசெந் தண்மை யின்மை வஞ்சனை முதலா வுள்ள
கொடுமைக ளெல்லா மொன்றாய்க் கூடியோ ருருவ மாகிப்
படிமிசை வந்தாலன்ன பாவியாண் டானுஞ் சொல்வான்.

---

14. ஓவா-குறையாத.

16. திண்டிறலரண மேய திரைகட லிலங்கை வாழும்
எண்டிசை புகழுங் கொற்றத் திகலிரா வணனென் மைந்த!
வண்டமிழ் மக்கள் தங்கள் மாபெருந் தலைவ னாகத்
தண்டமி ழகத்தை முற்றுந் தனியர சோச்சு கின்றான்.

17. நம்மவர் வாழ்வு காண நைந்துளம் புழுங்கி நொந்து
தம்மெனத் தருக்கி வாழும் தமிழகத் தலைவன் மைந்த!
செம்மையு மருளு மன்புஞ் செறிவொடு பொறையு நண்பும்
இம்மியு மில்லான் பொல்லான் இறைக்குணஞ் சிறிதும் புல்லான்.

18. மைந்தகேள் நம்மோர் தங்கி வாழ்ந்திடும் வளமை மிக்க
இந்தநல் விந்தச் சாரல் வேண்டுமென் றேபொய் யாகச்
செந்தமி ழகத்தைச் சேர்ந்த தென்னவத் தென்னா டாள்வோன்
வெந்திற லொருத்தி காப்பின் வீரரை யமர்த்தி யுள்ளான்.

19. அன்னவள் சுகேது வென்னும் அருந்தமி ழரசன் செல்வி;
மன்னிய வுலகை நீத்த சுந்தனின் மனையா ளாவாள்;
இன்னெறி யில்லாள் பெற்ற மைந்தன்மா ரீச னென்பான்
தன்னொடுஞ் சுவாகு வென்னும் தானையந் தலைவ னோடும்.

20. இருவரை முடையா ளிந்த இடைவள நாட்டை யாண்டு
வருகிறாள்; இரக்க மில்லாள், வலிமிக வுள்ளாள் பொல்லாள்
கருவிலே பகையை நன்கு கற்றனள் போலும் மைந்தா!
உருவிலே பெண்பா லன்றி யுணர்விலே யாண்பா லாவாள்.

21. ஆடவ ரவாவத் தக்க ஆண்மையு முடையாள்! நம்மைச்
சாடியே துரத்திப் போக்கும் சலமது முள்ளாள்; பொல்லாத்
தாடகை என்னும் பேராள் தறுகணும் தளரா முன்பும்
கூடியே யுள்ளாள் அன்னாள் கொடுமையை யென்னென் கோயான்.

---

21. சலம்-தீராச்சினம். தறுகண்-அஞ்சாமை. முன்பு-வலி.

22. அன்னவள் நம்மோ ரிங்கண் அடைதரப் பொறுத்தி லாள்
இன்னல்கள் பலவுஞ் செய்தே எதிர்ப்பவர் தம்மைக்
கொன்றும்
தன்னல முடையாள் தங்கள் தாயக மெனவே நம்மோர்
துன்னுதல் கூடா தென்று துரத்தினா ளெனையுங் கூட.

23. ஆதுமட் டுமன்றி யாஞ்செய் யருமறை வேள்வி தன்னைத்
தீதெனச் சினந்தே யன்னாள் செய்யவொண் ணாது
செய்தான்;
ஆதலா லடைந்தங் குன்னை யழைத்துவந் தனன்க
ணென்ன
ஈதெனின் கடமை யென்றே யிகலியாங் கிருந்தா ரம்மா,

24. ஆயிடை யவர்க ளிவ்வா றவ்வளா யிருக்கப் பெற்ற
தாயினு மிருந்த அன்பிற் புரிமுரைக் கண்போற் காக்கும்
சேயுளம் படைத்த செல்வத் தேவியு மங்காள் மாலை
கோயிலை நீங்கி யின்னார் குலவிட வுலவச் சென்றாள்.

25. முயற்கையி லிருந்து கீழ்வாய் முந்திரி யேனுந் தப்பா
அயிற்கைய ரருகி லாய வரசியு மருமை யான
இயற்கையி லியல்பு தன்னை யிருகணுங் குளிரக் கண்டே
செயற்கையி லரியளார் சூழச் சென்றன ளவர்கள் பக்கம்.

26. சோலையில் தோழி மார்கள் சூழ்தரக் களிபோ டாவின்
பாலையு மின்று வென்னப் பழித்தசெந் தமிழ்த்தாய்
செல்லும்
காலையங் குலவி வந்த கருந்தொழி லாளன் கண்டிவ்
வேலைபோ லென்று மேற்ற வேலையிங் கமைதல் இல்லை.

27. என்றவ விருண்ட நெஞ்சி னெண்ணியே யயோத்தி
ராமன்
நின்றவவ் விடத்தை நண்ணி நினைத்ததை முடிக்க
வல்லோய்!
சென்றியாம் தேடும் செல்வம் தேடிவந் ததுவே நம்மை
ஒன்றிடி லதனிற் போக்கி யுறுபயன் வேறொன் றுண்டோ

---

25. முயற்கை-முயற்சி முந்திரி-கால்காசு கீழ்வாய்-கீழ். அயில்-வேல்

28. என்னவே யிராமன் எந்தாய்! என்னெனை மைந்தா! வீங்கு
துன்விடா தெம்மை முன்னந் துரத்தியே காவல் காக்கும்
அன்னவள் படையொன் றின்றி யதோசெலு கின்றாள் பாரும்
தன்னிலப் பெண்க ளோடு தனித்துமே விடுமான் போல.

29. இதைவிட அவளைக் கொல்லற் கேற்றதோர் காலம் வாய்த்தல்
மதிவலி மிக்கோய்! இல்லைப் பெண்ணென்று மயங்கல் வேண்டாம்
எதிரிகள் தம்பி லாண்பெண் ணென்றவேற் றுமையொன் றில்லை;
அதிர்குர லிடியே றன்னாள் அதோபெயர் கின்றாள் பாரும்.

30. என்றவக் கொடியோன் சொல்லை இறைக்குணஞ் சிறிது மில்லான்
நன்றெனக் கொண்டு மேலோய்! நாடிலே யடியே னீதோ
சென்றவ ளுயிரைக் கொண்டு திரும்புவே னெனவே யங்கு
நின்றதன் தம்பி யோடு நெறியிலான் விரைந்து சென்றான்.

31. இம்பரில் போந்து நம்மோர் இருந்திடா திடைஞ்சல் செய்யும்
வம்பிபெண் ணாகை யாலே மனத்துவர வில்லை கொல்ல
எம்பியக் கொடியாள் காதோ டெள்மல ரனைய மூக்கை
அம்பினா லறுத்திங் கேகின் றகற்றிட நினைக்கின் றேன்காண்.

32. சீரிலா னின்ன கூறிச் சிலையைநா ணேற்றித் துண்ணென்
றுரவா ரங்கள் செய்தான்; அவ்விடை புலவிச் செல்லும்
போரணி பூணு வன்னை பொள்ளெனத் திரும்பிப் பார்த்தே
யாரவர் வடவர் போலென் றனுகினாள்; அனுக வந்தோர்!

33. கைகளை யறுத்தான் மூத்தோன்; காதொடு கமழு
மூக்கை
ஐயகோ இளைய பாவி யறுத்துள மறைச் செய்தான்;
எய்யென மூத்த பாவி யேவிளு ளாவி கொண்டான்;
பொய்யென வுடலம் மண்மேல் பொத்தென விழுந்த
தம்மா.

34. நஞ்சினுங் கொடிய பாவி நன்னெறி தவறி யாரென்
றஞ்சிடா தனுக மெய்காப் பற்றதா யாவி கொள்ள
மஞ்சுறை மாடக் கோயில் மலர்பொதிந் திளகு சாயல்
பஞ்சணை புரளு மேனி பாரிடைப் புரண்ட தம்மா!

35. கொன்றவர் சென்ற பின்னர்; கோவெனத் தோழி
மார்கள்
பொன்றிய யாக்கை தன்னைப் புல்லியே பொருந்து
நெஞ்சங்
கன்றியே யையயோ வென்னக் கதறியே யன்னாய்!
உன்னை
என்றியாங் காண்போ மென்றே யினையன புலம்ப
லுற்றார்.

### வேறு

36. யாக்கை படைத்த பெரும்பயனீ
தாமென் றுரைவீ தறமென்றே
ஏக்கை பிடித்த பெரும்பயனீ
தென்றே செருக்குக் கொண்டோதான்
சேக்கை படுத்த விளம்புள்ளின்
சிறகை யறுக்குந் தீயோர்போல்
காக்கை தவிர்த்தோர் தமைக்கோறல்
கடனே போலும் மடனேயோ?

37. கையை யறுத்தல் வில்லாண்மை
காதை யறுத்தல் நல்லாண்மை
மெய்யை விடுத்த யோமூக்கின்
மேலே யறுத்தல் வல்லாண்மை
பைய நடந்து கைபோடு
படையை நகர்ந்து செல்வோரை
வெய்ய கணையால் கொலைசெய்தல்
விலையில் லாவிற் கலைபோலும்!

---

36. ஏ-அம்பு. சேக்கை-கூடு. காக்கை-காப்பு.

38\. பெண்ணொடு கூடப் பிறந்திலரோ
பிறிதோர் பெண்ணை மணந்திலரோ
கண்ணில ரோகண் காண்போரைக்
கடனுக் கொல்லும் கயமையரோ
மண்ணொடு மண்ணோ கருங்கல்லோ
மரமோ மற்றென் னோவோதான்
அண்ணிய வன்னை தனைக்கொன்றோ
ராவோ! வென்னென் றறியோமே!

39\. அல்லாப் படை ய வெதிராக
ஆவா வொன்றுஞ் செய்யாதும்
பொல்லாப் புடைய படையோடு
பொருவேம் வாவென் றழையாதும்
கொல்லாப் படையு மயலாரைக்
குறுகாப் படையுங் கொடுபோந்த
இல்லாப் படையா ரினைவேறல்
என்னே யாண்மைத் தென்னேயோ!

40\. அறமோ வில்லை யறமின்றேல்
அஞ்சா தடையார் நெஞ்சுணனும்
மறவோ வில்லை மறமின்றேல்
மடியா வுள்ளம் மடிவிக்கும்
திறமோ வில்லைத் திறமின்றேல்
தெரியே தொன்றும் படையின்றிப்
புறமோ வந்த பெண்பாலைப்
புலையோர் செய்த கொலையீதே.

41\. தெரியா தப்பூ டெளிவந்த
சிறுமீன் கொத்தும் சிரல்போலத்
தரியா திப்பா லெதிர்நின்று
தவறு தேபெண் கொலைசெய்யப்
பரியா தெப்போ தினுமொன்று
பட்டே சிந்துங் கட்டாயம்
பிரியா விப்பா விகள்நாட்டில்
பெண்பா லொன்றும் பிறவாதோ!

---

39\. அல்லாப்பு-துன்பம். கொல்லாப் படை-கண்ணாகிய வேலும், வாளும் குறுகாப் படை-பெண்டிர்.

41\. அப்பு-நீர். எளிவருதல்-எளிதாகக் கொள்ளும்படி வருதல். சிரல்-மீன்கொத்தி. இப்பால-இங்கே. எதிர்நின்று தரியாது-எதிர்நிற்க முடியாது. பரியாது-இரங்காது.

42. பொல்லா முனிவன் றனையாகப்
போந்தார் யாரோ? எதிரொன்றும்
சொல்லா தனுகப் பொருக்கென்று
துடிக்கத் துடிக்க வுயிர்கொண்டு
நில்லா நிமையு மவரிங்கு
நின்றே யகன்று சென்றாரே
எல்லே மிருந்து மயலாரம்
பிரையா ளாளம் பிரையாளுள்.

43. இன்றோ ரன்ன பலவாறு
இனைந்தே புலம்பி இருந்தேங்கி
அன்று யுன்னைத் தனியாக
அழைத்தே வந்திங் கறிவில்லேம்
கொன்னே வடவா ரியரம்பின்
குறியாத் தந்தோ மெனவலறித்
தன்னே தனியாய் மயிலன்னார்
சமைந்தே கல்லாய்க் குமைந்தாரே.

வேறு

44. கன்றி யுள்ளங் கதறி யழுதுபின்
ஒன்றுங் தோன்றிலா தோடி யிரண்டுபேர்
சென்று கோயிலைச் சேர்ந்துந மன்னனைக்
கொன்ற னர்வட வோரெனக் கூவினர்.

45. கொன்ற னரெனக் கூறிய வெவ்வுரை
சென்று கூடிச் செவிபுகா முன்னரே
கன்றி யுள்ளங் கனன்றுமா ரீசனும்
வென்றி வீரர்க ளோடு விரைந்தனன்.

46. விரைந்து சென்றனை மெய்யினைக் கண்டனன்
கரைந்து நெஞ்சங் கதறி யழுதனன்
வருந்தி வீய வடவ ருடலினை
அரிந்து தன்னுவே னன்னையென் றார்த்தனன்.

---

42. அம்பிரை-அழகிய உறைமோர், பிரை-உறைமோர். பாலைத்தோயததுப் பயனுறச்செய்தல் போல் தமிழர்க்குப்பயன் பட்டவளென்க.

43. குமைந்து கல்லாய்ச்சமைந்தார். குமைதல்-உள்ளமழிதல்.

47. நடலை செய்துவந் நஞ்சன வாரியப்
படலை யின்றெனப் பண்ணுவே னின்றென
மடலை வாரி வருபுவன் போலவே
உடலை வாரித்தன் னூரினை யெய்தினன்.

48. செய்தி கேட்டதுஞ் செந்தமிழ்ச் செல்வர்கள்
பொய்தி யாய்விட்டுப் போயினை யோவெமக்
குய்தி யில்லையோ வென்றழு தோடியே
மெய்தி றம்பிய மேனியைக் கண்டனர்.

49. அன்னை யென்றன ராவெனக் கூவினர்
உன்னை யென்றனர், ஓடினர் கூடினர்
மின்னை வென்றொளிர் வேலினர் வாளினர்
என்னை யாயின ரென்று குமுறினர்.

51. கொன்ற தாரக் கொடிய கயவர்கள்
சென்ற தாவெது வோவெனச் சீறினர்,
வென்றி வேலினைப் பார்த்து வெகுண்டனர்,
நன்றி கொன்றவர் யாமென விம்மினர்

51. அஞ்சி லோதியர் ஆவென மேல்விழுந்
தெஞ்சி நின்ற விடமிலை யாக்கினர்,
மஞ்சு தோய்மலை வார்குழல் மூய்தர
நெஞ்சு ருகிக்கண் ணீர்புழுக் காட்டினர்.

52. ஐயை யோவெம தன்னையே யென்றனர்
கைய றைந்து கதறி யழுதனர்
செய்ய தாமரைச் செம்முகச் செவ்விபோய்
மைய றைந்த மதியெனக் கன்றினர்.

53. அச்ச மின்றியவ் வாரியப் புல்லர்கள்
இச்செ யல்புரி வாரோ புரிகுவர்;
எச்ச மின்றி யிழிஞ ரினிப்புகுந்
துச்சி லின்றித் தொலைக்குவ மென்பரால்.

---

47. மடல்-பூவிதழ்.
48. பொய்தியாய்-இல்லையாக உய்தி-வாழ்வு.
49. உன்னை-உன்னையா கொன்றனர்.
53. எச்சம்-மீதி. துச்சில்-ஒதுக்கிடம்.

54. எண்ணி யெண்ணி யிரங்குவ ரென்னினிப்
பண்ணு வோமென நெஞ்சம் பதைக்குவர்
கண்ணி னீர றக் கல்லைநெஞ் சென்னுற
மண்ணிற் பட்ட மரத்தினை யொத்தனர்.

55. இன்ன ணமெய்ம றந்திருந் தேபினர்
அன்னை தன்னிலை யாமையை யெண்ணியே
பொன்னி னுக்கிய பாவையைப் போன்றகம்
அன்னை தன்னை யடக்கஞ்செய் தாரரோ.

56. கொன்று வீழ்த்தக் கொடிய சுயவர்கள்
சென்று கோசிகன் றீநிலை யெய்தியே
நின்ற வேள்வி நிலவுறச் செய்தனர்
அன்று தொட்டைந்து நாள்செல வாகவே.

57. கூடிக் கொன்றுயிர் கொண்டக் கொடியவர்
ஓடிச் சென்றுறை கின்ற வுறையுளைத்
தேடிச் சென்று தெரிந்தில ராயுளம்
வாடிக் கன்றி வருந்தி யிருக்கையில்.

58. அசைவி லாம லயோத்தியை யாண்டிடும்
தசர தன்குலந் தாங்கிடு மக்களாம்
நசையி லாராம லக்குவர் காப்புடன்
உசிரை வேட்கிறுன் கோசிகன் உற்றெனு.

59. சென்று தூதுவர் செப்பச் சுவாகுவும்
இன்றி தோவென் றிளவர சோடுபோய்
வென்றி யென்றுசெய் வேள்வி தனிலுயிர்
கொன்று தின்னும் கொலையைத் தடுத்தனன்.

60. தடுக்க வந்தத் தறுதலை ராமனும்
வெடுக்கென் றம்பை விடுத்துச் சுவாகுவைச்
சடக்கென் றுநிலம் சாய்க்கமா ரீசனும்
திடுக்கென் றுயிடைச் செவ்வியை நோக்கியே.

---

59. இன்றிதோ-இப்போதே போகலாம்.

60. ஆயிடைச் செவ்வி-அங்கு அப்போதுள்ள தனது நிலை.

61. ஆங்கு நின்று மகன்றனை யப்புறம்
ஓங்கி வாழ வுயிர்பல கொன்றுமே
வீங்கு வேள்வி விருப்புடன் முற்றியே
நீங்கி னாரவண் நின்றவர் மூவரும்.

## 6. காப்புப் படலம்

1. ஆமி தன்றறி யாவட வாரிய
ராயன் கெட்ட நடத்தையைக் கூறினும்;
காம வேவிறை தங்கையாம் காரணி
காம வல்லியின் காப்பினைக் கூறுவாம்.

### வேறு

2. மாபெருந் தேவி யோடிரா வணனேர்
மணியணி மண்டபத் திருந்தே
ஆபெருந் துயர முழந்தன மெனவழி
தியாதெவு விறைவியு மணங்கே!
தாபத நோன்பு நோற்றுநந் தங்கை
தனித்துய ருழத்தலை நினைக்க
மாபரு மியபூ வென்னவென் னுள்ளம்
மாழ்கியே செயலற மறுகும்.

3. பொன்னிலை யென்றே புலம்பிலை யின்றிப்
புசித்திட வுணவிலை யென்றே
துன்னிய திறையின் சுமைபெரி தென்றே
சுடுதொழி லுழுவலா ளர்கள்செய்
இன்னலின் தொகையாற் றுவெரு வந்தோ
இறைகொடி யோனெனக் குடிகள்
சொன்னவெஞ் சொற்லிற் பன்மடங் குளத்தைச்
சுடுகுதே கைம்மைநா னெனுஞ்சொல்.

4. ஈங்குநா மிருக்கு நிலையினை யெண்ண
எண்ணவென் னுளநிலை கலங்கித்
தீங்குசெய் தவிறச் செயலறச் சொடுங்கித்
திக்குழக் காடுதென் னுவி

2. தாபதநோன்பு-கைம்மைநோன்பு.
3. வெருவந்தம-குடிகளஞ்சும செயல்.

மாங்குயில் மொழியாள் மயிலியல் காம
வல்லிகம் மிருக்கையைக் கண்டால்
தாங்குமோ வன்றித் தரிக்குமோ ஆவி
தமிழ்மொழிச் சிறுகருங் குயிலே!

5. என்றுமே மலர்க்கண் ணிணைபடச் சோனை
இராவணன் கூறிய விளஞ்சொல்
சென்றிணை பொருதுஞ் செவிபுகா முன்னம்
திருநுதல், செய்யபொற் பாவை
கன்றியே வெயிலி லொளிமுகங் கருத்தே
கண்ணிணை வெளுத்துமுத் துதிர்த்தே
பொன்றுவர்ச் செவ்வாய் திறந்துமுத் திலகப்
புலம்பிடும் புதுமையைப் போன்றாள்.

6. அன்னமென் னடையா ளங்ஙன மசைவற்
றழல்படு தளிரெனக் கருகிப்
பன்னெடி பேச லாவெழா துள்ளம்
பதைபதைத் திடப்பரி வுற்றுப்
பின்னொரு வாறு தேறியே மலரால்
பெருகொளி முத்தினைத் துடைத்தே
என்னுயிர்க் குயிரே தமிழகங் காக்கும்
இலங்கிலைச் செங்கதிர் வேலோய்!

7. தாதினு மினிய தமிழ்முழு துணர்ந்த
தாங்களே கழிந்ததற் கிரங்கின்
பேதையென் றுலகம் பேசிடு மேழைப்
பெண்டிர்க ளெங்ஙனம் பொறுப்பர்!
மாதவ ளதனை மறந்துமே வாழும்
வகையெவை யவையெலா மாக
யாதொரு குறையு மிலையவட் கெங்கை
யானெனு மொருமையு மற்றோம்.

8. ஏதுவு மெடுத்துக் காட்டுமெவ் வளவோ
இயன்றவா றெடுத்தினி துரைத்தும்
காதலங் கயிற்று விரண்டறப் பிணித்த
கணவனோ டுயிர்விடத் துணிந்த

---

7. ஒருமை-'நீ, நான்' எ ன்னும் ஒருமைஎண்,
8. ஏது-காரணம், மறுமணத்தை மறுத்தனள்.

மாதினைத் தடுத்துக் கெடுத்தனிர்; மேலும்
வருத்துதல் தகாதெ'ன மறுத்தாள்;
ஆதலா லதனை விடுத்தவ ளமைதிக்
காவன புரிந்திட வமைந்தேன்.

9. பாவைய ரெங்கை பணிதலை நின்று
பசுமயிற் குழாயெனக் கூடி
ஏவலிற் றிறம்ப லென்பதை யறியார்
இனியன வாயசும் பொருள்கள்
யர்வையு மவளுக் குரியவை யின்னும்
ஆவன வுண்டெனிற் செய்கம்
பூவையுங் குயிலும் கிள்ளையும் பாடும்
புனிதவின் றமிழகம் புரப்போய்!

10. தங்குடி மக்கள் அரசிலை யென்று
தவித்திடத் தன்னலங் கருதி
இங்கியா லிருத்தல் தகாதென யானும்
இருமெனக் கூறியுங் கேளாள்
அங்கினி தேகி யிருந்துதன் மக்கட்
கரசியா யருந்துயர் மறந்து
மங்குலை நிகர்ப்பக் குடிபுறங் காத்து
வருகிருள் மதிமுக மானும்.

11. கரனெனு மிளையோன் வேண்டுவ செய்து
கண்ணிமை யாமெனக் காப்ப
மரமடர் விந்த நாட்டினிற் புரிசை
மதியணி விந்தக மதனில்
ஒருகுறை யின்றிப் புனமயில் போல
ஒப்புடன் போற்றுமெய்த் தோழி
அருகுற வினிது வாழ்கிருள் தமிழர்
அரசியாய்ப் பரிசொடா தலினுல்.

12. இனையுதல் தவிர்க, என்றுமே தலைவி
இனியன பலசொலித் தேற்ற
அனையினு மினிய வன்பொடு தமிழர்க்
காக்கமே யனுமொரு வாறு
மனமது தேறிக், 'கண்மணி! என்றன்
வாழ்வினுக் கடிப்படை யாவார்
நினையல வேறு கண்டிலேன்' என்ன
நீள்குழல் தடவியென் மயிலே!

## வேறு

13. பணிசெய் வோர்களும் பாங்குடை யோர்களும் பார்க்கின்
அணிசெய் காதல ராவரோ மாதருக் கலவும்
பிணிசெய் காரண மாமெனப் பேசியாங் கிருப்ப
மணிசெய் மண்டபம் வந்துகின் ஞெற்றூர்கள் வணங்கி.

14. மன்னர் மன்னவ வாழ்கவவ் வாரிய வஞ்சர்
இன்னல் செய்தனர் என்றனர்; இன்னலென் னென்ன
அன்னை போன்றதா டகையென, ஆம்நம தன்னைக்
கென்னை யென்றனள் கொன்றனர் சென்றன ரென்றூர்.

15. என்ற சொற்செவி புகாமுன பிடியென வார்த்துக்
கொன்ற புல்லரைக் கொன்றில ரோகொடி யாடும்
முன்றில் காவலர் மறங்கடை நின்றரோ மூடர்
பொன்றி ஞரில ரேலிதோ போக்குவே னுவி.

16. என்று சீறியே இகலரி யேறுபோ லெழுவே
வென்றி வேலவ! காவிடைத் தனிவரும் வேலை
நன்றி லாவட வயோத்திவாழ் தசரத ராமன்
கொன்ற தோடமை யாதுசு வாகையுங் கொன்றூன்.

17. கேள்வி வல்லவ! மொழிதர வின்னமுங் கேட்டி
கோள்வ லம்படு கோசிக னெனுமுனி குறுகி
வேள்வி செய்தவன் தடுத்திட அயோத்தியை மேவி
வாளவ லம்பட ராமலக் குவரொடு வரவே.

18. தனித்து வாவிய தாடகை கண்டுமே தடுக்கப்
புனத்து மானினைப் போலவே வன்கொலை புரிந்து
மனத்து நேர்வொடு செய்பலை வேள்வியை மறுக்கச்
சினத்து ராமனச் சுவாகுவி னுயிரினைச் சிதைத்தான்.

19. எதிர்த்தல் இன்றுநன் றலவெனத் தெளிந்தமா ரீசன்
அதிர்த்த வுள்ளமோ டாயிடை நின்றுமே யகன்றூன்;
கொதித்த நெய்யிடை வெந்தலு னுண்டுடல் கொழுக்கச்
சிதைத்த ராமலக் குவரொடம் முனிவனுஞ் சென்றூன்.

---

17. கோள்-கொலை. வாளவலம்-தமிழர்.

20. என்ன மன்னவர் மன்னவ னெரிசினங் கனன்றே
இன்ன ரோபசுந் தமிழக மெங்கணு மினிமேல்
துன்னு மாரியப் பூண்டிலா தடியொடு தொலைத்தே
இன்னே யேபழிக் குப்பழி வாங்குவே னென்றான்.

21. பாட்டி யைப்படை லைவனைக் கொன்றவப் பதரைக்
காட்டி டைப்பருந் தொடுகழு குண்டுமே களிக்கக்
கூட்டி டைப்படு குருவியைப் போல்முனிக் கூட்டம்
ஆட்டி டைப்படக் கருவறுப் பேனென வார்த்தான்.

22. வெற்றி வேலவ னினையவஞ் சினம்பல விளம்பப்
பெற்ற தாயினு மன்புடைத் தமிழரும் பிறழக்
கற்றை வார்குழல் களிமொழிப் பாவையுங் கதிர்வேல்
கொற்ற வாவிரு சிறாரறி யாதுசெய் கொலையே.

23. அடுத்த வின்னுயிர் போக்கியூ னுண்பதே யல்லால்
அடுத்த மக்களைக் கொல்லுத லவர்கருத் தல்ல;
தடுத்த தாறகொலை புரிந்துநம் மன்பினைத் தடுத்தார்
எடுத்த வேலினைத் தடுப்பதவ் வாரியர்க் கெளிதோ?

24. ஆகை யாலறி யாதவர் செய்கொலைக் காகச்
சாக மற்றவ ரென்றுமே சினப்பது தகவோ?
வாகை வேலவாங் குரியதின் காவலை வைத்தால்
போக வென்றுசொல் லாமலே போவர்பின் போதார்.

25. இறைவி யின்னணங் கூறவே சினந்தணிந் திறையும்
முறைமை யன்றுதான் முடர்க வெரிசின மூவா
உறவை வன்கொலை செய்துநம் முறவினை யொழித்தார்
அறம லாதபுன் செயலினை யுள்ளநெஞ் சழலும்.

26. என்ன மன்னனுங் கிருந்தசான் றோர்தக வென்ன
மன்னு மாண்மையுஞ் சான்மசே ரருந்தமிழ் மறவர்
துன்னி யாரியப் புலைத்தொழி லாயிடைத் துன்றத்
தென்னர் வாழ்வக லாவருங் காப்பினைச் செய்தான்.

27. கொல்லி யேயுயிர் துடிதுடித் திடவுணுங் கொடியர்
புல்லி யேகொலை வேள்வியா லாருயிர்ப் பொருளைக்
கல்லி யேயழித் திடாவகை காத்திடக் காம
வல்லி யேவலிற் படவரும் படையையும் வகுத்தான்.

---

21. ஆடுதல்-வெல்லுதல்.

28. வகுத்த மாப்படைத் தலைவனைப் பார்த்துமா மன்னன்
வகுத்த வேள்வியை விலக்கியே ஆரிய மன்னர்
அகத்து ருதெலைப் புறமனைதக் காத்துமற் றவரைப்
பகைத்தி லாதுபே ரன்பொடு காக்குவீர் பரிவாய்.

29. வேள்வி காத்திட வேயலான் ஆரிய வேந்தர்
ஆள்வ லத்துட னடை தரா ராகையா லவுரைத்
தாள்வ லத்துடன் தமிழகம் புகாவகை தடுத்து
வாள்வ லத்துடன் காக்குவீ ரெனவிடை வழங்க.

30. வரம்பு புல்லிய படைவலான் சரியென வணங்கி
நரம்பு புல்லிய மறத்தமிழ்ப் படையொடு நடந்து
கரும்பு முல்லையு மருவியுங் குறிஞ்சியுங் கடந்தே
அரும்பு புல்லிய சோலைசூழ் விந்தக மடைந்தான்.

31. அடைந்த மாப்படை யாளரின் வரவறிந் தன்பாய்
மடந்தை நல்லர வேற்றிட வேகரன் வகுத்த
இடந்தொ றுந்தமிழ்க் கூறுசெய் யாரிய ரென்னும்
படர்ந்த முட்புத ரகற்றியே காத்தனர் பரிவாய்.

32. புலைபு ரிந்துறும் பூரிய ஆரியப் புல்லர்
கொலைபு ரிந்துண வேட்டிட வாயிடைக் குறுகின்
அலைபு ரிந்திடு வாரென வஞ்சியே யனுகா
நிலைபு ரிந்தொரு குடைநிழ லோம்பினள் நெடியாள்.

33. கொடிய வெங்கொலை காணிலா தாரியக் குறும்பை
உடைய வாரியக் கொலைக்கள வேள்விசெய் துண்போர்
அடியு ருதில வரசியாந் துணையுட னடுங்
கொடிநு டங்கிடப் பொலிந்தன விந்தமென்
கொடியே.

# 7. மிதிலைப் படலம்

## வேறு

1. தாடகை யெனுந்தமிழ்த் தாயைக் கொன்றவர்
காடடர் விந்தகங் கடந்து வானுயர்
மாடமுங் கூடமு மலியும் பல்வகை
வீடமர் கொடித்தெரு மிதிலை கண்டனர்.

---

30. நரம்பு புல்லிய-வலிபொருந்திய

2. கண்டவர் தெருக்களைக் கடந்து காவலர்க்
கொண்டவர் சனகனுக் குரைத்துக் கொண்டுபோய்
மண்டபங் கடந்துயர் மன்னன் வந்தெதிர்
கொண்டிடக் குருமணிக் கோயில் புக்கனர்.

3. சனகனு முனியொடச் சிறுவர் தங்களை
இனிதுற நல்வர வேற்றுக் கொண்டுபோய்
வினவின னவர்வர லாற்றை வெம்முனி
இனவென வினிதெடுத் தியம்பி னனரோ.

4. சாடியென் வேள்வியைத் தடுத்த பாவியாம்
தாடகை யெனுந்தமிழ்த் தையலாள்படக்
கோடிய வரிசிலைக் குமரர் காத்தனர்
மாடநீ டயோத்திய மன்னன் மைந்தர்கள்.

5, வில்லினி லிணையிலா வீரர்; மக்களுக்
கல்லொடு பகலுவந் தருளு மாண்மையர்;
நல்லவர் இவர்பெயர் ராம லக்குவர்
சொல்லுவர் பரதசத் துருக்கர் மற்றவர்.

6. செல்வர்கள் நால்வருஞ் சிறந்த செல்வமாம்
கல்விகற் றுயரிய கலைகள் முற்றுறப்
பல்வகைக் கேள்வியும் பருகி வாழ்கிறார்
வில்வலி தனிலிணை வீர ரன்னரே.

7. இனபல வாயெடுத் தியம்பிக் கோசிக
முனியவர் தமையறி முகப்ப டுத்தவே;
சனகனு முவந்தவர் தம்மை வாழ்த்தியே
இனிதுரை யாடிநல் லின்பங் கொண்டனன்.

8. பெருந்தகை சனகனின் பெட்பைப் பெற்றவன்
விருந்தின ராயுயர் மிதிலை தன்னிலே
பொருந்தவே யவர்சில பொழுதைப் போக்கிநன்
கிருந்தனர்; சனகன தியல்பு காணுவாம்.

9. சனகனு முனிவனுந் தனிமை யாயரண்
மனையினி லொருபுறம் மலர்ந்த காவிடைப்
புனைமல ரிருக்கையி லிருந்து பொற்புற
இனியன பேசியாங் கிருக்க மன்னனும்.

10. செய்தவ மறைமுனிச் செல்வ! கேட்டிடும்
செய்தியொன் றுண்டெனச் செப்பு கென்றலும்
உய்தியி லொருவருக் குயர்ந்த செம்பொருள்
எய்திய மக்களொன் றியம்பு மாமறை.

11. கற்றவ முன்னொரு நாளிச் சோலையைச்
சுற்றியான் வருகையில் தோகை யாவளோ
பெற்றுவைத் தகன்றபெண் பிள்ளை யொன்றைக்கண்
ணுற்றிரு கையினு முவந்தெ டுத்தனன்.

12. போதலர் காவிலோர் செடியின் பொன்னிழல்
ஊதியம் பெறநிலை முழுத வேர்ப்படைப்
பாதையி லொருகொடி பயந்து வைத்ததால்
சீதையென் றழைத்தனன் பொருளுஞ் சேரவே.

13. இளமதி போன்றவவ் விளங்கு ழந்தையை
உளமகிழ் வொடுவளர்த் தோம்பி வந்தனன்;
குளமலர் தாமரை குவியப் போந்திடும்
வளர்மதி போலவள் வளர்ந்து வந்தனள்.

14. பூவையுங் கிள்ளையும் புலம்பப் பாடியும்,
காவினுங் குளத்தினுங் களிப்ப வாடியும்,
ஓவியஞ் சுவைகெட வுருவங் கூடியும்
பாவையுந் திருமணப் பருவ முற்றனள்.

15. பின்பிகை யெனத்திரு மேலி வாய்ந்தவர்
பன்மல ரெனமணப் பருவ மங்கையும்
மன்மக ளாகியும் மணப்ப ரில்லரால்
என்மனக் கவலைக்கோ ரிருக்கை யாயினள்.

16. தெண்டிரை யுலகினில் திருவு மாண்மையுங்
கொண்டவென் குடிக்குயர் கோதை யாகியும்
கண்டெடுத் தவளெனக் கண்ட மன்னர்கள்
வண்டணி குழலியை மணக்க வந்திலர்.

12. ஏர்ப்படைப்பாதை - உழுபடைச்சால். சீதை-உழு படைச்சால்.

17. வந்தனர் குறுநில மன்ன ரோர்சிலர்
தந்திலன் எனதுயர் தகுதி நோக்கியே;
எந்தையே! முடிவினில் எளிய அன்னரும்
வந்திலர்; வீட்டினில் வைத்துக் காக்கிறேன்.

18. மான்றனை யசர்கள் வரிக்கும் சூழ்ச்சியில்
தோன்றிய படியொரு சொத்தை வில்லினை
ஊன்றினன் வளைப்பவர்க் குரிய ளாமென
மான்றரு தேரினர் எவரும் வந்திலர்.

19. முடிவது தெரிந்திலன் முனிவ! என்குலக்
கொடிபடர் கொம்பினைக் கொள்ள வல்லனோ?
கடிமணப் பருவமுங் கடந்து விட்டது
விடியுமோ என்குலக் கொடிக்கிம் மேதினி?

20. கெடுத்தனன் ஒருபசுங் கிளியைக் கூட்டினில்
அடைத்ததன் பிறப்பைவீ ணாக்கும் விணர்போல்;
செடித்தலை நாய்நரி தின்ன விட்டிடா
தெடுத்துவந் தருந்துயர்ச் சிறையில் விட்டனன்.

21. படிப்பழி நீங்கிடும் பெரியர் பார்வையால்,
மிடிப்பழி நீங்கிடும் செல்வர் மேவலால்,
பிடிப்பழி மருங்குலென் பெண்ணினால்வருங்
குடிப்பழி நீங்கிடும் காலங் கூடுங்கொல்!

22. நிலஞ்சுடுந் தீயிருள் நீக்குஞ் செங்கதிர்,
வலஞ்சுடுந் திமிரு மடியு மச்சமும்,
நலஞ்சுடுந் தீயுள நலிவு போல்,வரு
குலஞ்சுடுந் தீயெழிற் குமரி யென்பரால்.

23. இன்னன பலசொலி யேக்கங் கொள்ளுமா
மன்னவன் நிலையினைக் கண்ட மாமுனி
பொன்னவிர் பொலங்கழல் பொருவில் தானையோய்!
என்னிது பலாசகுனைக் கிக்கள் பஞ்சமோ?

---

21. படி-உலகம். பிடிபபு அழி மருஙகுல்-இடை.
22. வலம்-உடல் உளவலி. மடி-சோம்பல்.
23. பொன் அவிர்-ஒளிவிளங்கும். பொலன்-பொன்.

24. வருந்தலை யுன்மகட் கேற்ற மாப்பிள்ளை
விருந்தின ரூகவுன் வீட்டி லுள்ளனன்;
அருந்திற லினனிதை யறியின் ஆவலாய்
மருந்தினை யியுமுன் முனத்து நோய் கெட.

25 மன்னவன் ரதான் றலோ என்ன, மாமுனி
பின்னெவன் ராமனென் பேச்சைத் தட்டிலான்;
இன்னையே யவ்விலை வளைத்துன் ஈர்ங்குழற்
பொன்னினைத் திருமணம் புணரச் செய்குவன்.

26 அஞ்சலை, திருநக ரயோத்தி ராமனும்
வஞ்சியுந் திருமண மக்க ளாகுதல்
கொஞ்சமு மையமில் லென்னக் கோசிகன்,
உய்ஞ்சன னெனவடி வணங்கி யொள்ளியான்.

27. நற்றவ! தென்றமிழ் நாட்டுப் பெண்கொலை
மற்றொரு பெண்ணினை வாழ வைத்தது;
பெற்றனன் மருகனைப் பிழைத்த வென்மகள்
உற்றிடும் பழியினை யொழித்து வாழ்ந்தனன்.

28, துரிசிலில் என்மனத் துயரம் பாழ்படக்
குரிசிலை நல்வினை கூட்டி வந்தது;
வரிசிலை ராமனை மருக னுய்ப்பெறும்
பரிசினை யடைந்ததுன் பரிசி னுலென்றான்.

29. மறித்தொரு முறையவன் வணங்கி மாதவ!
குறித்ததை முடித்தென் குலத்தைக் காக்குவாய்;
பறித்தமுல் லையையணம் பார்க்கப் பைங்குழல்
செறித்திட நினைப்பது சிறுவர் செய்கையோ!

30. என்குறை தீர்த்திட இயன்ற விந்நாள்
நன்குற இருவர்க்கும் நல்ல தாகுக;
பொன்குறை யிலை; யணிப் பொதியைத் தாங்குமென்
மின்குறை யேயென விளம்ப மாமுனி.

31. நம்பியைக் கேட்டியான் முடிப்பல் நன்றெனத்
தும்பியந் தொடையணல் தொழுது நன்றென
அம்பெறிந் தொருதமி ழணங்கைக் கொன்றவன்
எம்பியோ டிருந்திடு மிருக்கை யெய்தினன்.

28. துரிசு ஆருசு-விரைவு.

32. எய்திய முனிவனைத் தொழுதென் எந்தையே!
செய்தியென் டோவெனச் சிரித்துக் கோசிகன்
பெய்திடு மம்பினைப் பிறையைப் போற்றினால்
உய்தியு முண்டதி லுனக்கெ னுமுனம்.

33. சொல்லிய புதிரினைத் துணிந்து கொண்டனன்
'வில்லினை வளைப்பது வெண்ம திப்பிறை;
புல்லிய வம்பது பொழியும் வெண்கதிர்'
அல்லவோ? எனமுனி ஆமாம் மைந்தகேள்.

34. அங்கொரு பெண்ணை நீ அழித்தற் கிடதா
இங்கொரு பெண்ணை நீ எய்தப் பெற்றனை;
மங்குலை யணிமதில் மிதிலை மாநகர்
மங்கல நாளினில் வந்து புக்கனம்.

35. தாதுகு தாமரைப் பூவின் தண்ணிதழ்
மீதனங் கண்படு மிதில நாட்டினைப்
பாதுகாத் துலகியல் பயிலு மன்னற்குச்
சீதையென் றொருபெயர்ச் செல்வி யுள்ளனள்.

36. கலைமதி யெனவொளி காலும் பாவைதன்
விலையென் வொருபெரு வில்லை வைத்துளான்;
சிலையினை வளைத்திடும் செம்மல் தோளெனும்
மலையினை யன்னவள் மணந்து கொள்வளாம்.

37. இதுவரை யெண்ணிலா மன்ன ரெய்தியம்
மதிமுகி வில்லினை வளைக்க மாட்டிலார்
எதிரிடம் போயினார் என்ன ராமனும்
இதுமலை யோவென எழுந்து நின்றனன்.

38. திருத்தகு மொருத்திவஞ் சினம தாகிடில்
துருப்பிடித் திருக்குமச் சொத்தை வில்லினை
முரித்துமே யெறிகுவன் மன்னன் முன்னென,
நரித்தொழில் முனிவனும் நம்பி நன்றென.

---

32. அம்பு பெய்திடும பிறையைப் போற்றினால்-வில்லை (பிறைபோல்) வளைத்தால்.

39. மூவரு மெழுந்துபோய் முறைமை யாகவே
தாவறு மதிமிகு சனகற் கண்டுதாம்
மூவரும் வந்ததை மொழிய மன்னவன்
ஏவரும் வில்லினை யெடுத்து வம்மென.

40. குற்றெழி லொருவன்போய்க் கொண்டு முன்னிட
மற்றதை நோக்கியே மன்னர் மன்னவன்
நற்றவ முனிவனை நோக்க, நற்றவன்
விற்றெழில் ராமனை விரும்பி நோக்கவே.

41. மிடுக்குடன் எழுந்தனன்; விரைந்து வில்லினைச்
சடக்கென எடுத்தனன்; தலையைப் பற்றினன்;
துடுக்குடன் வடுப்படு தோளின் வாங்கினன்;
முடுக்குடன் வளைத்தனன்; முறிந்து வீழ்ந்ததே.

42. உள்ளவ ரனைவரும் ஒருங்கு வாழ்த்தினர்;
அள்ளிலை வேலனும் அகம கிழ்ந்தனன்;
கள்ளநீர் முனிவனும் காளை வாழ்கென
உள்ளுறை தோன்றவே உவந்து வாழ்த்தினன்.

43. தெள்ளரிச் சணணியிச் செய்தி கேட்டதும்
உள்ளமும் உவகையும் உணர்வு மொன்றுற
உள்ளுறு மாவியால் ஊது பந்துபோல்
புள்ளுறு பொடிப்படப் பொம்ம லுற்றனள்.

44. உன்னுவள் பதுங்கிலை யுவப்பள்; மன்னவர்
மன்னவன் மகளென மகிழ்ப்பள்; கோமகன்
கன்னியின் நிலையினிற் களிப்பள்; ஊர்மிளை
தன்னிலை யவள்நிலை சார்ந்து காண்பினே.

45. ஊழியா யிடையில்வந் துறுத்த பாழ்ஞ்சிலை
நாழியில் தொலைந்தது; நன்மை வந்தது;
'வாழியர் திருமண மக்கள்' என்றுமெய்த்
தோழியர் அவரவர் சொல்லிக் கொண்டனர்.

---

42. கள்ளநீர்-கள்ளத் தன்மை.

43. புள-வலீயல். பொம்முதல்-பெருத்தல்.

46. முடிந்தது மன்னவன் துயரம்; முந்துறக்
கடந்தது பருவமுங் காம நோயுடன்;
ஒடிந்தது கொடுஞ்சிலை; ஒருத்திக் கின்றொடு
விடிந்தது பொழுதெனும் மிதிலை மாநகர்.

47. உரைசெயும் படியமைந் துள்ள நன்மணப்
பரிசினைத் தசரதன் பாலு ரைத்திவண்
வரிசையாய் விரைவினில் அழைத்து வம்மென
அரசனு மமைச்சரை யயோத்தி போக்கினான்.

48. மணமெனு முரையினைச் சுமந்து மன்னவன்
பணியுட னொருசில பகலிற் பாங்குடன்
கணியகில் சந்தனக் காடு நீந்திப்போய்
அணிநக ரயோத்தியை யமைச்ச ரெய்தினார்.

49. எய்தியே காவலர்க் கியம்பிக் கோயிலை
எய்தியே தசரதற் கியம்பு நன்மணச்
செய்தியை யவன்மகிழ் சிறந்தி யார்க்குமச்
செய்தியை யுரைத்தனன் நிரையில் ஆர்த்தனர்.

50. முந்துற வமைச்சர்க்கு முகமன் நல்கியு
வந்திட மணவிருந் தாற்றி யாண்புடன்
தந்தமர் தம்மொடு தானை சூழ்தர
அந்தநன் னாளிலே பயண மாயினான்.

51. அலகறு பொருளுட னனு மேனவும்
இலையென தாரியர் கொள்ள வீந்துமே
குலகுரு வசிட்டனுங் குறித்த நேரத்தில்
பலவிய முழங்கவே பயண மாயினான்.

52 மக்களுங் குருக்களு மனைவி மார்களும்
ஒக்கலு மமைச்சரு முறவும் நண்பரும்
தொக்கிய வேதருந் தொடரப் போயினான்
அக்கறை யோடணி யயோத்தி நீங்கியே.

53. மருதமு முல்லையும் மலையுந் தாண்டியே
கருதிய படியியல் காட்சி கண்டுமே
ஒருசில பகல்நடந் துரவுத் தானையான்
திருநகர் மிதிலையைச் சென்று கண்டனன்.

54. முறையொடு பல்லிய முழங்க வொல்லென
மறையவ ரருமறை யோத மங்கலப்
பொறையுடன் மெல்லியர் பொருந்த வந்துமே
இறைமக னெதிர்வர வேற்றுச் சென்றனன்.

55. தந்தையோ டன்றநற் றுயர் தாள்களை
வந்துமே பணிவுடன் வணங்கி நின்றதம்
மைந்தரைத் தசரதன் தழுவி மைந்தர்காள்!
உய்ந்தன மெனவுவந் தொருங்கு சென்றனர்.

56. சமைந்துள விடுதியில் சென்று தங்கியே
அமைந்துள மணவிருந் தருந்தி யன்புடன்
குமைந்தவில் நிகழ்வினைக் கூறிக் கொண்டனர்;
சுமந்திரன் ஆவன துருசில் செய்தனன்.

57. கருமனக் கோசிகன் காலைப் போற்றியென்
குருமொழிப் படியுடன் கூட்டி விட்டது
மருமக ளோடுமென் மைந்த ரைப்பெற
ஒருநல மானதென் றுவந்தி ருந்தனன்.

58. தும்பியந் தொடைக்குசத் துவச னையதன்
தம்பியை யழைத்தனன் சனகன் தூதரால்
எம்பிய மிதிலையை யெய்தக் கோசலை
நம்பிவில் லிறுத்ததை நவின்று வந்தனர்.

59. மேதிகண் படுவயல் மிதிலக் கோமகன்
மாதரை மன்னனை யழைத்து வாவெனத்
தூதனை யனுப்பினன் தூதன் போய்ச்சொல
மாதவ ரோடுமா மன்னன் வந்தனன்.

60. மற்றவர் வந்ததும் வசிட்டன் இற்றெனச்
சொற்றனன் ராமனைத் தொடர்ந்து முன்னவர்
உற்றதோர் கொடிவழி; உவந்து தன்வழி
இற்றெனச் சனகனு மியம்பி னனரோ.

61. கொடிவழி கூறிய பின்னர்க் கொற்றவ!
துடியிடை சீதையை மூத்த தோன்றற்கும்,
வெடிமலர்க் குழலியூர் மிளையைப் பின்னற்கும்
கடிமணம் புரிந்திடக் கருத்துட் கொண்டனன்.

62. இன்னதே யுறுதியாம் என்னக், கோசிகன்
மன்னவ! பின்னவன் மகளிர் தம்மையும்
தன்னிகர் பரதசத் துருக்கர் தங்கட்கும்
பொன்னவிர் திருமணம் புரிகு வாயெனா.

63. சரியெனப் பெருமதிச் சனகன்; தம்பியும்
சரியெனத் தசரதன் மகிழ்ந்து தம்மனை
விரைவினிற் சென்றரு மறையின் மேலர்க்குப்
பெருநிரை யொடுபொருள் கொடுத்துப் பேணினான்.

64. கணியுரை நாளினை மிதிலைக் காவலன்
மணமுர சறைந்துதா துவரின் மன்னர்க்குப்
புணரிய திருமுகம் போக்க வன்னரும்
அணிநக ரெதிர்வுற அடைந்து மொய்த்தனர்.

65. ஊரினை யொப்பனை செய்ய ஊரவர்;
தாரினு மலரினுந் தரளந் தன்னினும்
சேரிய பொருளெலாஞ் சிறப்பச் சேர்த்துமே
ஆரியர் திருமண வறைய மைத்தனர்.

66. மைப்பெருங் கண்ணியர் மைந்தர் கண்ணினில்
துய்ப்படும் பாவையைத் துறந்து மேவுற
ஒப்பனை செய்துயர் உருவங் காட்டுவர்
இப்படி யூரவர் இயன்றி ருக்கையில்.

67. மரபறிந் தியலுநற் பரதன் மாமனும்
பரதனை யயோத்தியில் பார்த்து மற்றவன்
திருமணங் கண்டிடச் சென்று ளானென
விரிமணிக் கொடித்தெரு மிதிலை யெய்தினான்.

68. வருகெனத் தசரதன் வருகை யென்னெனப்
பரதனைத் தருகெனப் பாட்ட னேவினார்
அரிமலர்ச் சோலைசூ ழயோத்தி சென்றியான்
திரும்பினே னெனவுதா சித்துக் கூறினான்.

69. முரசறை திருமண முழுத்தங் கூடவே
அரசரும் பெரியரும் அருமைச் சுற்றமும்
விரைசெறி குழலரும் பிறரும் வேதரும்
திருமண மண்டபஞ் சிறப்ப வெய்தினார்.

66. துய்-மென்மை.

70. மணமுழ வதிர்ந்திட மறைமு ழங்கிட
மணமகார் வாழ்கென மக்கள் வாழ்த்திடப்
புணரிய தீயிடை பொருந்தப் பொற்புறும்
மணவறை தனைமண மக்க ளெய்தினர்.

71. துன்னிய மறையவர் சொன்ன வேளையில்
தன்னிகர் நன்மதிச் சனகன் வந்துதங்
கன்னியர் நால்வரைக் காளை நால்வர்க்கும்
மன்னெறி முன்னர்நீர் வார்த்துத் தந்தனன்.

72. நன்னுதல் சீதையை ராமன் கொண்டனன்;
கன்னியூர் மிளையைக் குமணன் கண்டனன்;
பன்னிமா ளவியைநற் பரதன் எய்தினன்;
பின்னவன் சுதகீர்த் திதனைப் பெற்றனன்.

73. பல்லிய முழங்கிடப் பலரும் வாழ்த்திட
வல்லியர் கைகளைப் பற்றி மைந்தரும்
மல்லலந் தீவலம் வந்து மும்முறை
நல்லியல் மனைகளில் நன்கி ருந்தனர்.

74. முன்னிய திருமணச் சடங்கு முற்றுற;
உன்னிய பெருவிருந் துண்டி யாவரும்
பின்னினி தேவிடை பெற்றுச் சென்றனர்;
மன்னுகோ சிகன்பனி மலைக்குச் சென்றனன்.

75. பெருமதிச் சனகனும் பெண்கள் நால்வர்க்கும்
வரிசைகள் கொடுத்துநல் வழிய னுப்பினன்;
பரிசொடு விடைகொடு நடந்து பண்புடன்
அரசனும் மக்களோ டயோத்தி சேர்ந்தனன்.

76. சேர்ந்தினி தயோத்தியி லிருக்கச் சில்பகல்
வேந்தனும் பரதனை விளித்துன் மாமனும்
போந்துளன் அழைத்துனைப் போகப் பாட்டனும்
வாய்ந்துனைப் பார்த்திட மனக்கொண் டுள்ளராம்.

77. என்றவன் கூறவே பரதன் எந்தையே!
இன்றையே செல்கிறே னென்று மாமனைத்
துன்றியே இளையசத் துருக்க னோடவன்
சென்றுமே கேகய நாட்டைச் சேர்ந்தனன்.

# 8 தசரதன் சூழ்ச்சிப் படலம்

## வேறு

1. வளைமுரல் பழனஞ் சூழ்ந்த வளநக ரயோத்தி மன்னன்
உளவினை யறியான் பாவம்! உள்ளத்தாற் கள்ள
மில்லான்
கிளையினை நீங்கிப் பாட்டன் கேகயன் றன்னைப் பார்க்க
இளையனோ டிளையாள் செல்வன் ஏகிய பின்னர்
மன்னன்.

2. மட்டவி ழலங்கல் மார்பன் மக்கள்நால் வரிலே ராமன்
கட்டழ கதனி வீடு பட்டுமுன் கைகே சிக்குக்
கொட்ட டிப் பரிச மாகக் கோசல நாட்டை யீந்து
விட்டதை யெடுத்துக் கூறி வெம்பிடு மவனைத் தேற்றி.

3. கெடுத்தனன் காமப் பித்தால் கேகயன் மகட்கு
நாட்டைக்
கொடுத்தனன் அதனை மீட்டுக் கொடுத்துனை யரச னாக்க
அடுத்தனன் பெரிதோர் சூழ்ச்சி பரதனை யதற்கே நாடு
கடத்தினன் மைந்தா! உள்ளக் கருத்தினை யுரைப்பக்
கேளாய்.

4. உடையவன் உரிமை யில்லா வுள்ளவிப் போதே நீயும்
குடிகளுன் னிடத்தி லன்பு கொண்டிடும் படிநீ பேரன்
புடையனாய் நடந்தே யன்னா ருள்ளத்தைக் கவர்ந்தால்
நாட்டுக்
குடிகள்பின் உனக்கே நாட்டைக் கொடுத்திட
விருப்பங் கொள்வார்.

5. மாகுடி களுக்கு மாறாய் மன்னவர் மன்ன னான
கேகயன் மகளோ டந்தக் கேகய னேயா னாலும்
போகுதல் துணியான்; பின்னர்ப் பொன்முடி நீயே
கொள்வாய்;
ஆகையால், மைந்தா! நீயும் அதன்படி நடந்து
கொள்வாய்.

---

2. கொட்டடி-சேலை. திருமண ஆடை.

6. இன்னமுங் கேட்டி ஸ்மந்தா! என்மகன் பரதன் என்று
சின்னவள் எண்ணு வண்ணம் சிந்தையைத் திருப்பி
யுன்பால்
அன்னளென் மகனென் றன்னை அவர்விட நடந்து
கொள்ளல்
பின்னவன் நெடுநா ளிங்கு பெயர்ந்திடா வழியு மாகும்.

7 அன்றியு முன்பால் வைத்த அன்பினுக் கடிமை யாகி
ஒன்றிய வுரிமை தன்னை யுன்றனுக் களிப்பாள்
திண்ணம்;
என்றவ னுரைப்பக் கேட்ட விரண்டக வியல்பொன்
றில்லான்
நன்றெனக் கொண்டு தந்தை மனப்படி நடக்க லானான்.

8. ஆவதை யவாவி ராமன் அதன்படி நடக்க; உள்ளம்
நோவதை யறிவால் தாங்கி நுண்ணிடை மகற்கு நாடு
போவதை விலக்குஞ் சூழ்ச்சி புரிந்துவந் தனனவ் வாறே
காவல னெண்ணம் போலக் கழிந்தது பன்னீ ராண்டே.

9. முழுமகன் தனது சூழ்ச்சிக் குடந்தையாய் முடிவு காணும்
இழிமகன் பழியை யஞ்சாச் சுமந்திர னென்பா னோடும்,
பழிமிகு வசிட்ட னோடும் பரதனைக் கெடுத்தற் கான
வழியினை யாய்ந்து மூன்று மணிகளும் முடிவு செய்தார்.

10. பின்னவன் பாட்ட னூரைப் பெயர்ந்திவ ணடையா
முன்னர்
முன்னனை யரச னாக்கி முடிபுனைந் திடுத லென்றே
அன்னவர் முடிவு செய்தே யதன்படி முடிசூட் டற்கு
மன்னவர்க் கோலை போக்கி வருகென அவரும் வந்தார்.

11. கிட்டிய நாளிற் போந்த கேடனைச் சாக்குச் சொல்லி
முட்டினி லிருந்து தப்ப முறையிலா வஞ்ச நெஞ்சக்
கெட்டவன் சனக னோடு கேகயன் றனக்குந் தூது
விட்டிலன் என்று மற்றை வேந்தர்க்குச் சாக்குச்
சொன்னான்.

12. அரசரோ டயோத்தி நாட்டுக் குடிகளு மடைய வெற்றி
முரசினன் எழுந்தென் மக்கள் நால்வரில் முறையே மூத்த
குரிசிலை யரச னாக்கிக் கொள்ளுவீ ரெம்பீ ரென்னச்
சரிசரி யெனவெல் லோருந் தலையசைத் திசைவு தந்தார்,

13. வல்லவன் எவர்க்குஞ் சீறி வருபகை யதனை வெல்லும்
வில்லவன்; அயோத்தி நாட்டை விளக்கவந் தவனன்
போடின்
சொல்லவன்; உண்மை யாளன் துரிசிலன்; குடிகட்
கெல்லாம்
நல்லவன் ராம னேயிந் நாட்டினுக் குரியா னென்றார்.

14. ஆண்டனன் நாட்டு மக்கட் கச்சம தின்றி யின்பம்
பூண்டனன் இளமை தீர்ந்து போந்தது முதுமை; நும்மை
வேண்டினன் நீரும் வாகை வேய்ந்தனிர் சிலரா மற்கே
தாண்டினன் கவலை யென்னும் தடங்கட லதனை
யென்றே.

15. மணிமுடி புனையு நாளை யருள்கென வசிட்டன் நாளை
மணிமுடி புனைதற் கேற்ற மங்கல நன்றா ளென்னக்
கணிசொலு கின்ற ராமன் முடிபுனை கடிகை நாளை
அணிமிகு விடிய லென்ன அறைந்துபின் னமைச்சை
நோக்கி.

16. ஞாயிறு தோன்று முன்னே நாடொறு மறையோ தும்பல்
லாயிர மாரி யர்க்காங் கவாவிய வனைத்துந் தந்து
மேயபல் சுவையி னோடு விருந்தளித் துவப்ப; பின்னர்
ஏயவை யொன்றுங் குன்றா தினிதுசெய் திடுக
வென்றான்.

17. தசரதன் அமைச்சை நோக்கி ராமனைத் தருதி யென்ன
விசையுட னடந்து சென்று விரைவுட னழைத்து
வந்தான்;
நசையுட னடைந்த ராமன் தந்தையை வணங்க ராமா!
இசைமிக வுனக்கு நாளை யின்முடி புனைவே னென்றான்.

18. தன்னுடன் பிறந்த தம்பி தனக்குரி யதனைக் கொள்ள
மன்னுடன் சூழ்ச்சி செய்து வரும்பதர்; உரியோன்
சென்ற
பின்னுடன் பட்டுக் கூடப் பிறந்தவற் கிரண்ட கஞ்செய்
தின்னுடன் பிழைத்தோ வென்றவ் விழிமக னிசைந்து
போனான்.

---

15. கடிகை-நாழிகை.

19\. அன்னவன் போன பின்ன ரனைவரு மெழுந்து போக
மன்னவ னமைச்சை நோக்கி மதிவலோய்! ராமன் றன்னை
என்னிட மழைத்து வாரு மெனவவன் சென்று கூற
முன்னவன் எனக்கு நாளை முடிபுனைந் திடுத லின்றே?

20\. எதற்கெனை யழைத்தா ரென்ன, எனக்கது தெரியா துன்னை
மதிக்குடை யரசன் கூட்டி வருகென வந்தே னென்ன,
இதற்குளே யழைத்தற் கேற்ற காரண மெதுவோ வென்று
குதித்தெழுந் தவனுஞ் சென்று கும்பிட்டுக் கொண்டெடன் தந்தாய்.

21\. போனது மழைத்த தென்ன புகலுவீ ரெனவே மன்னன்
ஆனது கேளா யுன்னை யரசனுக் கிடவே யானும்
ஏனது செய்தேன்; நாட்டு மக்களு மிசைய லானார்;
நானது தவணை யின்றி நாளையே முடிவு செய்தேன்.

22\. மாறுத லியற்கை யாகும் மக்களின் மனது; நானும்
தேறுத லொழியக் கூடும்; ஆகையால், சிறியாள் சுற்றம்
ஊறுசெய் யாம லுந்தன் உறவினர் காப்பா ராக;
சேறிய பரத னிங்கு சேருமுன் செய்தல் வேண்டும்.

23\. ஆன்றவிந் தடங்கி யுள்ள அறிவர்தம் மனமு மாறும்;
சான்றவர் யாவ ருள்ளார் தந்நிலை தவறா ராக?
ஏன்றனன் பாது காப்போ டிருவென விடைபெற் றேகிக்
கோன்றரு குமரன் தாயாங் கோசலை யிடத்துச் சென்றான்.

24\. சென்றுதா யடியைப் போற்றிச் செய்தியை யுரைப்பத் தாயும்
நன்றுநீ வாழ்க; உன்றன் பகைவர்கள் நசிப்பா ராக;
பின்றுத லின்றி நீயும் பேரர சதனைப் பெற்றே
என்றம ரொடுசிற் றன்னை இனத்தையுங் காப்பாய் மைந்த!

25. தந்தையுன் குணத்தைக் கண்டு தனிமகிழ் வடைந்தா ரெந்தன்
மைந்தநீ நல்ல நாளில் வந்துமே பிறந்தாய்; நானும்
இந்தநாள் மட்டும் செய்த இருந்தவ மதுவே நிற்குத்
தந்ததின் றரசை யென்று தாய்மன மகிழ்ந்து சொன்னாள்.

26. அருகினி லிருந்தார்க் கெல்லாம் ஆடையு மணியும் பொன்னும்
பெருகொளி முத்த மாலை யொடுகொளப் பிறவு மெல்லாம்
ஒருமுக மாகத் தந்தே யுவந்தனள்! உவப்பைக் கண்ணால்
பருகிலக் குவனு மன்னை பக்கத்தில் வந்து நின்றான்.

27. நின்றலக் குவனைப் பார்த்து நீடர செனக்குத் தம்பி!
உன்றனக் காக வேதான் கிடைத்துள துறுதி யாக;
வென்றியோ டதனை யாள வேண்டுவ துனது வேலை;
என்றன தரசும் நான்வாழ்ந் திருப்பது முனக்கே யாகும்.

28. இன்னபல் பசப்பு மாற்ற மிசைத்தவன் விடைபெற் றேகி
மன்னவ னாகப் போகும் மகிழ்ச்சியால் தூண்டப் பட்டுத்
தன்னிரு கண்ணுந் தூக்கந் தரிக்கிலான் முன்யா மத்தே
உன்னிய படியே தன்னை ஒப்பனைத் திருந்தான்; இப்பால்.

29. மணியெலா மவண; பைம்பொன், மலரெலா மவண; பட்டுத்
துணியெலா மவண; பூசுந் தொகையெலா மவண; பூணும்
அணியெலா மவண; தீரா அவாவெலா மவண வான
குணியுலாஞ் சிலையி ராமன் மனைவியர் கோலத் தம்மா.

30. மயற்படு மன்னன் சூழ்ச்சி யறிகிலாள் மகனைப் போவென்
றயற்பட வாக்கிப் பெற்ற வுரிமையை யகன்றே மாற்றின்
இயற்பட நிற்பாள் வீட்டைத் தவிரமற் றெல்லா வீடும்
செற்படப் புதுமைக் கோலங் கொண்டுமே திகழ்ந்த தம்மா.

---

28. ஒப்பனைத்து-அலங்கரித்துக்கொண்டு.
29. அவண-அங்கே. குணி-வளைவு.

31. அயலவன் மனைவி தன்னை யடைதர அவாவி யுள்ளம்
மயலுற வொருவன் கூட்டி வைப்பனென் றிடவே யந்த
ஒயிலினள் விரும்பத் தக்க ஒருபுதுக் கோலங்
கொள்வோன்
செயலினைப் போல யோத்தி செய்தது புதுமைக் கோலம்.

32. உடையவ ளறியா வண்ண மொண்ணுதல் கணவற்
சேர்க்
கடையவ னொருத்தி கோலங் காணுதல் போல வன்ன
நடையவ ளறியா வண்ணம் நன்னெறி யில்லா வஞ்சக்
கொடையவ னணிய யோத்தி கொண்டது கள்ளக்
கோலம்.

33. பாடமை யயோத்தி யென்னும் பணிமொழிப் பாவை
நானே
கூடுறும் வாழ்வுக் காகக் கோலங்கொண் டொளிறு
மாற்றை
மாடியி லேறிக் கண்ட மந்தரை என்பாள் மற்றோர்
சேடியை வினவ வன்னாள் திருமுடி சூட்டல் என்றாள்.

34. தெரியவே சொல்வா யென்னத் தெரிந்திலை யோடி
யின்னும்?
குரிசிலை யுடைய மூத்த கோசலை மகற்கு மன்னன்
கரிசனத் துடனே பட்டங் கட்டுகின் றாரா மின்று
பரிசெனக் களித்தாள் நீயும் பாங்குடன் பெறச்செல்
லென்றாள்.

35, என்றசொற் செவிபு காமுன் எரியிடு மெழுகா வுள்ளம்
கன்றியே யுருகத் துன்பக் கடலிடை வீழ்ந்தை
யையோ!
ஒன்றிய வுயிரைப் போக்க வொருவழி யதுங்கா
ணேனே
வென்றிவிற் பரதா! நீயும் விணுக்கோ பிறந்தா யப்பா!

36. கெடுத்தன னரசன் பொல்லாக் கெடுமதி யாள
னுன்னை
விடுத்தனன் தெருவி லந்தோ! விரட்டின னுட்டை
வீட்டுக்
கொடுத்தனன் அப்பா! பொல்லாக் கோசலை மகற்கு
நாட்டை;
முடித்தன னரசன் தேவி மோசம்போ னாளே
உன் தாய்.

37. எனவுளக் கொதிப்பி னோடாங் கிருந்துபஞ் சணையின் மீது
புனவளத் தொடுவான் மீது புலர்ந்தவெண் முகிலி னுப்பண்
இனவளத் தொளிர்வின் மீனத் திடைமுழு மதியம் போல
மனவளத் தொடுகண் துஞ்சும் கேகயன் மகள்பாற் சென்றான்.

38. பொன்னடி பெயர்த்துச் சென்று பொருக்கென வெழுப்பிப் பேதாய்!
ஏன்னடி! இன்னும் தூக்கம் இடரது தலைமேல் வீழ்ந்தும்?
மன்னடி யோடின் றுந்தன் வாழ்வினைக் கெடுத்தா னென்ன
என்னடி! என்று மெள்ள எழுந்திருந் தவளை நோக்கி.

39. அரசனென் பால்வைத் துள்ள காதலுக் களவில்; எந்தன்
அருமைகொள் மகனி ராம னன்பினுக் குறையு ளாவான்
இருவரு மிருக்கும் போதில் என்னடி! இடரெ னக்குத்?
திருமுக வாட்ட மென்னதெரிவியே னுவை றுன்றாய்?

40. மதிநுதல்! கெட்ட காலம் வருகையி லதற்கேற் றாற்போல்
மதிகெடு மெனவே பன்னூல் வளமுறக் கற்றுத் தேர்ந்த
முதியவர் சொல்வா ரந்த முதுமொழிப் படிநீ யின்றோர்
புதியவ ளானாய் வீணே போடிபோ! பித்தி என்றே.

41. எரிசினம் பொங்கி அம்மா! இளவர சானான் ராமன்,
அரசனுன் னிடத்தில் நீங்கா வன்புட னுள்ளா னென்றே
அரசிநீ புகழ்ந்து கொள்கின் றுயவன் வஞ்ச நேஞ்சன்
கரிசன மில்லா னுன்னைக் கைவிட்டான் பொய்தொட் டானே.

---

37. புனம்-வயல். ஆகுபெயராய மலர்களை யுணர்த்து கிறது. முகில் மழைபெய்து விடுதல், புனமவளமபட. நாபபண்கடு, இனவளம்-கூட்டம்.

42. உள்ளதை யுரையாய்! என்ன உளறுகின் றனைபோ வென்னப்
புள்ளின முரலுங் கூந்தற் பூவைநீ கெட்டா யுந்தன்
பிள்ளையை விடுத்தே யன்னாள் பிள்ளைரா மனுக்கு மன்னன்
கள்ளமா யின்று பட்டங் கட்டவே போகின் றானும்.

43. ஏதிலாய்! நமது வீட்டைத் தவிரமற் றெல்லா வீடும்
சீதையி னுருவம் போல ஒப்பனை செய்கின் றார்கள்;
பூதலர் குழலாய்! உண்மை; மேடைமீ தேறிப் பாராய்
ஆதலால், உனக்கு வந்த பேரிடர் அகற்ற வந்தேன்.

44. என்னநீ கவலை கொள்ளா திருக்கிறா யெனவே பொன்னும்
அன்னவன் பெறுவ துண்மை யாகவா? என்னத் தோழி
பின்னெளி பேசீ! உண்மை; மேடைமீ தேறிப் பாராய்
நன்னுத லுன்னைக் காக்க நான்கடன் பட்டே னென்றான்.

45. அங்கது கேளா முன்னம் அகமொடு முகமலர்ந்தே
இங்கவன் பெற்ற செல்வம் யான்பெற்ற செல்வ மாகும்;
நங்கைநற் செய்தி சொன்னாய் நல்லவள்! இந்தா வென்று
மங்கையோர் ஒளிர்வெண் முத்த மாலையைக் கழற்றித் தந்தாள்.

46. நித்திலக் கோவை வேறா நினைவிலாய்! எனவே ஆம்பல்
முத்தினை மென்று தின்று மோசம்போ கின்றாய் போடி!
பித்திநீ கெட்டாய் பெற்ற பிள்ளையோ டென்னையுங் கூட்டிப்
பொத்தெனப் பாழ்ங் கிணற்றில் போய்விழப் பார்க்கின் றாயே.

---

43. ஏதிலாள்-அயலாள், பகைவள், அன்பிலாள், வறியள்

46. ஆம்பல்-வாய். முத்து-பல்.

47. உள்ளத்தில் வெயர்வை சொட்ட ஒழிவிலாத் துயர
மென்னும்
வெள்ளத்தில் வீழ்ந்து மீண்டு மேலெழ முடியான்,
செவ்வாய்
வள்ளத்தி லிருந்து துன்ப மொழிகளை வாரி வாரிப்
பள்ளத்தில் பாயும் நீர்போல் பாவைசெஞ் செவியில்
பெய்தான்.

48. வஞ்சிநீ மிகவும் நல்லள்; மனத்தினும் வெள்ளைச்
சோளம்!
வஞ்சகன் உனது காதல் மன்னனுன் காலைக் கட்டிக்
கெஞ்சுவன் ஆகு மட்டும் கெட்டவன் ஆன பின்னர்
மிஞ்சின நீரைக் கூட வெறுநிலத் தூற்று வானே.

49. அரசிநீ யவனை நம்பி அருந்துயர் படப்போ கின்றாய்
கரிசன முடையா னுன்னைக் கலந்துசெய் தானோ இல்லை;
அரசது பெறுவே னென்ன அன்னைக்குச் சென்று
சொன்ன
குரிசிலுன் னிடத்தில் வந்து கூறினா னில்லை கண்டாய்.

50. கொற்றவன் சூழ்ச்சி யாலக் கோசலை மகனிந் நாட்டைப்
பெற்றபின் அவளுன் னோடு பேசவு மாட்டாள்; எந்தன்
முற்றிழை நல்லாய்! செல்வ முழுதுமன் னவள்கைக்
கொண்டு
சுற்றமு முறவுங் கூடித் துய்க்கப்போ தென்செய்
வாய்நீ!

51. வாசலை நாடி வந்த வறியவர் தமக்கோர் காசும்
கோசலை யிடத்து வாங்கிக் கொடுத்திடப் போகின்
றாயோ?
மாசிலா மணியே! தாங்கா மானத்தால் உடலி னுள்ளே
ஊசலா டிடுமுன் தூய உயிர்விடப் போகின் றாயோ?

52. நல்லவுன் சுற்றம் வந்தால் நாணியே மானம் விட்டுக்
கொல்லெனச் சிரித்தென் னென்னக் கோசலை மனையை
நாடி
முல்லைவெண் ணகையாய்! கையில் முறத்தினை
யெடுத்துக் கொண்டு
செல்லவே போகின் றாயோ செத்துநீ மடிகு வாயோ?

53. வஞ்சக மனத்தாள் நாட்டு மன்னவன் தாயாய் வாழ
வஞ்சிநீ அடிமை செய்யும் மைந்தன்றா யாய்வாழ் வாயோ!
கொஞ்சமு மிரக்க மில்லாக் கொடியவள் தனக்கு நாளும்
அஞ்சிலம் படியாய்! நாளும் அடிமையாய் வாழ மாட்டேன்.

54. தங்கிய செருக்கி னோடு சானகி முதலா வுள்ள
மங்கைய ரயோத்தி மன்னன் மனைவிய ராக வாழ,
நங்கையுன் மருகி மார்கள் நடைப்பிணம் போல நாளும்
பொங்கிய துயரி னோடு பொழுதினைப் போக்கு வாரோ?

55. ஆவுக்கு நீரென் றாலும் ஆமிழி வென்பார் மேலோர்;
சாவுக்குத் துணிந்தோர் கூடப் பிறர்கையால் தாம்பு கொள்ளார்;
மாவுக்குக் குழலைத் தந்த மங்கையுன் மருகி மார்கள்
பூவுக்குங் காசு கேட்கப் போவரோ சீதை முன்னர்?

56. தம்பியு மவனும் மன்னர் தாடொழச் செருக்கி னோடவ்
அம்பல மணிபத் தாணி யதனில்வீற் றிருக்க; நாளும்
எம்பியு மிவனும் அன்னோ ரேவல்கேட் டெதிரில் நின்று
வம்பலர் குழலாய்! நீங்கா அடிமையாய் வாழு வாரோ?

57. பெற்றவ னருகி லாது பிறந்தகத் திருந்து நாளும்
பொற்றொடி யொருத்தி காதற் பொருளிழந் தினைதல் போலப்,
பெற்றவுன் மகனை வேறு பிரித்தரு கிலாது செய்து
மற்றவன் இடத்தி லன்பு வளர்த்தனன் வஞ்ச நெஞ்சன்.

[illegible] பிறந்து செல்வத் தரசரில் வளர்ந்து நாடாள்
அரசரிற் புகுந்து மேபே ரரசியா யினீ யாளும்
அரசிய லறிவி லாதா ளாயினை பரதன் றன்னை
அரசனை யண்டி வாழ அருந்துணை செய்கின் றாயே?

59. இன்னன புகல; ராமன் இனியவன் மன்ன னானால்
என்னரு மைந்தன் றன்னை இளவர சாக்கிப் பல்லாண்
டன்னவ னாண்டு பின்னார் அரசினை யளிப்பா னென்று
தன்னென வயலார் தம்மை யெண்ணுமத் தையல் சொல்ல.

---

55. தாம்பு-கயிறு. மா-வண்டு.
56. அம்பலம்-அவை. அத்தாணி-கொலுமண்டபம்.

60. நாடியே பரதற் காகும் கலஞ்செயுந் தோழி கேட்டுப்
போடிபோ பித்தி யுன்னைப் போலொரு வரையுங்
காணேன்?
நாட்டினை யெனுங் கூத்த தமிழ்மகன் ஆவி யஞ்சத்
தேடிய சிலைவீ ராமன் கொடியவன் குணமில் லாதான்.

61. உண்மையை யுரைப்பக் கேளா யுன்மண வாள னுந்தன்
பெண்மையை யவாவிக் காமப் பித்தனா யுன்னைக்
கேட்கத்
தன்மையி லிருப்பே! உந்தன் தந்தையு மறுக்கக் காம
வன்மையா லுனக்கு நாட்டை வழங்கியே மணந்தா
னுன்னை.

62. நஞ்சினுங் கொடியா னிந்த நாட்டினைப் பரிச மாக
வஞ்சியன் றுனக்குத் தந்து மணந்தனன் ஆகை யாலே,
பஞ்சின்மெல் லடியாய்! நாடு பரதனுக் குரிய தேயாம்
அஞ்சியுன் கேட்டுக் காக ஆவதைக் கூறு கின்றேன்.

63. வரிநெடுங் கண்ணாய்! அந்த வஞ்சக விதற்கா கத்தான்
பரதனை நாட்டை விட்டுப் பாட்டனூர் போகச் செய்து
வரிசிலை ராமன் றன்னை நாட்டுநன் மக்க ளோடு
நரியனான் பழகச் செய்து நன்மதிப் பினையும் பெற்றான்.

64. செவ்விய நெறியொன் றில்லான் சேயனு மவனு
முன்பால்
நவ்வியே! நல்ல ராக நடித்தது மிதற்கா கத்தான்;
அவ்விய மனத்தா னக்கோ சலையுமுள் ளளவே யாவாள்;
இவ்வுள வறியா நீயும் இருந்தனை யுடந்தை யாக.

65. வெங்கொழி லரச னெல்லா வேந்தரு மழைத்து
முந்தன்
தந்தையை யழைத்தி லாது தவிர்த்தது மிதற்கா
கத்தான்;
மைந்தனென் றுவக்கின் றாயே வஞ்சக னோனு
முன்பால்
வந்துரைத் தானோ தாயை மறந்திலன் அறிவா யம்மா.

---

64. நவ்வி-மான். அவ்வியம்-பொறாமை.

66. பாம்பினை நம்பி னாலும் பகைவரை நம்பே லென்று
தாம்புகன் றிடுவர் மேலோர்; தவிரவுட் பகைவ ரெந்தன்
காம்பன தோளி! நஞ்சக் கருவிடை யுருவ ரன்றோ?
வேம்பனா ருள்ளத் துள்ளே வெளிக்கருங் கரும்ப னாரே.

67. காப்புடை மன்னன் நாடு கடத்தினா னெனினு மிங்கே
மாப்புட னிதற்குக் கூட வரவிங்கு பரதன் றன்னைக்
கூப்பிடக் கூடா தந்தக் கோசலை மகனுக் கேனும்
யாப்புடைத் தம்பி மீதி லெவ்வள வன்பு பாரும்!

68. அடிமைபோ லுனைக்க டப்பி நடந்தது மறிந்தா யன்றோ?
கொடியவள் பொறாமைக் காரி கோசலை மகனி ராமன்
முடிபுனைந் தரச னாகல் முனைப்பொடு நடந்த தற்காக்
கொடுமைசெய் துந்தன் மானங் குலைத்துமே தொலைப்பா
ளன்றோ?

69. மன்னவ னான வந்த வஞ்சகன் மகனோ டுன்னைத்
தொன்னக ரதனை விட்டுத் துரத்துதற் கணுவு மஞ்சான்;
இன்னுமுன் மைந்தன் நாட்டில் இருந்திடில் கொலைக்கு
மஞ்சான்;
என்னதான் செய்வான் பாவம்! எளியவன் பரதன்
அந்தோ!

70. தந்தையுங் கொடியன்; பெற்ற தாயுமோ கொடியள்;
உன்முன்
வந்தவன் இரண்டகஞ்செய் வஞ்சகன் இரக்க மில்லான்;
சொந்தமுங் கொடியர்; உற்ற தோழருங் கொடிய
ரானால்,
எந்தையே! பரதா! அந்தோ! என்செய்வாய் மகனே!
என்றாள்.

71. என்றினை வுரைக்க மானும், இரண்டகஞ் செய்திட்
டாரோ?
ஒன்றுமே யறியேன் பாவி உணர்ந்தனன் பரதன் தாய்நீ
பொன்றுவேன் அன்னாய்! உன்றன் புதல்வனைக் காப்பா
யென்று
கன்றியே கதறித் தோழி கைகளைப் பிடித்துக்
கொண்டாள்.

---

67. ஏமாப்பு-இறுமாப்பு. யாப்பு-உறுதி.
68. முனைப்பு-செருக்கு இவ்வளவு காலமாக நீ செருக்கொடு நடந்ததற்காக.

72. கருநெடுங் கண்ணி! கொண்ட கவலையை விடுவாய், முன்னுன்
திருமணக் காலத் தேநீ சிறியளா யிருந்தாய், மேலும்
வருமுனே மணவ றைக்கு மாநிலங் கொடுத்த தாலே
புரிகுழல் இல்லை யென்று பொய்சொல்வா னுகை யாலே.

73. பண்டொரு நாளுன் மன்னன் பகைத்துமீன் கொடியு யர்த்த
தண்டமிழ் வழுதி யான சம்பரப் போரில் தோல்வி
உண்டுள முழல வேநீ யுதவியப் போரில் வென்றி
கொண்டதற் குவந்து மன்னன் கொடுத்தபே றிரண்டுண் டன்றோ?

74. தெருண்டநல் லறிவு வாய்ந்த தேமொழிக் கிளிவா யாம்பல்
மருண்டமான் விழிப்பொற் பாவாய்! மன்னவன் தன்பா லந்த
இரண்டுபேற் றினை யுங் கொள்வாய்; இலையிலை யெனவே மண்ணில்
புரண்டடி யிணையிற் செங்கை பூணினுங் கலங்க வேண்டாம்.

75. பாட்டளி முரலு மைம்பாற் பாவையே! அப்பே றொன்றால்
நாட்டைவிட் டின்றே யந்த ராமனைப் பதினன் காண்டு
காட்டினுக் கோட்ட வேண்டும்; கன்னியுன் மகற்குப் பட்டம்
சூட்டிட வேண்டு மொன்றால் என்றுநீ துணிந்து சொல்லாய்.

76. பழமொழிக் கிளியே! நாடு பரதனுக் குரிய தென்னும்
இழமையை யெடுத்துக் கூறிக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்ளும்;
ஒழிதரும் பதினன் காண்டி லுரிமையும்; உறுதி பெற்று
வழிமுறை யுரிமை பூண்டு பரதனும் மன்னி வாழ்வான்.

---

78. பேறு-வரம். சம்பரன்-விந்த காட்டில் வாழ்ந்த பாண்டி மன்னன்.

77. கொடியனின் இருப்பின் நாட்டுக் குடிகளைத் தூண்டி விட்டுக்
கெடுபிடி செய்வான் வஞ்சன் கெட்டவன்; பாரும் சும்மா
முடிவுகண் டாலுங் காண்பான்; மொய்குழல்! உனது காதற்
குடையவன் பசப்புச் சொல்லுக் குருகியே மாற வேண்டாம்.

78. தோழியிவ் வாறு சொல்லத் தோகைகை கேசி அன்னாய்!
வாழியென் மகனை வாழ வைத்தனை மகன்றாய் நீயே;
கோழைநா னல்லேன் மன்னன் கொடுமையைத் தகர்ப்பேன் வாழி
தோழிநீ யெனவே; வாழி தோழியென் றிரண்டு பேரும்.

79. சினவறை யதற்குச் சென்று தேவியுஞ் சினந்து பூண்ட
புனையிழை களைந்து பின்னல் புலந்தலங் கோல மாக
இனியவன் வரட்டும்; காட்டுக் கோட்டுவேன்; இணங்கேன் என்னும்
அனையபல் நினைவி னோடு கிடந்தனள் அழுதுகொண்டே.

80. அன்னவ ளிவ்வா றாக; ஆவன செயப்ப ணித்தே
மன்னவன் அரசி யில்லம் வந்துகை கேசி என்னும்
பொன்னினைத் தேடி யாங்கோர் புகன்றிட வோடிப் பொன்னைத்
துன்னியே கண்ணு லன்னாள் துயர்நிலை யதனைக் கண்டான்.

81. என்னுயிர்க் குயிர்போன் றாளே! ஏனழு கின்றாய் பெண்ணே!
அன்னதை யெனக்குச் சொல்லும், அழாதடி கண்ணே! அஃதென்?
அன்னதைத் தருகு வேன்ற காதசெய் தேனு மென்றன்
இன்னுயிர் கொடுத்தே னுந்தா னென்றுநீர் துடைத்துக் கேட்டான்.

82. அன்னவ ளுளக்கி டக்கை யறிந்தவன் எனக்கொன் றும்மால்
மன்னவ! ஆக வேண்டும்; வாய்மொழி கொடுத்தால் சொல்வேன்

அன்னவஃ தென்ன? தேவி! இயம்பியென் றனைக்காப்
பாற்றும்
நன்னுதல்! தவறேன் நல்ல ராமன்மே லாணை
யென்றான்.

83. சொன்னசொற் றவற மாட்டே ரோவெனத் துணிதி
யென்ன,
மன்னவா! முன்னர் மீனக் கொடியுயர் மன்ன னான
தன்னிகர் விந்த நாட்டுச் சம்பரப் போரி லுன்றன்
இன்னுயிர் காத்த தற்கா விரண்டுபே றளித்தி ரன்றோ?

84. அன்னதைத் தருவீர்; என்ற னுருயிர் விடுத்தே யேனும்
இன்னுநீ யதைக்கேட் டாலு மீகுவே னென்று
முன்னம்
சொன்னசொல் தவற மாட்டீர்? தோகைகேட் டாய
மில்லை;
அன்னதைத் தரம றுத்தா லாருயிர் விடுவே னென்றாள்.

85. அன்னமே தவற மாட்டேன் அவைகளைக் கொடுத்தேன்
என்ன.
'மன்னவென் மகனுக் கொன்றால் மணிமுடி சூட்ட
வேண்டும்;
இன்னொரு பேற்றால் ராமன் ஏழிரண் டாண்டு கானம்
துன்னிட அனுப்ப வேண்டும், சொன்னசொற் றவறே
லென்றாள்.

86. அவ்வுரை கேளா முன்னம் இடியுண்ட அரவு போல
அவ்விய மனத்தா ளுவென் றறிவிழந் தலறி வீழ்ந்தான்;
ஒவ்வுமோ கொடிய காட்டுக் கோட்டுதல் ராமன்
தன்னை
எவ்வகை வாழ்வேன் தேவி! என்னுயிர் காப்பா
யென்றே.

87. கதறியே யெழுந்து தேவி கால்களைப் பிடிக்கத் தேவி
அதுமுடி யாதுன் குட்டை யம்பலப் படுத்தி வைப்பேன்
முதுமொழி யதனைக் காத்து முன்னனைக் கான்போக்
கென்ன
பதைபதைத் தடிமா பாவீ! பாழ்ஞ்செயற் கடிகோ
லாதே.

88. வஞ்சகி யாரால் கெட்டாய்? மாகுடி கேடி யென்ன;
வஞ்சகி நானே பொல்லா வஞ்சகா வஞ்சித் தாயே
நஞ்சினும் கொடியோ யுன்னை நம்பினான் கெட்டே னந்த
வஞ்சகி மகனே யென்றன் மகனர சதைக்கைக் கொள்வான்.

89. நங்கையென் பரிச மாயுன் னாட்டினை யெனக்குத தந்நிம்
மங்கையை மணந்த தற்கு மாறுபா டாகப் பாவி!
அங்கதை யறியே னானென் றவள்மகற் காசைத்தந்தே
எங்களை யேய்க்கப் பார்க்குமிழிசெய லறிவேன் கண்டாய்.

90. என்மகன் பரதன் றன்னை எந்தையூர் போக்கி யன்னான்
தன்மகன் றன்னை மக்கள் தம்மொடு பழகச் செய்து
மன்மகன் என்று நாட்டு மக்களு மொப்பச் செய்தென்
நன்மகன் இலாத போது முடிபுனை நாளுங் கண்டாய்.

91. எந்தனுக் குரிய நாட்டை எப்படி யெனைக்கேட் காதுன்
முந்தவள் மகனுக் கீயே முடிவுசெய் தனைய தற்கென்
தந்தையை யழைக்கக் கூடத் தவிர்ந்ததென்? எனது மைந்தன்
உந்தனுக் கென்ன செய்தான்? அவன்செய்த உதவி யென்னே?

92. இப்படிப் பெற்ற பிள்ளைக் கிரண்டகம் செய்வோ ருன்போல்
இப்படி தன்னி லுண்டோ! பிறந்தவற் கிரண்டகஞ்செய்
தப்படி யொருவர்க் குள்ள அரசினை யொருவர் கொள்ளற்
கெப்படி யிசைந்தான் ராமன்? இன்றையே கான்போக் கென்றாள்.

93. ஏதினி மறுக்கிற் பொல்லா ளிணங்கிடாள் போலும்; மேலும்
சூதையூ ரறியச் செய்வாள்; தூற்றுவர் நாட்டு மக்கள்;
மாதிவள் தந்தை கேட்கின் மானம்போம்; அழகன் பாவம்
ஏதில னாவான் அந்தோ! என்செய்வா னெனவுள் ளெண்ணி,

94 பரசிலேன் கண்ணே! நாடு பரதனுக் குரிய தேயாம்
அரசிநீ, யதனை ராமற் களிக்கெதன துயிரைக் காப்பாய்;
அரசரோ டயோத்தி மக்கள் அறியாநாட் குறித்த தான
பரிசினைத் தவிர்ந்தால் மேலோர் பழித்திக மாரோ
வென்ன.

95. கொள்ளெனக் கொடுத்த நாட்டைக் கொண்டவென்
உடன்பா டின்றிக்
கள்ளமா யவனுக் கீந்த களவினைப் பழித்தி டாரோ?
உள்ளதை யுரைத்தேன் ராமன் ஊரிலு மிருந்தற்
கொல்வேன்
புள்ளுறை கான மின்றே போக்கியுன் மொழியைக்
காப்பாய்.

96. சூட்டிய மாலை ஞான்றே சொந்தமா கியவென்
நாட்டைக்
கேட்டிடின் நாட்டோ ருன்னைக் கெட்டவ னென்பா
ரென்று
கேட்டிலன் கொடுத்த பேற்றைக் கேட்டனன்;
மறுத்தால் மானம்
ஓட்டுவேன் நாட்டோர்க் குங்கள் உளவினை யுரைத்தே
யென்றாள்.

97. செப்பினு ளினிய யோத்தி சிரிக்குமென் றடிமா பாவீ!
எப்படி யவனிங் கில்லா துயிர்தரித் திருப்பேன்? ராமா!
அப்பனே! உனக்க யோதி யரசிலை யருங்கா னென்று
குப்புற விழுந்து மன்னன் குடிகெடுத் தனையே பாவீ!

98. உன்மகன் நாடா ளட்டும்; உன்னையான் வேண்டு
கின்றேன்
என்மகன் காடா ளாம லிருந்திட அருள்வா யென்று
மன்மகன் வேண்ட; ராமன் வஞ்சகன் நாட்டைத்
தூண்டி
என்மகன் அரசு கொள்வான் உயிருக்கு மிறுதி
காண்பான்.

99. உன்னுள வதற்கன் றனு முடந்தையா யிருந்தான்
வஞ்சன்
என்னிடம் நல்லோன் போல நடித்தனன்; என்னை
தன்பால்

சொன்னவ னென்னோ டின்னும் சொல்லினு னில்லை;
' போவான்
இன்னினி யேகான் போக்கும் எனமொழிக் திருக்குங்
காலே.

100. புன்னெறி யமைச்ச னுன சுமந்திரன் பொருந்தி யாங்கு
துன்னிய தெனவே செல்வச் சுடர்முடி புனைநல் வேலை
மன்னவ! வுமைய ழைத்து வரச்சொன்னுர் வசிட்டர்
என்ன
சொன்னவுன் சொற்கள் மேலும் துயரினைத் தருது
மென்ருன்.

101. அரசனவ் வாறு கூறச் சுமந்திர கனலத் தேவி,
வரிசையா யிரவு முற்றும் மவுலிமுடி புனையும் பேச்சை
உரைசெயு மகிழ்ச்சி யாற்சோர் வுற்றிருக் கின்ருர்
மன்னன்;
அரசனிங் கழைத்தா ரென்று ராமனை யழைத்து வாரும்.

102. என்றுகை கேசி சொல்ல அமைச்சனவ் விடத்தை
விட்டுச்
சென்றுபின் திரும்பி வந்து இரண்டுளார் அரசர்
முன்றில்
என்றனன்; மன்னன் மூத்தோய்! ஏனினும் போக
வில்லை?
சென்றுநீ அழைத்து வாராய் சீக்கிரம் எனவே
சென்ருன்.

103. மற்றவன் விரைந்து சென்று மைந்தனைக் கண்டு தந்தை
சிற்றன்னை யகத்தி லுள்ளார் சீக்கிர மழைப்பா யென்று
சொற்றனர் எனவே, ராமன் துணைவனே டெழுந்து
சென்று
பெற்றதை யிழந்தான் வெற்றி பெருதவன் தன்னைக்
கண்டு.

104. புனத்திடை யரியே றுண்ட பொருகளி றுணர்வு சோம்பி
இனத்திடை கிடப்ப போலக் கிடக்குறு மெந்தை
தாயைத்
தனித்தனி தொழுதான்; மன்னன் தடங்கணீர் பெருக
ராமா!
எனத்துயர் வாய்வா ளாம லிருக்கவே; ராம னன்ருய்!

105. சிறியனே தேனும் குற்றம் செய்தனோ? தீரா கோபமோ?
ஏறியெனுங் கடுஞ்சொற் கூறி யேக்கமுண் டாக்கி
னீரோ?
அறிதர வுரைப்பீ ரென்ன, அன்னையுன் தந்தை ராமா!
நெறிபிழை யாமை யாலே நெஞ்சநெக் குருகு கின்றார்.

106. மன்னவ ரெனக்குத் தந்த வாக்குறு தியைநிற் கோதின்
என்னதை நீகேட் பாயோ இல்லையோ வெனுமை
யத்தால்
உன்னியே தியங்கு கின்றார்; உறுநீ கொடுப்பா யானால்
அன்னதை யுனக்கு நானே அறைகுவே னெனவே
ராமன்.

107. அன்னையே எதுசொன் னாலும் அப்படி யேசெய்
கின்றேன்
என்னவே, பரதன் இந்நா டாளவும்; ஈரே ழாண்டு
துன்னிநீ யரிய கானம் ஆளவும் சொன்னார் மன்னன்
இன்னையே செல்வாய் நீயும் இசைத்தசொற் றவறா
தென்றான்.

108. சுடுகணை பாய்ந்த மான்போல் துணுக் கென வுள்ளம்
சோம்பி
விடுகணை யின்றித் தாயே! மிகுகுணப் பரதன் இந்த
நெடுநில மதையா ளட்டும் நீடுற; வேண்டு மானால்
அடியனே னரிய கான மாளுகின் றேன்போ யென்றான்.

109. என்னினி 'வேண்டுமானால்' இப்பொழு தேசெல் கென்ன
அன்னையே வருந்த வேண்டாம்; ஆட்சியில் விருப்ப
மில்லை;
இந்நிலக் குடிகள் தம்மை என்வழிப் படுத்து நாட்டு
மன்னவ னாக வாழ மனத்தினு நினைக்க வில்லை.

110. ஈங்கொரு வேளை நான்றாழ்த் திருந்திடில் பரதன் ஆட்சி
தாங்குக வென்றெ னக்குத் தருவனென் றச்சம்
போலும்;
நீங்குவேன் எனக்கை கேசி நீமிக நல்லன் மைந்த!
தீங்கொரு வருக்கும் பாவம் கனவிலுஞ் செய்ய
மாட்டாய்.

---

108. விடுகணை இன்றி- எதிர்மொழி கூற முடியாமல்.

111. ஏதுமே யறியான் போல ஏனடிக் கின்றாய்? உங்கள்
சூதினை யறிவேன்; தந்தை சொல்லவு மில்லைப் போலும்!
மாதெனை மணந்த போதே வழங்கினேன் நாட்டை
யென்று;
பேதையென் றெண்ணி யென்னைப் பசப்புரை பேசு
கின்றாய்.

112. நல்லவன் போல வென்பால் நடித்தசூ தறியா துன்னை
நல்லவன் என்றி யானும் நம்பியே மோசம் போனேன்
அல்லவன் போலுன் தம்பிக் கிரண்டக மதுசெய் தாயே;
கொல்லவு மஞ்சு வாயோ கொடியநீ பரதன் றன்னை

113. தந்தையைத் தடுத்தா யில்லை, தம்பியை யழைத்தா
யில்லை,
வந்தெனக் குரைத்தா யில்லை, வஞ்சகன் மானமில்லா
உந்தைசெய் திடுமச் சூழ்ச்சிக் குடந்தையா யிருந்தே
யெந்தன்
மைந்தனைக் கெடுக்க நீயும் வஞ்சனை புரிந்திட் டாயே.

144. அடிக்கடி யுன்றாய் தந்தை மனைவியர் அனையா
ரெல்லாம்
மடிக்குளே நெருப்பை வைத்துக் கொண்டுமே வந்தென்
முன்னர்
நடிக்கவே நல்ல ரென்று நம்பியான் மோசம் போனேன்;
முடிக்குமுன் உடைந்து தாழி மோசம்போ னீர்கள்
பாவம்!

115. என்மகற் குரிய தாக எனக்குமுன் கொடுத்த நாட்டைத்
தன்மகற் குரிய தாக்கத் தவித்தனள் உனது நற்றாய்;
முன்மகன் உனது மேனி யழகெனு மயக்கத் தாலே
தன்மகன், தன்சொல், தன்பேர், தன்மதிப் பையுங்கை
விட்டான்.

116. உடையனை யூரி வில்லா தோட்டிவிட் டவனில் வேலை
குடிகளை வழிப்படுத்திக் கொண்டனை; கொண்டன்
றோரால்
முடிபுனை வழியுஞ் செய்து மோசஞ்செய் திடவும்
பார்த்தாய்;
கடிதினில் நாட்டை விட்டுக் கானகம் செல்வா
யென்றான்.

---

144. மடி-வயிறு.

117. 'தங்கள்சொற் படியே'யெந்தன் தம்பியே நாடா ளட்டும்
இங்கியா னிருந்தா லென்ன' என்பையேல் குடிக ளுன்பால்
தங்கிய அன்பால் நாட்டைத் தருகெனப் புரட்சி செய்வர்;
வெங்குறை யுடையோ னென்று வேந்தையும் பழிப்ப ரன்றோ?

118. பெற்றபின் ளையைப்பல் லாண்டாய்ப் பிரிந்தவ னுரிமை தீர
மற்றவன் தன்னைப் பாவி மறந்துனை மகனாக் கொண்டேன்;
பொற்றுற வளர்த்து வந்த பொருகிடாய் மார்பில் பாய்ந்த
சொற்றனை நினைக்கச் செய்தென் தொடர் பையு மறுத்துக் கொண்டாய்.

119. தன்னல மிலையேல் மக்கள் வாழ்க்கையே சலித்துப் போகும்;
தன்னலம் பிறர்ந லத்தைத் தடுப்பது தகவ தன்றுன்
தன்னலம் பிறர்ந லத்தைத் தடுத்ததால் தகர்ந்த தப்பா!
தன்னலம் பொதுந லத்தின் தாயென வறிகு வாயே.

120. உள்ளத்தை யுரைக்க ராம னூரமவி னுள்ளம் வெள்கிக்
கள்ளத்தை யறிந்தா ளென்ற கவலையங் கடலில் வீழ்ந்து
துன்னித்தன் கரைகா ணானைத் தாயொடு தொழுதென் அன்னாய்!
புன்னொத்த கான மின்றே போகிறே னென்று போனான்.

121. எண்ணிய வெண்ணஞ் சிந்த இளையதாய் சொல்லே றுண்ட
புண்ணொடு போவான் றன்னைக் கண்டுமே புலர்ந்த காமக்
கண்ணியர் கெடுத்தான் மன்னன் காட்டினுக் கோட்டித் தங்கள்
அண்ணியன் றனையென் றேங்க; அன்னைபா லணைந்தா னம்மா

122. பெற்றவள் கண்டு மைந்த! பெருகிய கவலை யென்னே?
சொற்றவ றுத வுந்தை சுடர்முடி புனைவார் என்ன;
உற்றதை யுரைத்தான், உள்ள முடைந்தவள் ஐயோ! மைந்தா!
மற்றெனா செய்வே னென்று வயிற்றினி லடித்துக் கொண்டாள்.

123. எண்ணிய வெண்ண மெல்லாம் எதிரிகட் குரிய தாச்சே
அண்ணவோ! கிழவி, ஏழை, அரசனும் விரும்பான், என்றன்
கண்ணியே! யென்செய் வேன்சக் களத்திகள் இடர்செய் வாரே
மண்ணிடைப் பிரிந்து வாழேன் வருகுவேன் கான மென்றாள்.

124. எண்ணருந் திறலோய்! வில்லை யெடுத்தினிப் பொறுமை வேண்டாம்;
பண்ணழி பாடல் போலப் பரதனுக் குரியோர் தம்மை
மண்ணிடை வீழ்த்திச் செம்பொன் மணிமுடி புனைந்தே யன்னை
புண்ணினை யாற்றி நாட்டைப் புகழொடு பொருந்தி யாள்வோம்.

125. தீயவள் கணவன் றன்னைச் சிறையினி லிட்டோ, அன்றி
வீயவே செய்தோ நாட்டை மீட்குவேன்; கொடியா ளோடு
போயொரு கொடியிற் கானம் போக்குவே னவளை யண்ணே!
நாயினேன் கடனீ தென்ன லக்குவன் குதிப்பத் தாயும்.

126. என்னருங் குழந்தாய்! தம்பி இயம்புதல் கேட்டி என்ன,
அன்னையே! பரதன் நல்லன், அவன்வரின் அயோத்தி நாட்டு
மன்னவன் அவனே யென்று மக்களும் அறிவர்; பின்னர்
அன்னவர் மனமும் மாறும்; அனைமுத லோரு மொப்பார்.

---

123. கண்ணியே-கண்போன்றவனே.

127. அன்றினை னின்றே ஆன மேகினால் அவன்கட் டாயம்
மன்றலங் கானந் தேடி வருகுவ னென்னைப் பார்க்கத்
துன்றிய பொழுது தோன்றுஞ் சூழ்ச்சியா லவன்பால் னாட்டை
நன்றியான் பெறுதல் கூடும் எனச்சொலி நடக்க லானான்.

128. இல்வினை யடையச் சீதை யேன்மனக் கவலை மன்னா!
சொல்லுக, பரதன் தாயின் சூழலிற்பட் டாரோ வுந்தை;
சொல்லுக வெனவே ராமன் நடந்ததைச் சொல்லி நிற்க;
வல்லியும் பிரியே னென்று மன்னனைத் தழுவிக் கொண்டாள்.

129. வல்லியான் கானஞ் சென்று வரும்வரை பரத னுக்கு
நல்லவ ளாக அன்னான் மனப்படி நடந்து கொள்வாய்;
அல்லதூஉ மென்னைப் பற்றி யவனிடம் புகழேல்; அன்னான்
நல்லது செய்து காப்பான் மனப்படி நடந்தா லென்ன.

130. இன்னபுன் சொல்லைக் கேளா வுந்திழை சினந்து நோக்கி
பின்னரென் சொன்னீர் நீராண் பிள்ளையா? ஆண்மை யில்லாய்!
அன்னரே யுனது தன்மை யறிந்திருந் தாலென் தந்தை
இன்னல மில்லாய்! என்னைக் கொடுத்துமே யிருக்க மாட்டார்.

131. எப்பல முறையான் வேறு புகலிலை யென்று நும்பால்
செப்பியு மென்றன் மீது சிறிதுநம் பிக்கை யின்றி
இப்பவும் பரதன் பால்நீ இப்படிப் பேச வேண்டும்
அப்படி நடக்க வேண்டும் என்றுரைப் பதனைப் பார்த்தால்.

132. பன்னியைப் பிறர்பால் விட்டுப் பயன்பெறப் பார்க்கின் றீரோ
என்னவே நினைக்க வேண்டி யிருக்கிற தையா! வேண்டின்
சின்னவன் றனக்கு நீர்போய்ப் பணிவிடை செய்யும்; பாவி
இன்னையே சாதல் நன்றாம்; இதோவதைச் செய்வே னென்றாள்.

133. காரிகை யுந்த னுள்ளக் கருத்தறி யாது சொன்னேன்
பூரிவெண் ணகையாய்! வாவுன் பொருளொடு கலனை யெல்லாம்
ஆரியர்க் களிப்பாய்; வேலை யாளர்க்கும் அவரைக் கேட்டுத்
தாருவாய் எனம கிழ்ந்து தையலவ் வாறே செய்தாள்.

134. தம்பியும் வருவே னென்னத் தாயர்க்குத் துணையார் செய்வார்?
அம்பனுள் நன்மை செய்யாள்; பரதனோ டரசுந் தட்டான்;
நம்பிகேள் பரதன் என்றும் நமக்கஞ்சி நடப்பான் நன்றாய்
இம்பரில் தாயர்க் கச்ச மிலையெனச் சரிவா வென்றான்.

135. பொன்னணி யொடுகைத் துள்ள பொருளுடை கட்டில் மெத்தை
இன்னபல் வகைய தாக இதுவரை நுகர்ந்து வந்த
அன்னவ ருடைமை யெல்லாம் ஆரியர் தமக்குத் தந்து
மின்னொடு மன்னன் றன்பால் விடைபெறப் பெயர்ந்து சென்றான்.

136. மருண்டவ ளிடத்துப் போகும் வழியிலில் கல்டோர், வெண்ணெய்
திரண்டிடும் போது தாழி யுடைந்ததே; செங்கா லன்னம்
இருண்டகா னகத்திற் போயங் கென்செய்வாளை யோ பாவம்!
புரண்டது மேல்கீ ழென்று புலம்பிடப் பெயர்ந்து போனான்.

137. போயவன் எந்தாய்! கானம் புறப்பட விடைதா வென்ன
ஆயதோ உனைக்கான் போக்க ஐயனோ என்று காண்பேன்!
தீயவள் எனையே மாற்றித் திங்குசெய் திட்டாள் மைந்தா!
நீயெனை விலக்கி நாட்டை நெடிதர சாள்வா யென்றான்.

---

133. பூரி-மிகுதி.

138. எந்தைநீ ரேகா டாளும் ஏகியான் வருவேன் என்ன,
மைந்தனை யனுப்பு மென்று மங்கையு மறைவிற்
றாண்ட
எந்தையே ராமா போய்வா! இனிதுநீ ரூழி வாழ்க
மைந்தனே யென்ன; மன்னன் மனநிலை தேர்ந்த
மைச்சன்.

139. கேடிநீ கணவன் பேச்சைக் கேட்டிடா திவரைப் பாழுங்
காடதற் கனுப்பு கின்றாய், கைப்பொருள் வாங்கிக்
கொண்டிக்
நாடதை ராம னுக்கு நல்குவாய்; இலையேல் நீயும்
வேடர்கை மான்போல் துன்ப மேவுவா யெனவே,
மன்னன்

140. சோனைபோல் விழிநீர் பாயச் சுமந்திரா! ராம னோடு
தானையுங் குடியோ டின்பத் தையலர் வணிகர் செல்வம்
போனவர்க் குடைய யாவும் போக்குவா யெனக்கை
கேசி
ஏனைய விலாத விந்நா டெதற்கெனச் சினக்க ராமன்.

141. எனக்கவை யொன்றும் வேண்டாம் பரதற்கே யீந்து
விட்டேன்;
புனக்கரி போகும் போது கயிற்றொரு பொருட்டோ?
எந்தாய்!
மனக்குறை விடுமெங் கட்கு மரவுரி தருக வென்ன,
இனக்குயி லனைய கேசி வற்கலை யெடுத்துத் தந்தாள்.

142. உடுத்தனர்; சனகன் செல்வி உடுத்திட வறியா துன்க
உடுத்திட வறியாய் கொல்லென் றுடுத்துவிட்
டனன் கண் ணாளன்;
கெடுத்தனை யடிநஞ் சன்னாய்! கேடுகெட் டவளே
யுங்கள்
குடித்தனம் நொடித்துப் போகுங் கொல்லென
வசிட்டன் சீறி.

143. கொடியவளே! சீதை கானங் குறுகுதல் தகாது; ராமன்
முடிபுனைந் தரசா ளட்டும்; மூத்தவ னிருக்கத் தம்பி
முடிபுனைந் தரச னாதல் முறைமையோ? இவர்கள்
போனால்
நடுவிகள் தவளே! போவோம் நாங்களு மெனக்கை
கேசி.

144. என்மகன் உங்கட் கெல்லாம் என்னிடர் செய்தான்? மூத்தான்
தன்மகன் என்ன நன்மை தான்செய்தான்? அறிவின் மூர்த்தீர்!
மன்மகன் தாளத் துக்கு மத்தளம் போட்டுக் கொண்டென்
பொன்மகன் கெடவண் ணுந்தீர் போதுநும் வாயை மூடும்.

145. ஆவரும் பழிக்கஞ் சாதீர்! என்மகன் அரசை வவ்வ
யாவரு முளவ ராகி யானையுண் விளம்போ லானீர்;
ஒவரு மரபுக் கொவ்வா இழிவையுந் தேடிக் கொண்மர்
ஓவருங் கொடிய துன்பம் ஒழிவது நலமே யென்றான்.

146. என்னநீ செய்தாய் சீதே! எனத்தச ரதன்பு லம்ப;
அன்னையைப் பகைவர் கையில் கொடுத்திடா தருள்வீ ரந்தாய்
என்னவே ராமன் வேண்டச், சுமந்திரா? இனிய தேரில்
இன்னரை யேற்றிச் செல்கென் றியம்பியே மன்னர் மன்னன்.

147. பொன்னணி கலன்க ளிந்தான்; புனைந்தனள் சீதை; ராமன்
என்னென்ன குற்றங் கள்செய் திருப்பினும் பொறுப்பீ ரென்று
தன்னருந் தந்தை தாயர் தமைப்பணிந் தெழுந்து தேரில்
அன்னவ ரேறக் கண்டோர் அனைவருங் கதறி னார்கள்.

148. தெள்ளிய மணிபொன் செய்த திருமுடி புனைந்து செம்மல்
கள்ளவிழ் குழலார் கண்டு களித்திடத் தேவி யோடு
வள்ளிய தெருவி னூடு வலம்வரற் கமைந்த வத்தேர்
பொள்ளென நெடிய கானம் போவதற் கமைந்த தம்மா.

---

145. ஆ-பழிப்பு. ஏ. பெருமை. ஓவு அரும்-ஒழியாத.
148. செம்மல் தேவியோடு வலம் வரற்கு.

149. தன்னிகர் மைந்தா! ராமன் சீதையே தந்தை தயார்
அன்னர்சொற் படிந டப்பாய் எனச்சுமத் திரையு
மம்மா!
சொன்னசொற் றட்டே னென்று தொழுதிலக் குவனு
மேற
மன்னவன் தொடரத் தேரும் சென்றது வாயில்
விட்டே.

150. தேவிய ரோடு மன்னன் தேரினைத் தொடர்ந்து
சென்றென்
ஆவியே தனியா யென்னை யழுகென விங்கே விட்டுப்
போவையோ கான மென்று புலம்பியே யுணர்வு சோம்பி
ஓவென அலறிக் கீழே விழுந்தனன் உறுதி யில்லான்.

151. எடுத்தவன் தேவி மார்கள் இணைக்கையா லணைத்துத்
தாங்கி
அடுத்தொரு பிணத்தைக் காவல் கொளுத்திநீ ராடிச்
செல்வோர்
படித்தவர் நடத்திச் சென்று மூத்தவள் படுக்கும்
கட்டில்
கிடத்தினர்; ராமா! வென்று புலம்பியே கிடந்தான்;
இப்பால்.

152. உடன்பிறந் தவளை விட்டிங் கொருவனைப் பிரித்தாள்
சீதை;
உடன்பிறந் தவனை விட்டிங் கொருத்தியைப் பிரித்தான்
ராமன்;
உடன்பிறந் தின்பங் கொல்லும் ஒழிவரு தொழுநோய்
போல
உடன்பிறந் தவர்கள் வாழ்வை யொழித்தன ரிவர்கள்
என்றும்.

153. மன்னவர் மன்னன் காம மயக்கினால் கெட்டா
னென்றும்,
[illegible]னல முடையாள் பாலைத் தரையினில் கவிழ்த்தா
ளென்றும்,
மின்னிவள் கானந் தன்னில் வெந்துயர் அடைவா
ளென்றும்
இன்னன பலவும் ஊரார் இயம்பியங் கயர்ந்து நின்றார்.

154. ஞாலத்துப் புதிய வாழ்வை நண்ணிடக் காத லுள்ளம்
ஆலித்துக் கோலங் கொண்ட அழகிய கணவன் வீழக்
காலத்துக் கொண்ட கோலங் கலைந்தபோ லயோத்தி மானும்
கோலத்தைக் கலைந்து துன்பக் கோலங்கொண் டலங்கி னாளே.

155. இருந்தது போன்றே முன்போ லியற்கையா யிருந்த தின்றும்
திருந்திய மனக்கை கேசி திருமனை; செயற்கைக் கோலம்
பொருந்திய திழந்து சோர்ந்து புல்லெனத் தோன்றிற் றுள்ளம்
திரிந்துள விருந்த மற்றைத் தேவியர் மனைக ளம்மா!

156 முழவொலி முழங்க மன்றல் முரசொலி தழங்கச் செல்வர்
மழவொலி மலியப் பெண்டிர் வாயொலி பொலியக் கொண்ட
விழவொலி யொழியக் கெண்டை விழிகளை மூடிக் கொண்டே
இழவொலி மலிய வாய்விட் டேங்கின ளயோத்தி மானும்.

157 பாவிகை கேசி யாலே பழிபெற வெம்மை விட்டுத்
தாவரு கான மாளத் தானடைந் தீரோ வென்று
தேவிய ரழுது கொண்டு செல்வமே! வருவீ ரென்று
கூவியே தொடர்ந்து செல்லக் கொடித்தெரு வதனைத் தாண்டி.

158 பொங்கிய வுறவு ளோரும் புலம்பியே நிற்க விட்டு
அங்கவ ரிருவ ரோடும் ஆரியக் குப்ப னோடும்
மங்குலதோய் மாட நீடு மாநகர் நீங்கிச் சென்று
கங்குலில் தமசை யாற்றங் கரையினில் தங்கி னானே.

---

154. ஆலித்து-ஆரவாரத்துடன். அலங்குதல்-வருந்துதல்.
156. மழவொலி-கொஞ்சுமொழி. விழிமூடுதல்-கதவுமூடுதல். வாய் விட்டு-வாயிலைவிட்டுத் தேவரைத்தொடர்ந்து சென்றனர்.

159 தங்கிப்பின், னொளியான் மேனி தடவியே சனகன் பெற்ற
மங்கையுன் னடியைத் தீண்டப் பெற்றவிம் மண்ணுக்
கின்பம்
நுங்கையர் களுக்குத் துன்பம் நூறுபங் கலவோ
வென்ன
எங்களுக் கதினுந் துன்ப மிரண்டென மறையின்
வல்லோர்.

160 ஐயன்மீர்! என்மேல் வைத்த அன்பினைப் பரதன் மீது
வையுங்க ளென்ன, நல்லோய்! வஞ்சகி மகனுக்
கெம்மைக்
கையடை யாக்கிச் செல்லல் கடமையோ? என்னப்
பின்னோன்
துய்யநற் குணங்க ளுள்ளான் துயர்தவிர்ந் திருப்பீ
ரென்றான்.

161 ஈங்கவர் தமக்கு நல்ல ளென்னுநம் பிக்கை காட்டத்
தூங்கினர் விடிந்து மன்னோர்; தூங்குதல் கண்டி ராமன்
பாங்கனை யெழுப்பித் தேரைப் பண்ணியங் கிருந்து
சென்றான்;
ஆங்கவ ரெழுந்து காணா தயோத்தியை யடைந்தா
ரம்மா.

162. அடையவே ராம னின்றி ஆரியப் பெண்டி ரெல்லாம்
வடிவழ கோனைக் கூட்டி வரத்திற மில்லா வுங்கட்
குடையபெண் டாட்டி. வேறு ஒருதுளி யாண்மை
யில்லீர்!
மடிகுவோ மவனைக் காணா மலர்விழி வருந்த வாழோம்.

163. பாட்டளி முரலுங் கூந்தற் பைங்கிளி யோடு கூடி
ஈட்டருங் காமப் பள்ளி யிடைவிளை யாடும் போது
தீட்டரு மேனி மைந்தன் திருமுகச் செவ்வி தன்னைக்
காட்டினி லுள்ளோ ரன்றோ களிப்பர்கண் டென்று
நொந்தார்.

# 9. காஞ்புகு படலம்

## வேறு

1. தேரி லேறிமுன் சென்றவி ராமனும்,
ஊரை நீங்கி யுறவையு நீங்கிநற்
சீரை நீங்கித் திருவொடு பண்மனை
யாரை நீங்கி யடைந்தனன் காடெனா.

2. ஈட்டு துன்பத் தினைந்தவன் கோசலை
நாட்டை நீங்குவோன் நான்சர யுக்கரைக்
காட்டில் வந்து களித்துமுன் போலினி
வேட்டை யாடுவ னோவென வெம்பினான்.

3. என்று பின்னு மினையச் சுமந்திரன்
ஒன்று தேரினை யோட்ட விரைவினில்
நின்ற காவினை நீந்தி விரைந்துபோய்ச்
சென்று கங்கைக் கரையினைச் சேர்ந்தனன்.

4. மருங்கு நீள்கரை வைகி யிருக்கையில்
சிருங்கி பேரம் எனுநகர்ச் சீர்த்தியான்
சுருங்கு தீமைக் குகனெனுந் தோழனை
ஒருங்கு கண்டவ னுற்ற துரைத்தனன்.

5. துன்ப முற்றுத துளங்கியத் தோழனும்
அன்பு டன்புல வூனு மளித்திட
அன்ப வின்றய லாரிடை யுண்பதில்
பின்பு வந்து பெருவிருந் துண்குவேம்.

6. என்று கூறி யிரும்புன லுண்டவன்
மன்ற லங்குழல் மாதுட னாயிடைத்
துன்று புல்லின் படுக்கையிற் றுஞ்சினான்;
நின்று காத்தனன் பின்வரு நீர்மையான்.

7. கால மென்னுங் கதிரவன் தோன்றலும்
ஏல தாமென் றெழுந்து குகன் றனால்
ஆலம் பால்கொ டணிந்து சடைமுடிக்
கோலங் கொண்டு கொடிப்பட கேறினான்.

8. கெடும னத்தகை கேசி யிடத்தெமை
அடிமை யாக்கி யகலுதல் நேர்மையோ?
நடுமை காத்துடன் நானும் வருகுவேன்
சுடுமை நீக்குவை யென்னச் சுமந்திரன்.

9. மன்ன வன்றுயர் மாற்றுதல் உன்கடன்
துன்னு வோம்விரை வாயெனச் சொல்லுசிற்
றன்னைக் காக அவருள்வ தைச்செயும்,
அன்னை மார்கவ லற்றிருக் கச்சொலும்.

10 என்றுந் தந்தைபோல் தாய ரிடத்திலும்
நன்று தாழ்ந்து நடக்கவும்; அன்னருள்
என்றன் தாயை யினிது புரக்கவும்
இன்று ணைக்கைப் பரத னிடஞ்சொலும்.

11 என்று ராம னியம்பிடத் தோணியும்
மன்றல் மேய வடகரை நீங்கியே
சென்ற துகுக னோடு சுமந்திரன்
நின்று நோக்கிட நீந்தியே கங்கையில்.

12 தேக்க மின்றதிற் செல்கையில் சீதையும்
ஆக்க ளாயிர மாயிரங் கட்குடம்
மீக்கு வேனிங்கு மீள்கையி லின்றெமைக்
காக்கு வாயெனக் கங்கையை வேண்டினள்.

13. கங்கை யாற்றைக் கடந்தக் கரையினில்
தங்கி யாங்கோர் தடித்த மரத்தின்கீழ்
மங்கி லாதவோர் மானுமோர் பன்றியும்
நுங்கி யாங்கு நுணங்கி யுறங்கினர்.

14. இருண டக்க வெழுந்து நடந்துபோய்
மருவிப் பாரத்து வாசன் குடிசையைப்
பெருக வுண்டு பெயர்ந்தி யமுனையை
ஒருவி யக்கரை யுற்றனர் மற்றவர்.

---

9. உள்வது-எண்ணுவது. கவல்-கவலை.
12. மீக்குவேன்-மிகுதியாக வழிபாடு செய்வேன்
13. மங்கிலாத-நல்ல. நுணங்கி-செறிந்து.

15. ஆற்றி னோக்கடந் தக்கரை செல்கையில்
ஆற்ற வேபல ஆவொடு கட்குடம்
ஏற்றி யேவழி பாடுசெய் வேனெனப்
போற்றி னளவள் கங்கையிற் போலவே.

16. அன்று முன்னைய போலவவ் வாரியர்
சென்று கானிற் றிரியு முயிர்களைக்
கொன்று தின்று குறுக்கிப் படுத்தெழுந்
தென்றும் போலவே யேகினர் கானிடை.

17. வழிநெ டுகவும் மாகொலை யாளர்கள்
இழிய வுண்டுகை கேசியோ டெந்தையைப்
பழிமொ ழிந்துநா டாளும் பரிசினைக்
கழிய வெண்ணியே காலங் கழித்தனர்.

18. வஞ்சி யன்ன வணங்கிடைச் சேயிதழ்
அஞ்சி லோதி யவளொடி ராமனுங்
கொஞ்சி யோவியக் கூட மெனப்படும்
மஞ்சு லாவு மலையை யடைந்தனர்.

19. ஓவக் கூட மலையினை யுற்றவர்
மேவிக் கண்டுமொள் ளீக ரறனிவனைப்
பாவித் தம்பி யிலைக்குடில் பண்ணிடக்
காவிக் கண்ணி கணவனு மெம்பிகேள்.

20. நல்வி லங்கினைக் கொன்றிந்த நல்லிலிற்
செல்வ வேள்வியாஞ் செய்து களிக்குவோம்;
கொல்வ தாவொரு குற்றமின் றவ்வுயிர்
புல்வ தாகும் பொருந்திய நன்னிலை.

21. என்னத் தம்பியு மேகிக் கறுப்புமான்
தன்னைக் கொன்று தசையைத் தகுதியாத்
தின்னற் கேற்பவெந் தீயிற் சமைத்தவர்
மன்னத் தின்று மகிழ்ந்தங் கிருந்தனர்.

---

18. ஓவியக்கூடம்-சித்திரகூடம்.

22. ஓகை மீக்குற வுற்ற படகுகா
லாக மற்றவ ரக்கரை சேர்ந்ததைப்
பாக னோடு குகனின்று பார்த்துப்பின்
ஏகி யேதம தில்வினை யெய்தினன்.

23. ஓங்கு மோவியக் கூடம துற்றனர்
தீங்கி லாரெனத் தூதர்போய்ச் செப்பலும்
ஆங்கு நின்றுதேர்ப் பாக னகன்றுபோய்
வீங்கு மாட வயோத்தியை மேவினன்.

24. மேவிப் பாகன் விழிப்புனல் சிந்திட
ஆவித் தாவி யமைரும் அண்ணலை
மேவிச் செல்வன் விளம்பிய கூறவே
கூவிக் கோவெனக் கோமகன் வீழ்ந்தனன்.

25. மண்ணை மோதியென் மைந்தவோ வாவென,
அண்ண லுந்தெரி யாமையாற் கெட்டனென்
றெண்ணி யெண்ணி யிராமன் பிரிவெனும்
புண்ணி னேவாற் புலந்துயிர் விட்டனன்.

26. செய்தி கேட்டவன் தேவியர் யாவரும்
உய்தி யோவிலை யோவென் றழுதனர்;
பெய்து நெய்யிற் பிணத்தை யிருக்கையில்
செய்தி கேட்டுத் திரண்டன ரூரவர்.

27. அன்னர் பேரவை யாக்கி வசிட்டனை
மன்ன னின்றி வருந்துதல் ஆகுமோ?
மன்னன் மக்க ளொருவரை மாதவா!
மன்ன னாக்குக வென்ன வசிட்டனும்.

28. பாரை மன்னன் பரதனுக் கீந்தனன்
ஊரை யாள வுரியவ னருகுவன்!
வீர ரோடு விரைந்துபோய்க் கேகயம்
சார வீங்குசெய் யென்னச்சித் தார்த்தனை.

---

22. பாகன்-சுமந்திரன்.

23. குகனுடைய தூதர் இராமனுடன் சென்றுவந்து செப்பினர்.

29. உரிய செய்தியை யோதல் தகாதெனச்
சரியெ னச்சொலித் தாளைத் தலைவனும்
விரைவி னேகி மிளிர்மணிக் கேகயம்
பரதற் கண்டு பகர்ந்தன னுற்றதை.

30. கேட்ட மைந்தன் விரைவிற் கிளம்பினன்
பாட்ட னோடு பயணம் பகர்ந்துதன்
நாட்டை நோக்கி நடந்து சிலபகல்
காட்டை நீங்கி அயோத்தியைக் கண்டனன்.

31. பொலிவி ழந்த நகரின் புதுமையால்
வலியி ழந்த மனத்தினன் மன்னவன்
நிலையி லெங்கணும் கேடியுங் கண்டிலான்
தலைக விழ்ந்துபோய்த் தாயினைக் கண்டனன்.

32. தந்தை யெங்கென தாயென் சிறுவகேள்
உந்தன் தந்தை யுயிர்துறந் தாரென,
மைந்தன் ஆவென மண்ணில் புரண்டழு
தெந்தை யேயென் றெழுந்து புலம்பியே.

33. ஆயை நோக்கியென் அண்ணனெங் கேயென
சேய கானகம் சென்றனன், நீயர
சாய யோத்தியை யாளுவை, யுந்தையன்
பாய ளித்த பரிசென வன்னையும்.

34. நடந்த யாவு நவிலப் பரதனும்
உடைந்த வுள்ளத் துயிர்தடு மாறிட
அடைந்தை யோதலி யாக்கியெங் காலெனப்
படர்ந்த முன்னைப் பரிந்துளத் துன்னியே.

35. தீய பாவியென் செய்தனை! அண்ணனைச்
சேய கானஞ் செலுத்தியென் தந்தையை
மாய வைத்தெனை வாழவைத் தாயென
வாயில் வந்த படியெலாம் வைதனன்.

36. குன்றி யன்னவுட் கோசலை வந்திடா!
இன்றுன் பண்மையீ டேறிய தோவென,
ஒன்று மேயறி யேனென வொள்ளியான்
நன்று வாழ்கென, நம்பி பரதனும்.

34. படர்ந்த-சென்ற. பரிந்து-இரங்கி.

37. தந்தை பின்னுடல் தன்னை யடக்கஞ்செய்
தெந்தை தந்தநா டீகுவே னண்ணனுக்
கிந்த வேளை யெழுகென் றிசைவலான்
உந்து தானைத் தலைவனுக் கோதினன்.

38. குடிக ளோடு குறுநில மன்னமைச்
சடைய வேயவை யாக்கி வசிட்டனும்
முடிப் புனைந்திட வேண்டிட முன்னனுக்
குடைய தாமென வோதிப் பரதனும்.

39. பெற்ற தாயும் பெருவனை மார்களும்
குற்ற மேய வமைச்சுங் குருக்களும்
மற்று ளாரும் வளநகர் புல்லென
உற்ற தானை யுறவொடு போயினன்.

## 10. மிதியடிபெற்று மீள் படலம்

1. போயி னநகர் புல்லெனத் தோரண
வாயில் நீங்கி மகளிரைத் தேடுகைத்
தாயி னேங்கித் தடந்துயர் தாங்கியே
சேய கானஞ் சிறுகிட த தேடியே.

2. கடந்து கோசல நாடுபின் னுகிட
உடைந்த வுள்ளமு மூறிய துன்பமும்
தொடர்ந்து பின்வரத் தோன்றல் வழியினைக்
கடந்து கங்கைக் கரையிலில் தங்கினன்.

3. சேனை யோடு திருமகன் சேர்ந்ததைக்
கான வேடர் குலக்குகன் கண்டுமே
கோனை நாடியோ? நம்மினங் கொல்லவோ?
போன வீர னுடுபொரப் புக்கனோ?

4. என்னு மைய முடனவ் வெயினர் கோன்
துன்னு கங்கைத் துறைதனைக் காத்திடத்
தன்னி னத்தைத் தயார்செய் தொருவனும்
அன்னர் தம்மை யணுகிட வெண்ணியே.

5. கனியொ டுபுலால் காணிக்கை யாய்க்கொடு
தனிய ளுகச்சென் றுனைவர் தம்மிடம்;
அனையன் யாரென அண்ணல் அமைச்சனை
வினவ வேகுகன் என்றிடும் வேடர்கோன்.

6. பீழை யற்றபெருமகன் இன்னுயிர்த்
தோழன்; கங்கைத் துறையை யுடையவன்;
ஏழை யாளனை அக்கரை யேற்றியே
வாழ வைத்து வழித்துணை யேவினேன்.

7. உன்னைக் காண வருகிறான் உண்மையான்,
என்னக் கோனும் அழைத்திட, எய்தியே
மன்னைக் கண்டு வணங்கியே கையுறை
தன்னைக் கொண்டு கொடுத்துத் தகவுடன்.

8. அண்ண லேபடை கண்டைய மாயினேன்
அண்ணலையழைத் தேகவோ? அல்லதெவ்
வெண்ண மோவென, வேயழைத் தேகவே
நண்ணி னேனென நம்பியைப் போற்றினான்.

9. உங்க ளூரிது தங்கியின் றுண்டு நீர்
அங்கு சென்மென, ஐய! மகிழ்ந்தனன்
தங்கு வேன்வரும் போது; தடம்புனல்
கங்கை தன்னைக் கடந்திடச் செய்கென.

10. நடந்து தோணியை நண்ணிடப் பண்ணவே
அடைந்தி யாரு மமர்ந்துநா வாய்களில்
கடந்து கங்கையைக் காலின் விரைந்துபோய்
அடைந்து பாரத்து வாச வகத்தினை.

11. செலமு னிந்து செருச்செய வோவென,
இலைய ழைத்தவ ணேகவந் தேனெனப்
புலவுங் கள்ளும் பொருந்த வருந்திட
உலைவி லாவிருந் தூட்டினன் அம்முனி.

12. எம்பி யங்கவ் விரவைக் கழித்துமே
நம்பி வாழ்விடம் நற்றவன் கூறவே
பம்பு சேனையி னோடு பரதனும்
தும்பி வாழுந் தொடர்வழிச் சென்றனன்.

---

6. பீழை-குற்றம். ஏழையாளன்-ராமன்.
12. பம்புதல்-நிறைதல். தும்பி-யானை.

13. தெள்ளு கானத் தெருவிடைச் சென்றுவான்
கொள்ளு மோவியக் கூடத்தைக் கண்டுபோய்
உள்ளு மோரிடத் தொண்புகை கண்டவன்
நள்ளு தானை நிறுத்தி நடந்தனன்.

14. அஞ்சிச் சேனைக் கடைந்த விலங்கினை
வஞ்சிக் கின்பப் புலாவின் வகையினைக்
கொஞ்சித் தின்று கொடுத்து மகிழ்ந்திடும்
நஞ்சத் திண்சிலை ராமன் விளாவவே.

15. வானி னோங்கு மரத்தினி லேறிவான்
சேனை கண்டு திடுக்கிட் டிலக்குவன்
மானை யுட்குகை வைத்து நெருப்பணை
ஆன போர்க்குத் தயார்செய்கு வாயென.

16. என்ன வென்னப், பரதன் எதிர்த்தனன்
துன்னு தானைத் தொகையொடு வந்தனன்;
இன்னை யேயவன்! இன்னுயிர் போக்கியான்
மன்ன னாவுனை வாழவைப் பேனென்றான்.

17. வென்றி யாளனீ வில்லினில் வல்லவன்
நன்று நன்றவன் நம்மொடு போர்க்கல
இன்றெ னையழைத் தேக வருகிறான்
என்று கீழிறங் கென்ன விரங்கினான்.

18. மொண்டு பெய்யு முகிலென முன்னனைக்
கண்டு சென்றுமுன் கைகயி மைந்தனும்
அண்டி யண்ண னடித்தல மீதுவேர்
விண்டு வீழ்மரம் போல விழுந்தனன்.

19. தாளில் வீழ்ந்தழுந் தம்பி தனையெடுத்
தாளி மொய்ம்பின ராற்றுவ ரோபிரிந்
தேள னஞ்செய் தெனைக்குடி கேட்டரோ?
வேளை பார்த்து விரட்டின வோபகை?

---

13. நள்ளுதல்-செறிதல்.
15. மான்-சீதை. குகை உள்.
19. ஆளி-சிங்கம். மொய்ம்பு-வலி. உன்னை இகழ்ந்து என்னைக் கேட்டாரோ.

20. உன்னை நீத்துயிர் விட்டன ரோ தந்தை
என்ன? என்னையன் றுன்னைநீத் தேயுயிர்
தன்னை விட்டனர் தந்தை யெனாமுனம்
என்னை யாவென வேங்கி விழுந்தனன்.

21. எந்தை யேயென் றெழுந்துனைக் கொல்லவோ
வந்து தோன்றினன் மாகொலை காரனான்?
தந்தை யேயுன் றன் சாதலைக் கண்டிலா
மைந்த னோவிலை; வன்பகை யென்றழும்.

22. நைகை மிக்கு நலிந்தழு வான்றனை
உய்கை மிக்க உறவினர் ஆண்மகன்
கைகை மிக்குக் கழிந்ததற் கேங்குதல்
செய்கை மிக்கெனத் தேற்றிடத் தேறியே.

23. கேளு நட்டுங் கெழுமப் பரதநீ
ஆளு வாரற் றழுங்கு மயோத்தியை
ஆளு தல்விட் டடைந்ததென் னீங்குநீ
மீளு கென்ன மெலிந்த பரதனும்.

24. எனக்கு நாட்டுக்கு மென்ன தொடர்புகொல்!
நினக்குத் தானது நீள்கட னாகுமால்
எனக்குத் தந்தைதந் தாரெனில் யானதை
உனக்குத் தந்தனன் உற்றர சாள்கென்றான்.

25. வரிசை யாக மணக்கையி லுன்னைக்குப்
பரிச மாகப் பரத!நந் நாட்டினை
அரச ரீந்தனர்; ஆகையால் நீயதன்
அரச னாகு முரிமையு ளாயென.

26. உரிமை யாகின் உனக்கதை யீந்தனன்
அருமை யாயர சாளுமண் ணாவெனப்,
பெருமை யாகப் பெயர்க்கெனக் காகநீ
அருமை யாயர சாளுவா யென்றனன்.

---

20. 'உன்னை நீத்து உயிர் விட்டனரோ' என்றது பரதன் மனத்தை அறிய.

22. கைகை-வெறுப்பு. செய்கை மிக்கு-மீறிய செய்கை.

27. தந்தை சொல்லினைத் தட்டிநா டாண்டிட
வந்த னேல்நம் வரன்முறை பொய்த்திடும்;
மைந்த! ஏழிரண் டாண்டில் வருகுவன்
சிந்தை தேறிநீ செல்க மருதென்றான்.

28. சொற்ற சொல்லினைத் தட்டத் துணிகிலான்
மற்றை யோரை வணங்கி மிதியடி
பெற்றி யாண்டுப் பெயர்தக் தயோத்தியைக்
கொற்றத் தானைப் பரதன் குறுகினான்.

29. அடைந்த பின்ன ரயோத்தியை விட்டவன்
நடந்து போய்ச்சிறு நந்தியூர் தங்கியே
மிடைந்த மாமுடி சூட்டி மிதியடிக்
கிடைந்து நாட்டினை யாண்டங் கிருந்தனன்.

30. மணிகு யின்று வருமுடி தாங்கியே
தணிவி யன்றமை சத்துருக் கன்பெருந்
துணையி னோடு பரதன் தொழுதிட
அணிய யோத்தி யதைச்செருப் பாண்டதே.

## 11. தமிழகம் புகுபடலம்

1. விடையி னோடு மிதியடி பெற்றுநாற்
படையி னோடு பரத னகன்றபின்;
அடையி னோடவன் வாழ்ந்திடு மாரியர்
முடையி னோடு முகஞ்சுழித் தையுறீஇ.

2. தேடிக் கண்டு பிடித்த திருடரை
ஓடிக் கண்டு வெருவுறு மூரர்போல்,
சூடிக் கொண்டவில் வாளியைச் சுட்டியே
கூடிக் கொண்டு குசுகுசு வென்றனர்.

3. அங்கு நின்று மகன்றிட வெண்ணிட
தங்கி வாழும் முனிவர் தலைவனை
இங்கு நீங்கள் வெருவுற லென்னென
உங்க ளால்வெரு வுற்றன மென்னெனில்.

---

29. மிடைந்த-நெருங்கிய, இடைந்து-வருந்தி.
1. அடை-சிறப்பு. முடை-வருத்தம்,

4. இலங்கை வாழு மிராவணன் ஆணையிற்
பொலங்க ழற்கரன் என்னும் புலியனான்
விலங்கு மாண்மைவேல் வீரர்கள் தம்மொடு
வலங்கொள் விந்தகம் காத்து வருகிறான்.

5. ஈங்கு நீங்கள் இருப்பதைக் கண்டவன்
ஓங்கு வேள்வித் துணையுடை யோரென
ஆங்கு நாங்கள் அடைய விடாதிகல்
வாங்கு வீரரைக் காவலாய் வைத்துளான்.

6. இடிநி கர்த்தவர் இவ்வுல கத்தினை
ஒருநொ டிக்கு ளொழித்துரு வங்கெடப்
பொடிப டுத்தும் பொருவலி மிக்கவர்;
கடுக டுத்திடிற் காற்றையு மெற்றுவர்.

7. ஆத லாலிங் ககன்று தமிழகம்
போது வீரெனிற் போதிய சூழ்ச்சியைப்
பாது காத்தெமைப் பாதுகா வென்றுமே
மாத வனன்கு வாயுற வாழ்த்தினன்.

8. என்று கூறி யினைத்துட னுயிடை
நின்று சேர்வுற நீங்கியவ் வாரியர்
சென்ற பின்னர்ச் செறிந்த வுயிர்களைக்
கொன்று தின்றக் குறிய ரிருந்தனர்.

9. ஓவ கூடத் துறைந்து பலபகல்
பாவை யோடு பகலிர வின்றியே
மேவி யின்ப நுகர்ந்துபின் வேறிடம்
போவ தேநல மென்றவர் போயினர்.

10. அங்க கன்றுபோய் அத்திரி தன்னிலை
தங்க வன்மனை தையற் கணிகலன்
அங்க லவைக ளோடுபட் டாடையும்
மங்கை கொள்கென வான்பரி சீந்தனள்.

---

4. விலங்குதல்-வெல்லுதல்.
5. இகல் வாங்கு-பகையை ஏற்றுக்கொள்கின்ற.
10. அம் கலவை-நல்ல கலவைச் சந்தனம்.

11. அம்மு னிவனி ருக்கை யகன்றவர்
செம்மை யின்றி யுயிர்கொன்று தின்றுமே
இம்மை யின்ப மிதுவென வின்புறீஇ
அம்ம லையை யகன்று வழிக்கொடு.

12. தண்ட மிழகந் தன்னை யடைதரக்
கண்ட வாரியர் கண்கள் களிமடங்
கொண்டு மேவர வேற்றுக் கொடுசெலீஇ
உண்டு நன்புல வுள்ள மகிழ்ந்தனர்.

13. ஆங்கு சில்பக லன்ன ரிருந்துபின்
நீங்கி யாயிடை நீடிய கானிடை
ஓங்கு மென்பிடி யோடிரு மால்கரி
பாங்கு செல்லுதல் போலப் படர்ந்தனர்.

14. புனல்ம லிந்த புனத்திடைச் செல்கையில்
கனித மிழ்மகன் கண்டு முனிவர்க்கு
மனைவி வேண்டுமோ? மாது மொருத்தியே!
முனிவ ரென்றியான் மோசம்போ கேனெனு.

15. தடுக்க வந்தத் தறுதலை ராமனும்
வெடுக்கென் றம்பை விடுத்துயிர் போக்கியவ்
விடத்தை விட்டுப்பி னேகிச் சரபங்கன்
இடத்தை யண்மி யினிதுண் டிருந்தனர்.

16. சிலையி ராமனத் திய சரபங்கன்
நிலையி ருக்கவந் நீடிய கானுயிர்
உலைய வேட்டவ னுள்ள முனிவர்கள்
சிலைவ லானிடம் சேர்ந்து திரளுற.

17. வாழ்க மாமனை யாளொடு மைந்தநீ,
சூழ்க நன்னலம் தோன்றிய வெம்பகை
வீழ்க வெந்துய ரோடிகல் வென்றுமே
வாழ்க வென்றவர் வாயுற வாழ்த்தியே.

---

14. தவக்கோலத்தால் முனிவரென்று கொண்டான். இவன் விராதன் என்னும் அரக்கன் எனக் கூறப்படுபவன்.
15. தறுதலை-கெட்டவன்.

18 அன்று தாடகை யாவி குடித்துநீ
சென்ற பின்னரச் செய்தி யறிந்ததும்
வென்றி வேற்கை விறன்மிகி ராவணன்
கன்றி விந்தகங் காப்பமைத் துள்ளனன்.

19. தடம விந்த தமிழகம் காத்திடும்
அடலி ராவணன் தங்கை யழகியர்
மடம யிற்காம வல்லியிவ் விந்தகம்
கடமை யிற்படக் காத்து வருகிறாள்.

20. இளமை மிக்க எழினல மேயவவ்
இளவ ரசியி னேற்ற படைவலான்
வளமை மிக்க மலையினுந் திண்ணியான்
உளமி குத்த வுயர்சின வேற்கரன்.

21. மாவ லீஇய மறவர்பல் லாயிரர்
காவ லாகக் கரனெனும் பேரினன்
தாவி லாதவள் தானைத் தலைவனாய்
ஆவி காக்குநல் யாக்கைபோற் காக்கிறான்.

22. பண்டு தென்றமிழ்ப் பாண்டிய னாகிய
கொண்ட மீனக் கொடியடற் சம்பரன்
மண்டு தானையி னோடவன் மண்படக்
கண்டு நம்மரைக் காத்தவுன் தந்தைபோல்.

23. துன்றி டாது துரத்துந் தமிழரை
வென்று வேட்டிந்த விந்தநன் னாட்டிடை
என்று நாங்க ளிருந்திடச் செய்வது
வென்றி வில்லியுன் மேய கடனதாம்.

24. இல்லை யேலினி யாங்க ளினியங்கு
செல்ல வேண்டிய தில்லைச் சிலைவலோய்!
புல்லி வாழப் புறப்பட லரியம்
நல்ல தேயென, ராமன் வணங்கியே.

---

19. தடம்-குளம். இங்கே நீர்வளம்.

25. எங்கு லப்பெரி யிரும தெண்ணம்போல்
தங்கி வாழுந் தமிழ மறவரை
உங்கு வேற்கர ஞேடழித் துங்களை
இங்கு வாழ்ந்திடச் செய்குவே னென்றனன்.

26. தனித்துத் தாமே தலைமையாய் வாழ்ந்ததை
நினைத்து நீள்குடை நீங்கிமுன் போலவே
தனித்து வாழுந் தகைநினைந் தேசில
இனித்த மிழர்க ளெம்முற வாயினர்.

27. அனையர் தம்மைவில் லாளிக ளாக்கியும்,
புனித மென்று புலவுகள் ளூட்டியும்,
இனிய ராயெம தேவல ராக்கியும்
தனைய வாழ்வு தழைத்து வருகிறோம்.

28. மலைமை மேயும் வளத்தமிழ் நாட்டிறை
தலைமை யாட்சி தனைவெறுத் தேதனி
நிலைமை வேட்கும் நெடுந்தமி ழர்பலர்
சிலைமை காணிற் செருத்துணை யாகுவர்.

29. மற்று நாங்கள் வளத்தமிழ் நாட்டுறை
சிற்ற ரசர்கள் பின்வரு சின்னரைக்
கொற்றம் வேட்டதைக் கொள்ளற் கவாவுறுஞ்
செற்ற முற்றிடச் செய்து வருகிறோம்.

30. கேட்டி யின்னுங் கிளர்பகை யைப்புறங்
காட்டு தற்குவுள் நாட்டுக் கலகத்தை
மூட்டு தற்கினை முன்னி லிலைப்பிற
நாட்டு கின்றவம் நாங்கள் நனியதை.

31. இன்னும் வேண்டுவ விப்பெருஞ் செய்கைக்கு
முன்னி யாங்கள் முறைப்படி செய்குவம்
அன்னை வேண்டுவ வன்னையே செய்குவம்
தென்னர் நாடெலாஞ் சென்றுள வோர்குவம்.

---

25. உங்கு-தங்கிவாழும்.
27. 'தனைய' எனறது, ராமனை. தன் ஐய.
28. சிலைமை-விற்றிறமை. செருத்துணை-படைத்துணை, நட்பு.
29. கொற்றம்-அரசு. செற்றம்-சினம்.

32. மறமி குங்கரன் வல்லுயிர் கொள்வையேல்
இறைவ னென்ன விலங்கையி லுள்ளனன்;
திறமை மிக்கவ ராயினுஞ் சேணுறல்
அறம தன்றென ஆய்குவ ரல்லரோ?

33. கைவ லந்த கரனுயிர் கொள்வையேல்
மைவ ளர்விந்தச் சாரலில் வாழ்குநர்
உய்வ ருன்னடி; உற்றநாம் வாழ்வினை
செய்வ தோரவே சேர்ந்தனம் செங்கலே.

34. தீங்கி லாது திரியு முயிர்களை
வாங்கி யூனுணும் மாமறை வேள்வியைத்
தீங்கென் பாரலாற் செந்தமி ழோர்தவந்
தாங்கு வோரிடந் தாயினு மன்பரால்.

35. தாயி னுமவர் தாய்மொழிப் பற்றுளர்
தாயி னொப்புவர் தாய்மொழி கற்பரைத்
தூய செந்தமிழ் தோமறக் கற்றுயர்
வாய நம்மவ ரந்தண ராயுளார்.

36. இன்னு நந்த மினத்த விளைஞரை
மன்னி யீங்கு மறைவிடை வைத்தியாம்
உன்னைச் சூழ்தர லுங்க ணமருவம்
என்ன வன்னா ரிசைந்திட ராமனும்

37. ஐயன் மீர்துணை யாவிரே லன்னரைப்
பைய வென்று பகையின்றி நம்மவர்
உய்ய வும்பெரி யோருயர் வேள்விகள்
செய்ய வும்மடி யேனுமன் செய்குவன்.

38. என்று நின்று மொழிய தியம்பியே
துன்று கானந் தொடர்ந்து சுதீக்கணன்
ஒன்றி வாழு முறைவிடங் கண்டுமே
அன்று தங்கி யகன்று வழிக்கொண்டார்.

வேறு

39. மறையவர்க் காகப் பகைசிறி தில்லா
வண்டமிழ் மக்களைக் கொல்ல
இறைவநீ துணிவு கொண்டதை நினைக்க
வென்னுள நடுங்குறு ததுவும்

---

33. உன் அடி உய்வர்-உனக்கடங்கிவாழ்வர். இனை-இந்த ஏற்பாட்டை. செங்கல்-சேற்று.

அறமெனப் படுமோ வல்லதூஉ மயலா
ராளயல் நாட்டிடைச் செல்லல்
முறையெனப் படுமோ தமதுநன் னாட்டை
முறையொடு புரப்பவர் தமக்கே.

40. அன்றியு முனமே தமிழர்கோன் கற்ற
மாகிய தாடகை தன்னைக்
கொன்றுமே தமிழர் பகையினைக் கொண்டீர்
குறுகுத லினுந்தமி ழகத்தை
ஒன்றிய பகைக்கோ ரூதிய மன்றோ?
உண்மையைத் தமிழர்க ளுணரின்
மன்றலந் தாரோய்! பகையினை விலைக்கு
வாங்குத லாகுமே யன்றோ?

41. ஆதலால் நாமும் படைக்கல நீத்தே
யைம்புல னடக்கியிக் காட்டில்
மூதறி வாள ரொடுதவ முஞற்றல்
முறையென நினைக்கிறே னென்னக்
கோதைமென் குழலாள் கூறவுந் தமிழர்
குலப்பகை யாகிய ராமன்
மாதியான் சொன்ன சொல்லினைத் தவறேன்
வாவெனக் கொடுவழி நடந்தான்.

42. காட்டிடை யைந்து பெண்ணொடோர் முனிவன்
களிப்பதை யாங்கொரு முனிவன்
காட்டிடக் கண்டு மனமகிழ் கொண்டு
காதல்மீக் கூரவே சென்று
கூட்டமா யிருந்த முனிவர்கள் குடிலைக்
குறுகியே யவர்விருந் தினனாய்
வாட்டடங் கண்ணா ளோடுபத் தாண்டு
வதிந்தன னாயிடை மருவி.

43. ஐயிரண் டாண்டு மருந்தமிழ் கற்று
மாயிடைப் பாங்கரின் வாழ்ந்த
பொய்யறி யாத தமிழரி னட்பைப்
பொருந்தியும் விற்றொழில் கொடுத்தும்
மெய்யறி யாத வாரிய முனிவர்
வேள்விசெய் திடத்துணை புரிந்தும்
தெய்யறி யாத வுயிரினைக் கொன்று
இன்றுமாங் கிருந்தன னப்பால்.

43. [illegible]

44. ஆயிடை யகன்று சுதீக்கணன் காட்ட
அகத்தியன் குடிவினை நாடித்
தூயவக் கானத் திடைவள ருயிர்கள்
துடித்திடக் கொன்றுதின் றருகில்
மேயபல் வளமுங் கண்டிடை யுள்ள
முனிவர்கள் விழைவுட னனுப்பப்
போயகத் தியனைக் கண்டுமே வணங்கிப்
புக்கிருந் தனனகத் தியனும்.

45. செந்தமி ழகத்தில் நம்மவர் வேள்வி
செய்துமே யுண்டிலி திருக்க
உந்தைமு னெதிர்த்த தமிழரை யொறுத்தே
யுறுதுணை புரிந்தன னதுபோல்
மைந்தநீ யுந்தை மரபினை விளக்கி
வண்டமிழ்த் தலைவரை யொழித்தே
நந்தமர்க் கிங்கு தலைமைவாழ் வதனை
நாட்டுத லுன்றலைக் கடனே.

46. அடிக்கடி வந்துற் காவன செய்வேன்
ஆயிடை வாழ்நருஞ் செய்வர்
முடிக்குறு வழியுங் கூறுவர் தமிழர்
முறைகெடச் சூழ்ச்சியும் புரிவர்
இடிக்குர லிளைஞர் கரவிடை வாழ்வர்;
ஈங்கிருந் தணிமையி லுள்ள
குடிக்குயர் பஞ்ச வடியெனு மிடத்தைக்
குறுகியே யினிதுவாழ்ந் திருப்பீர்.

47. என்றகத் தியனு மின்னன பலவு
மெடுத்துரைத் தேயிரா மனுக்கு
வென்றிவில் லொன்றும் அம்பறை யிரண்டும்
விழைந்துள மகிழ்வொடு கொடுத்துச்
சென்றுமே வருக வெனவிடை கொடுப்பத்
தெளிபுனற் கோதைபோ திடத்தே
ஒன்றிய பஞ்ச வடியினி லிருந்துங்
குவந்துவஞ் சகம்புரிந் திருந்தான்.

---

47. கோதை-கோதாவிரியாறு.

---

மூன்றாவது விந்தக் காண்டம் முற்றிற்று.

# 4. பழிபுரி காண்டம்

## 1. உருக்குலை படலம்

### வேறு

1. அருட்க ருத்தறி யாதவன்
வெருக்கொ ளச்செவி மேயவர்
மருக்கு மூற்காம வல்லியை
உருக்கு லைத்தமை யோர்குவாம்.

2. செந்த மிழ்மொழிச் செல்வியும்
சந்த மேய தடம்பொழில்
விந்த நாடதை மெண்புடை
முந்தை யோரின் முறைசெய்தாள்.

3. மைவ ளர்குழல் மங்கையின்
ஐவ ளர்படை யாளனும்
மெய்வ ளர்மிடல் மேவிய
கைவ லிகரன் காப்பினே.

4. மடங்க லன்ன மறவர்கள்
இடங்தொ றுஞ்சென் றிருந்துமே
அடங்க விந்த வகந்தனை
உடங்க லின்றியே யோம்பினர்.

5. தாயி னன்ன தமிழர்கள்
தாயி னன்ன தமிழ்மகள்
ஆயி னன்ன ரளிக்கவே
சேயி னன்னர் சிறந்தனர்.

6. புலைவி ழைந்து பொருந்திலாக்
கொலைவி ழைந்த கொடியவர்
அலைவி ழைந்திட அஞ்சியே
நிலைவி ழைந்து நிலவினர்.

---

3. ஐ-மேன்மை, தலைமை. மிடல்-வலி.
4. மடங்கல்-சிங்கம். உடங்கல்-மீறி.
5. நன்னர்-நன்மை, நலம்.
6. அலை-அலைத்தல், வருத்தல்.

7. புன்பு லத்த புலா லுணும்
துன்பு மிக்க தொழிலிலார்
அன்பு மிக்க வருந்தமிழ்
இன்பு மிக்கி ருந்தனர்.

8. அச்ச மின்றி யருந்தமிழ்
மெச்ச வாய்ந்து விழுத்தகத்
தச்சன் கைவழி தானெனும்
ஒச்ச மேயவ ளோர்பகல்.

9. தோகை மாமயில் சூழ்தரப்
போகு மானெனப் பூவையும்
மாக ருங்குயில் வாவெனக்
கூக மேயினள் கூர்ம்பொழில்.

10. வேலை வென்ற விழிச்சியர்
சோலை கண்டு சுரும்பலர்
மாலை செண்டு வகைவகை
தோலை மொண்டு தொடுத்தனர்.

11. பஞ்சின் மெல்லடிப் பாவையர்
வஞ்சி போல வளைந்திடை
கொஞ்சு பூவை குயில்கிளை
அஞ்ச வாய்வரிந் தாடினர்.

12. குரவை யாடிக் கொழும்புதர்க்
கரவை யாடிமற் கைபிணைப்
பரவை யாடிப் பகழிமூய்
வரவை யாடி மகிழ்ந்தனர்.

13. ஆடு வாரகன் றப்புறம்
கூடு வாரொளி கோதையைத்
தேடு வார்கையிற் சிக்கிடா
தோடு வாருள் ளுவப்பரே.

---

8. ஒச்சம்-நாணம்
10. தோல்-அழகு
11. கிளை-கிளளை-கிளி. வரிந்து-பாடி.
12. கரவை ஆடி-மறைந்து விளையாடி. பரவை-ஆடல். கைபிணைந்து ஆடல் ஆடி. மல்-வலி. பகழி-அம்பு-கண். பகழி மூய் வரவை ஆடல்-கண்ணுமூச்சி யாடல்.

14. பூவு வக்குவர் பூவரும்
மாவு வக்குவர் மாவரும்
பாவு வக்குவர் பாவரும்
நாவு வக்குவர் நன்கரோ.

15. சிந்த மேகலைச் செம்மணி
வந்து மூந்த வளக்கரும்
புந்தி மேலெழுந் தோடியே
அந்தி லாங்குபந் தாடினர்.

16. அருவி யாடி யருஞ்சுனை
மருவி யாடி மணிக்கதிர்
இருவி யாடி யிளங்கிளி
ஒருவி யோட வுவப்பரே.

17. அன்ன வாறவ ராடியே
சின்னல் நீத்து நெடுந்தொலை
துன்னி யாங்கொரு சோலைவாய்
இன்னு மாட விருக்கையில்.

18. மாழை யுண்கண் மடந்தையும்
தோழி மாரைத் துறந்துமே
பூழில் வேங்கைப் பொதும்பரிற்
பேழை முத்திற் பெயர்ந்தனள்

19. அன்ன மென்ன வகன்றுமே
பொன்னி னன்ன டிதுமலர்
தன்னின் மன்னு தளிப்பொழில்
துன்னி னுள்பசுந் தோகையும்.

---

15. மா-வண்டு. பா-பாட்டு. பாவருபநா-நன்கு பாடு கின்ற நா. உவத்தல்-மகிழ்தல்.

15. கருமபு-கை. உந்துதல்-உயர்தல். அந்தில்-அசை.

16. இருவி-தினைத்தாள்; இங்கே தினைப்புனம். ஒருவி-நீங்கி.

17. சினனல்-இருப்பிடம்.

18. மாழை-மான. பூழில்-அகில். பொதும்பர்-சோலை,

20. அப்பொ ழிலின ழகினை
மைப்பொ ருவிழி பங்கையும்
கைப்பொ ருவுறக் கண்டுமே
செப்பி தழெனச் செல்கையில்.

21. அல்கு புன்மனத் தாரியர்
ஒல்கி வாழு முயிர்களைப்
புல்கு வேள்வி புரிந்திட
நல்கி வாழ்சிலை ராமனும்.

22. முனிவர் காப்பிலில் மொய்குழற்
சனகி தங்கிடத் தம்பியோ
டனைய சோலையை யண்மியே
தனிய னுயவுண் சார்ந்தனன்.

23. தன்னி கர்த்த தமிழர்வாழ்
வின்னி லைக்கிழி வெய்தவும்
தன்னி னத்தர் தலைவராய்
மன்ன வைத்தமா வஞ்சகன்.

24. தம்பி தாயந் தனைப்பெற
நம்பி யாரிய நஞ்சரை
அம்பி னுலோ ரருந்தமிழ்க்
கொம்பை வெட்டுங் கொடியவன்.

25. கொடிய ருண்டு கொழுக்கவே
அடிமை கொண்ட வறனிலாப்
படிற னெங்கள் பழந்தமிழ்க்
குடைய தாயுயி ருண்டவன்.

26. அயல கத்தை யடைகுதல்
நயம லவெனு நாடிடாக்
கயவன் கீழ்மகன் காமுகன்
செயல கத்திலாத தீயவன்.

---

20. கைப்பு ஒருவுற-கசப்புநீங்க-இனிமையாக. செப்பு-சிமிழ். இதழ்-வாய். சிமிழ் வாயபோல் மணம் பொருந்திச் சென்றாள்.

24. தம்பி-பரதன். தாயம்-உரிமைச் சொத்து-அரசு.

25. ஆரிய முனிவரால் அடிமை கொள்ளப்பட்டவன், படிறு-கொடுமை.

26. செயல்-ஒழுக்கம்.

27. நஞ்சி னுக்கொரு நஞ்சினன்
வஞ்ச கர்க்கொரு வஞ்சகன்
பஞ்சின் மெல்லடிப் பாவைமார்
துஞ்ச விற்செறு மிற் சுள்ளியே.

28. தீய வெல்லாந் திரண்டொரு
வாய வோருரு வாயவன்
தூய செந்தமிழ்த் தோகைமான்
மேய சோலையை மேயினான்.

29. ஈம வாழ்க்கை யினப்படும்
நாம விற்கையி ராமனும்
ஏம மற்றங் கியலிய
காம வல்லியைக் கண்டனன்.

## வேறு

30. தனித்து நின்றவத் தன்னிகர் தையலைத் தடங்கண்
இனித்த வாவிடக் காண்டலு மிழிதகை காமுற்
றினத்தி னீங்கியே யெழிலுடை யிளமயில் போலிப்
புனத்து நின்றிடும் பூவைநீ யாரெனப் புகன்றான்.

31. கோவை வாய்திறந் திங்கிலம் புரந்திடும் கொடியான்;
யாவ னோவட வாரியன் போல்தவக் கோலம்
மேவி யேகொடு வில்லுடைக் கையனு விளங்கும்
பாவி போன்றநீ யாரெனக் கேட்கவப் பாவி.

32. பொன்னம் பாவையான் பொருவிலா வயோத்தியைப்
புரக்கும்
மன்னன் காளுதி ராமனென் றென்பெயர் வழங்கும்;
என்னின் பின்னவ னிலக்குவன்; என்மனை சீதை
அன்ன ளோவக வானவ ளழகிலா வடிமை.

---

27. சுள்ளி-சிறுமை யுடையவன்.

29. ஈமம் - சுடுகாடு. சுடுகாடுபோல் உட்லுண்டு வாழ்வோர். நாமம்-அச்சம். ஏமம்-காவல்.

32. அகவு-வயது.

33. மாதும் யானுமென் தம்பியும் தமிழகம் வந்தோம்;
ஏது செய்தனோ நின்னையிவ் விடத்தினிற் கண்டேன்;
கோதி லாதபூங் கொடியுன்மேற் காதலுங் கொண்டேன்
பாது காவெனப் பாவையுஞ் சிலந்துளம் பதறி.

34. குன்றி யன்னவிக் கோலமுங் கொலைவிலுங் கொண்ட
கொன்று ணும்புலைக் கொடுந்தொழில் வாழ்வுடைக்
கொடியாய்!
நன்றி லாதவிப் பிறர்மனை நயக்குநின் னூட்டில்
ஒன்றி வாழ்குநர் மக்களோ மாக்களோ வுரையாய்?

35. பாவி நீயய லகம்புகுந் ததுமலாற் பழியும்
மேவி னுய்தபிழ் மறவர்கள் கண்ணுறில் வீவாய்;
ஆவி யீந்தனன் ஓடிநீ யயோத்தியை யடைந்துன்
தேவி யோடுவாழ் கென்றவ ளின்றுமே சென்றாள்.

36. செல்லும் உள்ளுவோ ருளமினித் திடுந்தமிழ்த் தேனை
நில்லு நில்லுமென் றோடியே தடுத்தெதிர் நின்று
வல்லி யேயுனை மருவிடா விடிலுயிர் வாழேன்
சொல்லு வாய்தமிழ் வாய்திறந் தெனப்பசுந் தோகை.

37. காத லென்பதன் பொருளறி யாவிழி காமா!
மாதொ ருத்தியை வழிமறித் தடாதுசெய் வம்பா!
ஆத காதறி விலியிதோர் ஆண்மகற் கழகா!
போதி யென்றறைந் தாயிடை நின்றுமே போக.

38. ஏக நான்விடேன் என்றவன் கைபிடித் திழுக்கத்
தோகை மெய்நடு நடுங்கியின் னுயிர்துடி துடிப்பச்
சாகு மாறுயி ரினும்விடு தலைபெறத் தவித்துப்
போக நீவிடு வாயெனத் திமிறவே பொல்லான்.

39. இலையி லைமரு வாதுனை நான்விடே னென்ன
வலிய வீர்க்கமான் உயிர்கொடுத் திழுத்தொளிவளைக்கை
மெலிய விற்கையின் பிடிப்பினை யறவிடு வித்துப்
புலியின் வாய்தவிர் மானெனப் பொருக்கெனப்
போனாள்.

---

34. குன்றி-குன்றிமணி.
36. ஈர்க்க-இழுக்க. வளைக்கை மெலிய.

40. பொருக்கென் ருங்கவள் பெயர்தலு மறிவிலாப் புல்லன்
சுருக்கென் றெம்பியைக் குறுகியித் தொன்னிலம் புரப்பாள்
இருக்கை நீத்ததோ செல்கிறு ளெம்பிநீ யவளை
உருக்கு லைத்துவா! என்னவப் பாவியும் ஓடி.

41. சென்று நில்லடீ! என்றிடத் தேவியுந் திரும்பி
நின்று பார்த்தனள்; தடுத்தனன்; தடுப்பவன் நீயார்?
என்ற தட்டியே கேட்கவே, சடக்கென விழிஞன்
மன்ற லங்குழல் பற்றியே வயிற்றினி லுதைத்தே.

42. உண்ட மைவிழி தலைநிலந் தள்ளிவா ளுருவக்
கண்டு கோவெனப் புலியின்வாய் மானெனக் கதறிக்
கொண்டு மேலெழு முனைந்துமே திமிறிடக் கொடியோன்
அண்டி வன்னிலத் துடலுரிந் திடவிழுந் தந்தோ!

43. இரும்பு போன்றநெஞ் சிழிதகை தேவியி னிணைக்கோங்
கரும்பு தோன்றநா ணின்றிமே லாடையை யவிழ்த்துக்
கரும்பு போன்றமென் கைகளைப் பின்னுறக் கட்டி
நரம்பு தோன்றிட இழுத்திழி காலைமேல் நாட்டி.

44. செருக்கெ டுத்திவண் திரிதரும் இளநகைச் சிறுக்கி!
உருக்கு லைத்துன தழகினை யப்புற மோட்டிச்
சரிப்ப டுத்துவேன் பாரென வேதறு தலையும்
பருக்கெ னத்திக ழுறுப்பினைத் திக்கையால் பற்ற.

45. திக்கைப் பற்றுவிட் டோடிட வெழுந்தமிழ்த் திருவைத்
தூக்கித் தூக்கிப்போட் டுதைத்துதைத் துயிர்துடி துடிக்க
மூக்குங் காதுமட் டோமுலைக் கண்களா முகையும்
போக்கி ஆயிடை நின்றுமே சென்றனன் பொல்லான்.

46. துன்று பூங்குமிழ் வள்ளைகோங் கரும்பினைத் துமித்தே
கொன்றி லாதுசென் றண்ணனைக் கூடினன்; கொடியும்
கன்றி யோவென நிலத்திடைப் புரண்டுமே கதற
மன்ற லங்குழல் மாதர்கேட் டோடியே வந்து.

---

45. முகை-கோங்கரும்பு.
46. குமிழ்-மூக்கு. வள்ளை-காது. கோங்கரும்பு-முலைக்கண்.

47\. குருதி சோரிடுஞ் சினைக்குறை யோடுபூங் கொம்பை
மருத மேவிய புனமயி லாமென மண்ணில்
சொரியுஞ் சேற்றிடைக் கண்டவர் மனந்துடி
துடித்துக்
கரிய வென்னெனத் தேவியு முற்றது கழற.

48\. ஐயை யோவென முகத்தினி லறைந்துகொண் டழுது
கையை யோவென அவிழ்த்துமென் மலர்க்கையின்
கட்டை
வையை யோவென வைத்தவ ரொருத்தியின் மடிமேல்
நையை யோவெனக் கதறியே யழுதுளம் நைவார்.

49\. ஏங்கு வார்தமை திறைவியை மலர்க்கையா லெடுத்துத்
தாங்கு வாரழு வார்விழு வாருளந் தளர்வார்
தீங்கு செய்தவப் பாவிகள் தொலைகெனச் சினப்பார்
பாங்கி லேமுனை நீங்கினே மெனப்பதை பதைப்பார்.

## வேறு

50\. ஐயோ பழியேங்கள் அன்னாய்! தனிவிடுத்தே
செய்யா தனசெய்தேம் தீயேம் சிறுமதியேம்
உய்யே மினியாம் உறுப்பிலியாய் நீயுள்ளம்
நையா வெனச்சொலவோ நாங்கள் தரிழ்கற்றோம்?

51\. யாரோ வொருத்தி யணையோடு நாஞ்செல்வோம்
வாரீ ரெனவே வாய்பேசி னீரில்லைக்,
காரோதி சோரி கலந்து பொடியாடிப்
போராளி கைபோலப் புல்லென் றுதோன் றுதனாய்.

52\. அன்றிந்த வாரியாரே அன்னை தனைத்தனியே
கொன்றோடிப் போனாரே கொடும்பாவி பிள்ளைகளே!
இன்று நமக்கிவ் விடர்செய்த தீயோரை
வென்று கருவறுக்க வீரரே வாரீரோ!

---

47\. சோரிடும்-ஒழுகும். மருதம்-வயல். சொரியுஞ் சேறு-குருதி யொழுக நனையுஞ்சேறு. கரிய-கொடுஞ்செயல்-வன்கொலை.

48\. நையையோ-நைகின்றுயோ.

51\. காரோதி-கருங்குழல். பொடி-புழுதி.

53. காரிகையீ ரெள்ளின் கமழ்பூங் குமிழெங்கே
நேரிழையீர் வள்ளை நிழலா டிலையெங்கே
ஈரிதழீ ரன்னை யிணைக்கோங் கரும்பெங்கே
ஆரியப்பூண் டின்றோ டழிந்தொழிந்து போகாதோ.

54. புள்ளிமிருந் தாமரையும் பூங்குவளை யேமுதலா
உள்ள மலரு மொளிர்செந் தளிரிருக்க
எள்ளினிளம் பூவோ டிணைக்கயல்சென் றேபொருதும்
வள்ளையொடு கோங்கரும்பை மாபாவி கொய்தானே.

55. பெண்ணுருக்தி பெற்றெடுத்த பிள்ளைகளோ வன்றியவர்
மண்ணி லிருந்துவெளி வந்தமா பாவிகளோ
பெண்ணிெனாடு கூடப் பிறந்தனரோ கல்லுடனோ
பெண்ணைமணந் தாரோ பிறிதோ வறியேமே!

56. பெற்ற கொடும்பாவீ! பெண்கொலைசெய் பாவிதனைப்
பெற்ற பெருவயிற்றைப் பீறிச் சிதைத்திடுவாய்
மற்றுநீ பெண்ணன்றோ மானங்காத் தேமாள்வாய்
அற்றே றுலகளவு மவதூறு நீங்காதே.

57. நினையொன்று கேட்கின்றோம் நின்போன்ற வோர்பெண்ணின்
சினைகொன் றுயிர்கொல்லாச் சென்ற கொடும்பாவி
மனையென்று பேர்சொல்ல மான முனக்கிலையோ?
உனையென்றோ வோர்நா ளுருக்குலைப்பான் றப்பாதே.

58. எம்மை யுருக்குலைத்தே யிங்கிலைக்கா ளாக்கியவச்
செம்மையொன் றில்லாத தீயவனன் றேட்டுறையும்
அம்மையீ ரக்கைமீ ராமா ரியப்பெண்காள்!
உம்மையுமப் பாவி யுருக்குலைக்க வஞ்சுவனோ?

---

53. எள்ளின் கமழ்பூ, குமிழ்பூ-மூக்கு. வள்ளை-ஒருகொடி நிழலாடு இலை-தளிர்-காது.

54. புள்-வண்டு. இமிர்தல்-ஒலித்தல். தாமரை குவளை முதலியன்கை, கண் முதலியன. செந்தளிர்-மாந்தளிர், ஆலந்தளிர், அசோகந்தளிர்-முறையே மேனி, வயிறு, அடி.

59. உங்கள் கணவர்களா லொன்றாவப் பாவிதனை
நங்கைமீ ருங்களது நாட்டைவிட் டோட்டிடுங்கள்
அங்கவர் செய்யாரே லன்னைமீ ரெல்லோரும்
வங்கக் கடல்வீழ்ந்து மாண்டு மடிவீரே.

60. ஆரியப் பெண்ணுலகே யரசனென் றஞ்சாதப்
பூரியன்பாற் சென்றே புலைமகனே யெங்களிலோர்
காரிகையை வெட்கமின் றிக் காணாச் சினைசிதைத்தல்
சீரியதோ வென்றே திடங்கொண்டு கேட்பீரே.

61. நன்கலமென் றேபுலவர் நாப்பயிலும் பெண்ணுலகை
வன்கொலைசெய் புல்லா! மடயா! கொடுங்கோலா!
புன்கொலைஞா! வுன்னைப் பொலந்தொடியாள் கண்காண
வன்கொலைசெய் கில்லேமேல் வண்டமிழ்ப்பெண் டீரலமே.

62. படைதரியா தேதளர்த்த பைந்தொடியை வன்கொலைசெய்
நடைபிணமே! கண்ணமையா நாணிலியே! செந்தமிழ்ப்பெண்
படையெதிரே வந்துன் படைவலியைக் காட்டுவையேல்
தொடியணிந்தே பேடீ! துரத்தி யடிப்போமே.

63. எள்ளத் தனையுமுளத் திவிரக்க மில்லாமற்
கள்ளத் தனமாகக் கானத் திடையொருபெண்
துள்ளித் துடிக்கத் துடிக்க வுறுப்பறுத்த
எள்ளத் தகுபாவீ! யிதுதான் அருந்திறலோ.

64. வாதுக்கு வாராத மங்கையை வன்கொலைசெய்
ஏதுக்கும் பற்றா விழிஞா! பிறனொருவன்
மாதுக் கவாவும் மடயா! பொருளறியாக்
காதற் கயவா கடையாபாழ்ங் காமுகனே!

65. ஒப்பாரோ டல்லா லொருபெண் டனித்தவிடத்
திப்பாரி லாரே யெதிர்ப்பா ரெதிர்த்தாலும்
இப்பாழ்ஞ் செயல்புரிவார் யாரே யிழிதகவில்
ஒப்பா ருனையாரே ஓகொடிய பாழ்மகனே!

---

59. வங்கம்-கப்பல்.
62. கண்-இரக்கம்.

66. வம்புக்கு வந்தாளோ மாபாவி! புன்கொடிய
அம்புக்கு வேறிடமின் றுயதோ வன்றியுனை
நம்பிக்கை காட்டி நலங்கொண் டகன்றுளோ?
கம்புக் கதிரிருக்கக் காழி பிளந்தாயே

67. பெருமை யுடைத்தமிழர் பெண்மக் களையகற்றிப்
பொருவ ரொருநாட்டிற் பேயற நூற் றப்பாதே;
ஒருபெண் டனித்துவை வுற்றுச் சிலைசிதைத்தல்
அரிய முனிவோர்செய் யாரிய நூன்முறையோ?

68. நாணிலி! பெண்ணென் றுல் நச்சரவி னோடெதிர்க்
காணுங் கொடுவிலங்குங் கண்ணோடுங் காமுகநீ
ஆணெனப்பேர் பூண்டு மருளன் பிலாதபடு
வீணனை யுன் றாயையோ மெய்வருந்தி யேன்பெற்றாள்?

69. என்றின் னனபலவா றேங்கி யிருங்கானிற்
சென்றுமே பச்சிலைகள் தேடிக் கொடுவந்து
துன்று துகிளொற் றுடைத்தவ் விடைபொத்தி
மன்றலங் கார்குழலை வாரி முடித்தார்கள்.

70. அன்னை யழுக வவரழுக வையகோ
என்னையாஞ் செய்வோ மிறைவனுக் கென்சொல்வோம்!
பின்னை யெடுத்துப் பிடிக்கை கொடுதாங்கி
அன்ன நடையா ரரண்மனையைச் சென்றடைந்தார்.

71. எல்லவருங் கண்டா ரிதுவென் கொடுமையெனக்
கொல்லென் றழுதார்; கொடியோரா ருள்ளபடி
சொல்லென்றார்; கொல்லென்றார்; தோகாய்நோ
வில்லென்றார்;
புல்லென்று பட்ட பொருகளம்போ லாயினார்.

72. பின்னர்ப் புனமயிலைப் பேரமளிக் கண்படுத்தார்;
துன்னினான் வேற்கரனும்; சொன்னார் நடந்தவற்றை;
என்னரசே! நோகே லிதோபாரப் பாவிகளை
உன்னைப்போல் வல்லை உருக்குலைப்பேன் காண்டிநீ.

---

66. அம்பு- வாளை. காழி-கதிரின் காம்பு.
70. பிடிக்கை-பெண்யானையின் கை.

73. ஏகொடிய வாரியருக் கிவ்வளவோ? வென்னரசி!
மாகொடிய பாவிகளை மண்ணி னிடைக்கிடத்திப்
பாகிலை வாய்ச்சியராற் பாவிகள் தம்முகத்தில்
ஓகையொடு காறி யுமிழ்விப்பேன் காண்டிநீ.

75. உன்னைச் சினைசிதைத்த வோகொடிய மாபாவி
தன்னைச் சினைசிதைத்துத் தாபகமெல் லாம்போக்கிக்
கன்னியர்கள் தங்களாற் காறி யுமிழ்வித்து
மன்னற்குங் காட்டி வருவிப்பேன் காண்டிநீ.

76. பெண்ணென்றும் பாராமற் பிள்ளைத் தனமாக
மண்ணென் றிடவுன்னை வன்கொலைசெய் மாபாவி
கண்ணைப் பிடுங்கிக் கழுகுக் கிரையாக்கி
உண்ணென் றவன்குருதி யூட்டுவிப்பேன் காண்டிநீ.

77. சோலையுற் றேகுந்தல் தொட்டுச் சினைசிதைத்தோன்
ஆலையுற் றேய்கன்ன லாமென் றிடக்கசக்கி
வேலையிட் டேகை விரல்காது மூக்கறுத்தம்
மாலையிட் டேயூர் வலஞ்செய்வேன் காண்டிநீ.

78. இவ்வாறு செய்யே னிலையே லிகலோரைச்
செவ்வேற் கிரையாகச் செய்வே னதுவின்றேல்,
ஒவ்வாப் பருவுடலை யோசுமந்து மீளாமல்
தெவ்வோர் புகழ்ந்தாடச் செங்களத்து வீழ்வேனே.

79. என்றின் னனவஞ் சினங்கூறி யேக்கற்றுக் ·
கன்றிக் கதறியிரு கண்ணீரும் புண்ணீரா
நின்ற நிலையா நெடுமூச் செறிந்தவனும்
ஒன்றுந் துணியாம லுள்ளற்றுத் தன்மறந்தான்.

80. அண்ணா! விளியென் றரும்பாவி யென்றனிரு
கண்ணார வுன்றன்னைக் கண்டண்ணா வென்றழைப்பேன்
பெண்ணோடு கூடப் பிறந்துந் தனியானீர்
மண்ணானே னின்றோடு வருந்தே லெனப்பொன்னும்.

---

74. பாகு இலை-பாக்கு வெற்றிலை.

77. ஆலை-கருமபாலை. ஓய்தல். சாறறுதல்.

81. ஓவென்ற கூக்குரலே யுள்ளும் புறம்பாக
ஏவென்ற கண்மூச் செறிந்தா துலைக்குருகின்
கோவென்று வாய்விட்டுக் கூவிச் சினைதொட்டுத்
தாவென்று கைகாட்டிச் சட்டென் றுயிர்விட்டான்.

82. அம்பி நிலமாக வாய்குழவி தாமாகச்
கம்மென் குழலுந் துகிலணியுஞ் சாந்தாகப்
பொம்மென்று நல்லார் யுரண்டழுது புல்லென்றார்;
கம்மின்றி யாடவர்கள் கல்லாய்ச் சமைந்தாரே.

83. இன்னது செய்வ தெனவறியா தேமுற்றே
தன்னந் தனியாத் தழுவித் தழுவியழு
துன்னி யொருவா றுணர்வெய்தி நோநொந்து
பொன்னைப் புனைந்தெடுத்துப் போயடக்கஞ்
செய்தனரே.

84. காரிகையைக் கொன்ற கயமைக் கருதாராம்
ஆரியரை யின்றே டடியோ டொழித்துவர
வீரர் திரள்கவென வெற்றி முரசறைவித்
தோரிடங்கொள் ளாதுள் ளுடன்றான் படைவலனும்.

## 2. கரன் கோலைப் படலம்

### வேறு

1. கள்வ ளத்தகு மூலியைக் காம முற்றவி ராமனும்
உள்வெ யர்த்தவன் றம்பியா லுருக்கு லைத்தமை
கூறினும்;
வள்வ ளத்தவில் லாரியர் வாள்வ ளத்தவேன் மறவலி
கொள்வ ளத்தகைக் கரனையும் கொலைபு ரிந்தமை
கூறுவாம்.

---

81. ஏ. அம்பு. உலைக்குருகு-கொல்லன் உலைத்துருத்தி. துருத்தி போல் பெருத்து உயிர்விட்டான். தா-தாழ்வு.

82. கம்மை-ஒலி. பொம்மென்று - கூட்டமாக. கம்-தொழில்.

83. ஏமுறுதல்-மயங்குதல்.

84. உடலுதல்-சினத்தல், வருந்துதல்.

1. வெயர்த்தல்-சினத்தல். வள்-கூர்மை.

2. பொன்னை வன்கொலை செய்துமே போன னாரிய
ராமனும்
தன்னி னத்தவர் சாகவே தாமு ருற்றுதல் தகவல
ஏன்று நேர்மை யிலாததமி ழிரண்ட கப்புடைஞனவே
என்ன வென்ன மனைவியு மியன்ற வாறுரை
செய்தனன்.

3. முன்ன மேசொல வில்லையா மூண்ட தேபகை
யென்செய்வோம்
பின்னை யுமெனை நேரொரு பெண்கொலைபுரிந் தீர்களே
அன்னை வன்தமி ழகமதை யாளிறை தங்கை யாமெனில்
என்ன கேடுவந் தெய்துமோ வேது செய்குவ
னேழையே.

4. மனைவி சொல்லினை தட்டியே வாழ்ந்த தாருல
கத்திலே
வினையை வேண்டுமென் றகொலை விலைக்கு
வாங்கிக்கொண் டீர்களே
அனையை யொத்த தமிழர்க வரசி யப்படி
யென்செய்தாள்!
சினைசி தைத்தவி னுங்கொலை சீரி தேயெனச் சீதையும்.

7. அன்ன மென்னடை யழகி யறிவி லாதபெண்
பேதையே
முன்னர் வெந்திட வெந்தையை முறிய டித்தனன்
முத்தமிழ்
மன்னர் மன்னவ னுகையால் மதிலி லங்கை
யிராவணன்
தன்னை வெல்லவே தமிழகந் தான டைந்தன
னறிகுவாய்.

6. அவனை யிங்கடை கிற்கவே யரிவை யைச்சினை
கொய்தனன்
இவணி ருந்திடுங் கரனுயிர்க் கிறுதி காணுவ
னின்றையே
தவணை யின்றினித் தையலே தடுப்ப தாற்பய
னென்றிலை
கவணெ றிந்தகல் வீழுமுன் காணு வாய்மலர் வாகையே.

---

4. கொலைவினை-கொலைத்தொழில்.

7. என்று கூறி யிடம்பெயர்ந் தேகி யேபடை கண்டனன்;
வென்றி வேற்கர னுந்தமிழ் வெறிபி டித்த மறவரை
ஒன்று கண்டு செலுத்தினு னுருமெ னத்தமிழ் மறவரும்
பொன்றி ஞரிலி யென்றுபோய்ப் பொருத னிரு
படைஞரும்.

8. காலறுந்தன ரோர்சிலர் கையறுந்தன ரோர்சிலர்
தோலறுந்தன ரோர்சிலர் தொடையறுந்தன
ரோர்சிலர்
மேலறுந்தன ரோர்சிலர் விழியறுந்தன ரோர்சிலர்
வேலெறிந்தொளிர் வாளெதிர் விசைநெ றிந்திட
வீரரே.

9. எங்களண்ணலை யைச் சினைசிதைத் தேற்ற மின்றியே
கொன்றவன்
எங்கை யோவவ னடிமைகா ளின்று நீவி ருயிரிரோ
அங்கை கூப்பிநீர் தொழுகினு மாவ தொன்றிலை
யழிவலால்
செங்கைவேற்றமிழ் மறவர்கள் சீறி னரின வடவரை.

10. அன்ன ராரிய ரம்பின்முன் னுற்ற வின்றிய றியவே
பின்னும் பின்னுந் தமிழ்ப்படை பெருகி வந்துமுனைகவே
கன்ன லின்றதோட் செங்கரன் கனன்று சீறி
யெழுந்துமே
துன்னினுஞ் சிலை ராமனுந் தோன்றி னனவன் முன்னரே.

11. உற்ற விருவரு மொருவருக் கொருவர் வஞ்சினங் கூறியே
செற்ற மீக்குற மறவருந் தெரு மற்றவு மொழியவும்
வெற்றி தோல்விய தின்றியே வேலும் வில்லுமுன்
பிகலியே
பெற்ற நாளினு மன்னையர் பெரிது வக்கவே
பொருதனர்.

12. பூரி யக்கொலை வேள்விசெய் புலைய ரல்லது புரிதவ
ஆரி யர்க்கிடை யூறுசெய் யாத வன்னையைக் கொல்பழி
கார னேயெனச் சீறியே கனன்று மேல்வரு வாட்கரன்
தேரி னேடொளிர் வேலையுஞ் சிலைதத்து மேசிலை
ராமனும்.

---

7. உருமு-இடி.
10. கல்லலில் தோள்-மலைபோன்ற தோள.
11. செற்றம்-சினம். முன்பு-வலி. இகல்-மாறுபாடு.

13. எந்தை யெத்தனை தமிழுரை யிரைகொ டுத்தனன் கழுகினுக்
கந்த நாளினிற் றமிழகத் தரசு நின் றில வெதிரினில்
முந்தை யுன்குலத் தாடகை முகமு குத்துயி ரிழந்ததை
இந்த நாளிலே மறந்துநீ யெதிர்க்க வந்தது புதுமையே.

14. மன்னி வாழ்முனி வோர்தமை வருத்தி யோடெனத் துரத்திடும்
உன்னை யன்றுன மன்னையு மொருங்கொ ழித்துயர் முனிவர்கள்
இன்ன லின்றியே யென்றுமிங் கிருந்து வாழ்ந்திடச் செய்யவே
என்னை யெந்தையிங் கேவினு ரென்ன வேதமிழ் மன்னனும்.

15. நனவி லன்றியே செந்தமிழ் நாட்டை வெல்லுவ மென்றுநீ
கனவு காணவும் விடுகிலேன் கழுகி னுக்கிரை யாக்குவேன்
எனவெ குண்டொரு தடியினு லெறிய வேசிலை ராமனும்
தனைம றித்துமோ ரம்பினுற் றலைய றுத்தனே னயகோ.

16. நின்ற வாரிய முனிவர்கள் நீடு வாழ்கென வாழ்த்தியே
அன்றி யாமிதற் காகவே யாங்கு கூடின மன்றியும்
சென்று கரனைய னுகவே செய்து வைத்தது மாகுமால்
முன்றி யாங்கள் நினைத்தது முடிந்த தென்று முழங்கினர்.

17. கொன்ற ழித்தவன் சென்றுமே குறுகி னுனிலைக் குடிசிலைச்;
சென்றெ டுத்துமே மறவர்கள் திகைதி கைத்தழு திரங்கியே
குன்ற ழித்தவன் றேளனைக் குழிவி டுத்துமே நிகழ்வினைச்
சென்று ரைத்திட விறையிடஞ் சிலரை யேவினர் செருநரே.

---

14. உன-உன்னுடைய. மன்-அரசன்.
16. ஆங்கு-சரபங்கள் குடிசையில்.

18. சென்றுரைத்திட மறவரைச் செலவிடுத்துமே சென்றிலா
நின்ற முத்தமிழ் மறவர்கள் நிகழ்வை யெண்ணி வருந்தியே
கொன்ற ழித்துமே சென்றவக் கொடுமை யுற்றெழு கொடியரை
வென்றொ றுத்திடத் தக்கதோர் வேளை பார்த்தங் கிருந்தனர்.

## 3. செவிகோட் படலம்

### வேறு

1. மலைமயி லனைய காம வல்லியைப் படைவ லானைக்
கொலைபுரி கொடுமை சொன்னும்; கொலைபுரி கொடுமை தன்னைப்
பலகலைக் கடலை யாய்ந்து பயனறிந் திளிமேற் கற்ப
திலையென முழுது மான்ற விராவணன் கேட்டல் சொல்வாம்.

2. கைவல மறவ ரோடு கரன்களப் பட்ட பின்னர்
மைவளர் விந்தச சாரல் மருவிய மறவர் சென்று
தைதளர் மாட கூடத் தனிமதி லிலங்கை நண்ணி
வைவளர் கதிர்வேல் மன்னர் மன்னவற் றொழுது நிற்ப.

3. என்னெனத் தங்கை யென்ன வினிதென வில்லை யென்ன
என்னருந் தங்கைக் கென்ன வியன்றதை யுரைமி னென்ன
என்னெனச் சொல்வோ மென்ன விலையிலை நலமோ வென்ன
மன்னவர் மன்று வென்ன மன்னனுந் தங்கா யென்ன.

4. குறையவட் கென்ன வென்னக் கொடுங்குறை யெனவென் னென்ன
இறைவியை யெனவென் னென்ன வென்னென்போ மெனவென் னென்ன
மறையவ ரடிமை யென்ன வடவரோ வுலரபி ரென்னக்
குறைமதி யுடை யோ ரென்னக் கொல்லெனக் கொலையென் றூரே.

2. தை-அழகு. வை-கூர்மை.

5. கொலையென வுரையா முன்னங் கோளரி யென்னச் சீறி
மலையெனப் பெருத்த தோளான் வாய்கடித் துருமி
னார்த்து
நிலையிழிந் தியன்று பல்லை நெருநெரென் றுறக்க டித்துக்
கலைநெளித் துயிர்ப்பு வீங்கிக் கைபிசைந் திருந்தெ
ழுந்தே.

6. உற்றதை யுரைமி னென்ன வுள்ளவா றவருஞ்
சொல்லக்
கொற்றவேற் றானை மன்னா! குடைமதிப் பொலிந்த
தங்காய்!
அற்றதோ வுறவின் றோடே யாக்கைமண் கொளவீந்
திரோ
மற்றது கேட்ட பின்னும் மாள்கிலேன் கொடியே
னென்னும்.

7. புறங்கொடா மறவிர் நீரும் பொருகளம் புகுந்து நூறி
மறங்கொடா தொருங்கெல் லோரும் வஞ்சவா ரியர்க
ளான
அறங்கொடாக் கொடியர் தம்மா லிங்தொழிந்
ததுகேட் டின்னும்
உறங்கிடா துயிர்காத் துள்ளே னேகொடும் பாவி
யென்னும்.

8. இனத்தவர்க் கிரங்கி டாம லிரண்டகஞ் செய்து பாழும்
புனத்திடை யொளிந்து வாழும் பூரியர்க் கடிமை யாகி
மனத்திடை மான மின்றி மண்ணரிடை யினத்தை
வீழ்த்தித்
தனித்துவாழ் கின்ற நீருந் தமிழரோ? அல்லீ ரென்னும்.

9. மாந்தளிர் மேனி வாட மண்ணிடைப் புரண்டு ருண்டு
பூந்தொடை பொலியச் சூடிப் புள்ளினந் தமிழ்ப்பண்
பாடும்
கூந்தலைப் பிடித்தப் பாவி கொடுமைசெய் திட்ட போது
காந்துவே லண்ணா வென்று கதறிநீ யழுதிட் டாயோ?

---

5. இழிந்து இயன்று-இறங்கி நடந்து. கலை-உடல்.
9. காந்துதல்-ஒளிர்தல்.

10. புணைப்புடை சூழச் சென்று பொருகளக் கடலை நீந்தி
இணைப்படைக் கரையை நண்ணி யேதிலர் சிலையிற் றொட்ட
கணைப்பட மறவ ரெல்லாங் களத்தவிந் திட்ட போது
துணைப்படை கண்டி லாது துன்பமுற் றழுங்கி னாயோ?

11. குமிழ்மலர் கொய்த போதுங் குழையினை யறுத்த போதும்
உமிழ்சுடர்க் குருதி யங்கின் நூற்றெடுத் திழிந்த போதும்
இமிழ்சுரும் பணையைத் தீயோ னிழிகையாற் றொட்ட போதும்
தமிழ்மணங் கமழுஞ் செவ்வாய் தான்றிறந் தழுதிட் டாயோ?

12. வீரர்க ளவிந்த போதும் வெறுங்களங் கண்ட போதும்
தேரினைச் சிதைத்த போதுஞ் செங்கைவே லறுத்த போதும்
சீரிலா னிகழ்ந்து நம்மைச் சிறியசொற் சொன்னபோதும்
கூர்வேற் கையா வுள்ளங் கொதித்தெனை நினைத்திட் டாயோ?

13. தங்கையென் றழையா முன்னந் தமிழ்மணங் கமழும் வாயால்
இங்குளே னண்ணா வென்னென் றேவலிற் றிறம்பா நின்ற
மங்கையர்க் கரசி யந்தோ! மண்ணினுக் கிரையா னாயே
எங்குனைத் தங்கா யென்பே னென்றெனை யண்ணா வென்பாய்?

14. சென்றெறி முரசி னோசை செவிப்படா முன்னம் புக்கே
ஒன்றலர் தலைமையாள் வேலா லோரிநாய்க் கிரையாத் தந்து
வென்றிகொண் டேன்மா றில்லை வேறென வேவல் கேட்போய்?
என்றெனை யேவல் கேட்பாய் என்றுநா னேவப் போறேன்.

---

10. இணைப்படை-ஒத்தபடை. அழுங்குதல்-வருந்துதல்.
11. இமிழ்தல்-ஒலித்தல். சுரும்பணை-கூந்தல்.

15. மங்கையர் வந்தா ரில்லை, மறவர்முன் னின்றா ரில்லை,
எங்கைநீ ரென்ற போழ்தத் திறைவியே யென்றா
ரில்லைச்,
செங்கைவேல் தந்தா ரில்லைத் தீயவ ரெம்மோ ரென்றே
எங்கையே யெம்பி யேநீ ரெங்களை மறந்திட் டீரோ?

16. குற்றமே யுருவ மான குணமிலாக் கொடியோன்
கூந்தல்
பற்றியே யிழுத்துத் தள்ளிப் பண்பொடு மணந்து
வாழ்க்கை
உற்றவ ரன்றிக் காணா வுறுப்பினை யறுத்த போது
பொற்றொடீ! யெவ்வா றேங்கிப் புலம்பிநீ துடித்திட்
டாயோ?

17. செருக்களத் தொருவ னாகிச் செங்கைவேற் படையின்
றாகி
நெருக்கென வெறுங்கை யோடு நிற்கவீ விரக்க
மில்லான்
வெருக்கெனக் கழுத்தை யீர வெங்கணை யதனை யந்தோ
பொருக்கென விடக்கண் டுள்ளம் புகைந்துநொந்
தினைந்திட் டாயோ.

18. தகையிலா னுதைத்துக் கீழே தள்ளிவா ளுருவி
யெட்டும்
பகையினை யிளநீள் வள்ளைப் பாசிலை தன்னைக் கோங்க
முகையினை யறுத்த போது முருக்கிதழ் திறந்தா
வென்றெவ்
வகையுடல் பதைப தைத்தே மனந்துடி துடித்திட்
டாயோ?

19. அடங்கவே படைக ளெல்லா மழிந்துமே தனிய னாகி
நெடுங்கள நிற்கக் கண்டந் நெறியிலான் கடிதி னெய்த
கடுங்கணை சுருக்கென் றுந்தன் கழுத்தினிற் பட்ட
போது
நடுங்கியைம் புலனுஞ் சோம்பி நலிந்துமெய் மறந்திட்
டாயோ?

---

17. நெருக்கென-திட்டத்துடன்.

20. முன்னொரு காலே யானு முறைசெய்வான் சென்ற போது
தன்னிகர் வீந்த நாட்டித் தறுதலே தந்தை தன்னை
வெங்கிடத் துரத்தி னேனவ் விறலிலான் மகாரை யேவி
என்னருந் துணையி ருங்கட் கிறுதிசூழ்ந் தானே போலும்.

21. கொல்லியே யுயிரை யூனுண் கொடியவர் நேர்மை
யில்லாப்
புல்லியர் வஞ்ச நெஞ்சர் பொருந்தியே யிருந்து வாழும்
அல்லிலே நெடுவே லேயவ் வாரிய மென்னும் பேரை
இல்லையென் றாக்கி டாயேல் இனியுனைத் தொடாதென்
கையே.

### வேறு

22. எந்தைக் கொருபெண் ணெளியார்க் கியல்கைத்தாய்
செந்தமிழின் செல்வி திருவறத்தின் பூஞ்சேக்கை
வந்தெனக்குப் பின்பிறந்த மாறா வுடன்பிறப்பி
எந்நாள் எம்மா வெதிர்கண் டுவப்பேனோ?

23. தானைத் தலேவா தமிழ்கற் றுணர்ந்தோனே
வானைப் புறங்கண்ட வள்ளல்வளச் செங்கரனே!
ஊனத்தின் றானைப் பெருக்கு முதவாரைக்
கானத்தே போக்கவிரு கண்கொண்டு பார்ப்பேனோ?

24. பொன்னஞ் சிலம்பு புலம்பப் புனமயில் போற்
பின்னற் புறமசையப் பெண் மயிலோர் பின்றொடர
அன்ன நடைநடந்தென் னண்ணவென் றென்முன்வர
என்னிருகண் கண்டே யிலிக்களித்தல் கூடுங்கொல்!

25. கேள்வாய்ச்சொல் மாறாக் கெழுதகையோய்!
கேளல்லார்
நாள்வாய்ப்பத் தாளா நலிவெஞ் சினமறவா!
ஆள்வீச்சுக் காயிரம்பல் லாயிரமண் ணுகிடச்செய்
வாள்வீச்சைக் கண்டு மகிழ்வது உங் கூடுங்கொல்!

---

20. வெங்-முதுகு-மகார்-மக்கள்.
22. சேக்கை-படுக்கை, இருக்கை.
25. கேள்-தம்மவர். வாய்ப்ப-இருக்க.

26. கைதட்டிப் போயொளிந்து கண்கட்டிக்
கொண்டொருவர்
மெய்தொட்டுக் கொண்டு விளையாடி யோடுகையில்
செய்தொட்ட கூந்தல் நிழலை யராவென்றே
வெய்திட் டதைநினைக்க வேகின்ற தென்னுளமே.

27. பொன்னங் கழலதிரப் போய்வாள் முனைவீழா
முன்னங்கை தாங்கி முடுகிப் படிவீழ்ந்த
சின்னஞ் சிறுகாலைச் செய்த செயலைநினைத்
தென்னெஞ் சுருகி யெரிவாய் மெழுகாமே.

28. பண்ணைப் பழித்தவிசைப் பாட்டென்று கேட்பேனோ
கண்ணைக் கவராட்டங் காண்பேனோ கைசெய்யும்
வண்ணத் தளியாழ் மழலைமொழி கேட்பேனோ
எண்ணத் தொலையா விடர்க்கடலுள் வீழ்த்தினையே.

29. போர்தாங்கி யொன்னலர்கள் போந்தாற்
பொருக்கென்று
நீர்தாங்கிப் பின்வாங்கா நிற்குநெடுங் கல்லணைபோல்
தார்தாங்கி வாகை தரிக்குந் திறன்மறவா!
பேர்தாங்கித் துன்பம் பெருகியழ விட்டனையே.

30. உண்ணா வயிற்றே! யொளிர்செவ்வேற் செங்கரனே!
நண்ணார் கொடுங்கணையால் நைந்தே நலிவெய்திப்
புண்ணாய்ப் புழுங்கிப் பொலிவற்ற பேருடலைக்
கண்ணாரக் காணாக் கடையேன் கொடியேனே.

31. இவ்வா றரற்றி யிருக்கு மெழுந்திருக்கும்
எவ்வா றிலியா யிருப்பேன் பிரிந்தென்னும்
ஒவ்வா தனசெய்த வோகொடிய வாரியரைச்
செவ்வேற் கிரையாக்கித் திருவே னென்றார்க்கும்.

---

26. அரா-பாம்பு. வெய்திடல்-அஞ்சல்.

27. வாள்கட்டித் தாண்டி விளையாடும் போதுவாள் முனையில் வீழாமல் கைதாங்கி, அவ்வதிர்ச்சியால் நிலத்தில் வீழ்ந்தானெனக.

29. தார்-தூசிப்படை. பேர்-புகழ்.

## வேறு

32. தங்கையொடு தாயைத் தலைவனுயிர் கொன்ற
அங்குணமி லாதவட வாரியரை நாளை
செங்கைவடி வேலினுயிர் தீர்க்கிலனே யாகிற்
பொங்கெரியின் மூழ்கியுயிர் போக்குவனெ னென்றான்.

33. தன்கொலை புரிந்தெமது தங்கையுயிர் வீய
வன்கொலை புரிந்தவனை வாட்கிரை கொடேனேல்,
நன்கல மெனப்பெரிது நம்பியடை வைத்த
பொன்கல முணுங்கொடிய பூரியனு மாவேன்.

34. தேரினை யுடைத்தயில் செகுத்துயிர் குடித்த
பூரியனை வேலினுயிர் போக்கவரி யேனேல்,
ஊரினை விடுத்துரிய ரோம்புலகை விடுத்தே
ஆரியர் தமக்கடிமை யானவனு மாவேன்.

35. என்றாயை யென்னுட னெழுந்தவிள மானை
மென்றாரை சோரிபட மென்சிலை சிதைத்தே
கொன்றாரை வேலினுயிர் கோறல்புரி யேனேல்,
மன்றோரஞ் சொன்னகொடு வஞ்சகனு மாவேன்.

36. கற்படை யற்றுவெறுங் கையொடுநின் றானைச்
சிற்றறிவி னாலுயிர் செகுத்தவனை நாளை
வெற்றிவடி வேலினுயிர் வேறல்புரி யேனேல்,
நற்றமிழர் பாடுதலில் நாடுடைய னாவேன்.

37. பொடிபடிய மாந்தளிர் புரண்டிட நிலத்தே
கொடியனைய தங்கையுயிர் கொன்றவனை நாளை
வடிவுடைய வேலினுயிர் மாய்த்திலனே யாகிற்,
குடிகள்பழி தூற்றுகொடுங் கோலினனு மாவேன்.

38. மறங்கடைய செங்கரன் வறுங்கையுடை யானை
அறங்கடைய னாய்த்தலை யறுத்தவனை நாளைக்
குறங்கிடை விலங்கடையக் கோறல்புரி யேனேல்,
புறங்கடை நயந்துசெலும் பூரியனு மாவேன்.

---

32. அம்-நல்ல. நாளை-பின்னர். பொங்கு-மிக்க
33. தன்கொலை-தற்கொலை. அடை-அடைக்கலம்.
35. சோரி மென் தாரை பட. தாரை-ஒழுங்கு,
38. அறங்கடை-தீமை. குறங்கு-தொடை. புறங்கடை-அயல் மனைக்கண்.

39. உமிழ்குருதி யோடவெ னுடன்பிறவி தன்னைக்
குமிழினொடு வள்ளைமுகை கொய்தகொடி யோரை
இமிழ்கழுகு நாய்நரிகட் கீகைபுரி யேனேல்,
தமிழ்மொழி கலாதசிறு தாயகனு மாவேன்.

40. தனித்தமிழ் மறப்படை தனைத்தமிழ் நிலத்தார்க்
கணைப்படு படைத்தலைவ னைக்கொல்கொடி யோரை
நுனைப்படுசெவ் வேலினுயிர் நூறியொழி யேனேல்,
இனத்தவர் தமைப்பழி யிரண்டகனு மாவேன்.

41. பொருவிலியை யிளையனொடு போர்மறவர் தம்மை
அருமையுயிர் கொன்றவட வாரியரை நாளை
நரிகழுகி னோடுவெறி நாய்க்குதவி டேனேல்
ஒருதொழிலு மின்றியிரந் துண்பவனு மாவேன்.

42. மறவர்க ளிலாதுதனி வந்தவிளை யானை
அறமல புரிந்தவட வாரியரை நாளை
திறமிகுசெவ் வேலினுயிர் தீர்க்கிலனே யாகிற்,
பிறர்பொருள்கொ டுண்டுவளர் பேதையனு மாவேன்.

43. அறமல புரிந்தவட வாரியரை நாளை
மறவர்மனை யோர்மகிழ வைத்துவதை யேனேல்,
குறளையொடு பொறுமையல கொண்டவரி னென்றே
பிறர்பழி யெடுத்துரைசெய் பீடிலனு மாவேன.

## வேறு

44. இன்னன பலவாறாக விளைந்துவஞ் சினங்கள் கூறி
மன்னவர் மன்னன் பின்னர் மதிவலி யமைச்ச ரெங்கள்
கன்னவில் குவவுத் தோளாய்! கழிந்ததற் கிரங்கே லென்ன
என்னினிச் செய்வே னென்ன வியல்வது தெரிந்த வன்னோர்.

45. மறப்படை தம்மா னன்னான் மனைவியைக் கவர்ந்து வந்து
புறப்பொருட் படியே காவல் புகுத்தினா மோம்பி னந்த
அறக்கொடும் பாவி யீங்கே யடைகுவ; னடையா னாயின்
துறக்குவன் றமிழகத்தைத் துன்னிடத் துணியான் பின்னர்.

---

39. உமிழ்தல்-ஒழுகுதல். இமிழ்-ஒலி.
41. நுனை-முனை. நூறி-கொன்று.
43. பொறுமையல-பொருமை.

46. என்றவர் கூறக் கேட்ட இராவணன் மறவர்ப் போக்கல்
நன்றல தானே சென்றந் நங்கையை எடுத்து மீள்வேன்
அன்றவ ரெதிர்க்கி னவ்வி குடித்திவ ணடைவே னென்ன
மன்றலந் தாரோய்! நானும் வருகிறே னெனமா ரீசன்.

47. என்னருந் தாயைக் கொன்ற இழிதகை யாள ரான
துன்னலர் மனையைக் கொள்ளத் துணையது செய்வேன்; அன்றி
அன்னவ ரெதிர்ப்பா ராகில் ஆருயிர்க் கிறுதி காண்பேன்
என்ன;மா ரீசன் தன்னோ டெழுந்துதே ரேறிச் சென்றான்.

## 4. சிறைசெய் படலம்

### வேறு

1. மாதினொடு வேற்கரனை மாகொடியர் கொன்ற
சேதியதை நம்மிறை தெரிந்ததை யுரைத்தாம்;
போதலரை யானிலை புகுந்துவடி வேலன்
சீதைதனை மாதுசிறை செய்ததை யுரைப்பாம்.

2. தேரின்மிசை யேறியவர் சென்றுசில நாளில்
மாரியிடை யூறுபட மாமர முயர்ந்து
காரினடை யாளமது கண்டுமலர் கொண்டு
வேரினிடை யாரவமை விந்தக மடைந்தார்.

3. அடைந்தவன் முடிந்தவள் அரண்மனை யடைந்து
மடிந்தவ னுடைமையை வகைமையொடு கண்டு
முடிந்ததுமர் இன்பமு முடிந்ததெல வுள்ளம்
உடைந்துகர னோடவ ருடைமைகளுங் கண்டான்.

4. அண்ணலின் வரவினை யறிந்துகுடி மக்கள்
நண்ணியே வணங்கிமு னடந்ததை யுரைத்துப்
பண்ணெனு மொழிச்சியொடு பார்வலனை மாய்த்து
மண்ணினுயிர் கொண்டினமும் வாழுகிறோ மெந்தாய்!

---

1. ஐயால்-பஞ்சவடி. மாது-அசை.

3. உமர்முடிந்தது-உம்மவருடைய நாளும முடிந்தது, உமர் இன்பமும் முடிந்தது. 'உமர்' என்றது உம்மவர் என அவருடைமைகளை. அவர்-மறவர்.

5. மன்னனை யிழந்ததுயர் மாற்றிய வரசி
தன்னையு மிழந்துபெறு தந்தையொடு தாயை
இன்னென விழந்தழு மிளங்குழவி யானோம்
என்னவழ, மன்னவ னிசைத்தமிழ மக்காள்!

6. ஆரிய மெனும்புதரை யாவியற வெட்டிக்
கூரெரி யதன்வயிறு கொள்ளவே கொடுத்து
மாரியென வேதமிழ் மறவரை யமைத்துச்
சீரொடு தமிழ்ப்பயிர் செழிப்புற வளர்ப்பேன்.

7. என்றுபல கூறியவ ரேக்கமது போக்கி
மன்றிலிடை முன்காம வல்லியும் வளர்த்த
கன்றுமட மானதனைக் கைக்கொடுபல் வீரர்
ஒன்றிவர வேதேரி லொள்ளியனுஞ் சென்றான்.

8. வென்றிவடி வேல்மறவ ரோடுதமிழ் வேந்தன்
ஒன்றுமனை யோடுவட வோருறையை யாவின்
நன்றுதெரி இன்றதொலை நாடியரு காகச்
சென்றுமறை வாய்த்தமது தேரினை நிறுத்தி.

9. மங்கையரு கோடிவினை யாடவிள மானை
இங்கொருவர் சூழ்ச்சியுட னேவிடுதல் வேண்டும்;
அங்குவரி ராமனை யழைத்திடு தொலையில்
மங்கையினை யோவென வழுத்திடுதல் வேண்டும்.

10. வந்தவிரு வோரையும் வளைத்தவ னிருத்தப்
பைந்தொடியை மற்றவர் பதைப்புட னெடுத்து
வந்திடுதல் வேண்டுமென மன்னவ னுரைப்பச்
செந்தமிழர் அன்னபடி செய்திட முனைந்தார்.

11. வானினுறை மீனையுடல் வைத்துமதி யொன்று
ஏனவ ளிருந்திடு மிலைக்குடிசை முன்னர்க்
கானினிடை யோடிவினை யாடுமவள் கண்ணேய்
மானினை மதித்தலை மடைந்தவள் கண்டாள்.

---

11. விண்மீன்-புள்ளிகள். வினையாடும் மானினை.

12. கண்டமட மானதனைக் கரனமட மாறும்
கொண்டுதரு கென்றவள் கொழுநனொடு கூற
ஒண்டொடி யுவக்குத லுவக்குமிழி ராமன்
விண்டமட மான்றொடரி வில்லொடு நடந்தான்.

13. மாதவன் மொழிதனை மறுக்கமன மில்லான்
சீதைதனக் கேதுமொரு தீங்குமணு காமல்
பாதுகாத் திடுதியெனப் பாவியவன் தம்பிக்
கோதிமட மான்விழி யுவப்புறவே சென்றான்.

14. சென்றுமட மானதனைத் தேவியிடை யாக்கப்
பின்றொடரி யன்னது பெயர்ந்தவிட மாகக்;
கன்றிய மனத்தொடு கருத்தொடுமு னங்கண்
துன்றிய தமிழ்ப்படைஞர் சூழ்ந்தனர் விளைத்தார்.

15. செஞ்சொலி கெடுத்தனள்; தினைப்புன மடைந்தே
குஞ்சினை யிழந்திடு குரீஇயெனென ராமன்
வெஞ்சிலை வளைக்கவெதிர் வேல்பிரிர; வாங்கே
பஞ்சவடி கேட்டிடு படித்தொலையி னின்றே.

16. ஒல்லுவ தறிந்துமு னுளங்கொளவே யண்ணல்
சொல்லிய படிக்கவள் துணுக்குறமா ரீசன்
'நல்லதுற வேசீதே! லக்குமணா!' வென்றான்;
மெல்லியல் துணுக்கெனவவ் வெய்யமொழி கேட்டே.

17. மானினை விழைந்துமட மங்கைமதி கெட்டேன்
ஆனது மறக்குமோ ஐயோதமிழ் மறவத்
தானைவளை கொண்டது தனித்திட விளையோய்!
ஏனினமு நிற்கிறையிங் கேகென வுரைத்தாள்.

18. அவ்வகை நினைக்கலைய வண்ணன்வலி கொல்வோர்
இவ்வுலகில் யாருமிலை யேழையறி வாயோ?
ஒவ்வுமோயான் செல்லுத லினைத்தனி விடுத்தே?
இவ்வளவோ? அண்ணனுரை யேற்பிலனு மாவேன்.

---

15. குரீஇயன-குருவிபோன்றனன்.

16. ஒல்லுவது-இயல்வது. நல்லது உற-நல்லதாகட்டும். இராமன் இடருட்பட்டு உங்களுக்கு நல்லதாகட்டும் எனக் கூறினதாகக் கொள்ளற்கு இவ்வாறு கூறினன்.

19. என்னவட தீயனே! எனையடைய வெண்ணி
இன்னிய கிளாதெமுட னின்றனை போல் வந்தென்
மன்னனது சாவையெதிர் பார்க்கிறாய்கொல் வஞ்சா!
இன்னபல தீயசொல் லியம்பியே யழுதாள்.

20. என்றவுரை கண்டிலையோ வென்னமதி முன்னைக்
கொன்றிடவொ லாதெனவே; கோதையட பாவீ!
என்றனை விரும்பியே யிவாறுபகர் கின்றாய்
அன்றியவள் மைந்தனு மனுப்பினளோ வுன்னை!

21. காக்கவென வந்தடடா! காமுகா! எனைப்பெண்
டாக்கநினை கின்றனை அடாதசெயல் செய்ய
ஊக்குமுன தெண்ணமுறு மோவிலையெ னாவி
போக்குவெ னெனப்பினும் பொருக்கென வெழுந்தே.

22. இப்படிநீ பேசுவ திலையுதுமை பெண்டிர்
செப்புசுடு சொற்களெனுந் தீயவடி வேலால்
ஒப்புடைய வாடவ ருளமெனு மரம்பி
ளப்பது முறவுபகை யாக்கலு மியல்பே.

23. ஆயினுமுன் பேச்சிலெனை கம்பதறு கின்ற
தேயினிய காவலனுக் கெங்கிருந்து வந்தாய்?
நீயுமொரு பெண்ணை நிலப்பொறைய னன்றோ?
தீயசொலி வீண்பழி சுமத்துவது தீதே

24. இன்னன பலசொல விராமனை யலாது
கன்னிகை யொருவரையுங் கைதொடுவ னோதான்
இன்னுயிர் விடுக்கிறே னெனவபி நயித்தே
என்னையிது வோவென வினைந்துமே யழுதாள்.

25. அஞ்சியினை போனவனை யானவரை தேற்ற
வஞ்சக வினுஞ்சிறிதிவ் வாறெனை நிடத்தே
எஞ்சியே யிருக்கலாமென் றெண்ணுதியோ வென்ன
வஞ்சியிதழ் மூடவினை மற்றவனும் போனான்.

---

19. இன் இயல்-நல்லொழுக்கம்.

20. அவள்-கைகேசி. பரதன் சூழ்ச்சியால் என் கணவனைக்கொல்ல உடன்வந்தாயோ என்றாள். பரதனுக்காக கைகேசி செய்தானென்பதைப் பரதன்மேலேற்றிக் கூறினாள்.

21. பின்-தம்பி-இலக்குவன்.

23. காவலன்-சீதையின் தந்தை. பொறை-சுமை.

25. அஞ்சி-தங்கி. இனை-வருந்தி.

26. மற்றவ ரிகன்றது மணித்தமிழ் மறவர்
அற்றமிது வாமென வகத்தெளிவு கொண்டு
வெற்றிவிறல் வாகையொடு வெட்சியுற வாடப்
பொற்றொடி வெருக்கொள பொருக்கென வனுற்றார்.

27. அன்னவர் தமைக்கணுறி யஞ்சியவள் நெஞ்சம்
இன்னதிது செய்வதென வேதுமறி யாமல்
என்னவ ரகத்தினி லிலாதவிது வேளை
துன்னுதற காதவெனுஞ் சொன்முடியு முன்னே.

28. தூக்கிவிரை வாயவர் சுருக்கென வகன்று
காக்குந ரிலாதுதனி கண்டகனி மாவை
மாக்கடுவ னொன்றுகொடு மந்திபுடை சூழ
வூக்கமொடு செல்லுதலை யொத்தவர்கள் சென்றார்.

29. மாற்றறிய துப்பினொடு வண்டமிழ் மறவர்
காற்றினு மனத்தினுங் கடிதுநனி சென்று
ஆற்றல்மிகு மண்ணலி னகத்துவகை பொங்க
மாற்றினுயர் தேரின்மிசை மங்கையை யிருத்தி.

30. வெற்றிவடி வேலவன் விடுக்கவென வத்தேர்
மற்றவர் மனத்தினெழு வாகையினு முந்தி
உற்றவர் தமக்குரைசெய் வோரினனி செல்லப்
பொற்றொடி மனத்தின புலம்புதலு மானாள்.

வேறு

31. அப்பா வினையோய்! அறியா தவதூறு
செப்பினே னுன்றனது செம்மையறி யாப்பாவி
இப்போது வாராயோ? என்செய்கே னையகோ!
தப்பிலியான் கெட்டேன் தசரதன்றன் கோக்களிறே!

32. யாரையா நீவிர், அறியா தெனையெடுத்துத்
தேரேற்றிக் கொண்டெங்கு செல்கின்றீர்? ஐயோநும்
ஊரேதோ தேறேன் ஒருவற் குரியாளை
நீரேன் சிறைசெய்தீர், நேரோநா னுங்களுக்கே?

26. அற்றம் - ஏற்றவேளை. வாகையொடு வெட்சி உறவாட-வெற்றியோடு எடுத்துச்செல்ல.
28. கனிமா-மாங்கனி. கடுவன்-ஆண்குரங்கு.

33. என்னவே மன்னன் இலங்கைக் கெனவெழுமின்
பின்னவன் கேட்டோரோர் பேதையாள், மாபாவி
உன்னை யிகழ்ந்தேனு! உன்மீது கைபுரிந்தேன்;
மன்னவா! என்றுன் மலர்முகத்தைக் காண்பேனோ?

34. இனியானென் செய்வேன் இதுகேட்டால் கைகேசி
மனமகிழா தேயிரான்; மாமீநீ கெட்டாய்!
கனைகழலோய்! மாறில்லாக் கரனோடே
போன்றவொரு
பனிமொழியைக் கொன்ற பழிக்கிலக்கென் ஞக்கினையே!

35. அன்னே தமிழகத்தை யண்டுதல்நீ தெடுத்துச்
சொன்னேனே கேட்டீரா? சொற்றவறே னென் நீரே;
கொன்னே தவக்கோலங் கொண்ட முனிவர்களால்
மன்னுவோ வித்திங்கு வந்ததுகா ணென்செய்கோம்.

36. மாவினங்காள்! புட்காள்! மரங்காள்! மலர்க்கொடிகாள்!
காவினிடை வாழுங் கடிகொள் சுரும்பினங்காள்!
தேவி யெனையெடுத்துச் செந்தமிழர் தென்னிலங்கை
போவதா நீவிர் புகல்வீரெங் காதலற்கே.

37. அன்புக்கு வித்தாய் அருளுக் குறைவிடமாய்
இன்புக்கு மூத்தா யெழுந்த விருந்தமிழர்
துன்புக்கு வித்தாய்த் தொலையாப் பகைகொண்ட
பின்புக் குரைக்கும் பெயராரிக் கானகத்தே.

38. என்றின் னனபலவா றேங்கி யிரங்கிமனம்
கன்றிக் கதறிக் கலன்கழற்றிச் செய்குறிசெய்
தொன்றுந் துணியா துணர்வற் றவள்சென்றுள்;
சென்று சிலபகலில் தென்னிலங்கை சேர்ந்ததுதேர்.

39. சேர்ந்து மணிமுன்றில் தேர்நிறுத்தி யுட்செலவே
ஏந்திழையார் சீதைதனை ஈப்போல மொய்த்தார்கள்;
வேய்ந்தனிரோ வாகையென, வெள்வேலான்
தேர்கடவிப்
போந்ததுவுஞ் செய்ததுவும் புக்கதுவுங் கூறினுள்.

40. ஆய்மொழியு னோவென் றழுது மனக்கொண்ட
காய்மொழியை நீத்துக் கதிர்வேலோய்! உங்கள் தமிழ்த்
தாய்மொழிமே லாணை தமியே னபலை சொலும்
வாய்மொழியைக் கேட்டென் மானங்காத் தோம்புதிரே.

41. புக்க விருந்தினரைப் பொன்போலப் போற்றுதமிழ்
மக்கள் பிறப்புரிமை வாய்ந்தகலா வின்பநலந்
துய்க்க வுதவுதமிழ்த் தாயோய்நும் பேருக்குத்
தக்க படியுரிமை தந்தெம்மைக் காப்பீரே.

### வேறு

42. மன்னவர் மன்று வென்னருங் கணவன்
மனையிலா வேளைபார்த் திருந்து
துன்னியும் மவரால் தனித்திருந் தேனைத்
தூக்கியேன் தேரில்வைத் தடைந்தீர்?
என்னயான் செய்தே னிதுதமிழ் முறையோ
எளியனே னுய்வழி யுண்டோ?
இன்னலுற் றெனது கணவனின் பிரிவா
லிறப்பது தங்களுக் கியையோ?

43. எளியனேன் செய்த பிழையெதோ வறியேன்
இருக்கினு மப்பிழை பொறுத்தென்
உளமலி காதற் கணவனை யடியாள்
உற்றிடச் செய்குவீ ராயின்
அளிமுர லலங்கல் துயல்வரு தோளா!
அருந்தமிழ் முகத்தைவிட் டகன்றே
வளநக ரயோத்தி செல்குவோ மிதனை
மறக்குத லிறப்பினு மிலமே.

44. அன்றியு நானோ ரயலவன் மனைவி
அரசிழந் தரியவெங் கானந்
துன்றினம் பொல்லாத் துறவிகள் செய்த
சூழ்ச்சியாற் றமிழக மதனை
ஒன்றினஞ் சிறியே மொளிக்கதிர் வேலோய்!
உள்ளதை யுரைத்தன னென்னைக்
கன்றிடச் சிறையில் வைப்பதாற் பயனென்?
காத்தருள் கெனவடி பணிந்தாள்.

---

40. அபலை-பெண்.
43. அளி-வண்டு. முரலுதல்-ஒலித்தல்.

45. என்றவன் பணியக் கண்டிரா வணனும்
எரிசினந் தணிந்துபெண் பாவாய்!
கன்றியே கதறி யழுதிட வேண்டா
காரிகைப் பெண்ணுல கதனுக்
கென்றுமே துன்பஞ் செய்வது தமிழர்க்
கியல்பல செய்தது மில்லை
அன்றியு மேபெண் ணடிமையைத் தமிழ்நா
டறிந்தது மில்லயறி யானுல்.

46. முன்னமென் பாட்டி தனித்துமே யிருக்க
முறையிலா தையகோ கொன்றான்
பின்னரு மென்னோ டுடன்பிறந் தாளைப்
பெண்ணென வென்பிறப் பென்ன
உன்னியே பாரா வன்கொலை புரிந்தே
ஒழித்தனன் பாவியுன் கணவன்;
அன்னவன் புரிந்த பெண்கொலை யுனக்கும்
அம்மணீ! மானக்கே டலவோ?

47. நெஞ்சிடை யீர மருளொடு விரக்கம்
நேர்மையென் பதுசிறி தில்லா
வஞ்சகன் புல்லன் பெண்கொலை யதுவும்
வன்கொலை புரியுமா பாவி
நஞ்சினுங் கொடிய கயவனை யடைய
நயக்குதல் வியப்பினில் வியப்பே
வஞ்சியா னுன்னை வஞ்சியேன் றமிழர்
வழக்கமும் பழக்கமு மன்றே.

48. கொலைஞனைக் கூடி யிருப்பதிற் பிரிந்து
குயின்மொழி யாரொடு கூடிப்
புலையினை விண்டு புனிதவு றுண்டு
பூவையென் றொடுவரு தங்கை
நிலையினி லிருந்து வாழ்குவை யவனை
நினைப்பதுங் குற்றமற் றவனைத்
தொலையென வயோத்தி துரத்துவே னென்னத்
தோகைபின் னின்னன சொல்வாள்.

49. கல்லவே யெனினுங் கடிமணம் புரியிற்
கணவனே பெண்களுக் கென்று
சொல்லுவ ரறநூல் பளகற வுணர்ந்த
தூயவ ராகையா லையு!

தொல்லுல கதனிற் கணவனைப் பிரிந்து
தோகையான் றனித்துமே வியங்குங்
கல்லினைப் போலத் திரிகுவ தல்லாற்
கண்டபெண் பிறவியின் பயனென்?

50. தெரிவதற் குரிய பகுத்தறி வில்லாச்
சிறியவர் செய்பிழை யதனைப்
பெரியவர் பொறுத்தல் கடனெனப் பெரியோர்
பேசுவர், பிழையறத் தமிழின்
அரியபல் கலையுங் கற்றறிந் துயர்ந்தோய்!
அயலவ ரறிவிலர் சிறியர்
பரியுதற் குரியர் செய்பிழை பொறுத்திப்
பாவியைக் காப்பதுன் கடனே.

51. என்றவள் மொழியத் தமிழ்முழு துணர்ந்த
இராவணன் பெண்மணி! யினையேல்,
கொன்றுமே தொலைப்பே னுன்றனுக் காகக்
கோறலைத் தவிர்த்தனக் கொடியோர்
உன்றனைத் தேடிக் கொண்டிவ ணடையின்
உயர்தமிழ்ப் பெண்கள்முன் னிலையில்
பொன்றினு மறவா வியன்றகல் லறிவு
புகட்டியே போக்குவன், புகாரேல்.

52. செந்தமிழ் மறவர் பிடித்திவண் வருவார்
செல்வியீங் கடைதரி னிலங்கைக்
கொந்தவிழ் குழலார் நகைபுரிந் தினிப்பெண்
கொலைபுரி யேலெனப் பழிப்ப
நொந்துதஞ் செயலை யறிவுவந் ததென
நுவலவைத் தேயவ ரோடு
பைந்தொடி யுன்னை யனுப்புவ லினிமேற்
பகர்வதிற் பயனிலை யென்றான்.

53. என்றிறை மொழிய வேழையான் செய்வ
தென்னினித் தங்கள துள்ளம்
ஒன்றிய படியே செய்யிய ரவருக்
கூறுசெய் யாதருள் புரிவீர்

---

52. கொந்து-பூங்கொத்து. நுவலல்-சொல்லல்.

என்றவள் வணங்க, விலையிலாத் தமிழர்
இறக்கினுஞ் சொன்னசொற் றவுறார்
கன்றுநீ யிருக்க வெனவவள் பிழைத்தேன்
காமவேற் செல்வனே யென்றாள்.

54. வருகையை யறிந்து வந்துமே குழீஇய
வண்டமிழ்ப் பெண்டிர்க ளெல்லாம்
தெரிவையுன் கணவற் கிதுதகா தென்னச்
செப்பியே தடுத்திதா னென்ன,
வரவையே தடுத்தே னங்கைமீர் பின்னர்
வன்கொலை புரிந்ததை யறியேன்;
செருவினைத் தடுத்தேன் கேட்டில ரேழை
செய்வதென் னெனச்சொலி யழுதாள்.

55. வருந்தலை யென்றே தேற்றினர் மகளிர்,
மாபெருந் தேவியு மம்மா!
பொருந்திய கணவர் தீயன செய்தாற்
பூவையர் திருத்தலாம், திருந்தின்
திருந்தில ரென்னிற் செய்வதொன் றில்லைத்
தீயரைத் துறப்பதே மேலாம்
அருந்தமி ழிலங்கைக் கொருவிருந் தினளாய்
அளவளாய் வாழிய வென்றாள்.

56. அன்புட னருளுக் கிருப்பிட மான
வருந்தமி ழகம்பிற வாதே
வன்கொலை மலிந்த வாரிய நாட்டில்
வந்துபெண் ணகவேன் பிறந்தேன்
துன்பினை விடுத்தே னங்கைமீ ருங்கள்
தோழமை தனைவிழைந் தடுத்தேன்
முன்பினு மறியே னிடத்துநீர் கொண்ட
முறைமையா லுய்ந்தன னென்றாள்.

57. இன்னண மான பின்னிரா வணனு
மேவன்மா மகளிரைக் கூவி
இன்னவட் கிலங்கை வனப்பினைக் காட்டி
யேதொரு குறையுமில் லாமல்

54. வரவு-தமிழகம புகுந்தது. செரு-சண்டை.

மன்னியு வசோகச் சோலைசூழ் மணிமா
மண்டபக் குரியவ னாக்கி
நன்னருற் றிருங்க ளென்றுமே யேவ
கன்கையுந் தொழுதுமே சென்றான்.

58. அயலவர் யாரு மாங்கடை யாம
லருந்திறன் மறவரை யிருத்திக்
கயல்விழி கணவன் ஈங்குறு காறும்
காத்திடு வீரெனப் பணிப்ப
வயமிகு மறவ ரிமையினிற் காத்தர்;
மனைவியைப் பறிகொடுத் தினைவோன்
செயலினை யெனவென் றவாவுநர் காணத்
தெரிதர விரித்தினி துரைப்பாம்.

## 5. மனைதேடு படலம்

### வேறு

1. வண்டமிழ் மறவரால் வளைக்கப் பட்டவன்
கண்டன னெரிசினங் கனன்று பொங்கவே
உண்டிதோ வுங்கட்கு முயிரு கொல்லியே
கொண்டன னென்றுகை கொடிய வில்லினை.

2. வாளினும் வேலினும் மறவர் தாக்கியே
கேளவ கொடியவெங் கிளையைக் கொன்றநீ
மீளலை யினியுயிர் மீட்டுக் கொண்டென,
ஆளிமொய்ம் புடையனு மம்பு தொட்டனன்.

3. வெருவுறப் பெண்கொலை விழைந்து செய்யுனை
அருவறு புலைத்தொழி லாரி யத்தொடு
கருவறுப் பேமெனக் கனல; ராமனும்
வரிசிலை முகிற்கணை மாரி பெய்தனன்.

4. வரிசிலை யம்பினை வழங்க, வீரர்கை
உருவவே லோடுவா ளோச்ச இவ்வகைக்
கருமனத் தொருவனுஞ் செம்மை காப்பரும்
ஒருபகல் நாலிலொன் றொழிய வூக்கினர்.

---

1. உண்டு இதோ என்று வில்லினைக் கைக் கொண்டனன்.

2. ஆளி-சிங்கம், மொய்ம்பு-வலி.

5. வேலினும் வாளினும் மெலியத் தாக்கவே
காலினுங் கடுகிய கணைப்பெ ருக்கினால்
வேலையும் வாளையும் வீழ்த்திக் கையொடு
மேலறுத் தருக்தொடர் விலக்கி மீண்டனன்.

6. மீண்டதுஞ் சுடுகணை விடுத்துப் போக்கியே
நீண்டதிங் கவட்கென நேர்ந்த தோவென
ஆண்டகை மனத்திடை யையுற் றேகையில்
காண்டனன் தம்பியுங் கைக லத்தலை.

7. மறவர்க ளுனையுமா வளைத்துக் கொண்டனர்?
அறிவிலி கெட்டனன் அரிவை சொல்லினால்
மறிவிழி யையகோ மாண்டி ருப்பளே
மறவர்கள் சூழ்வென மனந்து டித்துமே.

8. அம்பினு லவரையு மறுத்து மீட்டுமே
எம்பிநீ யென்செய்தாய் ஏலிங் குற்றனை?
கொம்பையிந் நேரமார் கொண்டு சென்றரோ?
வம்புசெய் தாயடா மதியி லாதையோ.

9. ஊரென மறவர்கள் ஊங்கு சூழ்ந்தனர்
பேரமர் வீட்டியான் பெயர்ந்து போந்தனன்;
காரிகை யின்றுருக் காலும் வாழ்கிலேன்
வீரநீ யென்றனி விட்டு வந்தனை?

10. பெண்ணவ ளிறந்தவட் பிரிந்த துன்பினால்
அண்ணிட நீதனி யாய யோத்தியை
நண்ணுவை கைகயி நனியு வப்பள் ஆ!
அண்ணலென் தாய்துய ரடைவ ரென்செய்கேன்.

11. சூதுசெய் தேயெனைத் துறக்கச் செய்தனர்
மாதமிழ் மறவர்கள் வஞ்சந் தீர்த்திடக்,
கோதையை யிதற்குளே கொன்றி ருப்பரே
யாதுசெய் வேனென அழுது கொண்டுபோய்.

---

5. கால்-காற்று. தொடர்-வட்டம்.
6. அவனையும மறவர் வளைத்துக் கொண்டனர்.
7. சூழ்வு-சதி.
9. ஊர்-ஞாயிறு திங்களைச்சூழும் ஊர்கோள்.
10. அண்ணிட-அவனோடிருக்க. அண்ணல்-பெருமை,

12. இலைக்குடில் பார்த்தவ ணிலாதி ருக்கவே
இலக்குவா! நீயிருக் கிருயென் றல்லவோ
கலக்குறு தேகினேன் கனியை நம்பிடை
விலக்குற வேன்றனி விட்டு வந்தனை?

13. என்றன ளேங்கின ளிங்கு மங்குமாச்
சென்றனன் தேடினன் தேடிக் கண்டிலாக்
கன்றினன் கதறினன் கடிந்து தம்பியை
அன்றிலி னிலைமையை யடைந்து நின்றனன்.

14. ஒருவிய பறவைதம் முடைய கூட்டிடை
மருவிய பேடையை வறிது காண்பொடு,
பொருவரு பெரும்பொருள் புதைத்து வைத்ததை
ஒருமகன் கவர்ந்திட வுடையன் போன்றனன்.

15. 'சீதையே! இலக்குவா!' என்னத் தேம்பியே
கோதைநீ கூவிய குரலைக் கேட்டதும்
போதுக வென்றனள்; புலம்ப விட்டுனை
போதல்தீ தென்னயான் புலந்து தேவியும்.

16. சீறியே பாம்பெனச் சினந்து செல்லெனக்
கூறினுள், என்ன,யான் கூவ வில்லையே;
மாறுபா டாய்தமிழ் மறவன் கூவியிவ்
ஆறுபா டாக்கினன் என்ன, வும்பியும்.

17. பின்னருங் கடுமொழி பேசிச் செல்லென,
முன்னனுக் கொருகுறை மூண்டி டாதுகாண்
என்னவுன் னருந்திற லெடுத்துச் சொல்லியும்
அன்னவள் கேட்டிலள் அழுது, வைதனள்.

18. அடியனு னெவளவோ ஆவ கூறியும்
படிறனீ யென்னைக்கைப் பற்ற வெண்ணியே
கொடியனு நீயுமுன் கூடிப் பேசியென்
னிடமுனைக் கொல்லவந் தாயென் றேசினுள்.

---

15. புலம்ப-தனியாக,
16. மாறுபாடு ஆய்-மாறுபாட்டை ஆய்ந்தறிந்த.
18. படிறன்-வஞ்சகன். கொடியன்-பாதன்.

19. ஆதலால் அதுபொறுக் காமல் வந்தனன்
மாதமிழ் மறவர்கள் வளைத்துக் கொண்டனர்
ஏதியான் செய்குவேன் என்ன முன்னனும்
ஆதகா தவளைவிட் டகன்று வருந்ததே.

20. துணர்தகை குழலியர் சொன்ன சொல்லினை
உணர்வுளான் பொருட்படுத் துவனோ? என்சொலைப்
புணரிலை வேறிடம் பொதிந்திருந்து நீ
இணர்குழல் தன்னைக்காத் திருக்க வேண்டுமால்.

21. அன்றியு மென்மொழி யதனைத் தட்டியே
நன்றிலை பெண்சொலை நம்பி வந்துமே
மன்றலங் குழலியை மணிப்பொற் பாவையை
இன்றொடு பிரித்தனை எனவுள் ளேங்கியே.

22. குடிசையி னுள்ளலங் கோலங் கண்டுமே
கொடியவர் சீதையைக் கொன்று விட்டனர்,
வடிமலர்ச் சோலையை மாவைப் புட்களை
கடிதிலெம் மனைவியைக் காட்டும் என்றனன்.

23. ஓடினன் கானகத் தோடி எங்கணும்
தேடினன் திசைதிசை தேடித் தம்பியைக்
கூடினன் கொம்பினைக் கொள்வ னேவென
வாடினன் பாடினன் வாய்விட் டாவென.

24. கண்ணிமை கொட்டினன்; கைபி சைந்தனன்,
மண்ணினைத் தாயினன்; வயிற்றறைந் தாயினன்;
எண்ணிலை யிழந்துநின் றேமுற் றேங்கினன்;
உண்ணிய மூச்செறிக் துலறிச் சோம்பினன்.

25. அன்னவள் எண்ணம்போ லாயிற் றெம்பியான்
இன்னுயிர் விடுகிறேன் அயோத்தி ஏகிநீ
பொன்னியல் மணிமுடி புனைந்து மக்களுக்
கன்னைபோன் றனையர சாளச் சொல்லுவாய்.

---

20. துணர் - பூங்கொத்து. தகைதல் - செறிதல். புணரிலை - மதித்திலை. பொதிந்து-மறைந்து.
24. எண்-எண்ணம்.

26. என்றின் பலசொலி இரங்கிப் பின்னவன்
நின்றடிச் சுவடுசெல் நெறியிற் கூடிப்போய்ச்
சென்றடித் தேரினைத் தெரிந்தை யோவென
ஒன்றடித் தாரைமேல் ஓய்ந்து வீழ்ந்தனன்.

27. என்றுனைக் காணுவேன், எங்கு சென்றனை
தென்றலங் குழலியார் எடுத்துச் சென்றனர்?
கொன்றொழித் திருப்பரே கொடியர்; யானினிப்
பொன்றுவேன் என்றவன் புலம்பத் தம்பியும்.

28. இன்பமுந் துன்பமும் எவர்க்கு மொத்தவே;
என்பயன்? யாரெடுத் தேகி னாலென,
பின்பவன் வீயலென்; பெரிதுந் துன்புறல்
தன்பொரு வீரர்க்குத் தகுதி யாகுமோ?

29. கள்ளரைக் கண்டியாங் கடிந்தொ றுட்பதே
கொள்ளுதற் குரித்தெலாக் கூறித் தேற்றவே;
உள்ளதே யாமென வுலர்ந்தும் உள்ளுயிர்ப்
பள்ளியே பெருந்துயர் அலைப்ப ஆற்றினான்.

30 நாட்டினை யிழந்துநன் னகரை நீங்கினான்
காட்டினை யடைந்துகாய் கனிய ருந்தியின்
பூட்டிய எனதுயிர்க் குயிரை யுமிழந்
தோட்டிலாத் துயரினுக் குறையு ளாயினேன்.

31. ஏனினும் வீந்திலேன் என்னந் தம்பியும்
போனதை நினைந்தழல் புலைமைக் கொத்தது
தானல வெனவவன் றானுந் தேறியோர்
மானடித் துண்டுபின் வழிக்கொண் டாரரோ.

32. தென்கிழக் காயவர் செல்லு மாற்றிடை
மின்களுக் குறைவெனு மேனி தாங்கிநற்
பொன்கலத் தொருதமிழ்ப் பூவை யாரென
வன்கொலைப் பாவியம் மயிலின் சாயலை.

---

26. தேர்அடி. அடி-சக்கரப்பாதை.

32. வன் கொலைப்பாவி-இலக்குவன். இத்தமிழ்ப் பெண்ணை அயோமுகி என்னும் அரக்கியாக மாற்றப்பட்டாள்.

33. மறியெனு மிருவிழி மருவுங் காதொடு
நறுமண மலர்குமிழ் நலங்கொள் மூக்கையும்
உறுமண வினைபுரி ஒருவற் கல்லதை
அறிகிலா வுறுப்பையும் அறுத்துக் கொன்றனன்.

34. மூன்றுபெண் களைவட முறையி விம்பியும்
தான்றவ ருதருந் தகவி னோடறம்
போன்றவன் கொலையது புரிந்து மேம்படு
சான்றவர் போயினர் தமிழர் வாழவே.

35. போகுறு வழியினிற் புள்ளு மாவையும்
மாகொலை புரிந்துதம் வயிற்றை யோம்பியே
தோகையைக் காணுவான் தூண்டு முள்ளத்தார்
ஏகியோ ராரிய ரிருக்கை யெய்தினர்.

36. எய்தியே மனைவியை யிழந்து போந்ததன்
செய்தியை யுரைதரச் சிறுவ! கண்டனன்
மைதிகழ் கண்ணியை இலங்கை மன்னவன்
கொய்தொழில் தேர்மிசைக் கொண்டு சென்றனன்.

37. நடந்ததை நினைந்துநீ நடலை கொள்ளலை
மடந்தையைப் பெறவொரு வழியுண் டென்னெனில்
உடைந்துனைப் போலொ ரொருவன் நாடொரீஇ
அடைந்துளா னதோதெரி யருவிக் குன்றினே.

38. மைந்தகேள் செந்தமிழ் வளர்க்கு மன்னவன்
வெந்திறல் வேலினன் வீர வாலிபின்
வந்தவன் பல்வள மருவி யோங்குகிட்
கிந்தையை யுடையசுக் கிரீவன் என்பவன்.

39. முன்னனும் வாலியால் முனிந்து நாடொரீஇத்
துன்னெனக் கானகந் துரத்தப் பட்டவப்
பின்னவன் நட்பினைப் பெறுதல் கூடிடின்
இன்னியல் சீதையை எளிதில் மீட்கலாம்.

40. அரசினை யிழந்துமுன் னவனுக் கஞ்சியே
உரைபெறு கிட்கிந்தை ஒருவிக் கான்வளர்
பரிசின னுறுதுணை பார்த்து வாழ்கிறான்
கரிசன மோடுமைக் கலந்து கொள்ளுவான்.

41. நம்பிநீ இவ்வழி நடந்து செல்லினே
பம்பையங் கரையினைப் பார்ப்பை, அங்கதிர்ப்
பென்மதி லாதமா னினமும் புட்களும்
தின்பதற் கினியநெய்த் திரளை போலுமால்.

42. கவர்புன லேரியின் கரையின் மேல்புறம்
சவரியென் றொருமகள் தவஞ்செய் கின்றனள்;
அவளொரு மறைவில்நம் மவர்கள் வாழ்வுறு
கவினிய பலகுடில் காண்பை யென்றனன்.

43. விடைகொடு செலவினை மேவிப் போய்மரைக்
கடிமலர்ப் பம்பையங் கரையைக் கண்ணுற்றீஇ
வடிமையாற் றமிழரை மயக்கி யாரியர்க்
கடிமைகொள் சவரியின் குடிலை யண்மினார்.

44. அன்னரை யின்னரென் றறிந்த அல்லளும்
மன்னவர் வருகென வணங்கி; மற்றவர்க்
கின்னுண வூட்டியாங் கிருந்து சென்றுமே
தன்னர்வாழ் மறைவிடந் தன்னைக் காட்டினள்.

45. சிற்றிடைச் சவரிமுன் செல்லச் சென்றுமே
நற்றவர் தங்கிலை நண்ணி யன்னர்பால்
உற்றதை யுரைசெய வுள்ளங் கன்றியே
எற்றவன் கொடுஞ்செய லென்ன வ வதுமே.

46. மறையவ ரெனத்தக மறைவில் வாழ்குநர்
இறைமக! கிட்கிந்தை இளையன் நண்பொடு
நிறைதவ வேள்வியில் நிகரி லாரென
அறைதரு மதங்கரின் அடிமை யாயினன்.

47. மற்றவன் அண்ணனும் வாலி வாழ்வறின்
பெற்றனை சீதையைப் பெரிய தானையான்;
நற்றமி ழரசனை நலித லெண்மையாம்;
அற்றையே நாமும்வாழ் வடைந்த நாளென.

---

41. அதிர்ப்பு-நடுக்கம். நெய்த்திரள்-வெண்ணெய்க்கட்டி.
42. கவர்தல்-குடித்தல்.
43. வடிமை-கட்டழகு.
47. நலிதல்-வெல்லுதல்.

48. தன்னல முடையவர் தமிழர் சாவினை
இன்னல மெனக்கொளு மறிஞர் சொல்லினை
நன்னல மெனக்கொடு நடக்க வெண்ணினான்
பொன்னலம் விரும்பியப் பொழுதைப் போக்கினான்.

## 6. நட்புக்கோட் படலம்

### வேறு

1. இருண்டகுழல் மருண்டவிழி யிளைத்தவிடை
திளைத்தமுகத் திவியாள் தன்னை
இருண்டமனக் கொலைத்தொழிலர் புலைத்தொழிலர்
தேடியத னியல்பு சொன்னோம்;
இரண்டகனுஞ் சுக்கிரீவற் காப்பகையி
லாலை மறைந் தெய்தே கொன்றவ்
இரண்டகனுக் கரசேந்து துணைக்கொண்ட
வகையினையீங் கெடுத்துச் சொல்வாம்.

2. கரைபொருபைம் புனற்பய்யைக் கரையிருந்த
சிலைராமன் காமப் பித்தால்
உரைபெறும போத்திவிட்டுப் பதின்மூன்றுண்
டாயிலவென் னுரைகோ னெம்பி!
விரைசெறியுங் குளிர்தென்ற லானதினுங்
குயிலோசை மிகுக்குந் துன்பம்
நிரைவனைமுன் னொருநாள்மற் றதுகேட்டுப்
பலவகையா னேர்ந்தா னின்பம்,

3. நாட்டிருக்கும் போதெடுத்துப் போகாதப்
பாவிமனம் நாடா வின்பம்
கூட்டுவிக்குந் தனியிடமுங் குளிர்நிழலும்
புற்றரையுங் கூடி யுள்ள
காட்டிருக்கும் போதெடுத்துப் போனானே
யித்தகைய காட்டில் தம்பெண்
டாட்டியுட னின்பமுற்று வாழ்வாரே
தவஞ்செய்வா ராவா ரம்மா.

---

1. திளைத்தல்-மகிழ்தல். இரண்டகம்-துரோகம்.
2. உரை-புகழ். நிரை-வரிசை. அது-குயிற்குரல்.

4. இப்பெடையான் மயிலினிடம் வலியச்செல்
வதைப்பாரீங் கிருந்தாற் சீதை
இப்படியே யெனைப்பார்த்து வலியவந்து
சேர்ந்தின்ப மீவா ளன்றோ!
எப்படியான் றனித்துய்வே னிறைபிரியி
னுயிர்தரியே னென்பா ளன்போ
டெப்பொழுது மெல்லெனத்தா னெழுந்திப்
பேசுபவ ளென்செய் கேனே.

5. கட்டழகி தன்னோடுங் கிருந்தேனே
லரசிழந்து கடிகொள் காட்டை
விட்டுவந்த பெருந்துயரு மறந்துவிடு
மவட்காணு விடிலென் னாவி
விட்டிடுவே னெனப்புலம்பத் தம்பியுமா
ரிடத்தினுமே மிகுந்த பற்றுக்
கெட்டதென வறியீரோ வெனத்தேற்றி
யாங்கிருந்து கிளம்பி னாரே.

6. அங்கிருந்து சென்றவர்கள் மதங்கமுனி
நிலையடைய வவனு மைந்தீர்!
எங்கிருந்து வருகின்றீர் முகவாட்டத்
தோடென்ன வெந்தா யென்றன்
மங்கைதனைக் கொண்டிலங்கை மன்னவனுஞ்
சிறைவைத்தான் மனையை மீட்க
இங்கிருக்குஞ் சுக்கிரீவ னுதவிதனை
நாடிவந்தே னென்ன வன்னான்.

7. ஓகொடிய னென்செய்தான் சீதையையே
னெடுத்தகன்றா னுரையா யென்ன
மாகொலையின் வரலாற்றை யெடுத்தியம்ப
வதுகேட்டு மதங்கன் மைந்தா!
தோகையைக்கொண் டேகினது மொருவகையி
னஞ்செயற்குத் துணையே யாகும்
ஆகையினால் நீவருந்தே லெனத்தேற்றி
யிருக்கையிலாங் கனுமன் வந்தான்.

---

4. இறை-இமைநேரம்.
7. 'நஞ்செயல்' என்றது தமிழகத்தே நிலைபெற வழிசெய்தலை.

8. வந்தவனு மறைமுனியை யண்ணலிவ
ராரென்ன; மதிவல் லோய்நான்
உந்தனிடம் யாமுரைத்த வயோத்தியவேந்தன்
றசரதனு முவந்து பெற்ற
மைந்தரிவ ரேராம லக்குவராம்
சிலைராமன் மனைவி தன்னைச்
செந்தமிழ்நாட் டிறைகொண்டு சிறைவைத்தா
னிலங்கைதனிற், சீதை தன்னை.

9. சிறைமீட்க வுங்கள்பெருந் துணைவேண்டி
யீங்குற்றார் தெளிவா யென்ன
மறைமுனிகூ றலும்பணிய ராமனிவன்
யாரென்ன வாலி தம்பி
அறனிழுக்காச் சுக்கிரீவன் மதியமைச்சன்
படைத்தலைவ னனுமன் என்பான்
திறமையிலிவ் வுலகினிலே யிணையில்லா
னெனமுனிவன் சிலைக்கை ராமன்.

10. சொல்லுகெனப் பணிப்பவிளை யோனனுமன்
றனைப் பார்த்துத் துரிசி லாத
நல்லமைச்ச ரேறேயுந் தலைவனையாம்
புகலடைந்தோம்; ராம னுங்கள்
வல்லரசன் றனைத்தலைவ னுவடைய
விரும்புகிறான் வலிய வந்து
புல்லியதன் குடியுளொரு வனதருளை
வேண்டுகிறான் பொருளா யெண்ணி.

11. புதுவரவை விலக்குவரோ புலமையுளார்
வலியவந்து பொருந்து நட்பை
மதிவலியேற் றருள்'கென்ன வவனுஞ்சே
னைத்தேற்ற மகிழ்ந்து பின்னர்
மதங்கரிடம் விடைபெற்றம் மூவர்களுங்
கிட்கிந்தை மன்னன் றம்பி
பதுங்கியுறை தருமிடத்தை யடைந்தவரை
வெளிநிறுத்திப் படைவ லோனும்.

---

10. எவ்வாறு ராமனுக்குச் சுக்கிரீவன் [illegible]?

12. நண்பரினைப் பிரிந்தவர்கள் நலமாக
வெளிநிற்ப; நடந்து சென்றே
கண்புகுதா மறைவிடத்திற் றனியிருந்த
வினையோனைக் கண்ட யோத்தி
மண்புரிவான் மனையிழந்து துணைவேண்டி
வந்துள்ளான் மன்று வென்னப்
பண்பிதுவே யெனவெளிவந் தினிதவனால்
வரவேற்கப் பட்டா ரன்றான்.

13. என்றனது துணைநாடு முன்பெருமை
தனையமைச்ச னெடுத்துச் சொன்னான்
அன்றியுமுன் பேமதங்கர் கூறவுன் றன்
வரலாற்றை யறிந்துள் ளேனால்;
கொன்றெனது தமையனை நீ கிட்கிந்தை
தனையெனக்குக் கொடுப்பா யானால்
உன்றனது மனைவிதனை மீட்பதற்கென்
னாலியன்ற வுதவி செய்வேன்.

14. நாடிழந்து காடடைந்து மனையிழந்து
வருந்துகின்ற ராமா! வுன்போல்
நாடிழந்து மனையிழந்து காடலையும்
நம்மிருவர் நட்பே நட்பு!
வீடினுமுன் னட்பினையான் விடுகில்லேன்
உன்மனையை விட்டித் தாரேன்
கூடுகிலா யெனத்துரக்கும் தமையனைக்கொல்
லெனவவனுங் கொல்வே னென்றான்.

15. அன்றோரான் களிறனைய பகைவன் மலைக்
குகையதனை யடைய முன்னோன்
சென்றானக் குகையினுளே யனைவாயில்
தனில்வைத்தத் தீயோற் கொல்ல;
ஒன்றோவல் லொடுபகலும் வரவில்லைக்
குருதிவர வொன்னோன் முன்னைக்
கொன்றானென் றேயெண்ணிக் குகைவாயி
லடைத்துநகர் குறுகி னேனால்.

---

15. ஒன்றோ-அப்பகல்மட்டுமா. ஒன்னோன்-பகைவன்.

16. முன்னவன்சா வினையெவர்க்குஞ் சொலவில்லை
மதியமைச்சர் முன்னத் தோர்ந்தே
என்னையவர் வற்புறுத்தி யரசாக்கி
னார்சிலநா ளிருக்க முன்னோன்
ஒன்னலனைக் கொன்றுநக ரடைந்தொறுத்து
நாட்டைவிட்டுங் கோட்டி னான்காண்
அன்னவனைக் கொன்றரசை யெனக்கீவா
யெனக்கூற வயோத்தி ராமன்.

## வேறு

17. ஐய நீயுமின் றேநக ரடைந்துமே யறிவில்
வெய்ய னோடுபோர் செய்யவன் களத்திடை வீழப்
பைய வேயொரு கணையினா லவனுயிர் பறித்துத்
துய்ய மாமுடி சூட்டுவே னுனக்கெனச் சொல்ல.

18. சொன்ன வாறவன் றுணையொடு தொன்னக ரடைந்து
முன்ன னோடுபோர் செய்திட முறையிலா ராமன்
என்ன வன்செய லோவறி யோமறைந் திருந்தே
அன்ன வன்பட வம்பினை விடுத்தன னந்தோ!

19. விலங்கி நின்றறந் திறம்பிய வாரியன் விடுத்த
துலங்கு செந்தமிழ் மன்னவர் வழிவழி துலங்க
இலங்கு பொன்முடி புனைந்துகிட் கிந்தையா ளிறைவன்
கலங்கி வீழவன் மார்பிடைப் பட்டதக் கணையே.

20. அம்பு பட்டமார் புடையசெந் தமிழர்தம் மரசும்
வெம்பி நோக்கியே வீணனே யெதிர்வர வெருவித்
தெம்பி லாதுநீ மறைந்திருந் தம்பினாற் செகுத்தாய்
எம்பி யோடுபோந் தடர்த்தநீ யாரென விராமன்.

21. பொன்னின் மாமுடி புனைந்துயர் அயோத்தியைப்
புரக்கும்
மன்னர் மன்னவன் பெரும்பெயர்த் தசரதன் மைந்தன்;
உன்னை வீழ்த்தியும் பிக்கர சியலீங் குற்றேன்
என்ன மன்னனு மடகெடுத் தாயென விகன்றே.

---

16. முன்னம-குறிப்பு ஓர்ந்து-தெரிந்து.
20. தெம்பு-வலி.

22. எம்பி யோடுநீ சேர்ந்துவந் திருக்கிறு யென்று
வம்பு லாங்குழல் மாதவள் சொன்னதை மறுத்தே
நம்பி னேனுனை முறைதவா நல்லவ னென்று
செம்பி லாமொழிக் கயவனீ யரசியல் கெடுத்தாய்.

23. மறைவி னின்றுகூ ரம்பெய்து கொல்வது வடநூன்
முறைமை யோவல திறைமையோ வறிவிலா மூடா!
பொறியி லாய்பிற னொடியான் பொருதிடும் போழ்தத்
தறிவி லாய்மறைந் தம்பெய்த வாண்மையோ வறமோ?

24. மறைந்தி ருப்பதை யறிந்திலே னறிவிலா மடயா!
அறிந்தி ருப்பனேற் படிறனே நொடியினி லாங்கே
இறந்தி ருப்பையான் என்செய்தே னுந்தனுக் கிழிஞா!
துறந்த கோலத்துப் புற்பொதி கிணறன துகளோய்!

25. தாரை யென்னென சொல்லியு நானதைத் தட்டி
வீர னென்றுனை மெச்சினேன் பொய்பொதி மெய்யா!
வீர ருக்குள பெருமையைக் கொன்றுமே வீழ்த்த
பூரி யாவுனக் கென்னிடை யூறியான் புரிந்தேன்?

26. அல்ல னென்றனன் அங்கத னெந்தையே யறிந்தேன்
பொல்ல னும்பியோ டடைந்ததை யென்றனன்;
போப்போ
நல்ல னென்றனன்; முன்புதா யொடுமகன் நவின்ற
சொல்லை யுண்மைய தாக்கினை நேரிலாத் துரும்பா!

27. உன்ற னுட்டினில் வந்துசெய் தீமைதா னுண்டோ
அன்றி யுன்னுடன் பொருதயான் வந்தனோ வறைவாய்;
கொன்று னீகுற்ற மற்றவென் றன்னை யேன் கொன்ருய்
ஒன்று வன்கொலை யேயுரு வாகிய வொருவா!

---

22. மாது-தாரை-கெம்புதல்-உயர்த்துப்பேசுதல்.

23. இறைமை-தலைமைக்குணம். பொறி-அறிவு.

24. புல்லால் மூடப்பட்ட கிணறு. துகள்-குற்றம்.

26. அல்லன்-அவனல்லன். அங்கதன்-வாலி மகன். நல்லன்-அவனோடு சேர்ந்து பொருதற்குவரா இளங்கான், அவன் நல்லன்.

28. வேட்டை யாடுத லரசனுக் கியல்பென விளம்பில்
ஊட்ட மிக்கமா னுழைய லாபன்றி யுடும்பா
நாட்டை யாளர சன்புலா லுணமிக நறிதோ?
கேட்டை யேன்விலை கொடுத்துவாங் கினைமுறை கேடா.

29. இல்லை யில்லைதப் பில்லைநின் செய்கையி னினைத்தால்
புல்லை வெட்டல்போல் மக்களை வெட்டியே புசிக்கும்
தொல்லை வாழ்க்கைய ரவரினு மக்கொலைத் தொழிலில்
வல்லை நீயுமோ ராரிய னென்பதை மறந்தேன்.

30. அறமெ னச்சொலிப் பிழைப்பவ னென்பதை யறியேன்,
மறமி குத்தவென் றனைவதை புரிந்தனை மறைந்தே
அறிவி லாயென திடஞ்சொலி யிருக்கினு னவனை
இறையி டஞ்சொலி வாங்கியே கொடுத்திருப் பேனே.

31. பிழைக்க வந்தவ னெந்தமிழ் நாட்டிடைப் பின்னோன்
அழைக்க வந்துநீ யழிதொழில் புரிந்துமே யல்லல்
இழைக்க லாயினை யென்கொலை யாரியர்க் கிறுதி
விழைக்க நீசெய்த தாமென வறிகுவாய் வீணா!

32. அன்றி யாரொரு குகையுற வாயிலை யடைத்தே
ஒன்றி யூரினை மன்னனா யிருக்கயா னூரைத்
துன்ற வஞ்சியே யோடின பாவிக்குத் துணையாய்
இன்று வந்தெனைக் கொன்றனை யாரியமுறை யிதுவோ?

33. எனையி ழந்தவென் னெம்பியை நண்பனா வெய்தி
முனையி ழந்துமே மறைந்துநின் றென்னுயிர் முடித்தாய்
தனையி ழந்துமற் றவர்கொலை புரிதறு தலைநீ
மனையி ழந்தனை மதியிழந் தனையட வறியா!

34. உன்றன் றேவியை யெடுத்துமே சென்றவ னுயிரைக்
கொன்றி லாதட வீணனே யென்னையேன் கொன்றாய்?
அன்றி யானுனை யழைத்தனோ பொரவுனை யரசன்
என்று கொண்டவுன் மக்கட்குக் குறையொன்று
மிலையே!

---

28. ஊட்டம்-நல்லது. நறிது-சுவையுளது.
29. மக்களை வெட்டிப்புசித்தல்-நரமேதம்.
31. விழைக்க-விரும்பச்செய்ய.
33. எனை இழந்த-எனை வெறுத்த. முனை-போர்க்களம். தனை இழத்தல்-தன்னறிவற்றல். தறுதலை-கெட்டவன்.

35. இனைய புற்பல நன்மொழி புகன்றிட விராமன்
'எனது நண்பர்க்குப் பகைவனீ யெனக்குமே பகைவன்
உனைவ தைப்பது முறைமையே யுனைக்கொல்வ தாக
உனது தம்பிக்கு முன்னரே கொடுத்தன னுறுதி.

36. அறைக டலுல கெங்கணுக் குரியதே யாகும்
நெறியி னோடதைப் பரதனு ளின்றனன் நெறியிற்
பிறழுந் தீயரைக் கொன்றொறுக் தலினின்றும் பிறழேன்
முறையி லாவுனை மறைந்துநான் கொன்றது முறையே.

37. கருத்து மாறியான் கொன்றில னெனச்சிலைக் கையன்
பொருத்த மற்றபுன் மொழிபல செருக்கொடு புகன்றான்;
ஒருதநி தன்வல மிழந்திடத் தமிழ்மக ளுலைய
வருத்த மிக்குயிர் விட்டுமே மடிந்தனன் வாலி.

38. தாரை தாரையா யூற்றிருந் தொழுகிடத் தடங்கண்
தாரை யோவெனக் கதறியே புல்லினள் தாரை
சார மற்றபா ழினையவ னொருவனைத் தவிர
ஊரெ லாந்திரண் டோவென வழுதன வொருங்கே.

39. உரைசெ யுந்தமி ழரசனு மியவற வோனைக்
கரிச னத்துட னடக்கியே கோரிடக் காம்பாம்
வரிசை தப்பிய வினையற்கு மணிமுடி சூட்டி
அரச னாக்கியே யாரிய ரகத்தினை யடைந்தான்.

40. மாரி யைப்பொரு வள்ளலை யொழித்திள வஞ்சன்
சீரி யற்படு தமிழர்க ளுரிமையைச் சிதைக்கும்
ஆரி யப்படை யோடிரண் டகப்படை யாக்கும்
காரி யப்பட வாண்டலன் கசந்துகிட் கிந்தை.

## 7. கண்ணுறு படலம்

### வேறு

41. மண்ணுற வாலியை மறைந்து கொன்றபின்
நண்ணுற முடிபுனை நகுதல் கண்டனம்;
அண்ணலுந் தேவியோ டணைந்து சீதையைக்
கண்ணுறு மியல்பினைக் காணு வாமரோ.

---

37. ஒருதநி-தாரை. உலைய-வருந்த.
38. தாரை-நீரொழுக்கு. தாரை புல்லினள்-மாலை வணிந்த மார்பினமீது விழுந்தனள்.

2. பூவலர் பொலங்கழல் பொருவில் தாளையான்
நாவலர் நயம்பட நவிலு நற்றமிழ்ப்
பாவலர் பொருளெனப் பரந்த சீர்த்தியான்
ஏவலர் தனியுற எழுந்து போயினான்.

3. போனவன் மரமடர் புனத்து வாழ்தரு
மானினஞ் சூழ்தர வண்ண மாமயில்
தானெனத் தோழியர் தம்மொ டாடிள
மேனிநல் லாளமர் நிலையை மேயினான்.

4. மேவிய திருவுடை வேந்தர் வேந்தனை
பூவைய ரிடையொரு பொன்னம் பாவையும்
நாவலர் உள்ளமும் நயப்ப வாடுவாள்
காவியங் கண்ணிணை களிப்பக் கண்டனள்.

5. கண்டதும் வெறிதென நீத்துக் காவினை
வண்டமர் கருங்குழல் மாதர் மாதரும்
வண்டமி ழிசை நுகர் மன்னர் மன்னனைத்
தண்டமிழ் வாய்மலர் தவழச் சார்ந்தனள்.

6. சார்ந்தவக் காதலந் தையல் கையினை
வேந்தனும் பற்றியாழ் விரும்பு மென்மலர்க்
கூந்தலைத் தடவியொண் குழையை நீவிநாட்
பூந்தொடை திருத்தியோப் புரவு செய்தனன்.

7. காதலங் கண்ணியுங் கதிர்வை வேலவ!
போதினை நாடிடும் பொலங்கை வண்டர்போல்
ஏதிவ ணேவலர் இருக்கத் தாங்களே
மாதெனை நாடியே வந்த தென்றனள்?

8. அப்படி யொன்றிலை; அரிவை சீதையும்
எப்படி யுள்ளனள்? எழிலுக் கோர்புகல்
செப்பெனத், தமிழிசை யேழுஞ் சேர்தரும்
வைப்பெனப் பேசிடும் மழலைச் சொல்லியே.

---

2. பா அலர்-பாட்டிலுளள.
6. யாழ்-வண்டு.
8. புகல-புகுமிடம். வைப்பு-இடம்.

9. ஓதெனப் பேரியாழ் ஒழுங்கு பட்டபோல்
காதலன் பிரிவெனும் கவலை யொன்றலால்
யாதொரு குறையுமில் லாது செந்தமிழ்
மாதர்க ளொடுதக வாழு கின்றனள்.

10. நானொரு நாலைந்து நாட்கு முன்னங்கு
போனபோ தருந்தமிழ்ப் பூவை மாரொடு
யானுமுள் ளுவப்பகல் யாழை மீட்டியே
ஏனவள் ஏழிசை இனிக்கப் பாடினள்.

11. திருத்தமாச் செந்தமிழ்த் தெரிவை மாரொடு
வருத்தமில் லாதுவாய் மலரு முள்ளமும்
பொருத்தமாப் பொருளொடு பொலியச் செந்தமிழ்
பெருத்தகட் டமிழ்ச்சிபோல் பேசு கின்றனள்.

12. அடிக்கடி கேட்டியான் அவட்கு வேண்டுவ
முடிக்கிறேன்; பகையெனும் மூரி வேலையை
நொடிக்குளே குடித்திடும் நூறி வேலவ!
நடக்கலா மாங்கவள் நலத்தைக் காணவே.

13. என்னவே குயிலொடு பூவை யேந்தெழில்
பொன்னென வொளிர்முகப் பொலங்கைக் கிள்ளையும்
இன்னலுற் றினைதர இசைப்ப, மன்னவர்
மன்னனுஞ் சரியென மகிழ்ச்சி கொண்டனன்.

14. தங்கையைக் கண்ணுறுந் தகுதிப் பாட்டினில்
எங்கையை யுருக்குலைத் திட்ட பாவியின்
மங்கையைக் கண்ணுற மனக்கொண் டானெனில்
இங்கதி ராவணன் இயல்புக் கெல்லையே.

15. சாந்தமு மாலையுஞ் சரிகைச் சேலையும்
காந்தொளி யணிமணிக் கலனு மேனவும்
மாந்தளிர் மேனியர் வளைக்கை நோவுற
ஏந்தியே சூழ்வர ஏகி னாரரோ.

---

12. மூரி-பெரிய.

16. எண்ணிய படையவ ணிருந்து சென்றுமே
திண்ணிய வரணமை செயலைக் காவினை
அண்ணலுந் தேவியோ டடைந்து சீதைவாழ்
தண்ணிய மாளிகை தன்னை நண்ணினன்.

17. தந்தைதா யாமெனத் தமிழர்ப் போற்றிடும்
செந்தமிழ் வேந்தனைத் தேவி தன்னொடும்
சிந்தையுள் மகிழ்வுறச் சீதைக் கண்டதும்
வந்தனள் எழுந்துமுன் வணங்கி நின்றனள்.

18. வணங்கிய சீதையை வாழ்த்தி மன்னவன்
மணங்கமழ் காவக வாழ்க்கை மேவிய
கணங்குழை யொருகுறை யில்லை காணென,
நுணங்கிடை யெதிர்மொழி நுவல லாயினள்.

19. என்னருந் தந்தைதாய் போலென் வாழ்வினில்
முன்னிய கருத்துடை முதிர்ந்த வன்புளீர்!
பின்னொரு குறையிலைப் பிரிந்து காடுறை
மன்னவ னிலாக்குறை வருத்து கின்றதே.

20. வில்லினை விளைத்ததன் விளைவி றலைவன்
மல்லலந் தோளினை மணந்த தெண்ணியே
புல்லிய பலபகல் போக்கி னேனினிச்
செல்லென விடுப்பதுந் திருவு ளச்செயல்!

21. என்றவள் மொழிதர இலங்கை வேந்தனும்
கொன்றையங் குழலியுன் கொழுநன் காலிடை
என்றமர் களுக்கிட ரியற்றிக் கொண்டுமே
வென்றிவில் லாளியாய் விளங்கு கின்றனன்.

22. அருந்தமிழ் மக்களின் கொலையை அன்னவன்
விருந்தென நாடொறும் விரும்பிச் செய்குநன்;
பெருந்தமிழ் அரசரைக் கொன்று பின்னரும்
கருந்தொழில் செய்தமைக் கனற்று கின்றனன்.

23. இளர்வள முடையகிட் கிந்தை மன்னனும்
வளமலி யருந்திறல் வாலி யாவியை
உளமலி சிறுபகை யொன்று மின்றியே
குளமலி யல்லிபோல் கொய்து கொன்றனன்.

---

16. செயலை-அசோகு.

24. வஞ்சமர யொருமர மறைவில் நின் றுமே
அஞ்சியே வாலியின் ஆவி கொண்ட வன்
துஞ்சிய பின்னவன் தொலையச் சூழ்ச்சிசெய்
நஞ்சன தம்பிக்கு நாடு தந்தனள்.

25. கேடுடைப் பாவிசுக் கிரீவன் கொள்ளவந்
நாடளித் தவனொடு நட்புக் கொண்டவன்
பாடமை தருந்தமிழ்ப் படையைக் கொண்டெம
தோடவன் பொருதிட உளங்கொண் டுள்ளனும்.

26. இம்மியு முளந்தனி லினப்பற் றென்பதை
இம்மியு நினைந்திலா விரண்ட கத்தியல்
எம்மினத் தமிழரால் எம்மை வென் றுனைச்
செம்மலு மீட்டிடத் திடங்கொண் டுள்ளனும்.

27. என்றிரா வணன்சொலத் திடுக்கிட் டென்னைய!
என்றனுக் காகவா இலங்கைப் போர்க்களம்?
என்றனை விடுத்தவ ரிலங்கை நாட்டினைத்
துன்றிடா தருள்கெனத் தொழுது சீதையும்.

28. பெற்றவ ரினுமெனைப் பெரிது போற்றிடும்
உற்றவர்க் கோவிடை யூறு காணுவன்?
மற்றவர் வருமுனம் மாதை நீக்கியே
கொற்றவா! இலங்கையின் குறையை நீக்குவீர்.

29. அக்கையுந் தங்கையு மாகி நாடொறும்
ஒக்கலா யுடனிருந் துண்டு மாடியும்
தொக்கிய வெங்கையர் துயர இந்நகர்
புக்கிடா முன்னெனைப் போக்கிக் காக்குவீர்.

30. என்னைவைத் தகன்றிட எடுத்து முன்வளர்த்
தன்னவற் கீந்தனன் எந்தை; அன்னபோல்
என்னைவைத் தகன்றிட எடுத்துப் பின்வளர்த்
தன்னவற் கீந்திடல் அமையு மெந்தையே!

---

26. இம்மி-சிற்றளவு, சிறிதுபொழுது.

30. என்னை—1. தாய். 2. கணவன். பெற்றதாய் ஒரு செடியின் கீழ் வைத்தகல, முன் எடுத்து வளர்த்துச் சனகன்

31. அலங்கிய பாவியால் ஐய! நின்மதில்
இலங்கைவாழ் தமிழருக் கிடருண் டாகவோ?
பொலங்கழ லோயெனைப் போக்கி யாண்மெனக்
கலங்கிய மொழிகளால் கரைந்து வேண்டினள்.

32. அவ்வுரை கேட்டலும் அண்ணல் அம்மணி!
இவ்வுல கத்தினில் இலங்கை முற்றிடும்
செவ்வியர் உளரெனல் செவிடன் யாழிசை
ஒவ்விய திதுவென உவத்தல் போலுமே.

33. திருமதி யுனையவன் சேர்த்த பின்னவர்
வருவதைத் தடுப்பவர் யாவர்? மன்னவர்
பொருவதற் கஞ்சுதல் பூனை யோரெலி
வருவதற் கஞ்சுதல் மானு மல்லவோ?

34. மாதுநீ வருந்தலை மறைந்து வாலியைக்
காதியே கொன்றவன் கணவன் பாலொரு
தூதனை யனுப்பியிங் கடையைச் சொல்லியே
போதலர் குழலுனைப் போக்கு கின்றனன்.

35. கன்னலஞ் சொல்லியுன் கணவற் கஞ்சிமா
மன்னவர் எள்ளுற வலியப் போமென
உன்னையங் கனுப்புதல் உரனும் மாணமும்
முன்னிய வெனக்கது முறைமை யல்லவே.

36. ஆதலால் வந்தபின் அனுப்பு கின்றனன்
மாதுநீ முன்னைபோல் வருத்த மற்றிரு;
கோதையீங் குனக்கொரு குறையுண் டாமெனில்
பாதுகாப் பிலையெனப் பழிப்ப ரல்லவோ?

---

தந்தை முறையாகி, ராமனுக்குக் கொடுத்ததுபோல், மனைவியாகப் பெற்ற ராமன் இலக்குடிலில் தனியாக விட்டகல, பின் னெடுத்துவந்து இனிது போற்றிய நீரும் எனக்குத் தந்தையே யாதலால் உரியவனாகிய அவனுக்குக் கொடுத்தல் அதினும் சிறந்தது என்றனள்.

31. அலங்குதல்-தத்தளித்தல்.

35. கன்னல்-கரும்பு. முன்னிய-மிக்க.

37. அஞ்சலை தமிழர்கள் அன்பும் ஆண்மையும்
கொஞ்சியே உறவுகொள் குணத்த ரென்பதை
வஞ்சியே யறிந்துநீ மகிழ்வை யுன்னைநான்
வஞ்சியே னென்றிறை மறுத்துக் கூறவே.

38. சோர்குழல்! துயரலை, என்று தூயவண்
டார்குழல் தேரனம் வகுத்துத் தேற்றவே,
கார்குழல் சரிசரி கடிது சேர்த்துமிவ்
வார்குழல் தனையென வணங்கிக் கூறினள்.

39. தண்டமி ழனுஞ்சரி சரியென் றூழ்துயர்
விண்டிடத் தகுமொழி விளம்பி; மேதகக்
கொண்டுவந் தவைபெறக் கொடுத்துப் பின்பொருங்
குண்டுவந் தவளையு முவப்பிச் சென்றனர்.

## 8. சீதை துயருறு படலம்

### வேறு

1. ஆங்கவர் போய பின்னர் அருந்தமி ழிறைவ னுள்ளப்
பாங்கினை யெண்ணி யெண்ணிப் பரிந்துள நைவாள்; பின்னர்
ஈங்கினி திருப்ப தல்லால் இலையினிக் கூட லென்றே
ஏங்கியே யெரியிற் பட்ட இழுதெனக் குழைவா ளுள்ளம்.

2. இனத்தினர் தமைக்கொன் றையோ இலங்கைவேந் தனுக்கு மேலும்
சினத்தினை மூட்ட லல்லால் சிறிபனை மீட்க வன்னூர்
மனத்தினி லெண்ணங் கொள்ளல் மருந்துக்கு மில்லா ராகிப்
புனத்திலி லினிது ணுண்டு பொழுதுபோக் கின்றூர் போலும்!

3. சின்னவன் பேச்சைக் கேட்டுச் சிறிதுமே பகைமை யில்லா
முன்னவன் தன்னைக் கொன்று முறையிலா திளையோன் றன்னை
மன்னவ னுக்கி யன்னூன் வழித்துணை யாகக் கொண்ட
தென்னவோ! இலங்கை போதல் இதனினு மரிய தேயோ?

4. யாதென வறிகி லாதேன் என்செய்வேன்; என்று வந்து
போதுதி யென்று கூட்டிப் போவரோ? பூவின் மீது
மாதியா னொருத்தி யோவிப் பேறொடு வந்தேன்; என்றன்
காதலா! உன்னைக் கூடக் கடவனோ கழறு வீரே?

5. தடுத்ததை மறுத்தே யன்று தமிழகம் புகுந்தீர்; பின்னர்
எடுத்ததை முடிக்கு மண்ணல் இளையனை யுருக்குலைத்தே
கெடுத்தனிர்; மேலும் அண்ணல் கிளைகளை யழித்தீர்; உங்கள்
படைத்தொழில் மேலும் ஏழை பதைத்திடப் பயில்வீர் போலும்.

6. என்னுயிர் தன்னை யெண்ணீர்; எரிமலை குமுறும் போது
மின்னலு மிடியுங் கூடி வீழ்தல்போல் வினைசெய் கின்றீர்;
சொன்னசொற் றவ்று வண்ணல் தூயசான் றாண்மை யன்றோ
இன்னுயிர் தாங்கி யானு மிருப்பதற் கேது வாகும்?

7. அன்றியான் தலைய ளாயை யாலிடை யிருந்த போது
கொன்றிடா தெடுத்து வந்தோர் குறைவிலா திளையாள் போல
இன்றள வினும யோத்தி யெனமதி லிலங்கை தன்னில்
நன்றியா னிருத்தல் அண்ணல் நாணய மேம்பா டன்றோ?

8. கொங்கல ரகழி பூத்த கொடிமதி லிலங்கை வேந்தன்
தங்கையை யெளிய ளென்று தமிழர்கள் மனம்புண் ணாக
நுங்கினை யரிதல் போல முன்னுருக் குலைத்தே கொன்றன்
மங்கையை யிழந்து கான வாழ்வினை மதித்தீர் போலும்!

9. தனித்திவண் வருதற் கஞ்சித் தமிழர்கள் துணையைத் தேடல்
இனித்தமிழ் இறைவன் உள்ளத் தெரியினை மூட்ட லன்றோ
எனைத்தனி யிருத்தி யிங்கே இறையொடு பொருத வெண்ணல்
பனித்துளி வெயிலைக் கூடிப் பகலொடு பொரல்போன் மன்றோ?

10. தீயினைக் கொண்டு மற்றோர் தீயினை யவித்தா லந்தத்
தீயொரு பெருந்தீ யாகித் தெறுதல்போ லெம்பி ரானே
தூயசெந் தமிழர் தம்மைத் துணைக்கொடு தமிழர் கோனை
மாயவென் றிடவே யெண்ணல் மண்டெரி யதுவா மன்றோ?

12. புலியுள பொறியி னுள்ளோர் புள்ளிமான் தன்னை விட்டப்
புலியையம் பெய்து செற்றம் பொங்கிடச் செய்தல் போல
ஒலிபுன லிலங்கை வேந்த னுறவினைக் கொன்று கொன்று
மலிசின மூட்டி யெந்தன் வாழ்வினைக் கெடுப்பார் போலும்.

13. இன்னுமெத் தனைநா ளைக்கிங் கிருக்கவிட் டிருப்பா ரோதான்!
பின்னவ னெனது கூற்றால் பெரிதுமுட் பகைகொண் டானோ?
அன்னவள் கிழவி யென்றே அவரெனை மறந்து வேறு
கன்னியை மணந்து கொண்டு காதலால் களிக்கின் றாரோ?

14. படையொடு வந்தா லிந்தப் பாவியின் ஆவி போகும்;
கொடியினில் தனிய ராக நுழைகுவி ரிலங்கைக் குள்ளே
மடிகுவே னினியுன் றாது வருவது தவிர்வி ராகில்;
அடியனை மறந்திட் டாயோ அழகனே! எனவல் லாக்கும்.

15. ஒருவகை யில்லேன் பொல்லேன்; உயர்மதி லிலங்கை வந்து
பொருவது மேலுந் துன்பம் பூண்பதாம்; தனிமை யாக
வருவது துணியார் போலும்! வாழ்கிலேன் பாவி யென்றே
இருதலைக் கொள்ளி நாப்பண் எறும்புபோல் துடித்திட் டாளே.

---

10. மண்டு எரி-மிக்க தீ.

16. இன்னணம் பலவா றாக இயல்வதை யறியா லாது
முன்னது பின்ன தாக முரண்படத் தனிய ளாகச்
சொன்னதைக் கிள்ளை போலச் சுழல்படப் பிரிவாற் றாது
பின்னரும் சொல்லிச் சொல்லிப் பித்துபோல் பிதற்றி னாளே.

17. வாடிய முகமும்; எண்ணி வறண்டதோ ருளமும்; நீர
நீடிய துயருந் தாங்கி நெடுங்கணீர் உதிர்க்குங் காலைப்
பீடணன் என்னப் பெற்றோர் பெருமையா யிட்ட பேரான்
தேடிய செல்வ மான திரிசடை யாங்கு வந்தாள்.

18. வந்தவள் அம்மா! நீயும் வருந்துதற் குனக்கீங் கென்ன
வந்தது? துயரேல்; உன்றன் மன்னவன் செயலெ தேனும்
வந்ததோ செவிக்கு? மேனி வாட்டுமே தேனு மோர்நோய்
வந்ததோ? இன்ன தென்று வகுத்துரைத் திடுவா யென்றே.

19. கண்ணிணை மலரைப் பூத்த காந்தள்மென் மலரா லுள்ளத்
துண்ணிணைந் துதிரு முத்த வொழுக்கறத் துடைத்து; நல்யாழ்ப்
பண்ணிணைந் தயரப் பேசும் பழந்தமிழ்ச் சொல்லால் அம்மா!
எண்ணின வெண்ணந் தன்னை யியம்புதி யொழியா தென்றாள்.

20. அன்றியும்எங்கள் தந்தை யாகிய இலங்கை வேந்தன்
அன்றுன துளஞ்செம் மாக்க அருளிய உறுதிச் சொல்லைப்
பொன்றினுந் தவற மாட்டார்; பூவையே துயரை விட்டு
நன்றுன துளக்கோள் தன்னை நவிலென நவில லுற்றாள்.

21. என்றன தழிவைப் போக்கி யெனதுவாழ் வுனது வாழ்வாய்
ஒன்றிய படிகொண் டோவா துதவுமென் னுரிமைத் தோழீ!
உன்றன துதவி யேயென் னுயிரின தருங்காப் பாகும்
அன்றிவே றில்லை யென்ப தறைதலும் வேண்டு மோதான்.

22. செந்தமிழ் பயில்வாய் நங்காய்! செய்திகே ளுனது மூத்த
தந்தையுந் தாயு மீங்கு சற்றுமுன் வந்து போனார்;
வந்தவர் சொன்னா ரெந்தன் வாழ்வையில் வாறு செய்தோன்
வெந்தபுண் ணதிலே காய்ந்த வேலுழைத் ததுவோர் செய்தி.

23. என்னென விளையோன் செல்வி, எங்கை! வண் டமிழ்க்கிட் கிந்தை
மன்னவ னான வீர வாலியைக் கொன்றே யன்னோன்
பின்னவற் கரசு தந்து பெருந்தமிழ்ப் படையி னோடென்
றன்னைமீட் டேக வீங்கு தான்வரப் போகின் றாராம்.

24. சந்தன மரத்தால் செய்த தமிழ்க்கொடி நுடங்குந் தேர்க்கால்
மைந்தரூர் பரிக்கா லோடு வழுக்கிடத் தெருக்க ளெங்கும்
கந்தெறி களிற்றி யானைக் கமழ்கடாம் பெருகிப் பாயும்
செந்தமி ழிலங்கை மூதூர் செருக்கள மதுவா கும்மாம்.

25. செருவெனு முன்னர் யானும் சிந்தைநொந் தழவே யுந்தை
வெருவுறல்; வரட்டும் உன்னைவிடுப்பலென் றுரைத்துப் போனார்;
முருகலர் குழலி! வெம்போர் மூழுமேல் வெற்றி தோல்வி
இருவரி லொருவ ரன்றோ எய்துத லியற்கை யாகும்?

26. அன்றியு மிலங்கை மூதூர் அரணழித் வெளிய எம்மோர்
வென்றிவே லண்ணல் தன்னை வெல்லுத லொல்லு மோ?நீன்
குன்றுறை யரிமா னேற்றைக் குறுநரி வெலுமோ? பின்னர்ப்
பொன்றுத லல்லால் எற்குப் போக்கிட முண்டோ சொல்லாய்?

27. நன்றென துரிமை முற்றும் நான்பெற வளித்த அண்ணல்
ஒன்றிய வுதவிக் கேற்ற உயரிய கைம்மா றாக
மன்றலங் குழலி! மாயா வன்கொடும் பாவி யாலும்
தென்றமி ழிலங்கை தன்னைச் செருக்களத் தாழ்த்து வேனோ?

28. அக்கையாய்த் தங்கை மாராய் அன்னையாய்த் தோழி மாராய்
ஒக்கலாய் உறவாய் நாளும் உடன்பயி லாய மாயன்
புக்கொரு நிலையா யென்னைப் பொருந்திய இனத்தை யேங்க
வைக்கவோ பாவி யானும் வருவிருந் தானே னம்மா!

29. ஆதலால் அடியா னுந்தன் அடைக்கல மெனவே; அம்மா!
ஓதியா னுனக்குச் செய்யு முதவியு முளவோ? என்னச்
சீதையென் றோழி! உந்தன் செய்யையா முதவிக் குன்றம்
மீதிலென் உலக வாழ்வும் வீழ்வுமுள் ளனகா ணென்ன.

30. என்னென, அன்னை யேயீங் கிருந்தெனை யின்று நானை
தன்னிலெப் படியே னுந்தாய் தந்தைநீ தமரு நீயென்
மன்னவ னிடத்துச் சேர்க்க வழிசெய்வாய் உள்ள மட்டும்
கன்னலைப் பழிக்குஞ் சொல்லாய்! கனவிலு மறக்க மாட்டேன்.

31. வந்ததி விருந்தே ழெட்டு மாதமா யனையின் மிக்க
சொந்தமா யுளமுங் காதுஞ் சுவைபட வுணா டோறும்
செந்தமிழ் எனும்பால் வாக்கும் திரிசடைத் தேவி! உன்றன்
தந்தைபால் சொல்லி யென்னை நாட்டுவாய் இலங்கை விட்டே.

32. ஒப்பரு மக்கள் வாழு மூர்சுடுங் கொள்ளி தன்னை
அப்புறப் படுத்தல் அம்மா! அறமொடு புகழு முண்டாம்;
எப்படி யேனு மென்னை எங்குநின் றூங்குச் சேர்த்தல்
கைப்பிடி யிடையாய்! உன்றன் கடமைகள் தனிலொன் றாகும்.

33. தந்தையுன் சொல்லை என்றும் தட்டவே மாட்டா ரன்றோ?
வந்ததி விருந்தென் மீது மகிழ்ச்சிமிக் குள்ளா ரன்றோ?
சிந்தையி லென்றும் எந்தன் தீமையை யெண்ணா ரன்றோ?
பைந்தொடி யெனக்கு நன்மை பண்ணவே மறுக்கா ரன்றோ?

34\. தங்கையுய யுருக்குலைத்த தகாச்செயல் தனக்காற் ருமல்
எங்கையே யடியா னென்னை எடுத்துவந் தாரே
யன்றிச்
செங்கைவே லண்ணல் என்மேல் செற்றம்வைத்
துளரோ? இல்லை;
மங்கைநீ சிறிது நல்ல மனம்வைத்தால் வாழ்ந்தே
னேழை.

35\. உய்குவேன் உன்னால் இன்றேல் ஒழிகுவன் எனவே
பின்னும்
கைகுவித் திறைஞ்சி வேண்டக் கைகளைப் பிடித்தே
யுள்ளம்
நைகுதல் விடுப்பாய்; இன்றே நங்கைநீ செலவேற் பாடு
செய்குவன் தவறே னென்று திரிசடை கூறிப் போனாள்.

## 9. பீடணப் படலம்

1\. தாதவிழ் மலர்த்திரி சடையி னோடுதன்
காதல னிடம்புகு கருத்தைக் கூறிய
சீதையி னியல்பினைத் தெளியக் கண்டனம்;
ஈதறி பீடணன் இயல்பு காணுவாம்.

2\. மற்றவ ருரிமையை வலிந்து சூழ்ச்சியாய்ப்
பெற்றிட நினைத்திடும் பேர வாவினன்;
சற்றுநன் னெறிதவாத் தமிழர் வாழ்வுக்கோர்
குற்றமாய்த் தோன்றிய குழவிக் கூடனன்.

3\. பண்டைய பெருமையைப் பகைவர்க் கீந்தனர்
உண்டுமே தலைவரா யுயர்வு பெற்றிடத்
தண்டமிழ் மக்களைத் தாழ்மை யாக்கிய
உண்டவர்க் கிரண்டக முஞற்று பாவியே.

4\. செழுந்தமிழ் மக்களின் சிறப்பைப் போக்கியே
முழுத்தரா மாரியர் முதன்மை பெற்றிட
எழுந்ததன் முன்னனை யிகலைச் சேர்ந்துகொல்
கொழுந்துவிட் டெரியுந்தீக் குச்சி போன்றவன்.

4\. முழுத்தர்-மூடர். இகல்-பகை.

5. பாடறிந் தொழுகிடுந் தமிழர் பண்பொடு
கூடிய வுரிமையைக் கொன்று மற்றவர்
கேடுறப் பகைவரைக் கெழீஇமுன் கொல்லிய
கோடரிக் காம்பினுங் கொடிய பாவியே.

6. மலையினு மாண்புடைத் தமிழர் வாழிய
உலைவிலா உரிமையை யொழித்து முன்னனைப்
புலையுலாம் பகைவனைப் பொருந்திக் கொல்லிய
கொலைவலான் கூட்டுறை குருவி போன்றவன்.

7. தராதரந் தெரிந்தசெந் தமிழர் தாழ்வுற
அராவினுங் கொடியவா ரியர்கள் வாழ்வுறப்
பராவுத இறுமுனைப் பகையைச் சேர்ந்துகொல்
அராவியே யிரும்புகொல் லரத்தைப் போன்றவன்.

8. கடனறி தமிழர்கள் கரும்புக் கைதொழ
வடவர்கள் தொழுதகு மரபின் வாழ்ந்திடத்
திடமிகு தமையனைத் தெவ்வைப் போன்றுகொல்
உடனெழு மரங்கொல்புல் லுருவி போன்றவன்.

9. இளந்தமி ழிராவணற் கிளைய னாயினன்
அளந்தறி கிலாமதிப் பவிருஞ் செம்மணி
உளம்பட அராத்திடத் தொருங்கு தோன்றியே
குளிர்ந்துகொல் நஞ்சினுங் கொடிய பாவியே.

10. திளைந்தசெந் தமிழர்கள் திருவுங் கல்வியும்
அளைந்திட வுதவிடு மண்ணல் பின்னவை
களைந்திடத் தோன்றிய கருங்கல் நெஞ்சினன்
விளைந்தநெல் லொடுவரு வெறுமை நெல்லனன்.

11. சீரிய தமிழர்கள் சிறந்து வாழவே
நேரிய முறைசெயு நெடிய வண்ணலோ
டாரியர்க் கடிமையா யல்லல் செய்பவன்
மாரியி னொடுவரு மடங்க லேயனன்.

---

5. பாடு-பெருமை. முன-அண்ணன்.
8. தெவ்-பகை.
9. அவிர்தல்-ஒளிவீசுதல். செம்மணி-மாணிக்கம்.
10. திளைந்த-நிறைந்த. அளைதல்-கலத்தல்.
11. மடங்கல்-இடி.

12\. இழுக்கமில் தமிழர்கள் இழிவு பெற்றிட
ஒழுக்கமில் ஆரியர் உயர்வு பெற்றிட
முழுக்குடை மதிநிழல் முதிய னுக்கெதிர்
விழுக்கனி யெதிரிடை வேப்பங் காயனன்.

13\. நலம்படு தமிழர்கள் நலத்தை நன்றிலா
அலம்படு மாரியர்க் காக்கித் தம்முனைக்
குலம்படு களத்திடைக் கொன்று சால்புகொல்
கலம்படு செம்பினிற் களிம்பு போன்றவன்.

14\. குடிமையா யாரியர் குலவத் தாயக
முடிமையோ டிறைவனை முனையில் வீழ்த்தியே
அடிமையாய்த் தமிழர்க ளலையத் தெவ்வரால்
படியிலாழ் வாரெனும் பட்டம் பெற்றவன்.

15\. அடிமையுந் தீமையும் அவாவும் வஞ்சமும்
கொடுமையுஞ் சிறுமையுங் கொலையுங் கூரமும்
மடமையும் பொய்மையும் மறமுங் கள்ளமும்
படிமையாய் மகனெனப் படியில் வந்தவன்.

16\. அன்பில னருளிலன் அறமி லன் சலன்
தென்பிலன் திடமிலன் செம்மை நன்றிலன்
முன்பிலன் மதியிலன் முறைமை கண்டிலன்
இன்பிலன் மக்கட்பண் பெதுவு மில்லனே.

17\. தன்னல மென்பது தனக்கி லக்கியன்;
துன்னல ரடியில்வீழ் துறைக்கி லக்கணன்;
புன்னல மல்லது பொதுந லமிலன்
தென்னிலத் தன்னிலு மிணை யிலா தவன்.

18\. கராவிடை வாழ்ந்திடுங் கயவன் ஆரிய
இராமனை நல்லனென் றியம்பி வாயினால்
பராவியே தம்முனைப் பழிக்கு நஞ்சுடை
அராவினுங் கொடியவ னகப்ப கையினன்.

---

12\. எதிரிடை-மாறுபாடு.
13\. அலம்-நலமல்லது. கலம்-பாத்திரம்.
15\. கூரம்-பொறாமை. மறம்-பாவம். படிமை-வடிவு.
16\. சலம்-தீராச்சினம். தென்பு-வலி.
18\. கரவு-மறைவு, பொய்த் தவக்கோலம்.

19. மானமும் வெட்கமு மறைந்து தன்மதிப்
பானது பாவியென் றகல ஆண்மையும்
போனது பேடெனப் புலந்து புல்லெனத்
தானவ னாகிய தனிமை வாழ்க்கையன்.

20. வான்பிறந் தொளிர்கதிர் மாறு மண்ணலோ
டேன்பிறந் தாளென்ப தெவரு மோர்கிலர்;
கான்பிறந் தெருக்கன்பால் கைப்ப இன்சுவை
தான்பிறந் திடுநறை தம்மை யொக்குமால்.

21. உடலிடைத் தோன்றியவ் வுடலொ டேவளர்ந்
துடலினை யூறுசெய் தொழிக்கு நோயனான்;
மடலிடைக் கருக்கினை மானுந் தீயவன்;
குடலிடைப் புண்ணினுங் கொடிய பாவியே.

22. இரும்பினா லியன்றவா ளீர மற்றதே
இரும்பினா லியல்துன மிணைத்துக் காத்தல்போல்
கரும்பெனுந் தமிழிறை காக்கத் தம்மரை
அரும்பகை யோடுசேர்ந் தழிக்கும் பாவியே.

23. ஓட்டிய மதிவலி யுகுத்த பாவியைப்
பெட்டைமெய் வருந்தியே பெற்ற தோகையாம்
உட்டிகழ் கருவினோ டோடு மற்றபொய்
முட்டைபோ லன்னையு முயன்று பெற்றனள்.

24. நீட ணவியமுகில் நிழலி லார்கொடிக்
கோட ணவிலங்கையர் கோனைப் போலவே,
பீட ணவுவனெனப் பேணிப் பெற்றரால்
பீடணன் எனப்பெயர் பெற்ற புல்லியன்.

---

19. புலந்து-வெறுத்து.
20. நறை-(எருக்கம் பூவிலுள்ள) தேன்.
21. மடல்-பனையோலை.
22. துனம்-துன்னம்-ஊசி.
25-மதிவலி-அறிவும் ஆற்றலும். பேட்டை-பெண் கோழி. உட்டிகழ். சிலகோழிகள், ஒவ்வொரு சமயம் கருவும் ஓடும் இன்றிக் குழைந்த நிலையில் உள்தோல் மட்டுமுடைய முட்டையிடும். அது குஞ்சு பொரிக்காது. அது - 'தோகை முட்டை, பொய்முட்டை' எனப்பெயர் பெறும். தோகை-சருகு.
24. அணவிய-பொருந்திய. கோடு-கோபுரம். பீடு-பெருமை. பீடணன்-பெருமை பொருந்தியவன்.

25. கடித்துயிர் போக்கிடுங் கடிய பாம்பினை
எடுத்தது நல்லபாம் பென்று கூறல்போல்,
மடுத்திடப் பெற்றவர் வைத்த பேரினைக்
கெடுத்தவன் பாம்பினுங் கேடு கெட்டவன்.

26. அறமலி தமிழர்கள் அன்பிற் றோன்றிய
இறைமகன் றனையொழித் திலங்கை வாழ்வினைப்
பெறநினைந் தயலவர் பெட்டை நாடிடும்
திறமிலான் தீங்கெலாஞ் செறிந்த சிந்தையான்.

27. உதிரிய மானமும் உலர்ந்த நாணமும்
முதிரிய வஞ்சமும் முறிந்த நெஞ்சமும்
பதரினும் பதரெனப் பகைவன் யாங்கணும்
எதிரிலா தவன்றனித் திருக்கும் வேளையில்.

28. தந்தையின் பால்திரி சடையு மார்வொடு
வந்தவன் இணையடி வணங்கி நின்றென
தெந்தையே! தாங்கள்நா னெதனைக் கேட்கினும்
மைந்துற வேயதை மறுப்ப தில்லையே?

29. இலையிலை மறுக்கிலேன் ஆவ தென்னெனக்,
கலைதெரி புலவர்கள் கருத்தைக் கொள்ளைகொள்
மலைநிகர் வலியுடை வாலி தன்னையச்
சிலைவலான் கொன்றதாச் சீதை சொல்லினள்.

30. ஆமவன் வில்வலிக் களவு மில்லைகொல்!
தாமரை மாலையான் சமரை வேண்டிடில்
நாமதற் கென்செய்வோம் என்ன, நங்கையும்
ஆமவன் பின்னவற் கரசு நல்கியே.

31. மற்றவன் படையொடிவ் விலங்கை மாநகர்
முற்றுகை யிட்டிட முனைந்துள் ளானெனச்
சொற்றனள் சீதையும் எந்தை சொற்றதாப்;
பொற்றொடி வேண்டுமோர் பொருளு முண்டென.

---

25. எடுத்தல்-சிறப்பித்தல். மடுத்திட-அமைத்திட.
28. மைந்து-வலி.
31. எந்தை-இராவணன்.

32. யாதென; மற்றவன் இலங்கை முற்றுதல்
மாதுதன் னுலென வருந்தி நம்மவர்
தீதினை யகற்றிடச் சிந்தை கொண்டவக்
கோதைநம் முதவியைக் குறித்து வேண்டினுள்.

33. எப்படி யாயினும் இலங்கை விட்டவன்
தப்பினு லருஞ்சமர் தப்பு மாகையால்,
இப்பவே சிலைவலா விடத்துச் சேர்ந்திட
ஒப்புடன் நமதுபே ருதவி நாடினுள்.

34. என்றவள் சொலச்சரி இயன்ற மட்டிலும்
ஒன்றிய செலவினுக் குதவி செய்வதாச்
சென்றுநீ யவளிடம் செப்பு கென்னவம்
மன்றலங் குழலியும் மகிழ்ந்து சென்றனள்.

35. மற்றவள் சென்றபின் இலங்கை மாநகர்
முற்றுதல் நம்மனக் கோளு முற்றுற
நற்றுணை செய்திடும் என்று நஞ்சனுன்
வெற்றிகொண் டிருந்திடும் வேளை யாயிடை.

36. ஊரெரி தனக்குவந் துதவு காலென
நேரிலா விழிதகை நீலன் போதர
வாருமென் றிடவவன் வருத்த மென்னெனச்
சீரிலான் இரண்டகச் செயலைக் கூறுவான்.

37. என்னருந் தோழவுன் னிடத்துக் கூறிடா
தென்னரு மறையுள? எனது வாழ்வினை
உன்னுயிர் வாழ்வென உன்னு முன்றுணை
தன்னையா னிழப்பது தகவ தாகுமோ?

38. எந்தையை யிளமையே யிழந்துவிட்டனன்,
முந்தவ னடிமையில் மூழ்கி வாழ்கிறேன்,
மைந்தரு மிலையிறை மைந்த னுயான்றி
நொந்தன னுயிர்பொறு நோன்மை யன்றியே.

39. முன்னவ னிறைவனு முடிபு னைந்திடப்
பின்னவ னடிமையாய்ப் பிழைக்க வோவந்தேன்?
என்னிது முறைமையோ எனக்குத் தோன்றில!
மன்னனு வாழ்ந்திட மனத்துட் கொண்டனன்.

38. நோன்மை-வலி.

40. மன்னவன் வாலியைக் கொன்று மற்றவன்
பின்னனுக் கரசருள் பெரிய வில்வலான்
தன்னையான் துணைகொடு தமிழர் போற்றிடும்
மன்னனு வாழ்ந்திட வைப்பர் துன்கடன்.

41. தேவியீங் கிருப்பதைத் தெரிந்து போதர
ஏவலன் றனையிவண் ஏவல் கூடும்;நம்
ஆவலை வருபவன் அறிந்து நம்மனை
மேவிட மறைவினை விரைவிற் செய்குவாய்.

42. என்றவ னுரைத்திட இசைந்து நீலனும்
சென்றனன் இரண்டகச் செயலைச் செய்யவே;
தன்றமர் பொன்றினும் அரசு தாங்கிடும்
வென்றிநன் ஞளினை விழைந்தி ருந்தனன்.

## 10. ஏவற் படலம்

### வேறு

1. ஆடுகொடி மதிலிலங்கை யரசுபெறும் பரிசிருக்கும்
ஈடிவிரண் டகவினையோ ளிழிதகைமை யதுகண்டாம்;
கோடியவெஞ் சிலைராமன் குற்றேவ லாயனுமன்
மாடமலி நகரிலவன் மனைகாணு மியல்காண்பாம்.

2. வளமருவுங் கிட்கிந்தை மன்னவனுந் திறல்வாலி
களமருவி யிளையனொடு கைகலந்து பொரும்போது
குளமருவி யிரைகொள்ளுஞ் சிரல்போலக்
கொன்றன்னுன்
இளயனர சதுகொள்ள ஈந்துசிலைக் கைராமன்.

3. தம்பியொடு மதங்கமுனி தன்னிலையை யடைந்துதனை
நம்பியகா தலிபிரிவை நச்சியவன் பச்சையுளம்
வெம்பியவன் தனையடைய வேண்டியெழு கழிகாமத்
தம்பியிலே நாட்கடலை யவனீந்திக் கரைகாணுன்.

3. அம்பி-தோணி, கப்பல்.

4. முன்னவனைக் கொல்வித்து முடிபுனைந்த கிட்கிந்தை
மன்னவனைப் பார்த்தெனது மனைதேடித் தருகென்ன,
அன்னவனு மனுமானை யருகழைத்து மதிவல்லோய்!
தென்னிலங்கை யதுசென்று சீதையைக்கண்
டிங்குறுவாய்.

5. எனவனுமன் சரியென்ன, இழிகாமக் கொலைராமன்
அனுமனையன் பொடுதழுவி ஆழியதைக்
கைகொடுத்தென்
மனைவியுனை யறியவிது வழிகாட்டும் எனப்பின்னும்
எனதுநிலை சொலித்தேற்றி யிலிருக்கச் சொல்வாயே.

6. அங்கதனுங் கிட்கிந்தை யரசுமெனக் குறவாகி
இங்கிருக்கும் வகைகூறி இன்னுமொரு சிலநாளில்
உங்களரும் படையோடவ் வுயரிலங்கை வருதுமென
மங்கையிடம் சொலியவளை மகிழ்ந்திருக்கச்
சொல்வாயே.

7. என்றினைய பலசொல்லி என்வாழ்வுன் கையினிலே
ஒன்றியுள திங்கன்றி யொருநாளு மறுக்கில்லேன்;
வென்றியொடு தடையின்றி விரைவாகத்
தென்னிலங்கை
சென்றினிது மீள்கவெனச் சிறுராமன் விடைதந்தான்.

8. பொன்றிடமுப் பெண்கொடுமை புரிந்தசிலை போனேவ
என்றென்றுந் தமிழர்குல மிழிநிலைமை தனையடைய
ஒன்றியகோ டரிக்காம்பா யுற்றவிரண் டகவனுமன்
தன்றமருக் கழிவுசெயத் தான்விடைகொண்
டேகடந்தான்,

9. ஒன்றியபல் லிரண்டகரு முடன்றொடர
வழிக்கொண்டே
குன்றுகளுங் கான்யாறுங் குறுவழியுங் கொடிமுல்லை.
மன்றலம்பூங் காடுகளும் மருதநில முங்கடந்தே
சென்றடைந்தான் சிலபகலில் தெளிவில்லான்
தென்னிலங்கை.

10, ஏடாணிக் கொடிநுடங்கு மெழில்மாட கூடமொடு
பீடாருந் திருக்கோயில் பிறங்குமுயர் கொடுமுடியும்
கூடாரை யுள்குலிக்குங் கோட்டையெனு மும்மதிலும்
தேடாருந் தேடவமை தென்னிலங்கை யதுகண்டான்,

11. கண்டனுமற் றவர்களையக் கானிருத்தித் தனித்துவழிக்
கொண்டுசெல வழியிலிலைக் குடிலிடையோ ராரியனைக்
கண்டுதொழ, அவன்வினவத் காரிகைசீ
தையைச்சிறைசெய்
தண்டமிழோன் வரலாறுந் தன்வரவுங் கூறினனால்.

12. அதுகேட்ட வாரியனும் அஞ்சாதே மதியனுமா!
மதிநுதலு மிலங்கையினில் மனமகிழ்வோ டிருக்கின்றாள்
புதியதொரு செயலுங்கேள் புகழிலங்கைப் பேரரசை
எதிர்நோக்கி இலங்கையர்கோன் இளையோனு
முள்ளானும்.

13. அன்னவன்பேர் பீடணனென் றறைவார்கள்;
அயோத்திநகர்
மன்னவனும் சிலைராமன் வரவையெதிர் பார்த்தபடி
அன்னவனு முள்ளானும்; அவனேவ லானொருவன்
என்னிடஞ்சொன் னனீயும் இரவிடைச்சென்
றவற்காண்பாய்.

14. இப்பகலை யிவ்விடத்தி லேபோக்கி இரவினிலே
நப்புலவர் மனம்போல நன்வளத்த பதியுகில்
ஒப்பரிய மதிலிலங்கை யுட் போவாய் எனவனுமன்
அப்பகலை யவ்விடத்தி லவன்கழித்து
விடைகொண்டான்.

15. விடைகொண்டு மகிழ்ச்சியினால் விம்முற்று நிறையவுளம்
நடைகொண்டு தனியாக நஞ்சனைய வஞ்சகனும்
மடைகொண்டு நீர்பாயும் வயல்மருத வளநாட்டைக்
கடைகொண்டு புறமதிலைக் கடந்துவள
நகர்கொண்டான்.

16. கண்டவனு மகநகரின் காட்சியினைக் கண்டுமகிழ்
கொண்டவனும் பிறரையங் கொள்ளாமல் வழிநடந்து
தண்டமிழி னிசைபாடுந் தடந்தெருவைக் கடந்துசென் றி
ரண்டகனுந் தனையனவி ரண்டகன்வாழ்
மனைகண்டான்.

17. கண்டவனுந் தலைவாயிற் காவலரால் வரவுணர்த்திக்
கொண்டுமனை யுழிச்சென்று கொடும்பாவி
குணமிலியைக்
கண்டுதொழ விழிகுணனுங் கடைமகனு மெதிர்தொழுதி
ரண்டகனு மிரண்டகனு நடைப்பிணம்போ
லெதிர்கொண்டார்.

18. எதிர்கொண்ட பின்பவர்க ளிருக்கையினி லினிதமர்ந்து
கதிர்கண்ட பகல்போலக் கலந்துள்ள முறவாடி
அதர்கண்ட வகைவினவி அவன்சொல்ல மகிழ்கொண்டு
பதர்கொண்ட மணிபோலப் பழிகண்ட பீடணனும்.

19. அருகணைய முடியாத அடல்வீர வாலிதனை
ஒருகணையா லுயிர்போக்கி யுடன்வருசுக் கிரீவனைநற்
பெருகணையின் மீதிருத்திப் பேரரசு தந்துள்ளான்
பொருகணைவிற் கையனெனப் புகல்கின்ற
துண்மைகொலோ?

20. எனவனுமன் ஆம்உலகில் இணையில்லாச் சிலைவல்லான்;
எனையுலகு முழுதுமினும் இயம்பியசொல்
லதுபொய்யான்;
அனையெனவந் தடைந்தவரை யழியினுங்கை
விடுதலிலான்;
அனையவன்மா மனைதேட அனுப்பினன்கா
ணெமதிறைவன்.

21. நான்வந்த வழியிலொரு நற்றவனும் உயர்மிதிலை
ஈன்வந்த சனகன்மகள் ஈங்கிருப்ப தாச்சொன்னான்;
தேன்வந்த கருங்கூந்தல் சீதைநல மோவென்ன
மான்வந்த போதைவிட வாழ்கின்றாள் மகிழ்வாக.

22. என்னவினை யோயிகலி இருந்தபெரும் பகைவர்களும்
துன்னியரு கணைந்துபுகல் துணையருளு மெனவேண்டில்
இன்னுயிரா யினுமீயும் இருந்தமிழர் இனம்புரக்கும்
மன்னனுயர் பெருமையினை வழுத்தல்கொலோ!
வெனவனுமன்,

23. அடலனுமா! எனக்குன்று லாவதொரு செயலுண்டு
கடலுலகில் பிறந்தவர்கள் காண்பதுயர் வாழ்வல்லால்
அடிமையினை விரும்புபவர் அகலிடத்தி லுளரோகாண்?
கொடுமையினு மிகுகொடுமை குடிப்பெருமை
யிலதன்றோ?

24. இளமையிலே பெற்றோரை யிழந்துவிட்டேன்
என்செய்கேன்;
வளமையிலே மிகுந்ததமிழ் மாமன்னர் குடிப்பிறந்தும்
களமதிலே பொலிதூற்று பதர்போலக்
கடைப்பட்டேன்
உளமதிலே யுளதொன்றை யுரைக்கின்றே
னுன்னிடத்தில்.

25. முன்வந்து பிறந்தவன்பொன் முடிசூடி யரசாளப்
பின்வந்து பிறந்ததனால் பிழையென்ன செய்தேன்மன்?
மின்வந்த முடிசூடி மிக்கோயுன் அரசேபோல்
மன்வந்து தொழுமரச வாழ்வடைய மனக்கொண்டேன்.

26. ஆதலினால் உன்வரவென் ஆங்கால மேபோலும்!
சீதையைமீட் பதற்கென்னால் ஆவதெலாம்
செய்கின்றேன்;
ஓதியிதை ராமனிடம் உன்னிறைபோ லென்றனையும்
மாதமிழர் பேரரசாய் வாழ்விப்ப துன்கடனே.

27. ஊட்டுதமிழ் வாயனும உள்ளபடி சொல்லுகிறேன்
நாட்டரச ராய்நீங்கள் நாடாளும் செய்தியினைக்
கேட்டமுத வென்னகத்தே கிளைதழைத்தெழுந்த
வெண்ணமின்று
கூட்டினது நம்மையொன்று குறையில்லை
யெனவனுமன்.

28. தென்னிலங்கைப் பேரரசே! சீதைமண வாளனுனை
மன்னவனாய்த் தான்வாழ வைத்திடுவான் தப்பாமல்;
அன்னவனுங் கார்கால மகன்றவுடன் இங்குறுவான்
சொன்னபடி நீயவனைத் துணையாகக் கொள்வாயே.

29. புகலடைந்தோர் தம்மையவன் பொன்றினுங்கை
விடமாட்டான்;
தகவுடையோய்! எம்மரசு தமக்குரைத்த
மொழிப்படியோர்
பகலினிலே பகைமுடித்துப் பைம்பொன்முடி
யதுபுனைந்தான்;
முகைவிரிந்து மலராகும் முறையேயுன் முதுவாழ்வே.

30. ஆகையினா லிதுபற்றி யையப்பா டினிவேண்டாம்;
வேகையிலே சோறுண்ண விரும்புவது முறையாமோ?
தோகையைவிட் டிடுமின்றேல் துன்புறுவோம்
சிலைராமன்
வாகைபுனை வானெனவுன் மன்னவனுக் கெதிர்மொழிக.

31. இறைமகனுஞ் சினங்கொண்டே யேகென்பா
னேனென்னில்,
குறையுடையா னெனப்பின்னர்க் குடிபழியாச்
சூழ்ச்சியிதாம்;
நிறைமதியோய்! இனியொன்றும் நினையாமல்
நினைச்சேர்ந்த
மறவருடன் கட்டாயம் வழிக்கொள்வா யெனவனுமன்.

32. அதுகேட்ட பீடணனும் அனுமானை யுறத்தழுவி
புதுவரவே! இந்நன்றி பொன்றிடினும் மறக்கில்லேன்
இதுதவறேன் எனவனுமன் எழிலிலங்கைப் பேரரசே!
மதிமுகத்தைப் போய்ப்பார்த்து வரநினைக்கின்
றேனென்ன.

33. சரியெனவே பீடணனும் தனதுதிரு மகளான
திரசடையை யழைத்தனுமன் செய்தியினை
யவட்குரைப்ப
வரிசையுடன் வணங்கியவள் வாருமென மதியனுமன்
திரிசடையோ டவள்தோழி செல்லுதல்போற்
சென்றானே.

34. அனுமனொரு மறைவிலிருந் தம்மணியென்
வரவுரைத்துக்
கனிமொழியை மற்றவர்கள் காணும லீங்கழைத்துப்
பனிமொழிநீ வகருவெவைப் பாவைமெது வாய்நடந்தே
அனைவருங்கண் ணுறங்கிடும்போ தனங்கடையை
யழைத்துவந்தான்.

35. வந்துதொழ வனுமனிவண் வந்தவர லாறுசொலப்
பைந்தொடியு மவர்நலமோ பாவியெனை மறந்திலரோ?
ஓந்திலரோ இவனென்ன, மதிவல்லான் வருகின்றார்;
வந்திலங்கை தனையழித்து மாதுனைமீட் பாரென்ன.

36. கேட்டலுமே யுடனடுங்கிக் கிளிமொழியின் னிசைகுழற
வாட்டடங்க ணூற்றெடுப்ப மதிவல்லீர்! தமிழிறை
போல்
நாட்டிலவர் நல்லவர்கள்? நன்றல்ல வேன்றுணிந்தீர்?
கோட்டமிலார் கூறெண்ணில் குடியொடுகெட்
டொழிவோமே.

37. எந்தையினும் பன்மடங்கா லெனைநடத்தி வருகின்றார்;
வந்தெனது காதலனும் மன்னிக்கும் படிவேண்டின்
பைந்தொடியென் றேடுபல பரிசுந்தந் தேவிடுப்பார்;
சிந்தையினும் பொருகளத்தைத் தெளியாதீ
ரெனப்பின்னும்.

38. முன்னரெனைக் கொடுவந்த முதனுமே யிவ்வாறு
சொன்னவரச் சொற்படியே தோகையெனை
நடத்துகிறார்;
இன்னலொரு பலகோடி யெய்திடினு முயிர்விடினும்
சொன்னமொழி யதுதவறார் துரிசில்லாத் தமிழ்மக்கள்.

39. அன்னவர்தம் பிறைமகனே அறக்கிரண்ட பேருருவன்
இன்னலரு மருள்வேண்டி னினிதேதந் துவப்பிப்பான்
அன்னையெனக் கப்பனெனக் கன்றேகொண்
டிருப்பாரேல்
என்னசெய்வேன் புகல்தந்தார் இதையொழிக
கெடுமதியே.

40. பாட்டியையு மிளையனையும் பகையின்றிக் கொலைபுரிந்த
கேட்டினும்போர் செயவருதல் கேடன்றே? சிறியாரேல்
கூட்டிலுறை குருவியைப்போல் கொன்றிருப்பா
ரலவோவெந்
நாட்டினிலா ரிவர்போல நன்னலஞ்செய் பெரியாரே?

---

36. வாள்தடம் கண். கோட்டம்-மனக்கோணல்.

41. ஐயா நும் பேச்சிலெனக் கையுறவுண் டாகிறது
வெய்யோனி யாரோகாண் விடைகொண்டே
னெனவனுமன்
கையாழி தனையியக் காரிகையுங் கண்ணிலொற்றித்
துய்யோனே! யானவர்க்குச் சொன்னதெனச்
சொல்லீரே.

42. கனவினுமே தமிழர்பகை காணுதல்தீ தெனவுரையும்,
புனைமணிமா மதிலிலங்கை போந்தின்னே தமிழிறைவன்
தனைவணங்கி மன்னிப்புத் தான்கேட்டுக்
கொண்டடியான்
தனையடைந்தே யயோத்திநகர் தனையடையச்
சொல்வீரே.

43. என்றனுக்காத் தென்னிலங்கை இறைமகனே
டிகல்புரியின்
பொன்றிடுவே னெனச்சொல்லிப் புகச்சொல்லுந்
தலியாக
என்றவள்வேண் டிட,வனுமன் ஏந்திழையே!
அவ்வாறே
சென்றுரைப்பே னெனப்பின்னுஞ் சிறுமதியான்
பெருந்தேவி!

44. அன்னையுனை யான்கண்டே னென்பதனுக் கடையாளம்
என்னவெனி லுன்கணவன் ஏதுரைப்பே னெனமயிலும்
தன்னவன்பால் கொடுமென்று சடைவில்லை
தனைக்கொடுத்துப்
பின்னுமொரு தரங்கூறிப் பெய்வளையோ டகன்றனளே.

45. ஆங்குநின்று திரிசடையோ டவள்போன பிறகனுமன்
ஓங்குமலர் மண்டபமும் ஓயிலியலா ராடிடமும்
தூங்குமெழி லசோகவிளஞ் சோலையதனியற்கையினைப்
பாங்குடனே கண்குளிரப் பார்த்துவெளிப்
புறப்பட்டான்.

## 11. அனுமப் படலம்

1 சோலை வார்குழல் தோகை பெயர்ந்தபின்
பூனை போலப் பொருக்கென் றனுமனும்
வானி னூடு வளர்மதில் வாயிலிற்
போன போது புடையமர் காவவர்.

2. கண்டி யாமங் கடைப்படு போதகல்
பெண்டி யாவள் எனவெதிர் பேசிடா
தொண்டி யாக வொதுக்குறக் காவலர்
அண்டி நோக்கியோ ராணென வையுறீஇ.

3. யாவ ளென்ன வதட்டி வெளியினில்
போவ தென்னவிந் நள்ளிருட் போதினில்
நோவி லாமல் நுவலென; அஞ்சிய
பாவி யொன்றும் பகர்ந்திலன் நிற்கவே.

4. உண்மை சொல்லி னுயிர்பிழைப் பாயென
அண்மை செல்லவை யோவென, ஆரடா!
பெண்மை யானது பேசெனக் கைகளைத்
திண்மை யாகப் பிடிக்கத் திமிறினன்.

5. கள்ளக் கோல மகற்றியக் கள்ளனைக்
கொள்ளப் போந்த பொருளினைக் கூறென
உள்ளத் தோங்கு முளவை யுரைத்திடான்
மெள்ளத் தேங்கி வெளிப்படப் பார்த்தனன்.

6. ஓடிப் போக உனைவிடோ மென்றவர்
கூடிக் கைகளைப் பற்றக் கொடியனும்
ஓடிப் போவி ரிலையேல் உமதுயிர்
ஓடிப் போகு மொருநொடி தன்னிலே.

7. என்று கூறி யெதிர்க்கவே காவலர்
ஒன்று கூடி யுதைத்தவன் கைகளைக்
கன்றி வீங்கிடக் கட்டிவைத் தேயிருள்
பொன்ற வந்து பொழுது புலர்ந்ததும்.

8. மட்ட விழ்த்த மருமலர்க் காவகம்
விட்டு ளத்து வெகுளி தணிந்துகைக்
கட்ட விழ்த்திரு கைப்பிடி யாய்க்கொடு
கொட்டி சைத்திருக் கோயிலை நண்ணியே.

9 வண்ண வண்டு மகிழ்ந்திசை பாடிட
உண்ணு முண்ணுமென் றூட்டி யுவப்புறும்
தண்ணந் தாமரைத் தாரணி மார்புடை
அண்ணல் முன்ன ரவனை நிறுத்தியே.

10. மன்ன வாழி! மருவலர் போற்றிடும்
தென்ன வாழி! செழுந்தமிழ் நாவலர்
பொன்ன வாழி! எனவடி போற்றியே
அன்ன வன்வர லாற்றை யறைந்தனர்.

11. தலைகு னிந்துமுன் னிற்குந் தகவிலான்
நிலையு ணர்ந்து நெடிதும் இரங்கியே
கலையு ணர்ந்த புலவர் கருத்தெழும்
அலைபொ ருந்து மகக்கட லண்ணலும்.

12. முருக்கு வெஞ்சின மோர்புற மூண்டெழ
இரக்க மோர்புற மீர்த்தெழக் கொல்லெனச்
சிரிக்கு மேறெனச் சீறுமிவ் வாறவன்
சருக்கி வீழ்ந்த தகாநிலை யெண்ணியே.

13. உம்பி றைநல மோ? அவன் முன்னனைச்
செம்மை யாயமர் செய்துவென் றனலோ?
தம்பி னத்த தமிழருக் காகநீர்
இம்மை செய்வ தெலாமுஞ்செய் தீரன்றோ?

14. அறமி குத்த வுனையமைச் சாயவன்
பெறவி ழைத்தநற் பேறரும் பேறன்றோ?
மறமி குத்த படைத்துணை வந்தெனை
இறைவ னுக்க விருப்பது நன்றன்றோ?

15. அடிமை வாழ்வை யகற்றித் தமிழரை
முடிமை யாக்கநீர் முற்பட் டுளீரன்றோ?
கடமை நீங்கியோர் ஆரியர் காலினும்
மிடிமை போல விழத்துணி யீரன்றோ?

16. குற்ற மற்ற குணத்தமி ழரினப்
பற்றி லுங்களைப் போலவிப் பாரினில்
உற்ற பேரி ளொருவருண் டோவுமைப்
பெற்ற தாயரும் பேறுபெற் றாரன்றோ?

---

15. முடிமை-தலைமை. மிடிமை-வறியர்.

17. ஏனங் காத்துப் பிறரடி யேத்திவாய்
தானங் காத்துத் திரியுந் தமிழர்கள்
மானங் காத்திட வந்து பிறந்ததும்
கோனங் காத்த குணப்பெருங் குன்றன்றோ?

18. அயலைச் சார்ந்து பெருமை யடைதல்நற்
செயல தன்றெனும் செம்மை தனைப்பிறர்
பயிலச் செய்து பழந்தமிழ்ப் பண்பினை
இயலச் செய்ததும் போற்பெரி யாரெவர்?

19. ஒன்றி ரண்டகஞ் செய்தின மோம்புதல்
ஒன்றி ரண்டக முள்ளவர்க் கேதகும்;
அன்றி ரண்டக மற்ற தமிழர்கள்
அன்றி ரண்டக மாக்குதல் வல்லரோ?

20. ஆண்மை யற்ற வரசனைப் போக்கிவல்
லாண்மை யுற்ற வரசனைக் கண்டினக்
கேண்மை யற்ற கிளையடக் கொண்டவிச்
சூண்மை மற்றெவர் கண்டுளர் சொல்லுவாய்!

21. மறமி குத்தபுன் மன்னனைக் கொன்றுநல்
அறமி குத்த வரசனைக் கண்டதும்
திறமி குத்த செயலினை யாரினிப்
பெறமி குத்த வறிவைப் பெறவலார்?

22. இனத்துக் கூறுசெய் என்னை யொழித்திட
மனத்துக் கொண்ட மதிவலோய்! உங்கள்பு
தினத்தி னோடு வராமல் எதற்கிங்கு
தனித்து வந்தனை சாற்றுவாய்? என்னவே.

---

17. ஏனம்-பிச்சைப் பாத்திரம். வாய்தான் அங்காத்து. அங்காத்தல்-திறத்தல். கோன் அங்காத்த. அங்காத்த-உயர்ந்த.

19. ஒன்று இரண்டகம்-பொருந்திய துரோகம். ஒன்று இரண்டு அகம்-இருமனம். அன்று-அல்லாமல். இரண்டு அகம்-சூழ்ச்சி, தந்திரம். இரண்டு அகம் ஆக்குதல் வல்லரோ அன்று. இரண்டு அகம்-சரிடம்-சரிடத்தன்பு.

20. கேண்மை-நட்பு. சூண்மை-தந்திரம்.

23. சென்ற காலைச் செயலை நினைந்தவன்
ஒன்றும் பேசா துயிர்ப்புடன் நிற்கவே;
வென்றி வேலனுன் மீதொரு தப்பிலை
ஒன்றி நீயிங்கு வந்ததென் ஓதுவாய்?

24. அடிமை உன்னைநொந் தாவதென் ஐயகோ!
சுடுமை யற்றத் தொழும்பன் சுக்கிரீவனும்
வடவ னால்வீர வாலியைக் கொன்றவக்
கொடுமை யுள்ளவென் நெஞ்சங் கொதிக்குமால்.

25. அரசு வேண்டி யயலவன் காலினில்
பரிசி தென்னவப் பாவிவீழ்ந் தானெனில்,
வரிசை யின்றி அடிமையாய் வாழுநீ
குரிசில் தன்னொடு கூடியேன் கெட்டனை?

26. கெட்ட வன்குலக் கேடன் வடவன்கால்
தொட்ட வன்முடி சூடென வென்னினும்;
இட்ட வேலைசெய் தேங்கநீ யேனுடன்
பட்டனை யந்தப் பாழ்ஞ்செயல் செய்யவே?

27. வாலி போன்றசெங் கோலுடை மன்னரிவ்
வேலை சூழுல கத்தெவர் வில்லுவாய்?
ஞால மீது நடைப்பிணம் போன்றவன்
பாலி ருப்பதைப் பார்க்கினுந் தாழ்வுண்டோ?

28. உன்னி னத்தொரு பெண்ணை யுருக்குலைத்
தின்னு யிர்விடச் செய்த விழிஞரைத்
துன்னி முன்னனைக் கொன்று தொழும்புசெய்
மன்னன் றன்னொடு வாழுதல் நேர்மையோ?

29. தானி கர்த்த தமிழர் குலப்பகை
யான வாரிய ராமன் அடியினை
மான மின்றி வருடுதல் என்கொலோ!
பூனை காலைப் புலியினம் புல்லுமோ?

30. இங்கு பற்பல கூறி இராவணன்
பொங்கு மானப் பொருப்பி லமர்ந்து;நீ
இங்கு வந்ததன் காரண மின்னென
கன்கு கூறென நாணி யனுமனும்.

31. செங்கை வேலவா! சேவடி போற்றியான்
இங்கு வந்த இழிசெயல் அன்னவன்
மங்கை தன்னை அறிந்து வருகென
எங்கள் மன்னவன் ஏவிட வந்தனன்.

32. கண்டு மீள்கையில் காவலர் பற்றியே
கொண்டு வந்து நிறுத்தினர் கொற்றவ!
பெண்டு பிள்ளையோ டுண்டு பிழைக்குவேன்
தொண்ட னேனருள் கென்னத் தொழுதனன்.

33. மன்ன னேவலில் வந்தனை யென்னினும்
துன்னி நேரினில் என்னிடம் சொல்லுதல்
நன்ன ரோடு நடைமுறை யன்றியும்
அன்ன வன்மனை யாளையான் காட்டனோ?

34. என்ன சொல்லினள் சீதை? எனவவள்
மன்ன னைத்தனி யாக வரும்படி
சொன்ன தாயெனச் சொல்லுக என்றனள்
என்ன வோத இளையவன் அண்ணலே!

35. அயல வன்மனை யாளைச் சிறையினில்
பயில வைப்பதி லாகும் பயனுமென்
மயிலை யிவ்வனு மானுடன் போக்கல்நற்
செயல தாகுமச் சீதை கணவனும்.

36. செற்ற நீங்கி யகன்றுமே செல்குவன்
மற்ற வன்கை வலியை மதிப்பிடில்
பொற்றொ டிதனைப் போக்கலே நன்மையாம்;
குற்ற நீக்கிக் குணத்தினைக் கொள்கென.

37. ஏது சொல்லினுய் மான மிலாதுநீ
மாது டன்பிறந் தும்பிற வாதவா!
யாது நற்குணம் ஆரியர் தம்பிடம்?
போது வாயவன் கால்தொழப் புல்லியா!

38. உன்னு டன்பிறந் தானை யுருக்குலைத்
தின்னு யிர்கொல் இழிதகை யாளரை
நன்னர்; வில்வலி யாரென நாணிலீ!
பின்னை வந்து பிறந்தனை கன்மனு!

39. உன்கு லத்தை யுருக்குலைத் தோன்மனைக்
கென்கு றையிங் கிழைத்தனன் அன்பிலி!
தன்கு லத்தி னிழிவைத் தகவெனும்
உன்கு ணத்துயர் வுக்குவ மைசொலாய்?

40. பேதை யீங்கினிப் பேசுதல் வீணொரு
சேதி கேளுமித் தென்னிலங் கைத்தமிழ்
மாதர் முன்னவன் மன்னிப்புக் கேட்குமுன்
சீதை தன்னைச் சிறைவிடேன் திண்ணமே.

41. இன்ன கூறி, யிகலரி யேறனன்
அன்ன வாறே அனுமனைப் பார்த்துநான்
சொன்ன வாறுபோய்ச் சொல்லியத் தீயரைத்
துன்னு மாறிங்கு சொல்கென அன்னனும்.

42. மன்ன வாழி! மணித்தமிழ் வாழிநீர்
சொன்ன வாறுபோய்ச் சொல்லித் துருசினில்
அன்னர் தம்மை யனுப்புவே னிங்கெனப்
பின்னு மன்னனைப் பேண விறைவனும்.

43. இனவி ரண்டக மென்பது மக்களுள்
மனமி ருண்டபுன் மாக்கள் செயலதாம்;
புனமி ருண்ட புதருறை பன்றியும்
இனவி ரண்டகஞ் செய்வ திலையிலை.

44. ஆகை யாவருங் காப்புடன் ஐயநீ
ஏகி மற்றரை யீங்குறச் செய்திகல்
போக வாரியப் புன்மையை நீக்கியே
வாகை சூடி மதிப்புடன் வாழ்குவீர்.

45. என்று மன்ன னிசைக்க வனுமனும்
துன்று காப்புடன் தொன்னகர் நீங்கியே
சென்று தோழர்க ளோடுசின் னுளினில்
ஒன்று செல்வக்கிட் கிந்தையை யுற்றனன்.

## 12. படையெழுச்சிப் படலம்

### வேறு

1. அடைவ குத்த வனுமனின்
உடைய வெற்றி யுரைத்தனம்;
நடையி ழுக்கிய ராமனின்
படையெ ழுச்சி பகருவாம்.

1. அடை-அடைதல். நடை-ஒழுக்கம்

2. * தம்பி யேவலன் தானுமே
வம்ப னேவினும் வந்திலன்
கொம்பை யந்தக் கொடியனும்
தும்பி யேங்கத் துணித்தனோ?

3. மாத ரென்னை மருவவே
போது வாளெனல் பொய்மையே
யாது செய்குவ னென்னையிவ்
வாது செய்ததம் மானரோ.

4. அவளை யின்றி யரைநொடி
குவளை யுண்கண் குவிந்திடா
பவள மேனிப் பசுமயில்
துவளு மோவகத் துறையெனு.

5. நைந்து சோர்ந்திட ராமனும்
அந்த வேளை யனுமனும்
நந்து வில்லவ நானிதோ
வந்த னென்று வணங்கினான்.

6. வணங்கி நின்றவ னைச்சனைத்
தணங்கு மார்புறத் தழுவியே
மணங்க மழ்குழல் மாதரும்
உணங்கி லாதவ ளுள்ளளோ?

7. என்ன வேயவ னீடிலாய்!
அன்ன முன்னி லு மார்வமாய்த்
தென்னி லங்கையில் சீருடன்
மன்னி வாழ்ந்து வருகிறாள்.

8. கண்ட னன்மலர்க் காவக
மண்ட பந்தனில் மதிமுகக்
கெண்டை வேல்விழிக் கிளிமொழி
வண்டு மொய்குழல் வாழ்கிறாள்.

---

2. தும்பி-யானை போன்ற ராமன்.
3. வாது-துன்பம்.
5. நந்துதல்-மிகுதல்.
6. தணங்குதல்-பெருத்தல். உணங்குதல்-வருந்துதல்.

9. இன்னை யேதனி யெய்தியே
மின்னல் வேலனை வேண்டியே
தன்னை மீட்குதல் தகவெனச்
சொன்ன தாகநீர் சொல்கென.

10. என்னி டத்தவன் இயம்பினான்
மின்னி டத்தொளிர் வில்லியே!
தன்னெ னத்தகு தமிழர்கள்
பொன்னி டத்தொரு பொருளரோ.

11. என்று ரைத்திதோ வென்றவன்
மன்ற லங்குழல் மணிதர
ஒன்ற மொய்த்தக னொற்றியே
அன்றி மெய்ப்புக ழனுமனே!

12. தப்பு வேண்டிமுன் தாழ்ந்துமன்
னிப்பு வேண்டுதல் நெறியல
இப்ப வேபடை யெழுகெனாச்
செப்பு வான்பிற செய்தியே.

13. அக்கை மார்சில ரன்னைமார்
தக்க தோழியர் தங்கைமார்
தொக்க செந்தமிழ்த் தோகைமார்
ஒக்க லேயவட் கூரெலாம்.

14. தங்கை வாழிய தன்மையில்
அங்க னேதக வையவுன்
மங்கை யின்பொடு வாழ்ந்திடச்
செங்கை வேலவன் செய்துளான்.

15. போற்றி யேபிறர் பொருளினை
ஊற்ற மாயினி தோம்பிடும்
மாற்றி லாத்தமிழ் மக்களில்
ஏற்ற மேதமி ழிறைவனே.

---

13. தோகைமார்-சிலர் அக்கைமார், சிலர் தங்கைமார் என்க. ஒக்கல்-சுற்றத்தார்.

15. ஊற்று-ஊன்றுகோல்-ஆதரவு.

16. ஆகை யாலினி யையுறேல்
தோகை யொன் றினுஞ் சோர்விலள்;
ஓகை வேலவ னும்பியும்
வாகை சூடினன் வாழமீ.

17. என்ன வென்னவஃ தென்னவே
முன்ன ேரூடவன் முரணியே
என்னை வேண்டின னிளியனும்
உன்னை வேண்டென வோதினேன்.

18. அடிமை யாயுனை யடைந்திட
முடிவு செய்தனன் முடிவிலோய்!
வடிவி லங்கையின் மன்னனு
முடிபு னேந்திடல் முறைமையே.

19. மறவ ரோடவன் வருவதா
உறுதி கூறினன் உண்மையான்
பெறுதி நீயவன் பெட்பினை
இறுதி முத்தமி ழிறைவனே.

20. பெயரி லோவவன் பீடணன்
உயிரை யுமுனக் குதவுவான்
அயரி லாதுனை யடைவதா
இயல்பு ளாளினி தியம்பினன்.

21. ஒன்று வானவ னுற்றதும்
இன்றை யேபெயர்ந் தேகினாம்
சென்றி ராவணன் சிதைவுற
வென்று சீதையை மீட்குவோம்.

22. துன்று நீள்படை சூழவே
இன்றை யேமதி லிலங்கையை
நன்று முற்றிட நடக்குவாம்
என்று மற்றவ னியம்பவே.

---

19. இறுதி-ஒழி, வெற்றிகொள்.
20. அயர்-ஐயம்.

23. வழுவி லாதியான் வாழுவே
உழுவ லன்புட னுற்றுமே
கழுவி ருயுளக் கறையெனத்
தழுவி மற்றுமத் தறுதலை.

24. எக்க ளிப்புட னேவலால்
அக்க ளிப்புட னுமனும்
புக்க செய்தியைப் புகலவே
சுக்கி ரீவனுந் துன்னினுல்.

25. துன்னி ராமனைத் தொழுவவன்
மன்ன! சென்றனு மானுமென்
இன்னு யிரினை யிலங்கையில்
நன்னர் கண்டிவன் நண்ணினுன்.

26. இற்றை யேதமி ழிலங்கையை
முற்ற வேயற முறைபெரு
கிற்ற தாயகிட் கிந்தையாள்
கொற்ற வாவுளங் கொள்ளுவாய்.

27. என்ன வேயவ னின்னையே
முன்னு போர்மணி முரசறை
கென்ன வேநடந் தேவலர்
அன்ன ராலதை யாக்கினர்.

28. போர்ப்ப றைசெவி புகுதவே
ஆர்ப்பெ ழுப்படை யாளெலாம்
தார்ப்பெ ரும்படைத் தலைவர்கள்
சேர்ப்ப டப்படை திரட்டினர்.

29. கள்ள மாயருங் கானிடை
வள்ள லாந்தமிழ் மக்களுக்
குள்ள நாளெலா மூறுசெய்
மள்ள ராகிய வடவரும்.

---

24. எக்களிப்பு-மிகுமகிழ்ச்சி.
26. பெருகிற்றது-பெருகினது.

30. பூரி யக்குணம் புல்லியே
ஆரி யர்க்கடி யாள ராய்
ஓரி னத்த வுயர்தமிழ்ச்
சீரை யெற்றுஞ் செருநரும்.

31. முந்தை யோனுயிர் மொண்டுகிட்
கிந்தை யாண்டிடு கீழ்மகன்
சிந்தை போலச் செயற்படு
மந்தை யாந்தமிழ் மள்ளரும்.

32. குறைந்த மானமுங் கொடுமையும்
மறைந்த வுள்ளமு மடமையும்
தறைந்த பூரியத் தமிழ்ப்படை
நிறைந்த னநில நெளியவே.

33. கூர மிக்க குணத்தினல்
சார மற்ற தமிழர்கள்
ஈர மற்ற இழிமையால்
ஆரி யப்படை யாயினர்.

34. அறவ ரென்று மருள்மிகு
துறவ ரென்றுஞ் சுவையுற
முறையி லுணுண் முனிவரும்
மறவ ராயங்கு வந்தனர்.

35. கொடுமை யாளருங் குணமிலா
மடமை யாளரும் வடமகன்
அடிமை யாளரும் ஆரியப்
படைய தாகிப் பரந்தவே.

36. ஏவ மற்ற விலங்கையை
மேவ அவ்விடம் விட்டுமே
காவுங் குன்றுங் கடந்தவர்
நாவ லின்றி நடந்தனர்.

---

30. இவர் இரண்டகத்தமிழர்.
32. தறைதல்-உளமிழுகுதல்.
33. கூரம்-பொறாமை. ஈரம்-அன்பு.
34. முறைஇல்-முறைஇல்லாது.
36. ஏவம்-குற்றம். நாவல்-வெற்றிவொலி.

37. நடந்து போய்ச்சில நாளினில்
அடைந்தி லங்கை யதன்புறம்
தொடர்ந்த சேனைத் தொகையொடு
மிடைந்த சோலையில் விட்டனன்.

38. விட்ட வாயிடை மேவிவாழ்
தட்டி லாத தமிழரைக்
கெட்ட வன்பல இளையொடு
கொட்டி யேயுயிர் கொன்றனன்.

39. கொன்ற ழித்துமே கொடியனும்
ஒன்று பாடி யுறைந்தனன்;
கன்றி லாவதி காயனும்
ஒன்று தாதினை யோர்குவாம்.

நான்காவது

பழிபுரி காண்டம் முற்றிற்று.

---

37. விடுதல்-தங்குதல்.
38. கொட்டுதல்-கெடுத்தல்.

# 5. போர்க் காண்டம்

## 1. அதிகாயன் தூதுப் படலம்

### வேறு

1. மடியினில் நெருப்புப் போன்ற வஞ்சக னுறவைக்
கொண்டு
கொடியவன் படையி னோடு குறுகிவிட் டதனைக்
கண்டாம்;
நெடியவன் சொன்ன சொல்லை நினைந்ததி காயன்
றன்னைப்
பொடியவன் றன்பாற் றூது போக்கின வாறு
காண்பாம்.

2. ஆரியப் படையி னோடும் அண்ணனைக் கொன்ற பாவி
பூரியப் படையி னோடும் பூரியர்க் கடிமை யான
பாரிடத் திணையி லைந்தாம் படையொடுஞ் சிலையி ராமன்
ஊரினுக் கயலே தங்கி யுளனென வொற்றர் கூற.

3. கெட்டன னேனும் பாவம்! கிளையொடு சிறுவன் தூது
விட்டுமே சொல்லிப் பார்ப்போம் வெறுத்துமே பணிவு
தன்னைத்
தட்டினு னென்னிற் கூர்வேல் தனக்கிரை தருவா
மென்று
மட்டவிழலங்கன் மார்பன் மனத்திடை மதித்திட்
டானே.

4. மனத்திடை மதித்த வாற்றை மதிவலி யமைச்சர்க்
கோதத்
தனித்தமி ழரசர் கோவே! தகுந்தகு மெனயா ரென்ன,
அனைத்தையு முணர்ந்து கூற்று மமையதி காய னேயிவ்
வினைத்திறத் தமைவா னென்ன வேந்தனுந் தகுந்தா
னென்றே.

## வேறு

5. ஏவலன் றனைப்போ யழைத்துவா வென்ன
   ஏகியே விரைவினி லவனும்
மாவலி யுடைய மதிவலி தன்னை
   வணங்கியே ஐயநின் றன்னைக்
காவல னழைத்தா னென்னவே அவனுங்
   கடிதினி லெழுந்துசென் றடைந்தே
ஆவலாய் வணங்கிச் சிறியனைப் பொருளா
   அழைத்ததே தோவென அண்ணல்.

6. ஆரிய ராமன் படையொடு வந்தே
   அகழியின் புறத்துவிட் டுளனும்
பூரியன் றன்னைப் பொசுக்குவேற் பெனினும்
   பூவைகேட் டருபிழை யாமல்
சீரிலா னிடஞ்சென் றவன்கொடு மையுநந்
   திறமையும் பொறுமையு முரைத்து
நேரினில் வந்து பணிந்திடச் சொல்லும்;
   நெறியிலான் மறுத்திடின் மீள்வாய்.

7. இப்பெருந் தொழிற்கே யழைத்தன னுன்னை
   எனவதி காயனு முவந்து
கப்பிய புகழோய்! இத்தொழி லெனது
   கடமையு முடைமையு மன்றோ?
இப்பொழு தேயான் சென்றவற் குறுதி
   எடுத்துரைத் தழைத்திவ ணுறுவேன்
சிப்பிலி தனக்கித் தனைகொலோ! என்று
   செருக்கியே தொழுது சென் றனனே.

8. சென்றவன் வடவர் செயலினை யெண்ணிச்
   சினத்தொடு முனத்தொடுங் குமரிக்
குன்றென வுயர்ந்த வொளிமணி மாடக்
   கொடித்தெரு வகன்றுமே யிலங்கைத்
துன்றுயர் கொடியைத் தொழுதுமே யகன்று
   தொடுகட லகழியைத் தாண்டி
ஒன்றலர் தங்கி யுறைதரு பாடி
   யுற்றனன் கொற்றவேல் தூதன்.

---

7. சிப்பிலி-சின்னவன்.
8. உனம்-உன்னம்-கருத்து.

9. கண்டது மறவர் யாரெனப் பெரியோன்
கவலையு முவலையு மின்றித்
தண்டமி ழகத்தைப் பொதுவறப் புரக்குந்
தமிழிறை மகனுடைத் தூதன்
உண்டொரு செய்தி யுமதுகா வலனுக்
குரைப்பதென் றிடவவ ரழைத்துக்
கொண்டுமே சென்று ராமனைத் தொழுது
கூறியே விடுத்தகன் றனரே.

10. ஆரிய ராமன் தூதனைப் பார்த்திங்
கடைந்ததென் கேட்கவே யுரைக்குங்
காரிய மேதா கினுமுனக் குண்டோ?
கழறென வாய்மொழிக் கலைஞன்
மாரிபோற் கொடுக்கும் வண்கைவே லண்ணல்
வகுத்துரைத் துன்னிடம் விடுத்த
சீரிய செயலொன் றுண்டுகேட் குனவே
தேறெனத் தொகுத்திவை வுரைப்பான்.

11. பண்டுநும் மினத்தார் துறவிய ராகப்
பழந்தமி ழகத்திடைப் போதக்
கண்டவெம் மினத்தார் கனிவர வேற்றுக்
கனிந்தவன் புடையரா யினிதிங்
குண்டியு முடையு முறையுளு முதவி
ஒன்றிய சுற்றமுற் றவராக்
கொண்டுமே கூடிக் குலவின ரவருங்
குறையிலாக் குடிகளா யிருந்தார்.

12. பிந்தியுஞ் சிலபேர் நாள்செலச் செல்லப்
பெண்டுபிள் ளைகளுடன் போந்தே
வெந்தொழில் வேள்வி செய்துயிர் கொல்லை
வெறுத்துமே பழந்தமிழ் மக்கள்
எந்தமி ழகத்தை விட்டுமே செல்வீர்
இல்லையே லுயிர்களைக் கொல்லீர்
செந்தழல் வேட்டல் தகாதென நும்மோர்
செருக்கள மதுவகுத் தனரே.

---

9. உவலை-இழிவு.

13\. உங்குல முன்னோர் முனிவருக் காக
உதவியாய்த் தமிழகம் போந்தே
எங்குல முன்னோர் தங்களைக் கொன்றும்
எரிகொளீஇ அரண்களை யழித்தும்
தங்கியே யுறவு போனடித் துறவுஞ்
சனபுரிந் தழித்தும்வன் றமிழர்
தங்களை யுளவ ராக்கியு மெம்மோர்
தங்களை யழித்திகல் விளைத்தார்.

14\. முத்தெனு முறுவ லரும்பியே யுமது
முன்னவர் தமைவர வேற்றுப்
புத்துணை யூட்டித் தமிழகங் கண்ட
பொருளெனப் புதுநலங் காட்டி
ஒத்தினி திருக்க வுடன்பிறந் தவரின்
உயரிய வாழ்வினில் வைத்த
எத்தனை யெமது முன்னவர் உம்மோர்
இழிதக வினுக்கிரை யானோர்.

15\. பொன்னனை யிளம்பொற் கண்ணனைக் கொடையில்
பொருவிலா மாவலி தன்னை
முன்னிய வலியில் மலையினை வென்ற
முத்தமிழ்ச் சூரனை மற்றும்
என்னின முன்னோ ராகிய வென்றிக்
கிலக்கிய மாகவே யமைந்த
மன்னரை யும்மோர் வஞ்சனை யாக
மடித்தெம தினப்பகை யடுத்தார்.

16\. அன்றியு முனது தந்தைமுன் னிற்க
ஆற்றல னாகியே தோற்றேன்
என்றுமே புகலச் சரியெனப் பாடி
யிருக்கையில் திடீரென வந்து
குன்றுயர் தோளான் தென்றமிழ் மீனக்
கொடியுடைச் சம்பரன் றன்னைக்
கொன்றது மும்மோர் எம்மருக் கிழைத்த
கொடுமைக்கோ ரெடுத்துக்காட் டன்றோ?

---

15\. பொன்னன் - இரணியன். பொற்கண்ணன் - இரணியாக்கன்.

17. இன்னுமும்மோர் கொடுமைகளனைத்து
மிசைத்திட இதுபொழுதல்ல;
என்னினுமும்மோர்க் கெம்மரோர் தீங்கும்
இழைத்திடா தாய்தரு மன்பின்
பன்னலம் பொருந்த அந்தணராயும்
பார்ப்பனராயுமின்னையுமே
மன்னவர் மதிப்ப வாழ்வது தமிழர்
. மாண்பினைக் காட்டுவதன்றோ?

18. ஆருயிர் கொல்லும் வேள்வியைத் தடுப்ப
தன்றியும் மோரிருப் பதையெம்
மோரொருவருமே தடுப்பதில்; வேள்விக்
குறுதுணையாகியே தும்மைத்
தாரணிந் தும்மோர் தமிழகம் போந்து
தமிழ்க்கொலை புரிவதேயல்லான்
ஆரிய நாட்டி லெம்மவர் பாடி
யமைத்திகல் விளைத்ததுமுண்டோ?

19. அத்தகை நிலைமை தவிர்ந்துமே யெம்மோ
ரமைதியா யிருக்கவெம் மிறைவன்
மெய்த்திறல் மறவர் தமையடைவாக
விரிமலர் விந்தகங் காக்க
வைத்திட வதனால் உம்மவர் வேள்வி
வளர்த்திட முடிகிலா துளைய
மைத்திட வந்தெம் மரசியைக் கொன்றே
யகன்றுபின் மனையொடு வந்தாய்.

20. இங்ஙன நீவிர் தமிழகம் புகுந்த
தேதவறுகிட மேலும்
எங்குலக் கொழுந்தா மிராவணற் கிளைய
இறைவியாய் விந்தகம் புரந்த
பைங்கிளி தன்னை வன்கொலை புரிந்து
படைவலான் தன்னையுங் கொன்று
செங்கைவே லெவற்குச் சினத்தினை மூட்டித்
தேவியை யிழக்கவு மானாய்.

21. பின்னரும் வாலி தன்னையுங் கொன்று
பின்னனைத் துணைவனுக் கொண்டாய்
என்னினு முனது மனையவள் தனக்கோ
ரின்னலுஞ் செய்திடா தன்றாள்
முன்னினு மேலாய்த் தன்பிறப் பாக
முறைமைகொண் டினிதுவாழ்ந் திருத்தல்
பின்னிலை வேலான் பெருங்குண மல்லால்
வேறென வுரைப்பதற் குளதே?

22. அன்றியு மெங்கள் சொல்லினை மதியா
தருந்தமிழ்ப் படைகளைக் கொண்டே
இன்றெம தூரை முற்றவும் வந்தாய்
என்னினு மிறைவனுன் மனைவிக்
கன்றுரைத் ததனைக் காக்கவே யுன்னை
யழைத்துவா வென்றெனை விடுத்தான்
உன்றனைக் கோற லவற்கொரு பொருட்டோ?
உயிர்த்துணை உயர்குண மன்றோ?

23. அன்றையுன் மனைவி நொந்தழு திரங்க
அஞ்சலென் றுறுதல் கூறி
உன்றனை யழைத்து வந்தறி வுறுத்தி
உடனனுப் புவனென வுரைக்க
மன்றலங் குழலும் மகிழ்ந்தனள்; அனுமன்
வாய்மொழி கேட்டிலை யெனினும்
இன்றுமு னுரைத்த மொழிபுரந் திடவே
என்றனை யனுப்பின னிறைவன்.

24. ஆகையால் நீயு மெமதிறை யவனை
யடைந்துநின் தவற்றினை யொத்து
யாகலை வலனைப் பணிந்துமு னின்று
மன்னிப்புக் கேட்டுமே யுன்றன்
தோகையோ டெமது தாயகம் விட்டுன்
தொன்னக ரடைந்துமே வாழ்வாய்
வாகைவை வேலான் சொற்படி யுரைத்தேன்
மறுக்கில்நீ பொரத்தயா ராவாய்.

25. என்றுமே தூத னின்னண முரைப்ப
எரிசிலங் கனன்றுமே பிறரை
என்றுமே பணியேன்; நாளையே போந்தும்
இலங்கையோ டுங்களை யழித்து

வென்றிகொண் டெனது மனைவியை மீட்டு
மேலவ ரிடர்தவிர்த் தகல்வேன்;
சென்றுநும் மிறைவற் கோதியே களப்போர்
செயத்தயா ராக்குதி என்றான்.

26. இன்னமுங் கேட்டி! எம்மவர் செய்யும்
இருந்தவ வேள்வியை யழித்துத்
துன்னிடா துங்கள் தாயகம் விட்டுத்
துரத்தியும் வருத்தியும் பலவா
இன்னல்கள் புரிந்தெம் மினப்பகை யாநும்
இறைவனை யொழிக்கவே வந்தேன்
என்னவுஞ் சொல்லிக் கதவடைக் காமல்
எதிர்பொர வெளிவரச் செய்வாய்.

27. என்றவ னுரைப்ப நன்றென நகைத்தே
இறுமவர்க் கறநெறி யென்னும்?
தன்றவ றுணராத் தகவிலா யுன்றன்
தவறதே யுனையடும் போலும்!
இன்றையே வாரும் நாளையேன் தவனை
இதுமுடி வெனவுரைத் தெழுந்து
சென்றனன்; வடவன் றம்மவர் களுக்குச்
செருக்கொடு மறமுரைத் திருந்தான்.

## 2. ஆய்வுப் படலம்

### வேறு

1. மடிதொழி லகற்றத் தூதாய் மதிமிகு மதிகா
யன்போய்க்
கொடியவ ளிசையா னுகக் குறுகிய வாறு சொன்னும்;
படுமுர சதிரு ஞாட்பி[1]ற் பகைதெறுந் திறனை யண்ணல்
நெடியரோ டாய்ந்து கண்ட நெடியதோ ராய்வு
சொல்வாம்.

2. குறித்ததை யுள்ள வாறு கூறினேன் கொள்ளு மாறு
வெறுத்தனன் பணிவு தன்னை வெகுண்டிதோ ரூரை
முற்றி
ஒறுத்துநுங் குலத்தை வேரோ டொழிப்பனென்
றெமது சொல்லை
மறுத்தனன் சிறியோ னென்று வந்ததி காயன் சொல்ல.

1. ஞாட்பு-போர்.

3. களித்தொகை யொடுசெந் தேனுங் கரும்புமிழ் சாறும் பாலும்
இனித்திடும் பிறவு மொவ்வே மென்றுநொந் துருகி வாடும்
தனித்தமி ழகத்தை முற்றும் தன்னொரு குடைக்கீ ழோம்பும்
வினைத்திற மிகுந்த செங்கை வேலவ னதனைக் கேட்டே.

4. எரிசினங் கனன்று சீறி இன்னனென் றிருக்கை நின்றே
அரியெனக் கனைத்தெ ழுந்தே அமைச்சரை விளித்திப் போதே
பெரியரைத் தருதிர் நீவிர் பேரமர்த் திறத்தை யாய்ந்து
தெரிதரற் கெனவே யன்னூர் செப்பினு ரேவல் தம்மால்.

5. இதுதெரிந் திலங்கை மூதூர் இருக்குமூ தறிவு மாண்டும்
மதியுநன் னெறியுஞ் சால்பும் வாய்மையுந் தூய்மை தானும்
பதியர சியலு மான்ற பழக்கமும் பழுத்து மூத்த
முதியவர் வந்து தத்தம் முறைமையி னிருந்தா ரம்மா.

6. அன்னவர் தம்மி லான்ற அறிவரா மாடூஉ வொன்றோ?
தன்லிகர் தானே யான தமிழ்மகள் தானே யென்னப்
பன்னலை வியல்பும் ஆய்ந்து பழுத்தமூ தாட்டி யாரும்
மன்னிய விருப்பிற் றத்தம் மரபினில் இருந்தார் மாதோ.

7. முப்பொழு தாய்ந்து கூறும் மூதறி வமைச்சும் மெச்சும்
தப்பிலா திகலுந் தானைத் தலைவருங் கலைவ லாரும்
கப்பிய கிளையும் நட்புங் கலைசிலை யென்னத் தொக்கார்;
இப்பெருங் களரி யார்ப்ப இறைவியோ டிறையும் புக்கான்.

8. புக்கவ ணிருக்கை யெய்திப் 'புலமையும் புகழும் வாய்ந்த
தக்கசெந் தமிழீர்! உங்கள் தமையமைத் தமையென் னென்ப
தொக்கலைப் பகையொன் றின்றி ஒருங்குவன் கொலைசெய் திட்ட
அக்கொடும் பாவி தன்னை அடர்த்தற்கென் றறைதல் வேண்டா?

9. பின்னும் பாவி யேதும் பிழையிலா வாலி என்னும்
மன்னனை மறைந்து கொன்று மற்றவன் தம்பிக் கந்நாட்
டின்னர சளித்துப் பொல்லா இரண்டகன்
துணைக்கொண் டன்னான்
கன்னியைக் காண வீங்கு கடத்தினன் அனுமன் றன்னை.

10. பின்னருங் கேட்டிர்! அந்தப் பெண்கொலைப் பாவி
தன்னை
நந்நகர்ப் பெண்டிர் முன்பு நல்லறி வதுபு கட்டி
அன்னவன் தேவி தன்னோ டயோத்திரா டனுப்ப
வெண்ணி
அன்னதை யனுமற் கோதி அனுப்பினே னனுப்பு
மென்றே.

11. துன்னியே அனுமன் சொன்ன சொல்லினைக் கேளா னுகி
முன்னனை யயலாற் கொன்று முடிபுனைந் தணிகிட்
கின்னைத
மன்னவ னுன அந்த வஞ்சகன் சேனை யோடு
நன்னகர்ப் புறத்தின் சோலை நண்ணிவிட் டிருக்கின்
றுனும்.

12. அயலவ ரெளிய ரென்றே ஆரியப் புல்லர் தம்மைப்
பயிலுநந் நாட்டில் விட்டே பதடிக ளானேம்; அன்னார்
மயலுறு தமிழர் தம்மை வழிப்படுத் தேவக் கல்வி
பயிலுவித் துளரா மந்தப் பதர்களும் வந்துள் ளாராம்.

13. அகத்திடை நினைத்துப் பாரா ஆரிய முனிவ ரெல்லாம்
தொகுத்தவப் படைகட் கான சூழ்ச்சிகள் சொலநம்
மோடு
பகைத்துவந் திருக்கின் றாராம்; பைந்தமிழ்க் குரியீர் நீயிர்
வகுத்தநன் னெறியிற் செல்ல வரவழைத் தேனிங் கந்த.

14. பாவிதன் தவற்றை யொப்பிப் பணிந்திடின் மன்னித்
தன்னான்
தேவியை விடுவ தாகத் திறலதி காயன் தன்னை
ஏவினேன் மறுத்தப் பாவி இலங்கையை உடனே முற்றப்
போவதா வுரைத்திட் டானும்; பொருந்தவாய்ந்
துரைப்பீ ரென்ன,

15. மூதறி வாட்டி யோடு மொய்குழல் தன்னைக் கொன்ற
ஓதுதற் கரிய பாவி உருவுகாண் டலுந்தீ தாகும்;
ஆதலா லவனைப் போக்கி அவன்மனை யாட்டி தன்னைப்
பாதுகாத் திடல்நன் றென்னப் பகர்ந்தனள் ஒருமூ
தாட்டி.

16. ஆமிது தகுதி யென்றார் ஆங்குள மகடூஉ; ஆடூஉ
நாமினிப் பார்ப்ப தென்னே நற்றமிழ்க் குரிய கோவே!
தாமரை யோடு தும்பை தரிதுமே பகையை நூறி
ஏமுறு வாகை சூட லேயினிச் செய்வ தாகும்.

17. அருந்தமி ழகத்தி லின்றே டாரிய மெனுமுட் பூண்டு
மருந்துக்குங் காண லின்றி வகைபட வொழிக்க
வேண்டும்;
இருந்தமுள் மரத்தை வேரோ டிளமையே களையா
தாயின்
திருந்தவே முதிரின் மற்றேன் செங்கையை வருத்து
மன்றோ?

18. நெஞ்சினி லச்ச மின்றி நிள்மதி லிலங்கை வந்த
வஞ்சவா ரியப்பே ரீங்கு வழக்கின்றி யொழிக்க
வேண்டும்;
நஞ்சர வதனைப் பாவம் நல்லதென் றில்லில் வைத்துக்
கஞ்சியும் வார்த்துப் போற்றுங் கயமைபோற்
பிறிதொன் றுண்டோ?

19. காரின மிருந்து வாழுங் கடிமதி லிலங்கை வந்த
ஆரியப் பூண்டுங் கின்றி யடியுட னொழிக்க வேண்டும்;
ஓரிவிற் பிடித்த தீயை யொருங்குபோக் கவியா தாயின்
ஊரையே தின்றார் மக்கட் கொதுக்கின்றி யொழிக்கு
மன்றோ?

20. வளைபயில் கிடங்கு சூழ்ந்த மதிலணி யிலங்கை வந்த
நுளையரிங் கறவின் றோடு நூறியே தொலைக்க வேண்டும்;
களையினை முளையி லேயே களைந்தெறி யாது விட்டு
விளைவடை யாது சோம்பும் வீணரு முலகி லுண்டோ?

---

16. தாமரை - அடையாளப்பூ. தும்பை - போர்ப்பூ. ஏமுறல்-மகிழ்தல். வாகை-வெற்றிப்பூ.

21. கூரறி வின்றி யுண்டு கொழுத்தசெய் நன்றி கொன்ற
ஆரிய முனிவர் தம்மை யலறவே தொலைக்க வேண்டும்
பேரெலி தம்மை வீட்டிற் பிழைத்திரென் றிரக்கங்
காட்டும்
காரறி வாளர் தம்மைக் கண்டதுங் கேட்ட துண்டோ!

22. பாடறிந் தொழுக வல்ல பழந்தமி ழரசர் கோவே!
கூடியா ரியரை நம்மைக் கொல்லவே யிங்கு வந்த
கோடரிக் காம்பை யெல்லாங் குருத்திடா தொழித்தே
மேலும்
கேடுடை யவைதோன் றுமற் கெல்லியே யெறிய
வேண்டும்.

23. புரிசைசூ ழிலங்கை முற்றப் போந்துள வடவர் தம்மைக்
குரிசிலின் றுநாங் கொன்று கூட்டொடு தொலைக்க
வேண்டும்;
அரிசியோ டளைய கல்லை யகற்றிடா தக்கல் லோடே
கரிசனத் தொடுசோ றுக்குங் கயமைபோல் மடமை
யுண்டோ?

24. ஒட்டிய வுறவு வீய வூறுசெய் யயலார்ப் பேணும்
கெட்டவன் னெஞ்சர் தம்மைக் கிளையொடு போக்க
வேண்டும்;
தொட்டுணச் சமைத்த கட்டுச் சோற்றிடை யெலியை
வைத்துக்
கட்டியே பயணஞ் செய்வோன் கதையினை மறக்க
லாமோ?

25. அடலுற வினத்தைப் பாழு மாரியர்க் குதவி செய்யும்
கொடியரின் றோடி லாது கொன்றுமே தொலைக்க
வேண்டும்;
உடலிடைத் தோன்றிற் றென்றை யுரியது சிறிய
தென்றே
சுடலுறச் சுட்டுப் போக்காத் துஞ்சுவா ருலகி
லுண்டோ?

---

23. புரிசை-மதில். அளைய-கலந்த.
25. அட்ல்உற-கொல்ல. சுடல்-சூட்டுக்கோல், காரம்.

26 உடன்பிறந் தவர்க ளென்று தோரகத் தவர்க ளென்று
துடன் பயில் தமிழ ரென்று துறவென்று தொறுக்க
வந்த
உடன் பிறந் துடலைக் கொல்லு முறுபிணி யனையார்
தம்மை
உடன்கொலை புரிந்தே யின்றே டொழித்தனங் கடமை
யாமே.

27. பாலொடு கலந்த நஞ்சப் பாலினின் சுவையைப் போக்கிப்
பாலினைக் கெடுத்தப் பாலைப் பருகிடா தகற்றல் போலப்,
பாலினுஞ் சுவைய தான பழந்தமிழ்ப் பகைமை
கொண்ட
போலியா ரியரோ டந்தப் பொறையையு மகற்ற
வேண்டும்.

28. அஞ்சிடா துயிர்மெய் கொன்றா னருந்தியே வெட்சி
சூடி
வஞ்சியை யவாவி நம்மூர் வந்துமே யுழிஞை வேய்ந்த
வஞ்சரை நூறித் தும்பை மலைந்துமே மிலைந்து வாகை
மிஞ்சியே புனைந்து காஞ்சி விழைந்துபா டாண்கொள்
வோமே.

29. என்னவே யாங்கி ருந்த யாவரு மொருமித் தோத
மன்னவர் மன்ன னந்த மாற்றலர் தம்மை வெல்ல
மன்னிய முரச மார்த்து மறவரைத் தொகுத்தி ரென்னத்
தன்னிக ரில்லாத் தானைத் தலைவருக் குரைத்தான்
மன்னே.

30. மடியினில் நெருப்புப் போன்ற வஞ்சரை வடவர் தம்மை
கொடியினு னொருவ னேபோய் நாழில தாட்டி
மீள்வேன்
கொடியணி மாட நீள்மூக் கூடல்மே விலங்கை வேந்தே
அடியனை யனுப்பு மென்றே றரும்படைத் தலைவன் கூற.

---

27. பொறை-சுமை.

28. வெட்சி-ஆனிரை கவர்தல். வஞ்சி-மண் வேண்டி வருதல். உழிஞை-மதில் முற்றல். தும்பை-போர். வாகை-வெற்றி. காஞ்சி-நிலையாமை, பாடாண்-புலவரால் பாடப்படுதல். வஞ்சி-சீதை, சிலேடை.

30. நாழில் ஆட்டல்-கொன்றுகுவித்தல்.

(பீடணன்)

31. என்றவன் கூற வேயாங் கிருந்தபீ டணனெ ழுந்தே
மன்றலந் தாரோ யன்னான் மனைவியை விடுப்பா யாகின்
இன்றையே யகன்று செல்வா னில்லையே யிலங்கைச்
செல்வம்
வென்றவர் தமக்கே; யன்னான் வில்வலி சொல்லப்
போமோ!

32. கைவல கரனோ டோய்வு கண்டிலா மறவ ரெங்கே?
மெய்வலி யுடை யோர்க் கெல்லாம் மேலனும் வாலி
யெங்கே?
ஐவலி யவன்கை வில்முன் யார்வலி யுடையர் மண்மேல்
உய்வதிங் குறுதி யாது ஒறவளோ பிரிதொன் றில்லை.

33. வல்லவ னெவர்க்குந் தப்பா மாற்றல ருயிரை யுண்ணும்
வில்லவன் மனைவி தன்னை விடுத்திரேல் நம்பி யோர்க்கு
நல்லவன் வெருளி நீத்து நடக்குவ னயோத்தி நோக்கி
அல்லவன் போல யானு மாவதைச் சொன்னே னண்ணா.

34. மீள்கிலா னாகிற் பின்னும் விந்தநா டதனை யன்னான்
ஆள்கைய தாக்கி யேனு மவனுற வடைவோ மின்றேல்
கேள்களா யவர்க ளோடுங் கெழுமிய நட்பி னோடும்
மாள்குவோ முறுதி யாக மன்னிப்பீ ரென்னா முன்னம்.

(இராவணன்)

## வேறு

35. என்ன சொல்லினாய் ராம னென்பவ
னெனைவெ லுந்திற முடையனோ?
உன்னை யார்கெடுத் தார்க ளோவுட
லுடன்பி றந்துகொல் நோயனாய்
இன்ன னாகநீ நடந்து மேவெளிக்
கென்னை யேகொலை புரிந்துமே
தென்னி லங்கையைப் பெறநி னைந்தனை
தீய னேயுள வுதெரிந்திலேன்.

36. பதைப தைத்துளந் தசர தன்முனம்
* படையை விட்டுமே யோடினான்
முதுகு கண்டனன் மீசை தொங்கிய
முழும கன்முகங் கண்டிலேன்

மதியி லாயவன் சிறுவ ரென்கதிர்
வாளி னுக்கிரை யாகுவர்
அதையி னுஞ்சிறு பொழுதில்,சேரினீ
யறிகு வாயென விறைவனும்.

37. அன்னை யொத்தநம தாணை யாளியா
யரசி ருந்தநம் பாட்டியைக்
கொன்னி ழைத்ததவ றின்றி யேமுனங்
கொலைபு ரிந்தகொடி யோர்களை
என்னி டத்துநனி நன்மை யாளரென்
றேத்து நீயுமொரு தமிழனே?
உன்னை யொத்ததமிழ் மறவ ரல்லவோ
வூனை முற்றுகை யிடுகிறார்.

38. உடன்பி றப்பினைச் சினைசி தைத்தகொடி
யோனை நல்லனவ னென்றுமே
மடமை யுற்றவனை யேத்து கின்றனை
மான மென்பதுனக் கில்லையோ?
கடமை தப்பியே யடிமை மூதுரை
கழறு நீயுமொரு தமிழனோ?
உடமை விற்றவ ரடிமை யுற்றவர்க்
குள்ள தோவலுவ லுலகிலே.

40. தன்னை யொத்ததமி ழன்னை பெற்றதலை
மன்ன னுகவரு பொன்னனை
உன்னை யொத்தவவி ரண்ட கத்தமிழ
ருறவு கொண்டுபுது மனையிடை
மின்னை யொத்தபொய்த் தூண கத்தொரு
வெறிபி டித்தவட வாரியன்
தன்னை வைத்துமே கொலைபு ரிந்தகதை
யின்னு நீயறிய வில்லையோ?

41. பொன்னன் வீழவவன் றம்பி யானபொற்
கண்ண னந்தமிழ் புரக்கையில்
முன்னன் வீழவுஞ் சனைபு ரிந்தகொடு
முன்பி லாதவட வாரியர்

37. கொன்-சும்மா.
40. பொன்னன-இரணியன். இரணியம்-பொன். இவ னும், கீழ்வருவோரும் விந்தச்சாரலை யாண்ட தமிழரசர்கள்.
41. பொற்கண்ணன-இரணியாக்கன்.

துன்னிடாதுதமிழ் நாடு காத்தவனுந்
தோணி யேறிமுன் னீர்க்கடல்
தன்னி லேகையிற் கொடிய ராயிடைத்
தள்ளி மாய்த்தகதை யறியையோ.

42. அறபி குத்தகொடை வள்ள லானதமி
ழன்னை பெற்றமா வலிதனை
வறுமை யுற்றனொரு வழியு மில்லையெனை
வாழ வைத்தருள்க வென்றுமே
சிறுமை யுற்றவொரு வடவ னுற்றருகு
சென்றி ரப்பகொடை நேர்கையில்
கறுமை யுற்றகொடி யோனு மையகோ
கழுத்த ரிந்தகதை யறியையோ?

43. பாரி லொன்றுமினை யில்லை யென்றுதமிழ்ப்
பறைய டித்ததமிழ்த் தலைவனும்
சூர னென்றுபெயர் பெற்ற முன்னவனைச்
சொரணை யற்றவட வாரியர்
சார மின்றியுரு வார மானவொரு
தடிய னுற்றனியு லாவையில்
கார மின்றியை யோவொ ழித்தகதை
காதி னின்றுகழிந் திட்டதோ?

44. பம்பி வெந்துற வகன்று பாடியில்
பகைத ணிந்தினி திருக்கையில்
அம்பி னுங்கொடிய னைய கோவவ
னடைந்து செந்தமிழ் மன்னனும்
சம்ப ரன்றனைக் கொன்றொ ழித்தவிழி
தசர தன்புதல்வர் தங்களை
வம்ப னேபுகழ்ந் தேத்து கின்றனை
மானம் வெட்கமுனக் கில்லையோ?

45. மாண கத்ததமிழ் மன்ன ரைச்செலும்
வழியில் வாழ்ந்தபல தமிழரை
நாண மின்றியே கொன்ற புல்லரை
நல்ல ரென்றுபுகழ் கின்றனை

---

42. கறுமை-கெடுமனம்.

44. பம்பி-மிக, வெந்-முதுகு.

ஆணை னப்பெயர் கொண்ட பேடியுன்
னறிவி ருந்தபடி யென்னவோ
வீண னேபகைவ ரைப்பு கழ்ந்திட
வெட்க மென்பதுனக் கில்லையோ?

46. மற்று மெத்தனை மன்ன ரைப்புகன்
மறவ ரைமட மாதரைச்
சுற்ற மோடுநட் புற்ற செந்தமிழ்த்
தோழர் வாழ்வுதொலை தீயரைக்
குற்ற மற்றவ ரென்று வாயினுற்
கூற வெட்கமுனக் கில்லையோ
பெற்ற வர்க்கொரு பிள்ளை யோபெரும்
பேதை யேபகை யல்லையோ?

47. குடியி ருந்தகன் மனையி லேயகோ
கொள்ளி வைத்தரிய கோட்டைகள்
முடிய நம்மினத் தவரை வீழ்த்திய
மோச வஞ்சமன வடவரை
நெடிய நல்லவ ரென்று கூறிடும்
நீயு மொருதமிழ் மருகனோ!
கொடிய ருன்னினு மொருவ ருண்டுமோ
கூறு வாயடா கொடியனே!

48. உமிழ கத்துநஞ் சுடைய பாம்பினை
யொத்த தமிழரறை போகினும்
அமிழ மாக்கட லின்னு முற்றொழுந்
தனைய முப்பெருகி வருகினும்
தமிழர் யாவரு மொழிய நாளொரு
தனிய னுகவுள வரையினும்
தமிழ கத்தொரு மண்ணு மாரியர்
தங்க ளுக்குரிய தாகவோ?

49. காட ழைவிய மலையெ லிக்குலங்
கல்லு மென்றுநடு நடுங்குமோ?
கோட ழைவிய மரம துஉமரங்
கொத்தி கொத்துமென வஞ்சுமோ?

---

47. மருகன்-வழித்தோன்றல்.
48. உமிழ் அகம்-வாய். அறைபோதல்-பகைவரைச் சேறல். அனை-தமிழ்த்தாய்.

பாட லுறுவினோர் சோம்ப லாம்படு
பாவி வரவையெதிர் பார்ப்பரோ?
பீட லுறுவுன தறிவி ருந்தபடி
பேச நாவுநனி கூசுதே.

50. மேவி யேகுலப் பகைவர் காலினில்
வீழ னப்புகலு மேவிலாப்
பாவி யேயுடன் பிறந்தை யாகையாற்
பழிமொ ழிந்தபத ரேயுன
தாவி போக்கிலே னொடி யேபிழைப்
பாய டாகுடி கேடனே
கூவி னுவினி யாவ தொன் றிலைக்
குட்ட னேயென்ற தட்டினான்.

## வேறு

51. இன்னன பலவா றுக வினறயவ னெரியிற் பொங்கி
முன்னரவ் வடவர் செய்த முறையிலா முறையை முற்றும்
இன்னென வெடுத்துச் சொல்ல விரண்டகன் பின்னு முன்னே
சொன்னதைக் கிளிபோற் சொல்லிச் சுருக்கென வெழுந்து போனான்.

(கும்பகன்வன்)

52. பின்றவன் சென்ற பின்னர்ப் பெருந்தகை கும்ப கன்னன்
வென்றிவே லண்ணு! வந்த வினைரை யிதோயான் சென்று
கொன்றொரு நொடியில் மீள்வேன் கோழையைச் சினக்க வேண்டா
அன்றியு மரத்தின் வேறொன் றகன்றிடி னசையு மோதான்?

53. கனையெரி முன்னர்ச் செத்த காடெனச் சுறவ முன்மீன்
இனமென வெங்கை முன்மா னினமெனப் பருதி முன்னர்ப்
பனியெனக் கிரி முன்னர் பாம்பெனப் பூனை முன்வீட்
டினமெனப் பகையை வீட்டி யிதோவரு கின்றே னண்ணு!

---

49. அணுவிய-பொருந்திய. பாடு அணுவினோர்-தொழிலாளர்.

54. தும்பியந் தொடையல் மார்ப சூழ்ச்சியே னிதற்கி யானைக்
கும்பலி லரியே றென்னக் கொடியவர் குழாத்துட்
பாய்ந்தே
இம்பரி லாரி யப்பூண் டிலாதொழித் திதோயான்
மீள்வேன்
நம்பிநீ விடைதா வென்ன நடுமகன் கனன்று கூறி.

**வேறு**

55. அண்ணவிதொ வடவாரிய ரருகோடியே யறிவில்
நண்ணார்குல மடியோடடி நகராமலே யொழியப்
பண்ணேனெனில், நலிவுற்றெழு பசிகொன்றசெய்
நன்றி
எண்ணுதொழி முழுமூடரி னிடருற்றினே வேனே.

56. சின்னஞ்சிறு வினமாலிடை செல்லும்புலி யென்ன
வன்னெஞ்சுடை வடவோர்தமை மடிவிக்குவ
லின்றேல்,
அன்னஞ்செறி பழனந்திக ழணிசெந்தமிழ் நாடா!
கன்னின்றிடு வேனீயது கண்டேமகிழ் வாயே.

57. கோள்வாயரி யேறுமெனக் குமுறிக்குல வடவோர்
ஆள்வேலையை மலைவேலினு ளழியக்குலை கலக்கி
மீள்வேனிலை யேல்வண்டுனும் வேரிப்புனல் நாடா!
வாள்வாயுறு வேனீயதை வந்தேயறி வாயே.

58. வன்னெஞ்சுடை வடவோர்தமை மாள்விக்குவ
னல்லான்
இன்னஞ்சில நாளெண்ணியே யிலங்கைப்புது வாழ்வை
முன்னங்கொடு வடவோரடி முடிவைத்தவ ரம்பால்
துன்னங்கொடு புண்ணேடுடற் சுமைதாங்கியே
வாழேன்.

59. கார்முற்றிய வகழிக்கிடை கதிர்முற்றியே வெயிலார்
ஊர்முற்றிய வடவாரிய ருயிருற்றுனும் போது
நீர்முற்றிய காலத்தினில் நிலைபெற்றகல் புள்ளை
நீர்வற்றிய நிலைகொட்டியை நெஞ்சுற்றிடு வேனே.

---

56. கல் நிற்றல்-நடுகல்லில் பொறிக்கப்படுதல்.
57. கோள்வாய்-கொல்லுதல் வாய்ந்த. வேரி-தேன்.
58. முன்னுதல்-எண்ணுதல். துன்னம்-தையல்.
59. எயில்-மதில். நீர்வற்றிய காலத்தில் அகல்புள். கொட்டி-நீர்ப்பூண்டு.

60. தொலையாவுல களவும்பழி துயர்மென்குழ லாளைக்
கொலையாளரை யடியோடுயிர் கொன்றேயொழி காலை
அலைமேவிய வளைநீள்கழி யதுவாழ்கடல் நாடா!
நிலையாமையும் பழிமானமு நெஞ்சந்துற வேனே.

61. இன்றைமையே யுருவாகிய விகலாரிய விருளை
மன்றமலே யொழிகாலையில் வடிவேலிரா வணனின்
பின்றேனென வுலகோர்சொலும் பெயருக்கொரு
குறையும்
துன்றமலே யொளிகாவிரு சுடரைப்பொரு வேனே.

(சேயோன்)

## வேறு

63. வளைபட்ட வெலிபக்க பகையுற்று வந்தே
மலைமுற்றி வலிதொக்க வளைபட்ட தாயின்
அளைபட்ட வரிசற்று வெளியுற்று நூறி
அவையத்தனையும்வெற்றி பெறவுற்றல் போல,
உளைபட்ட வடவோரை வெலநாளி ருக்க
ஒளிமிக்க வடிவேலைத் தொடவெண்ண லாமோ?
துளைபட்ட வமையாழி லிசைபெற்ற மஞ்ஞைத்
தொகையுற்று நடமாடு முயர்குன்ற நாடா!

64. அத்னைதக்குச் சினைகொன்று பகைதேடிக் கொண்ட
அறிவற்ற கொலைகார வடவோரை யீதோ
குத்துக்குப் பலநூறு குமுறுக்குப் பலவாக்
குலைவிண்ட தெங்கென்னத் தலைகொய்து வருவேன்;
முத்துக்கு வளையேறி முகம்வைத் துறங்க
முருகத்தனையுமுள்ள முருகப்ப டிந்து
தித்திக்குந் தேனுண்டு வரிவண்டு பாடும்
செந்தாம ரைப்பொய்கை சூழ்பண்ணை நாடா!

---

60. வளை-சங்கு. கழி-உப்பங்கழி.

63. வலிது ஒக்க-வலிகொண்டு ஒன்றாக. வளைபடல்-வளைத்தல். அளை-குகை. உளை-அழுகை. அமை-மூங்கில். மஞ்ஞை-மயில்.

64. தெங்கு-தென்னை. உக்கு-ஈன்று. முருகு-மணம். முருகு அத்தனையும் உள்ளம் உருக படிந்து-மணமுழுதும் மன முருகும்படி பொருந்தி. வரி-பாட்டு. சங்கு தூங்கத்தேன் உண்டு வண்டு வரிபாடும். பண்ணை-வயல்.

65. அப்பாநீ யிப்போதே போவென்று சொன்னால்
அறிவற்ற வடவோரை யொருசுற்றி லேயே
தப்பாமற் கழுகுண்ண விரையாகத் தருவேன்
தந்தையுன் றிருமுன்னர் விரைந்தோடி வருவேன்;
ஒப்பேது மில்லாது திசையெட்டுந் தேடி
ஒளிமிக்க கதிரோனு முறவுக்கு நாட
எப்போது மனமொப்ப தெனமிக்க வாடி
எதிரின்றித் தனிநிற்கு மிணையற்ற புகழோய்!

66. சொன்னாலிப் பொழுதேயப் பழிகார வடவர்
தொகையோடு நரிநாய்கள் சுவையாரத் தின்றே
எந்நாளிப் படியாவ ரிடவுண்டோ மென்றே
இசைபாடப் புகழ்சூடி யினிதோடி வருவேன்;
ஒன்னாரை யெதிர்கண்ட வுயிரோடிப் போக
உறவோரைக் குலைகாயி னுதிராடி யொன்னார்
மின்னாரைத் தனியாக வழவிட்டுப் பின்னர்
வேறொன்றுங் காணாமல் வெறிகொண்ட வேலோய்!

67. எந்தாய்நீ போவென்று தமிழ்வாய் திறந்தால்
இன்னாரை யுலகத்தி லின்றோ டிலாமே
இந்தாரு மெனவாரி நரிநாய்க ளுண்ண
இரையாக்கி யிமையாமுன் விரைந்தோடி வருவேன்;
சந்தாடிச் சினைவேங்கை மரந்தாவு மந்தி
தாய்நாணப் பிள்ளைக்குத் தலைவாழை யிட்டுச்
செந்தேனின் சுவையுண்ட பலவின் சுளையத்
தின்னென்ன வேயூட்டுந் திகழ்குன்ற நாடா!

---

65. புகழின் ஒளியைக் கண்டு கதிரோன் உறவை நாடினான். கதிர் புகாவிடத்தும் புகழ் புகுந்த தென்க. எப்போது ஒப்புக்கண்டு மனம் ஆறுதலடைவதென வாடி.

66. வேலை எதிர்கண்ட ஒன்னார் உயிர் ஓடிப்போக. ஒன்னார் ஐ; ஐ-சாரியை. உறவோர்-துணைவந்தோர். குலைகாய்-தென்னங்காய். உதிர ஆடி-உதிரும்படி கொன்று.

67. சந்து-சந்தனமரம். சுவை உண்ட - சுவையைக் கொண்ட-தேனினூறவைத்த சுளை.

68. பனைவெட்டி யெழுதுண்டு படவெட்டி யவையும்
பலபட்ட பிளவுண்டு படவெட்டு மொளிவாள்
திணிபட்ட சிறுதட்டை யதுபட்ட வீர்க்கின்
சிதர்வெட்ட வாய்காலிச் சிறைபுக்கு மோதான்;
சினைபட்ட பெருவாளை கமுகுக்க ளுண்டு
தெளிவற்ற வெறிகொண்டு புறமுன்றில் வீழப்
புனல்பட்ட கருமேதி யலைபட் டுழக்கும்
பூந்தாம ரைப்பொய்கை சூழ்பண்ணை நாடா!

69. பொருதாது தனிநின்ற பொருவற்ற வனையைப்
புகலின்றி யையோபெண் கொலைசெய்து கொன்ற
கருதாரை யிமையாமுன் கழுகுண்ணத் தந்து
கதிர்வேலி னவர்தும்பை யுதிராமுன் வருவேன்;
ஒருநாளி லேழெட்டுத் தேர்செய்யுந் தச்சன்
ஒருமாத மாராய்ந்து கைசெய்த வுருளின்
விரைவோடு வலிகொண்டு பொருதேம ரென்னோர்
விஞ்சாம லுயிருண்ணு மஞ்சாத மறவா!

70, பகையின்றி யேவந்து பகைதேடிக் கொண்ட
பழிகார வடவோரை யொழியாம லெவரும்
புகையொன்று மெரிபஞ்சுப் பொதிவீழ்ந்த தென்னப்
புகலின்றி முதுசோரி யுகவென்று வருவேன்;
தொகைநின்ற நிரைகன்றின் பசிதண்ட மேவச்
சுவையொன்று குழலோசை செவிகொள்ள வூதும்
நகைவென்ற நறுமுல்லை மலர்முன்றில் தோறும்
நல்லாயர் மல்வென்றி கொள்கான நாடா!

---

68. பலபட்ட பிளவு உண்டுபட-பலபிளவாக. சிதர்-நுண்மை, கள்-தேன். மேதியின் புறமுன்றில் வீழ. புறமுன்றில்-முதுகு. வாளை துள்ளிக் கமு கடைந்து கள்ளுண்ட தென்க.

69. அனை-தாடகை. புகல்-துணை. கைசெய்தல்-வினைத் திறமையோடு செய்தல். உருள-சக்கரம். மன்-உறுதியாக. விஞ்சாமல்-எஞ்சாமல்.

70. சோரி-இரத்தம். நிரை-பசுக்கூட்டம். தண்ட-நீங்க. நகை-பல் மல்-உடல்வலி.

71. பொல்லாத வடவாரி யரைவென்று வாகை
புனையேனேல் நமதன்னை மொழியான தமிழைக்
கல்லாது காலங் கழித்தே யுயிர்க்கும்
கடைகெட்ட தமிழ்மக்கள் அடியொற்றி வாழ்வேன்;
மெல்லோதி மார்தாழை வீழுச வேறி
வெள்ளைப் பமைப்போர் விருந்துண் டுவப்பச்
சொல்லாருங் கானல் வரிபாடி யாடும்
தொகுமுன்னை யங்கானல் சூழ்செய்த னூடா!

72. ஐயாநீர் கட்டாமற் சிறியே னுவக்க
அடல்வாகை புனையென்று விடைதந்தீ ராயில்
உய்யாய வெரிபுன்னவர் வைத்தாறு போல
ஒல்லாரை யறவென்று வருவேனவ் வாறு
செய்யேனே லெதிராளர் வாள்வீசி யாடச்
செஞ்சோரி பாயுங் களப்பட் டொழிவேன்;
பொய்யாத மொழிவல்ல புலவோர்கள் பாடும்
பொன்றாத புகழ்கொண்ட பொருவற்ற வெந்தாய்!

### வேறு

73. என்றலுந் தமிழர் வாழ்வுக் கிலக்கண மாக வுள்ளோன்
குன்றன குவவுத் தோளாற் குழந்தையை யிறுகப் புல்லி
உன்றனை மகனாப் பெற்றேற் குறுகுறை யுண்டோ மைந்தா!
வென்றிசீ னுவந்தே னாங்குன் வெஞ்சின மொழியைக் கேட்டே.

74. போரெல வுவந்து போரிற் புலியெனப் புகுந்து முற்றும்
ஆரிய வினமான் கற்றை யழித்துமீள் குவையென் மைந்த!
யாருனக் கெதிரில் நிற்றற் கருமுர ணுடையார் மண்ணில்
வீரநின் றேற்றங் காணின் வெருக்கொளாப் பகைவ ருண்டோ?

---

71. அடியொற்றி-பின்பற்றி. ஓதி-கூந்தல். விருந்து-புதிய அழகு. கானல்வரி-ஒருவகைப் பாட்டு.

72. அடல்-வெல்லுதல். எதிராளர் வாள்வீசி ஆடல்-எதிர்பொருது பட்டவனைப் பகை மறவர் சூழ்ந்து வாளை வீசிக் கொண்டாடுதல்.

74. கற்றை-தொகுதி. அருமுரண்-மிக்கவலி.

75. தும்பியார் தொடையல் மார்ப! தொகுபனிப் படலம் வானில்
வெம்புவெங் கதிரின் முன்னர் மிடலொடு நிற்ற லுண்டோ?
நம்பியுன் றோற்றங் கண்டால் நன்றிலா வடவர் சும்மை
அம்பினைச் கலைக ளுக்கி யலறியே யோடு மன்றோ?

76. இன்னன பலவுங் கூறி யிறையவன் மகனை வாழ்த்தி
இன்னையே தும்பை சூடி யிகலரை யழித்து மீள
மன்னிய தறுகண் வாய்ந்த மறவரைத் தொகுத்தி ரென்னத்
தன்னிக ரில்லாத் தானைத் தலைவருக் காணை யிட்டான்.

77. தருக்கொடு தலைவ னாணை தலைமுடித் தலையிற் றாங்கிப்
பொருக்கென வெழுந்து தானைத் தலைவர்கள் புலியிற் போனார்,
இருக்கைவிட் டெழுந்தெல் லோரு மிறைவனை வணங்கிப் போனார்,
மருக்குலா மாலை மார்பன் மதிவலார் தம்மைப் பார்த்தே.

78. பாவிகள் தமையின் றோடு பழந்தார் முகத்தி லாமல்
ஓவிலா தொருவ ரேனு மொழித்துமே வென்றி காணற்
காவன புரிதி ரென்ன வனுப்பியே தாரிமுர் கோவும்
தேவியோ டெழுந்து சென்று திருமணிக் கோயில் புக்கான்.

## 3. அடைக்கலப் படலம்

1. பேரவை கூட்டி யண்ணல் பெருந்தமி ழிலங்கை முற்றும்
ஆரியர் செயலைப் பற்றி ஆய்ந்ததோ ராய்வு கண்டாம்;
பேரர யடைய வேண்டிப் பீடணன் எனப்பேர் பெற்ற
பூரியன் வடவன் தன்னைப் புகலடைந் ததனைக் காண்பாம்

---

75. சும்மை-கூட்டம். கலைகண்-வலைதறுகோல்.
76. தறுகண்-அஞ்சாமை.
77. மருகுலாம்-மணம் பொருந்திய.

2. தமிழர்பே ரவையை விட்டுச் சலிப்புட னெழுந்து சென்று
உமிழகத் துயிர்கொல் நஞ்சை யுடையபாம் பனைய பாவி
தமிழருக் கியல்பா யுள்ள தன்மதிப் பதனை நீத்துத்
தமிழருக் கழிவு காணத் தன்னலத் துறைபுக் கானே.

3. கரவிடை மருவி வாழுங் கள்வரின் களவுக் கேற்ப
இரவிடை யுதவி செய்யு மிருளினு மிருண்ட நெஞ்சன்
அரவிடை யமரு நஞ்சு மஞ்சிடச் செய்யும் வஞ்சன்
புரவிடை யழிவு செய்யும் புன்மையிற் றலைப்பட்
டானே.

4. வாலியின் தம்பி போல வாழவைத் திடுவே னென்று
போலிமுன் சொன்ன சொல்லின் பொருளினை யுண்மை
யாக்கும்
வேலையின் முனைந்து பாயும் வேங்கையை யடைய
வெண்ணும்
காலியின் கன்று போலக் கயமையின் தலைநின் றானே.

5. தன்னுடன் வருவ தாகத் தாமுன மொப்புக் கொண்ட
நன்னெறி கடந்த நீலன் முதலிய நால்வ ரோடு
புன்னெறி யுடையா னோடிப் போய்ப்பகைப் புலத்தி
ராமன்
தன்னடி யுறையாய் வாழத் தான்புறப் பட்டா னம்மா.

6. கோவிலை யகன்று மாடக் கொடித்தெரு வதனைத்
தாண்டி
பாவல ருள்ளம் போன்று பழம்பெரும் பதியை நீங்கிக்
காவினை யழித்துப் பூவின் கடிமணங் கொள்வான்
போன்ற
பாவியும் பகைவர் தங்கும் பாடியைக் குறுகி னானே.

7. தன்னினத் தமிழர் சாவைத் தனதுவாழ் வாக
வெண்ணித்
துன்னலர் துணையை நாடித் துறந்துநாண் மானத்தோடு
நன்னெறி யிதுதா னென்று நடந்தவத் தீயோர் தம்மை
இன்னலர் பாடி காத்தாங் கிருந்தகா வலர்கண் டாரே.

---

3. புரவு-காப்பு. இங்கே-தமிழர்.
4. காலி-மாடு.
5. அடியுறை-அடிமை.

8. யாரென வென்றார் கேட்ப அடிமையா னாது தானீன்
றாரென வந்த வார்த்தை யறையவே யொருவன் சென்று
சூரியன் வரவு கூறப் புதைபொரு ளடைந்தாற் போல
ஆரிய னுவந்து கூவி யனுமனைப் புகழ்ந்து பின்னும்.

9. மற்றவர் தமக்கு முற்ற வரன்முறை சொலவெல்
லோரும்
பெற்றனம் பெரும்பே றென்னப் பெருமகிழ்க் கடலில்
வீழ்ந்தாழ்
வுற்றனர்; முன்னைக் கொன்ற வொப்புயர் வில்லா
நல்லோன்
கொற்றவில் லவனைப் போற்றிக் குறிபிழை யாத
வில்லோய்!

10. தன்னரு முறவு தன்னைத் தான்மதித் திலனென் றாலும்
தன்னுடன் பிறந்த தங்கை தனைமறப் பானோ? முன்னை
இன்னலர் நக்கிர முற்ற இடர்க்கடல் வீழ்த்து வந்தோன்
தன்னைநம் புதல்தீ தென்னத் தன்னையு மறந்து
சொன்னான்.

11. அவ்வகை யெண்ண வேண்டாம் ஐயநீ யடைந்த வாறே
எவ்வகை யேனு மன்னா னெய்தவே யிலங்கைச் செல்வம்
செவ்விதி னடைந்தா னீங்கு சிறிதுமே ஐய மின்றாம்
உய்வகை யாக்கல் மேலும் உறுதியென் றனுமன் கூற.

12. நன்றுநன் றென்றார் மற்றோர்; நன்னெறி யில்லா ராமன்
அன்றொரு போது மன்னா னறைந்தசொல் லதனைத்
தட்டான்
பொன்றினும் புகலா வந்து புக்கரை விடல்நன் றன்றே
சென்றுநீ கொடுவா வென்றச் சிறுமதி யவனை யேவ.

13. முன்னனைப் பிறனாற் கொன்று முடிபுனைந் தரச னானான்
அன்னதை யவாவி யேயாங் கடுத்தவன் றன்னைக் கிட்டி
'மன்னவா! இராமற் காண வரு'கெனச் சொல்லா
முன்னம்
புன்னெறி யுடையான் சென்று புகலென வடியில்
வீழ்ந்தான்.

---

13. அன்று - அல்ல.

14. வீழ்ந்தெழுந் துரிமைச் சுற்றம் வெறுக்கினும் புகலா வந்து
தாழ்ந்தவர் தமைக்கை நீக்காத் தகுதிமேம் பட்டவுன்னைச்
சூழ்ந்ததிக் குடும்ப மென்னும் தொடர்பறுத் துய்ந்தார் போல
வாழ்ந்தன னெளியேன் சார்ந்து மழையெனப் பொழியும் வில்லோய் !

15. உன்மனை தன்னை விட்டு விடும்படி யொருபோ தல்லப்
பன்முறை யெடுத்துச் சொன்னேன் பாவிகேட் டானே வில்லைக்
கன்மன முடையா னென்னைக் கடிந்துநீ நாட்டை விட்டுச்
சென்மெனத் துரத்த வந்து சேர்ந்தனன் புகலா யுன்னை.

16. அறத்தினைக் காப்போ னென்ன அனுமன்முன் னெடுத்துச் சொன்னான்
மறத்தினை யுடையா னோடு வாழ்வதிற் பகைவ னாகி
இறத்தலே தகுதி யென்ன வெய்தினே னண்ணல் என்னைத்
துறத்தலும் புரத்த லுங்நின் றுணிவினைப் பொறுத்த தாகும்.

17. தன்னிக ரில்லா வைய ! தமிழரை வெலவுந் தாவில்
நன்னலம் பொருந்தி லங்கை நகரினை யழிக்க வுந்தான்
என்னுயி ருள்ள மட்டு மியன்றதோ குதவி செய்வேன்
என்னையோர் பொருளா வெண்ணி யேவல னாக்கிக் கொள்வாய் !

18. என்றவ னிருகை கூப்பி யேத்தியே தொழுது நிற்கக்
குன்றெனத் திரண்ட தோளான் கொடுங்கையா லணைத்துப் புல்லி
' இன்றிருந் திலங்கைச் செல்வ மெம்பிறா னுனக்குத் தந்தேன்
சென்றுநீ யிலங்கை வேந்தாய்ச் சிறப்பொடு வாழ்தி ' யென்ன.

---

16. மறம்-பாவம். புரத்தல்-காத்தல்.

19. அடிமைகொண் டவனைப் போருக் கருந்துணை யாகக்
கொள்ளக்
கடிதினிற் றம்பி தன்னூர் கடலினீர் கொணர்ந்து பெய்து
முடி புனைந் திலங்கை வேந்த னுக்கியே முறையொன்
றில்லாக்
கொடியவ னினகொள் ளார்தேங் குறித்தகொற்
றங்கொண் டானே.

20. நன்றிலான் துணையாய் வந்த நால்வருக் குரிய கூறி
வென்றிவேல் மன்னர் மன்னன் மேதகு பெருமை
கேட்டுச்
சென்றெதிர் காலை முற்றச் செய்ம்மெனப் பணித்தி
ருந்தான்;
ஒன்றிய பழியோர் செய்த உளவினை யறிதல் காண்பாம்.

## 4. உளவறி படலம்

### வேறு

1. பெரியரோடு மரியதானைப் பெரியரோடு மறைமொழிக்
குரியரோடு முறவினோடு மொழிவெதிர்வு நிகழ்வினைத்
தெரியரோடு மருவியாய்ந்து சென்றதென் னிலங்கைமன்
கரியகூந்த லிறைவியோடு கழறியாங் கிருக்கையில்.

2. ஓடிவந்து படபடக்க ஒற்றர்கள் வணங்கவே
கூடுமான தின்னவென்று கூறுக வெனவவர்
ஈடிலா விலங்கையாளும் இறைவவாழி வாழிநம்
பீடணன் செயலெமக்குப் பேசவெட்க மாகுதே.

3. ஐயனேயென் சொல்லுவோம தறையநா வெழவிலை
வெய்யனே வறிவிலாத வீணனே இரண்டகஞ்
செய்யவேண்டு மென்றுகாலந் தேறியெவ் வளவுநாள்
துய்யனே! யிருந்தனேவச் சொரணையற்ற கடைமகன்.

---

19. இன - இவ்வாறு. கொள்ளார் தேம் குறித்த கொற்றம் - கொள்ளு முன்னே அயலார் நாட்டை இன்னொருவனுக்குக் கொடுத்தல். (புறத் - 21 - 1.)

1. மறை-ஆய்வு. மறைமொழிக்குரியர் - அமைச்சர். ஒழிவு எதிர்வு நிகழ்வு தெரியர்-அறிவர். முக்காலத்தையும் ஆராய்ந்தறிபவர்.

4. எந்தையேயென் சொல்லுவோ மிரண்டகன் செயலினை
சிந்தையில் நினைக்கவும் திடுக்கிடு தடுக்கிலான்
வெந்தபுண்ணில் வேலுழைக்கும் வினைர்போல வாரியர்
வந்தவேகம் மூரைவிட்டு நடந்தனன் புகைப்புலம்.

5. அன்றுவந்த வனுமனு மடைந்துபீட ணன்மனை
வென்றிவாளி கொலையினை விளம்பியாவ லூட்டிநீ
சென்றுசேறின் வடவனைச் சிறந்தசுக்கி ரீவனின்
ஒன்றிவாழ வைப்பனென் றுளவுகூறிச் சென்றனன்.

6. உளவுவந்த வனுமன்சொல்லை யுறுதியாகக் கொண்டுமே
களவுகொண்ட கள்வர்போலக் கவலைகொண்ட
முகமுடன்
அளவுகொண்ட படைவலார்க ளானநால்வ ரோடவன்
குளமகன்ற பறவைபோலக் குந்தியாங்கு வந்தனன்.

7. கொடியரான நீலன்வேலன் குயிலன்நேரி யாகிய
படைவலாரி னோடுகூடிப் பழிமலிந்த பாவியும்
வடவராமன் றனையடைந்து மலரடி பணிந்துமே
அடிமையாகி யவனுளானவ் வறிவிலாத வடவனும்.

8. அடிமை தன்னை யிலங்கையாளு மரசனுக்கி யவனதா
முடிபுனைந்து துணைவனுக்கி மூண்டசேனை சூழ்தர
விடியுமுன்ன ரிலங்கைதன்னை வென்றுதந்து மீள்வதாங்
மடவனீது புகலவோடி வந்தமென் றுரைத்தனர்.

9. அவ்வுரைசெ விபுகாமு னண்ணலுங் கொதித்தெழாக்
கொவ்வையென்ன விருகணுங் குறுக்கினிற் சிவப்புற
ஒவ்வுமொவ்வு மடிமைவாழ்வ துணர்விலாத விரண்டகந்
கெவ்வகையு மொவ்வுமென் றிதழ்கடித் தழன்றுமே.

10. உடன்பிறந்த விளவலென்னு முறைகழிந்தின் றோடென
துடன்பிறந்த பகைவனென்னு முறைவழங்க, ராமனுக்
குடன்பிறந்த வடிமையான வொப்பிலாத பாவியை
உடன்பிறந்த கழலையென்ன வுயிர்குடிப்ப னிவனையே.

---

8. மடவன்-அறிவற்றவன்.
10. கழலை-உடலிற் றோன்றுங் கட்டி.

11. என்னையொத்த வாலியோ டெழுந்தசுக்கி ரீவனும்
தன்னையொத்து வடவராமன் றன்னையுற் றடைந்தவன்
முன்னையொத்தி னென்னையு முடிக்கவெண்ணு ங்
கொடியவன்
தன்னையொத்த கொடியரிந்தத் தமிழகத்தி லுண்டுமோ?

12. நம்பினோரைக் கொன்றொழிக்கு நல்லபாம்பி னல்லவன்
தம்பியாக வந்தவெனக்குத் தான்பிறந்து பசியடும்
கம்பழித்துக் களைவளர்க்குங் கயவனுக் கடிமையாய்க்
கொம்பைவெட்டுங் கோடரிக்குக் கொடிகாம்பு
மாயினன்.

13. புகலவெட்க மாகுதென்ன புதுமையோ வுலகினிற்
பகலிருக்கு மளவுமிக்க பழியிருக்க வேகுலப்
பகைவனுக் கடிமையான பாவியைத் தமிழரெவ்
வகையினிற் கொலாதுவிட்டு வைப்பரோ வறிகிலேன்.

14. படைக்கலந் தரித்தகாலு பதர்களோடு கூடியே
நடைப்பிணந் தனைத்தக நடந்துசென்றி ராமனை
அடைக்கலம் புகுந்தபாவி யறிவிருந்த தெண்ணவே
மடைக்கல மெடுத்தகன்ற மங்கைபோலு நல்லளே?

15. எதிரிவந்து நகரைமுற்ற விருக்குநல்ல வேளைபார்த்
ததரிலாத வதரிலேகி யாரியர்க்க டிமையாய்ப்
புதரிருக்கும் புலியையூரிற் புகுதவைப்பர் போலிய
பதரையெண்ண வெண்ணவுள்ளம் பதைபதைக்கு
தையகோ.

16. அரசவேண்டு மென்றெனக் கறிவுறுத் திருப்பனேல்
வரிசையோடு முடிபுனைந்து மன்னனுக்கி டேன்கொலோ;
பரிசிலாக வடிமைகொண்டு பகைவராற் றரப்படின்
தரிசுகண்ட நிலமதோசெந் தமிழர்கள் பொறுப்பரோ?

---

14. மடைக்கலம்-சோற்றுப்பானை.
15. அதர்-வழி.

17. களவுகொண்ட கள்வர்போலக் கையுங்காலுங் கொண்டுமே
பளகுகொண்ட பதர்களான படைத்தலைவர் தம்முடன்
உளவுகொண்ட வொருவனாகி ஓடினானை நாளைநாம்
விளிவுகொண்ட மாயினந்த மேவலர் சிரிப்பரே.

18. மானமின்றிப் பகைவனான வடவனுக் கடிமையாய்ப்
போனபேடி தன்னைவீண் புலப்பதாற் பயனிலை
யானையோடு குதிரைதே ரருந்திறல் மறவராஞ்
சேனையோடு காலையே செருக்களம் வகுக்குவீர்.

19. என்றுதானை மன்னருக் கியம்பவத் தலைவரும்
சென்றனர்வ ணங்கியன்ன செய்யவே திறலொடு,
குன்றெனவு யர்ந்தமாடக் கோயிலைக் குறுகியே
வென்றிகாணும் வேளைநாடி வேந்துகண் வளர்ந்தனன்.

20. வரைவிட் டிரண்டகஞ்செய் தோடினோரை யொப்பவிப்
பாரைவிட் டிருளெனும் பகைத்திர ளகலவே
தாரைவெட்டி வாகைசூடுந் தமிழராண்மை காணவே
காரைவெட்டிக் கதிர்பரப்பிக் கதிரவ னெழுந்தனன்.

## 5. போர்க்கோலப் படலம்

### வேறு

1. சிற்றறி வுடையவன் சென்றி ராமனை
உற்றதை யொற்றரா லுளவு கண்டனம்;
நற்றமிழ் மறவர்கள் நவையில் வெஞ்சமர்க்
கொற்றம துடையபோர்க் கோலங் காணுவாம்.

2. பகலவன் செங்கதிர் பரப்பி வல்லிருட்
பகைகெடக் கிழக்கிலிற் றோன்றப் பாங்குடன்
தொகுகதிர் வேலவன் சொன்ன சொற்படி
தகைமிகுந் தமிழ்ப்படைத் தலைவர் சட்டென.

---

17. பளகு-குற்றம். விளிவு-சாவு. மேவலர்-பகைவர். தம்மினத்தினரையே கொள்கிறுரெனச் சிரிப்பர்.

20. தார்-ஒருவகைப் படைவகுப்பு. கார்-இரவு.

1. நவை-குற்றம், தவறு. கொற்றம்-வீரம்.

3\. ஊனினை யுண்டுட லோம்பு மாரியத்
தானையொ டவனையுஞ் சாம்ப லாக்கவே
ஏனெனு முன்னுடன் றெழுக வென்னவே
யானையின் மிசைமுர சறைவித் தாரரோ.

4\. போர்முர சொலிசெவி புகாமுன் மள்ளர்கள்
கார்முக விடியெனக் கனன்று சீறியே
நீர்மரு வியலில னெளிய வாரியப்
பேர்வெறு வியதெனப் பேசி யார்த்தனர்.

5\. இத்தனை நாளுநம் மிரண்டு தோள்களும்
செத்தவன் கைகளிற் றேம்பி வீண்படப்
பொத்திய தசைப்பொதி பொறுத்து வெம்பிட
வைத்தன னிறையென வருந்து வார்சிலர்.

6\. பழந்தமி ழகத்திடைப் பகையின் றுயதால்
செழுங்கதிர் விளைந்திடாச் செய்யி னச்செயின்
உழுந்தொழில் புரிந்திடா வுழவர் வாழ்வெனக்
கழிந்தன பகலெனக் கலங்கு வார்சிலர்.

7\. தண்டமி ழகத்திடைச் சமரின் றுயதால்
உண்டன மொக்கலோ டுவப்பக் கண்டுயில்
கொண்டன மெழுந்தனங் குருதி யாற்றினைக்
கண்டன மிலையெனக் கனலு வார்சிலர்.

8\. அருந்தமி ழகத்திடை யமரின் றுயதால்
கருந்தனந் தேடியுங் கலவை பூசியும்
வருந்தினர்க் குதவியும் வைகல் போக்கியா
மிருந்தனம் வீணிலென் றினையு வார்சிலர்.

9\. செந்தமி ழகத்திடைச் செருவின் றுயதால்
முந்தையோ ரொழுகிய முறையிற் றப்பியே
வெந்தசோ றுண்டுநாள் வீணிற் போக்கியே
வந்தன மெனவுளம் வருந்து வார்சிலர்.

---

3\. அவன்-ராமன். உடன்று-சினந்து.
4\. வெறுவியது-இல்லையாகும்.
6\. செய்-விளைநிலம்.
8\. கருந்தனம்-பெரியசெல்வம். வைகல்-நாள்.

10. இளமையும் வலிமையு மீடுஞ் செல்லுறுங்
கிளையொடு நட்பொடுங் கெழுமிப் பல்வகை
வளமுட னுண்டுடீஇ வாழ்ந்த நன்றிநாட்
களமறிந் திலமெனக் கவலு வார்சிலர்.

11. விஞ்சிய நிரைகவர் வெட்சி வேய்ந்திலம்
வஞ்சியுஞ் சூடிலம் மண்பொ தின்மையால்;
துஞ்சிகல் தும்பையுஞ் சூடி லோமென
எஞ்சிய நாட்களை யெண்ணு வார்சிலர்.

12. கானிடை நடந்தருங் களவில் வந்துநம்
ஆனிரை கவர்ந்துசெல் லவரை வீட்டியவ்
வானிரை மீட் கில மரிது பல்பகல்
போனது வறிதெனப் புலக்கு வார்சிலர்.

13. கிடங்கிடை யுதிரிலை கெழுமத் தெவ்வரை
அடங்கவே யெப்புழை யம்பு தொட்டிலம்
ஒடுங்கிய மனத்துட னுண்டு டுத்துவீண்
முடங்கின மெனக்கையை முறுக்கு வார்சிலர்.

14. என்றுமே பேணியீ லேறிக் கண்டிலம்,
ஒன்றிய பதணத்தி னூடுஞ் சென்றிலம்,
மன்றிடை யாடியும் வயிற்றை யோம்பியும்
சென்றன வகவெனச் சிணுங்கு வார்சிலர்.

15. தண்ணெனக் குளிரிய தமிழ கத்திடை
எண்ணிலா நாட்களா விகல மின்மையால்
புண்ணிலா மார்பினைப் பொறுத்து வெற்றுணா
உண்ணியே கழித்தமென் றுறுமு வார்சிலர்.

---

10. இருநாட்டிடைய படும பொதுநிலம் பெறுவது வஞ்சியாகும். துஞ்சு இகல்-சாதற்குக் காரணமான போர்.

12. வீட்டி-வென்று. புலத்தல்-வெறுத்தல்.

13. கிடங்கு-அகழ். உதிர் இலை கெழும்-கரையிலுள்ள மரத்திலிருந்து கிடங்கினகண உதிரும் இலைபோல. எப்புழை-அம்பெய்யுந்துளை; இது மதில் முடியிலுள்ள ஏவறையிலுள்ளது.

14. பதணம-மதில் முடியிலுள்ள மதிலுள்மேடை, மன்று-மாததடிப பொதுவிடம். அகவு-வயது.

16. அமிழ்திலை யெனவிளை தளித்த லன்றியே
திமிரிய வெமதுதோட் டினைவு தீர்த்திட
அமரினை யளித்திலை யுறந்த வாதசெந்
தமிழிரா வணனெனச் சலிக்கு வார்சிலர்.

17. இத்தனை நாட்களா வெதிரி யின்றியே
பொத்திய வுறையினுட் பொதிந்து மாழ்கினிர்
அத்தனை போதுமின் றளிக்கு வேமென
முத்தமிட் டொளிறுவாள் முனையை நோக்குவர்.

18. ஆலிலை பிசைந்தவ ரன்னை மாரமுச்
சேலையைப் போர்த்தவர் தேவி மாரமுக்
கோலிய களத்திடைக் குவிக்கு வீரென
வேலிலை நுனியினை வெகுண்டு நோக்குவர்.

19. துடிகறங் கிடக்கழற் றெழுதி யார்த்திட
கொடியினிற் பகைத்திரள் கொடிய வென்றியாம்
அடைகுவ மென்னவே டர்ணி மேவிய
கொடியினை யுயர்த்தியே கூடி யாடுவர்.

20. முதுக்குறை வின்மையால் முரண்கொ ளாரியர்
நதுக்கென வெருவியே நடுந டுங்கிடப்
பொதுக்கென முகிலிடைப் புகுந்து மேக்குயர்
மதிக்குடை யுயர்த்தியே மருவி யாடுவர்.

21. கேளொடுங் கிளையொடுங் கெழுமி யின்றெடு
நாளுலந் தனபகை நாடி னார்க்கென
ஆளினை யூக்கியே யணிவ குத்தொளி
வாளினை நாட்டியே மறவ ராடுவர்.

---

16. அமிழ்து-சோறு. திமிரிய-வளர்ந்த. இனைவு-ஊறல். தமிழ்இராவணன்-தமிழ், தமிழர், தமிழ் நாட்டிற்குடையவன்.

18. ஆலிலை-வயிறு. கோலிய-ஏற்படுத்திய.

19. துடி-ஒருவகைப் பறை; முரசுமாம்.

20. முதுக்குறைவு-பகுத்தறிவு. முரண்-மாறுபாடு. நதுக்கென-திடீரென. பொதுக்கென-விரைவினும் எளிதினும். மேக்கு-மேல்.

22. கோலிய போர்க்களங் குறித்த வொன்னலர்
வாலிழை யவர்தனி மகிழ்ந்து வாழ்வுறுங்
காலம தின்றொடு கழிந்த தென்றெளி
வேலினை நாட்டியே வீர ராடுவர்.

23. அடிமிசை யொலிகழ லஞ்ச வீக்கியே
பொடிபட வொன்னலர் பொன்ற நூறிட
மடிபட மறவர்கள் மறஞ்சி றந்திடத்
துடியினை முழக்கியே சுற்றி யாடுவர்.

24. வெற்றிவை வாள்முனை வீழ்ந்து தன்னருஞ்
சிற்றுயிர் வழங்கின னொருவல், தீர்கிலாக்
கொற்றவாள் கிழித்துடற் குருதி யீந்தனன்,
மற்றவர் மறத்தினை வகுத்தல் வேண்டுமோ?

25. துற்றிய வினியசெஞ் சோற்றுச் செய்கடன்
முற்றுற வாரிய முனைப்பு லங்கெட
வெற்றியை யெய்திட வேண்டி வெற்றியாங்
கொற்றவை பரவியே குழுமி யாடுவர்.

26. பகலவ னகலுமுன் பகைப்ப னிக்குலத்
தொகையினைக் கதிரெனத் தொலைத்தி லேமெனில்
தகதக வெனவொளிர் தழலில் வீழ்ந்தியாம்
புகழொடு தெவ்வர்முன் பொன்று வேமென்பார்.

27. கப்பிய பகைவரைக் கங்குல் போதுமுன்
தப்பிலா தடுகளஞ் சாய்த்தி லோமெனில்
ஒப்பியே கொல்படைக் கலங்க ளொன்றையும்
துப்புறழ் கைகளாற் றொடுகி லோமென்பார்.

28. வளைப்படு கையினீர் வாகை சூடியாம்
ஒளித்தொகை யொடுமனை யுற்றி லோமெனில்
அளித்தொடர் வெறிப்புன லள்ளற் கண்படு
களிற்றினத் தடியினிற் காண்டி ரென்பரால்.

---

23. அஞ்ச, பொன்ற ஆடுவர். வீக்குதல்-கட்டுதல். மடி-சோம்பல்.
25. துற்றல் - உண்டல்.
27. துப்பு - வலி.
28. ஒளி-மிகுபுகழ். அளி-வண்டு. அள்ளல்-சேறு.

29. திண்டிற லீர்நறுந் தேனங் தூமொழி
ஒண்டொடி சினை சிதைத் தொழித்த பாவியைத்
துண்டுசெய் தீர்ங்குழல் தொட்ட கையினைக்
கொண்டுவந் தெமக்குநீர் கொடுக்கு வீரென்பார்.

30. கயிறதாத் திரித்துமான் கன்றைக் கட்டிடச்
செயிரறு செம்பொனிற் செய்த பாவையின்
உயிரினைச் சினை சிதைத் தொழித்த பாவியின்
மயிரினை யறுத்துமே வாரு மென்பரால்.

31. பாட்டியைக் கொன்றுபெண் பழிகொள் பாவியைச்
சாட்டையா லெங்கள்கை சலிக்கச் சாடியே
வாட்டடங் கண்ணொடு வடக்க ணோட்டிடக்
கூட்டினி லடைத்துமே கொணரு மென்பரால்.

32. நன்னலஞ் செறிதமிழ் நங்கை மாரொடு
பன்னலஞ் செறிந்தபொற் பாவை கைசெயத்
துன்னவர் முடிமணி தொகுத்துக் கொண்டுவந்
தின்னலம் புரிதிரென் றியம்பு வார்சிலர்.

33. கலம்படு முறுப்பினைக் களைந்து நந்தமிழ்க்
குலம்படு நங்கையைக் கொன்ற வன்மனை
புலம்பிட மாமுடிப் பொன்கொ ணர்ந்துசெஞ்
சிலம்புசெய் தணிகுவந் தெளிமி னென்பரால்.

34. அரிக்குகை தனையடுத் தளவி லாக்குறு
நரிக்குலஞ் சூழ்ந்தபோல் நமதி லங்கையைப்
பொருக்கெனச் சூழ்ந்தவப் புல்லர் தங்களை
முருக்குவ மிமையென முரணி யார்க்குவர்.

35. காழ்த்திற மறவர்கள் களித்துக் கண்கொளப்
பாழ்த்திற வாரியப் படையை மண்கொள
வீழ்த்தியே யின்னையே வெற்றி கொண்மென
வாழ்த்தியே படைக்கலம் வழங்கு வாரரோ.

---

30. செயிர் - குற்றம்.
31. வாள் தடம் கண் - சீதை.
32. கை செய்தல் - அலங்காரஞ் செய்தல்.
33. கலம் படும் - அணிகலன் அணியும்.
35. காழ்-உறுதி. கண்கொளல்-கடுஞ்சினங்கொளல்.

36. கட்டிய கழலிணை கறங்கக் காலிதிப்
பட்டம தடைந்திறை பார்வை தாங்கியோர்
தட்டிலாத் தமிழ்ப்படைத் தலைவ ராயரை
மட்டவிழ் தும்பைதுய் மறவ ரேத்துவர்.

37. சினத்துமே செல்லுமிச் செழுந்த மிழ்ப்படைக்
கெனைத்தவர் பிழைத்தன ரிறுதி காணுவர்
இனித்தடை யிலையென விரங்கி நீள்கொடி
மனைத்தலை மடந்தையர் வள்ளை பாடுவர்.

38. தானையை யிலகுபைந் தழைய தாக்கியே
தோலிவந் தொழுகுநீர்ச் சோரி தேக்கியே
யானைக ளுகளுசே றதனி வாரியர்
நானுனி முடித்தலை நடுவ மென்பரால்.

39. பெற்றவ ருவப்புறப் பிழைத்த வின்றியே
பெற்றவிவ் வுடற்பயன் பெற்ற மின்றென
உற்றவ ரோடுதா முறுதி யாய்ப்பெறுங்
கொற்றம திவையெனக் கூறு வார்சிலர்.

40. மாணிழை விறலியர் மகிழின் விம்முவர்
பூணிய பறைகுழல் புதிது பண்ணுவர்
யாணரின் றேயடைந் தேமென் றார்வொடு
பாணர்கள் சீறியாழ்ப் பண்ணு வாரரோ.

41. அல்லொடு பகலுறை யமர்ந்த தாழ்வுபோய்ப்
புல்லியே புகையுடற் புதிய வாழ்வுறும்
பல்லிய படைக்கலம் பழுது பார்த்திடக்
கொல்லர்க ளுதுலை குருகை நோக்குவர்.

---

36. மட்டு - மணம், தேன்.

37. வள்ளை - உலக்கைப் பாட்டு.

38. தோல் கிவந்து - தோலினின்று தோன்றி. நால் நுனி-தொங்கும் நுனி. உகளுதல் - இரிந்துழக்குதல்.

41. புல்லுதல் - பொருந்துதல். பல்லிய - பலவாகிய. உலைகுருகு-உலையையும் துருத்தியையும்.

42. தெருத்தலை முரசொலி செவிபு காமுனம்
பொருக்கெனச் செருக்களம் புகுந்து மூக்கியே
இருக்கையை யெய்துவ மென்ன மாக்குலம்
தருக்கொடு மதிற்கவர் தாவிக் கத்துமால்.

43. வெளிறிய கோட்டினுல் விலங்கிக் கால்துவைத்
தொளிறுவான் மறவரி னுயிருண் டோமெனப்
பிளிறியே யுடலினைப் பீறி மொய்வெறிக்
களிறுகள் வெளிப்படக் கந்தை யுந்துமால்.

44. ஆரியர் துவன்றிய களத்து ளாம்பிணச்
சோரியி னிடையுருள் துவண்டு சேப்புறத்
தேரினை யிழுக்கவே திரண்டு மாக்களை
வாருமென் றுயர்கொடி மலர்க்கை காட்டுமே.

வேறு

45. தெருவி லாடிளஞ் சிறுவனைச் செருப்பறை கேட்டே
உருவ வொண்கழ லணிந்துடை யுடுத்தியா ரியரைக்
கருவ றுத்துவா வென்றுவேல் கைகொடுத் தனுப்பும்
ஒருமகன் றனை யன்றிவே றிலாத்தமி ழொருதாய்.

46. பற்றி லாதுமு னொளி ராரியப் படையை
வெற்றி கண்டதா லுன்தைமு னிறைதர விரும்பிப்
பெற்று வந்தனன் பாரெனக் காட்டுவாள் பீழை
யற்ற வோர்தமிழ் முன்னைக விதிட்டெய ராழி.

47. இந்த வொண்கதிர் வாளினைத் தமிழகத் தினியாம்
வந்தி லோமென வோடிட வடவரை யோட்டி
அந்த நாளினி லிறைதர முதற்பரி சாக
உந்தை பெற்றது பாரெனக் காட்டுவ ளொருதாய்.

---

42. மா-குதிரை.

43. விலங்கி-குத்திக்கொன்று. கந்து-கட்டுத்தறி.

44. துவன்றிய-செறிந்த.

46. பீழை - குற்றம். 'காவிதி' என்னும் 'பட்டம்' பொறிக்கப்பட்ட மோதிரம்.

48. செந்த மிழ்மொழிக் காகவே முன்செருச் செய்து
வந்த தாரினை யொழிபட நூறியே வாகை
தந்து கொல்களி றுழக்கியே களத்திடைச் சாய்ந்த
தந்தை கல்லினைக் காட்டுவா ளொருதனித் தமிழ்த்தாய்.

49. இன்று போரினுக் கனுப்பவே யாளெனக் கில்லை
அன்று தாய்மொழிக் காகவவ் வாரியர் தம்மைக்
கொன்று கொல்களம் பாடிடப் பொருதுமென்
கோனும்
வென்று சென்றன னென்செய்கே னென்னுமோர்
மெல்லி.

50. ஓகை யோடருந் தும்பையந் தொடையுனைந் துவந்தே
ஈகை யோடொளி வாட்கையுந் தாடியே யினிது
போகி யேவட வாரிய மொழிபடப் பொருது
வாகை சூடியே மீள்கென விடுக்குமோர் மடந்தை.

51. பெற்ற நாளினும் பெரிதியா னுவந்திடப் பெருகி
முற்று மாரியப் பகையினை வலங்கெட முருக்கிக்
கொற்ற முற்றுவா, வில்லையேற் கொல்களி றுழக்கி
மற்ற வற்றெருடு வீழ்குவை யென்னுமோர் மறத்தாய்.

52. எறிந்த வேலினைக் கண்டுமே விழித்தக ணிமைப்பின்
புறந்த ருதலிற் பிறிதிலை, யாதலாற் புதல்வா!
பிறந்த நாளினும் பெரிதியா னுவந்திடப் பெயர்ந்து
சிறந்த வீரனாய் வருகவென் பாளொரு சினத்தாய்.

53. வாழை நேரடி வாழையாய் மறக்குடி வந்த
வீழி னீள்குடி தாங்குசெல் வாவுனை மேவார்
கோழை யென்றிடின் மானம்விட் டேயுயிர் கொண்டு
வாழ கின்றிலேன் காண்டியென் பாளொரு மறத்தாய்.

54. பண்ணைக் கொட்டுமன் னுய்நகர் முற்றுமப் பதரை
வெண்ணெய்க் கட்டிபோல் நிணமுகத் தலையினை
வெட்டிக்
கண்ணைக் குத்தியே மீகுவன் கயிலெனக் கதிர்கொய்
மொண்ணைக் கத்தியைத் தீட்டுமோ ரிளந்தமிழ் முனையே.

48. தந்தைகல்-தந்தையின் உருவும் பேரும் புகழும் பொறிக்கப்பட்ட நடுகல்.
50. ஓகை-மகிழ்ச்சி ஈகைக்கை, வாட்கை என்க.
54. கொட்கல்-கூட்டல். முனை-மகன்.

55. ஏனெந் தாயுனக் கென்னபோ வெழுநிலை மாடம்
வானந் தாவிய கடிமதி லிலங்கையை வளைக்கும்
கானந் தாவிய வடவர்தம் முதுகினைக் காண
காணுந் தான்வரு வேனென வழுமொரு நற்சேய்.

56. நெஞ்சி லீரமி லாதொரு பெண்ணென நினையா
தஞ்சி லோதியை யுருக்குலைத் தோலையென் னண்ணா!
வஞ்சி மாரிடை யெள்ளியே கெடுத்திட மானம்
குஞ்சி யைப்பிடித் திழுத்துவா வென்னுமோர் கோதை.

57. தூரி கட்டியா ளுடிட வன்னையைத் துப்பிற்
சோரி சிந்திடக் கண்படா வுறுப்பையுந் துணித்த
ஆரி யன்சிலை நாணினை யுறுதியா யறுத்துச்
சேரு மெந்தையென் பாளொரு தமிழ்மொழிச் சிறுமி.

58. ஆலைப் பாகினு மினியசெந் தமிழ்மொழிக் காக
மேலைக் காலைவெம் பகைப்புலக் களிற்றினம் வீழ்த்திப்
பாலைப் போன்றவெண் கோட்டினுற் பண்ணிய கட்டிற்
காலைப் பாருமென் னுவென்பா ளோர்கருங் கண்ணாள்.

59. முந்தை யாரியப் படையினை முதுகிட வோட்டி
எந்தை யன்னவ ரெறிந்துவிட் டோடவே யெடுத்து
வந்த வேல்களா லாக்கிய மணிமுகை முல்லைப்
பந்தர்க் கால்களைப் பாருமென் பாளொரு பாவை.

60. மாத ராண்மையில் லாதமெல் லியரெனும் வசைச்சொல்
போதவெண்ணிடப் படாதகற் றொலைவினிற் புகழ்சேர்
மூதின் முல்லையில் லாண்முல்லை யோடிள முல்லை
ஓத வாழ்த்திவல் லாண்முல்லை தன்னைமீக் குயர்ந்தார்.

---

56. அம்சில் ஓதி-அழகிய குளிர்ந்த கூந்தலையுடைய காமவல்லி.

57. துப்பின்-பவளம்போல. நாண்-கயிறு.

60. மறத்தினைத் தாயர் கூறுதல் மூதின்முல்லை; மனைவியர் கூறுதல் இல்லாண்முல்லை; சிறுவர் கூறுதல் இளமுல்லை; மறவர் கூறுதல் வல்லாண்முல்லை. வாழ்த்தி ஓத-பிறர் வாழ்த்திக்கூற. மீக்குயர்தல்-மேம்படுதல்.

61. இன்ன வாறுவல் லாண்களும் பெண்களு மிகலித்
தென்னி லங்கைமா மறக்குடிக் குறையுளாத் திகழும்
மன்னர் மன்னவன் கண்டுயர் மாடிமீ திருந்தே
இன்று மாரியப் பேருள தோவென விகழ்ந்தே.

62. பருதி முன்பனிப் படலமா மாரியப் பகைமை
அரிது மின்றதி லையமு மின்றிரண் டகரால்
பொருதும் போதினி லிடையிடை வஞ்சனை புரியும்
ஒருமை யாப்பலான் வேறொரு குறையிலை யுண்மை.

63. என்று கொண்டுசெந் தமிழிரா வணனுமாங் கிருப்ப
ஒன்ற ருந்திறல் மறவரெல் லாந்திரண் டொருங்கே
மன்று தோறுநல் லணியுறத் தொக்கினர்; வடவர்
சென்று மாமதில் முற்றிய வாற்றினைத் தெரிவாம்.

## 6. ஊர்முற்று படலம்

### வேறு

1. வடவாரிய வஞ்சக நஞ்சகரூர்
இடையார வளைந்திட வேபொழுது
விடியாமு னெழுந்து விரைந்துடனே
அடைவாமென வாவன செய்தனரே.

2. படையாளர்கள் பற்பல வாகியபோர்ப்
படையாவையும் பண்புட னாய்ந்துசிலைத்
தொடையோடுயர் தோணிகள் தூணியுற
வடிவேலொடு வாள்முனை கையுளர்வார்.

3. இணைகோடு கிளைமுர சம்பணிலம்
பணைகோலின பண்கொளு வாரணிவ
அணிவாரணிந் தாவன யாவையுமே
புணையாகவே போர்வலர் கைபெறுவர்.

---

62. மையாத்தல்-மயங்குதல்.

2. தொடை - நாண் தொடுப்பு. தோணி - அம்பு. தூணி - அம்புக்கூடு. உளர்தல் - தீட்டுதல்.

3. இணை-ஒருவகைப்பறை. கோடு-கொம்பு. இளி-ஒரிசைக்கருவி. பணிலம்-சங்கு. பணை-மூங்கில் போன்ற தடி. கோல்-தடி. இன-இவை போன்ற பிறவும்.

4. பரிபண்ணுவர் பண்ணுவர் பாயுருள்சேர்
அரிபண்ணுவர் பண்ணுவர் ஆய்படையுள்
கரிபண்ணுவர் பண்ணுவர் காவ்வல் கடாச்
சரிபண்ணுவர் சால்புற யாவையுமே.

5. பயணப்பட வாவன பண்ணுகையில்
வயமிக்குள வாய்தரு வான்புகுத
செயன்மிக்குயர் செந்தமி ழொற்றர்களைப்
பயனுக்கெதிர் பார்த்திடு பீடணனும்.

6. பகையாளர்கை பட்டிட வேசெயலும்
வகைபோகிய வன்கொலை யாளர்படர்
தகைமேயவர் தம்மைய டித்தடடா!
உகைவார்சிலை யோனிடம் விட்டனரே.

7. இப்போது விடினிவ ரேஇமறை
தப்பாது தடைபுரி வார்செலவே
கைப்பாங்கொடு காவலி லேயிவரை
வைப்பீரென வோதினன் வன்கொலையான்.

8. இறையேனுமொ ரேதில ரொற்றர்களைச்
சிறைகோலுதல் திண்ணிய ரோடுதிகழ்
அறமேயவர் தஞ்செய லன்றெனுநன்
முறையோர்பகல் மூன்று மறிந்திலனே.

9. சுடரோன்வர வேயவர் துன்னெனவே
படராகியே பால மதன்வழியே
கடலாய இடங்கு கடந்திகலார்
அடைவாக நடந்தன ரக்கரையே

---

4. அரி-தேர். ஆய் படை உள்பண்ணுவர்-வேண்டிய படைக் கலங்களைத் தேருள்வைப்பர். சால்பு-தகுதி.

5. வயம்-வலி. புகுத-புகுந்த.

6. படர்-வீரர். உகைத்தல்-செலுத்துதல். வார்-நீண்ட.

7. மறை தப்பாது-இரகசியத்தைச் சொல்லத்தவறார்.

8. இறை-நொடி. பகல் மூன்றும்-எப்போதும்.

10. கன்றித்தடை செய்யிய காவலரைக்
கொன்றக்கரை சென்றவர் கூடும்வரை
நின்றக்கரை நேர்மையி யாக்கடையோன்
பொன்றத்தமர் காவல் புரிந்தனனே.

11. வில்லாளிக ளாகிய மேவலராம்
பொல்லாவட வாரியர் போதரவே
நில்லாவுயிர் நீடிய நீலன்முதல்
எல்லாரு மெடுத்தன ரக்கறையே.

12. படையக்கரை சென்று பசும்பழனக்
கொடைமிக்குயர் கூல மிகுத்துபுனல்
நடை மிக்கவிர் நாடு கடந்துநடந்
தடையக்கொடி யாடு மிலங்கையினை.

13. சேனைத்திர ளோடவர் சென்றுநறுந்
தேனைப்புரை செந்தமிழ் தந்துவளர்
கோனைப்புரை கூட முயர்ந்தபுயல்
வானைப்புரை மாநகர் கண்டனரே.

14. ஏடாணியி னேன்ற தமிழ்க்கொடியொண்
கோடாருயர் மாட கொடுமுடிமேல்
கூடார்வரு கின்றனர் கொல்லுமென
நாடாவியல் நங்கையர் போலியலும்.

15. ஒப்பேது மிலாத வுயர்மதில்போல்
இப்பாரினி லெங்கு மிலாததிறல்
எப்போது மறிந்தில நின்றறிய
அப்பாவிக ளாயின ராரியரே.

---

10. கனறி-சினந்து. கடையோன்-பிட்டனன்.

11. நீடிய - நீடியதெனக் கொண்ட. அக்கறை - பெருமுயற்சி.

12. கூலம-தவசமும், ஆடுமாடுகளும். நடை-ஒழுக்கம்-நீர்நிறைந்திருத்தல். அவிர்தல்-விளங்குதல்.

14. கோடு ஆர்-பக்கம் பொருந்திய. கொடுமுடி-கோபுரம். நாட-நாடும.

16. மண்ணுக்கணி யாகிய மாநகரைக்
கண்ணுக்கணி யாயவர் கண்டனர்கண்
டெண்ணுக்கணி யேது மறிந்திலராய்
உள்ளெனக்குணர் வொல்கின ருனர்களே.

17. மின்னோதிகழ் மின்னொளி மேவியசெம்
பொன்னோவொளிர் பொன்னொடு பன்மணியின்
முன்னோகதிர் மூத்த வொளித் தொகையோ
என்னோவிது லங்கை யிதோவலவோ?

18. மலைமேவிய மாமுகில் சூழியபே
ரலைமேவிய வாரிரு ளோடறியா
நிலைமேவிய நெஞ்சிரு ளோடுதமிழ்க்
கலைமேயவி ராவண காவியமே.

19. இயலோமனை நூலின ரெண்பெறுகைச்
செயலோவின தேர்ந்தில மூடுருவிப்
புயலோடு பொருந்திய விந்நகருக்
கயலேவர வல்லதோ வல்லனவே.

20. கண்பெற்ற பெரும்பொருள் கண்டனமஃ
துண்புற்றது வோகன வோநனவோ?
எண்பெற்றில தென்னினு மேபொறிகள்
பண்புற்றன வுற்றன பன்னலமும்.

---

16. எண்-எண்ணம். உளனெக்கு உணர்வு ஒல்கினர்-நெஞ்சுருகி உணர்வு சுருங்கினர்.

17. மணியின்முன்-பன் மணியினுமிக்க ஒளியை யுடைய ஞாயிறு திங்கள். என்னோ இது-இது என்ன தோற்றம்.

18. அலை-கடல். அலைமேவிய-கடல்சூழ்ந்த உலகம். ஆரிருள்-மிக்கஇருள். இது சிலேடை. (1) தமிழ்-இனிமை. கலை-ஒளி. இராவணம்-விளக்கு. வியம்கா-பெரிய பாதுகாப்பு-கூடம். உலகிருளை யோட்டும் ஒளிவிளக்கின் கூடம். (2) நெஞ்சிருள் ஓடும் தமிழ்க்கலை மேவிய இராவண காவியம்.

19. எண்பெறு கை செயல்-அளவுபட்ட கைத்திறன். அல்லன-வேறுநகர்கள்.

20. அஃது உண்பு உற்றதுவோ-அக்கண் பார்த்தித்ததோ, அல்லது நகர் கண்ணைக் கவர்ந்து கொண்டதோ. எண்பெற்றிலது-எண்ணியறிய முடியவில்லை,

21. என்றங்கவ ரின்னன வெண்ணினராய்ச்
சென்றங்கு இறந்த வெளிப்புறமோர்
குன்றந்தனி லேகலை கோலியபின்
ஒன்றங்கென வொற்றரை விட்டனரே.

22. அன்னார்விரை வாகவே சென்றெமது
மன்னாபடை வந்த தெனத்தொழுது
சொன்னாரவர் தொல்லை கொடுத்தனையும்
தென்னாரிறை சீறி யெழுந்தனனே.

23. சொல்லாண்மை பழுத்துயர் தூயவரைப்
பொல்லாவட வாரியர் போர்நிலையை
வல்லேயறிந் தோடி விரவிரைவாய்ச்
செல்லீரென வேயவர் சென்றனரே.

24. அவர்சென்றபி னாரிய னண்ணன்முடி
கவர்கென்றிரு காலில் விழுந்தவனைச்
சுவரொன்றுயர் தொன்மதில் முற்றுமியல்
உவரம்பட வோதென வோதினனே.

25. தன்னோரடி யோடு தரைப்படவே
இன்னானுள வோதி யிருக்கையிலே
பின்னேகிய ராகிய பேரியலார்
அன்னான்விழி தன்னை யடைந்தனரே.

26. உற்றாருயி ருண்ணிய வெண்ணியனும்
ஒற்றாடிட வுற்றவ வொற்றர்களைப்
பெற்றோர்பெறு பிள்ளையை வெல்லவருஞ்
செற்றோரிடை சேர்ப்பன செய்தனனே.

27. நடைமேவிய நற்றமி ழொற்றர்களை
வடவாரிய மன்னரி ராமனிடம்
விடவேயவன் வேவு பெறுதகலக்
கடவீரென வீடு கடத்தினனே.

---

24. உவரம்-இனிமை, நன்கு.

27. வேவு-உளவு. வீடுகடத்தினன் - விட்டான், வீடு-பாடிவீடுமாம்.

28. அன்னூர் தமை விட்டபி னூரியனும்
பொன்னோடு பொருது பொலம்பெயர
பின்னோடிகல் வென்றிகொள் தொன்னகரை
முன்னூடியே முறறிட முன்னினனே.

29. நால்வாய்களு நண்ணிடு தற்கரிய
கால்வாய்களு நண்ணிடு தற்குரிய
பால்வாய்தக வேபடை பண்ணிடவே
நூல்வாய்தக வோர்க்கு நுவன்றனனே.

30. மற்றோர்கரி யேமுதல் மாப்படையைக்
கற்றூங்கு கணிக்க வகைப்படவே
விற்றூங்கி யெழுந்தனர் மேவலரும்
முற்றூக முனைப்பொடு சென்றனரே.

31. இவ்வாறவர் முற்றிட வேகிடவே
ஒவ்வாத துணிந்துய சூரனுகும்
தெவ்வோர்செய லாய்ந்து செருப்புகலும்
செவ்வேலிறை செய்தி யதைத்தெளிவாம்.

வேறு

32. உடன்பி றந்தின் னுயிர்கொலு நோயென
உடன்பி றந்தோ னுயிர்கொல வாரியன்
உடன்பி றந்த வுளவனு வுள்ளவன்
உடன்பி றந்ததை யோர்ந்தங் கிராவணன்.

33. மின்னு டன்வெடி மேவுதல் மோவிவன்
என்னு டன்பிறந் தாலினி யென்பயன்
உன்னி யுன்னி யொழிப்பது வேதக
வென்ன மன்னவ னெண்ணி யிருக்கையில்.

34. பாடி விட்டுப் பறந்து பறவையின்
ஓடி வந்து பணிந்துமே யொற்றர்கள்
கேடு கெட்ட வினையவன் கெட்டனன்
கூட விட்டுக் கொடுமைகள் செய்தனன்.

---

28. பொலம்-அழகு, ஒலி. முன்னினன்-எண்ணினன்.
29. கால்வாய்-யானை. கால்வாய்-நாற்புறவாயில். பால்வாய்தக-தகுதியாக. நூல்-படைநூல்.
31. செருப்புகலும்-போரை விரும்பும்.
34. வெடி-இடி.

35. தாரை முற்றித் தழைத்துயர் மார்பகம்
ஊரை முற்ற வொழுங்கு படுத்திய
ஆரி யப்படை யண்ணிய தென்னவே
பூரி யர்க்குயிர் போயது போலுமே.

36. என்று மன்ன ளிகலி யெரிசினங்
கன்றி யேபொறி காலக் கடிதினிற்
சென்று நீவிருஞ் சேனைத் தலைவரை
ஒன்ற வீங்குரைப் பீரென வோடினர்.

37. அன்னர் சென்றங் கரும்படை யாளரைத்
துன்னி மன்னவன் சொன்னது சொல்லவும்
மின்னி னின்றெளி மேவுமுன் சென்றிறை
தன்னை யுற்றனர் தானைத் தலைவரே.

38. தொழுது நின்ற தொகுபடை யாளரைப்
பழுதி லாது படையொடு சென்றுநீர்
எழுது மாட மியன்றுயர் வாய்தொறும்
விழுது போல விறலொடு காக்குவீர்.

39. மன்னு மாண்மை மதில்முடி தன்னினும்
பின்னு மாழ்ந்த பெரிய கிடங்கினும்
மின்னு முகி யிலைய மிளையினும்
துன்னி டாது துதைந்துமே காக்குவிர்.

40. சிதலை கொற்ற ரிரும்பினைத் தின்னவே
சிதலை யுற்றொரு கோடி திரண்டபோல்,
மதிலை முற்றுற வாரியர் வண்டமிழ்
மதலை பெற்று வழிவரு கின்றராம்.

41. ஆகை யாலனு காமலவ் வாரியர்
சாக வேவலி கொண்டனிர் தாக்கியே
ஓகை வேலை யுயர்த்து மகிழ்வொடு
வாகை சூடி வருகுவி ரென்னவே.

---

39. மிளை-காவற்காடு. துதைதல்-செறிதல்,

40. சிதலை-கறையான். கொல்தரு இரும்பு-கெட்டியான இரும்பு. ஒன்றுதின்னப் பலதிரண்டு வருதல்போல். மதலை-துணை.

42. சென்றி தோவருந் தீய வடவரை
ஒன்றி லாம லொருங்கு களப்படக்
கொன்று வாகை புனைந்து குடைநிழல்
நன்று கூடுவ மென்ன நவையிலான்.

43. வளப்ப டக்கதிர் வானுயர் மும்மதில்
உளப்ப டாம லுரனொடு காப்பதோ
டளப்ப டைத்தொகை யாரியர் தம்மையோர்
களப்ப டுத்திப் பொருதிகல் காணுவீர்.

44. உளவ ரோடவ ருற்றன ராகையால்
இளைய ரென்றுகொண் டெள்ளுதல் தீமையாம்;
வளமை கொண்ட மறப்படை யுள்ளரும்
களமி லாதிகல் காணுதல் கூடுமோ?

45. என்ன வேயிறை யோதவவ் வேறனர்
மன்ன வாவட வாரிய வஞ்சகர்
இன்னி தோசென் றிகலி யிலங்கையைத்
துன்னி டாது துறப்பமென் றேகினர்.

46. ஏகி மற்றவ ரீரிரு வாயிலும்
ஆக முற்று மருங்கடி யார்வுறப்
பாகு செய்து பழந்தமிழ் மள்ளரை
வாகை சூட வுழிநிரை மலைந்தனர்.

47. ஊர ணங்கி னுயர்குடி மள்ளர்கள்
தோர ணங்கள் தொறுந்தொறுந் துன்னலர்
பேர ணங்கிப் பிணங்கள் பிறங்கிட
ஏர ணங்கெட வேமங்கொண் டார்த்தனர்.

---

43. வளம்-வலியும், பல்பொருளும், பொறியும், கருவியும். உளப்படாமல், உட்புகாமல். அளம-மிகுதி.

44. இளயர்-வலியற்றவர்.

46. கடி-காவல். மலைதல்-சூடுதல்.

47. அணங்கு-பெண். தோரணம்-மதில்வாயில். அணங்குதல்-கெடுதல். பிறங்க - குவிய. ஏரணம் கெட-கணக்கின்றி. ஏமம்-காவல்.

48. வாயில் தோறுமவ் வாயி லிருபுறத்
தாய வேவறை தோறு மணிமதின்
ஞாயில் தோறும் பதண நடுவிலும்
போயி ருந்து பொருந்துவ செய்தனர்.

49. அடுத்த வாயிற் கிடங்கின் பலகையை
எடுத்து நீள்கிடங் கேணியு நீக்கினர்
கடுத்து வெஞ்சினங் கால முதலையைத்
தொடுத்து வெங்கட் சுறவுந் துளக்கினர்.

50. மாட வாயில் மருங்கி னொழுங்குறக்
கூட மேய கொடுமுடி யைந்துகா
வோடு நிற்பதை யொத்து வெறிக்களி
றூடு றும லொழுங்கி னிறுத்தினர்.

51. ஓவ ருத வுருமென் சினத்தியல்
ஏவ ருத வினைய மறவரை
மேவு றுது வெருவுற வாரியர்
தாவ ருவினை தன்னிடை வைத்தனர்.

52. தாட கையறத் தைக்க விருப்புமுள்
கூடை கூடையாக் கொட்டின ரஞ்சியாங்
கோடு வோரடி பற்றி யொழுக்கறக்
காடெ லாங்தெறுந் தோட்டியைக் கட்டினர்.

53. வாளை நோக்கி வடவ ரெதிர்வரும்
வேளை நோக்கிவை வேலினை நோக்கிவன்
றோளை நோக்கிவெந் தும்பையை நோக்கிவெங்
காளை நோக்கினர் கன்றி யிருந்தனர்.

---

48. ஏவறை-நிலவுகாற் சுவரிலுள்ள அறை. ஞாயில்-மதில் முடியிலுள்ள ஏவறை. பதணம்-ஏவறைக்குமேலே மதில் முடியிலுள்ள மதிலுள்மேடை.

50. ஊடு உறுமல்-பகைவர் உள் நுழையாதிருக்க.

51. ஓ அருத-இடையறுத. உறுமு-இடி. ஏவு-அம்பெய்தல். தா-வலி. இனை-காவற்காடு.

52. தாள் தகை அற-கால் தகுதிகெட. ஒழுக்கு அற-ஓட்டங்கெட. தெறும்-வருத்தும். தோட்டி-இருப்புக் கொக்கி.

54. புகல டைந்தவப் புல்லர்கள் தம்மொடு
தொகைய டைந்த துணைவலி யாரியர்
நகர டைந்தனர் முந்தினர் ஞாயிறைப்
பகைய டைந்த பனித்தொகை போலவே.

55. கோயில் போலுங் கொடுமுடி வானுயர்
வாயில் நாலு மருவு மதிற்புற
வேயில் போலு மிளைப்புறம் போந்துபுற்
றீயல் போலு மிடையற மொய்த்தனர்.

## 7. முதற்போர்ப் படலம்

1. முருகு வாழ்நகர் முற்றுகை கண்டனம்;
மருத மார்ப்ப மணந்தவ னின்னுயிர்
தருது மென்றழத் தண்ணம் படுகளம்
பொருது வீழ்முதற் போரினைக் காணுவாம்.

(மிளை யிடைப் போர்)

2. மூண்டு வந்து முழைகொள் களிற்றினங்
கண்டு டன்றெழு கண்டீ ரவமெனக்
கண்ட துந்தறு கண்மற வர்சினங்
கொண்டெ ழுந்தருங் கொண்ட லி னார்த்தனர்.

3. காத்து நின்ற கடுஞ்சின வீரர்கள்
வேர்த்தெ ழுந்தொளி வேலினும் வாளினும்
போர்த்து மற்றவர் பூத வுடம்பினை
ஆர்த்து நின்றன ராரிய ரச்சுற.

4. நன்றி யின்றயல் நாட்டிடை வந்ததும்
மன்ற லங்குழல் வன்கொலை செய்ததும்
ஒன்ற வின்றெம தாரினை முற்றலும்
கொன்று ணுந்தொழி லீருங்கள் கொள்கையோ?

---

55, வேய்இல்-மூங்கில் புதர்.

1. முருகு-அழகு. மருதம்-மணப்பறை. தண்ணம்-சாப்பறை.

2. முழை-குகை. கண்டீரவம்-சிங்கம். கொண்டல்-முகில்.

3. வேர்த்து-சினந்து. பூதவுடல்-பருவுடல்.

5. காட தாமுயிர் கட்குப் பிணஞ்சுடு
காட தாங்கொலைக் காரரே யின்றொடு
வீட தாமவை கட்கு விருந்தெனக்
கூடி யுண்டுள் குளிர்ந்திடச் செய்குவோம்.

6. வலிய வெற்று மடங்க விருந்துவாழ்
மலையை முற்ற மருவி யளவிலா
எலிக ளுற்ற வெனவரு வீணர்காள்!
தொலைக முற்றுந் தொடர்பினி யின்றியே.

7. நகைக லந்தசொ லின்ன நவின்றுமே
கைக லந்திகல் கண்ணற வொன்றென
மெய்க லந்தொளிர் வேலினும் வாளினும்
வைக லந்தவி லானு மலைந்தனர்.

8. கைய றுந்தன கால்க ளறுந்தன
மெய்ய றுந்தன மேனி சிதைந்தன
தையி ருந்த தலைபனங் காயெனப்
பொய்யி ருந்த வுடலம் புரண்டன.

9. இப்ப டிக்கவ் விருபடை வெள்ளமும்
கைப்பி டித்துக் கனன்று பொருதவே
எப்பு றத்து மிரும்பிணக் குன்றுறத்
தெப்ப மிட்டரி தேங்கின சோரியே.

10. இற்ற கைகளுங் கால்களு மெண்ணில
உற்று நீந்தியவ் வொண்குரு திக்கடல்
செற்ற வின்னுயிர் சேறிய மீனுருப்
பெற்ற தாமெனப் பேர்ந்து பிறழ்ந்தவே.

11. பந்த ரிட்டுப் பறந்து கழுகினம்
வந்து வெண்ணிணம் வாய்மடுத் தேகின;
சிந்து சோரி விழுக்கொடு தின்னவே
முந்து குள்ள நரிகளு மொய்த்தன.

---

5. வீடு-விடுதலை.
7. நகை. இகழ்ச்சி. கண்ணற-இடைவெளியின்றாக.
8. மெய்-தோல். தை-அணி. பொய்இருந்த-உயிரற்ற.
9. அரி-கடல், கடல்போல. சோரி-குருதி.
11. வெண்ணிணம்-கொழுப்பு. விழுக்கு-தசை.

12. ஈட்டி யின்ன விலைமுள் ளடர்புறங்
காட்டி லின்னவர் கால்பெயர் கின்றியே
தோட்டி யீர்ப்பத் துதைந்த விருப்புமுள்
மாட்டக் குப்புற மண்கவ்வி வீழ்குவர்.

13. வலையில் வீழ்மட மானினை யாரியர்
சிலையை வாங்கி யுயிரைச் செகுத்தல்போல்,
நிலைபெ யர்ந்திடா நீட்டிய வூனரைக்
கொலைவை வேல்கொடு குத்தித் துரத்துவர்.

14. அஞ்சி யோடுமவ் வாரியர் கால்களைக்
கஞ்சி காவிற் கவிழ்ந்தெனக் காரமுள்
கொஞ்சி யேநிலங் கும்பிடச் செய்யவே
நெஞ்சி லூர்ந்து நெளிவர் புழுவென.

15. களைய நின்ற கயவருங் காட்டர்
பிளையை விட்டு வெருவி யகன்றுபோய்
இளைய வாரி யெனத்திக ழும்புனல்
வளைய நின்ற கிடங்கை வளைத்தனர்.

(கிடங்கிடைப் போர்)

16. கூசி லாதுகொல் கோள்வன் முதலைய
ஏசி லாநீர்க் கிடங்கி லிருதலை
மாசி லாத மறவ ரெதிரெதிர்
பாசி போலப் பதிந்து பொருதனர்.

17. அக்க ரையொடு சென்றிட வக்கரை
இக்க ரையி லிருந்து முயன்றிட
அக்க ரையி லிருந்தமிழ் மள்ளர்கள்
புக்கி டாது பொருதுயிர் போக்குவர்.

18. பலகை தூக்கிப் படரும் படர்களைப்
பலகை யாக்கிப் படர்செய வப்பிணப்
பலகை தூக்கிப் பகுவாய் முதலைகள்
பலகை யாக்கிப் பதம்படுத் துண்ணுமால்.

---

13. வாங்கி-வளைத்து. நீட்டிய-நிலத்தில் சாய்ந்த.
14. காரம்-கூர்மை.
15. இளையவாரி-சிறுகடல்.
16. கோள்வல்-பிடிப்பிடியுள்ள. ஏசு-குறைவு.
18. பலகை-கிடங்கு மீதிடும்பலகை. பலகை தூக்கி

19. அகழி வாய்ப்பட ராரிய வீரரைப்
பகழி வாய்ப்படப் பண்ணித் தமிழர்கள்
இகழி லாத விடங்க ரினியுணின்
உகழி லாம லுறங்குமென் றுன்னுவர்.

(மதிலிடைப் போர்)

20. வாய்ப்பு டன்செய் மடையமை யேணியில்
ஆர்ப்பு டன்பட ராரிய வீரரை
ஏப்பு ழைக்க ணிருந்து பகழிதூய்
மீப்ப டாது கிடங்கிடை வீழ்த்துவர்.

21. உள்ள மூக்க வுயர்மடை யேணியில்
புள்ளெ னப்படர்ந் தேறியே போகையில்
வெள்ள மீது வெரிநுற வீழவே
தள்ளி வெட்டியால் வெட்டியே தள்ளுவர்.

22. உடும்பு போல வுயர்மதின் மீதிவர்
இடும்பை காணு மிகன்மிகு மள்ளரைக்
கடும்பு போல்விழக் கைபெய ருசியால்
குடும்பு போல்விழக் குத்தியே வீழ்த்துவர்.

23. பொருக்கென் றேணியி லேறும் பொருநரை
வெருக்கென் றின்னுயிர் வீட்டியே தள்ளிட
உருக்கு மீயமுஞ் செம்புநெ யுந்தக
உருக்கி யோவென வூற்றியே வீழ்த்துவர்.

---

என்றுமாம். படர்தல்-செல்லுதல். படர்-மறவர். பலகை ஆக்கி இடங்கிடைக் குவித்துப் பலகையாகச் செய்ய. படர்-துன்பம். பிணப்பலகை - பிணத்தினது பல கைகள். பலகை-பின்வு, துண்டு.

19. இடங்கர்-முதலை. உகழ்தல்-உலாவல்.

20. வாய்ப்பு - தகுதி. மடை-கிடங்கின்மீது வைக்க ஏணியோடு இணைத்துச் செய்யப்பட்டுள்ள பலகை. மீபடாது-மேலேறாது.

21. வெரிந்-முதுகு. 'தள்ளிவெட்டி' முதலிய இனிக் கூறப்படும் கருவி, பொறிகளை-இலங்கைப்படலம் 138—140. பாட்டுக்களில் காண்க.

22. கடும்பு-சும்மாடு. குடும்பு-தென்னை, பனைக்குலை.

24. அல்வி ருந்த வரும்புன லோடையைப்
புல்லி வந்து புகுதும் பொருநரை
இல்லி ருந்த பதணத் திருங்கவண்
கல்லெ றிந்தணு காது கடத்துவர்.

25. விழைவி னோடு மிடைந்திவர் வெரோரி
மழையி னென்ன மயங்கிக் கிடங்குறத்
தழைவி னோடுவெந் நீருந் தழலையும்
புழையி னூடுற்ப் பெய்துகீழ்ப் போக்குவர்.

26. ஆண்ட கைத்துட னேறெயி லேறுவார்
பூண்ட வாண்டகை பொய்த்தகழ் வீழ்வுற
ஈண்ட லையடுப் பாலுடல் கொத்தியும்
தூண்டி லாலுடல் கீண்டுந் துரத்துவர்.

27. அணைய வாரிய ராழ்கிடங் கின்றலைக்
கணைய மோடு கழுவுஞ்செங் குந்தமும்
பணையுங் கோலும் பருதிவை வேலுங்கொண்
டணைகி லாதெறிந் தங்கின் றகற்றுவர்.

28. மேலி வர்ந்துறு மேவலர் தங்களைச்
சேல ருந்துஞ் சிரல்கொடு கீறியும்
நோல ருந்தொட ராலெறி நூற்பொறி
யாலெ றிந்தும் வருந்தி யகற்றுவர்.

29. கழுகு மாடுங் களிறு முழுவையும்
விழுங்கு பாம்பொடு வில்முத லாகிய
ஒழுங்க மைந்த பொறியி னுறுவரைப்
பழங்கண் செய்வர் பதணத் துறையுநர்.

---

24. அல் - இருள். ஓடை-அகழ். இல்இருந்த - வீடு போன்ற.

25. தழைவு-உள்ளக்கிளர்ச்சி. மிகுதி.

26. ஆண்டகை-ஆண்மை.

28. நோல்-வலி. தொடர்-இருப்புச்சங்கிலி;

29. உழுவை-புலி. பழங்கண்-துன்பம்.

30. கிடுகு தாங்கிக் கிளர்ந்து மதின்முடி
கடுகி யேறுங் கருங்கை மறவரைப்
கடுகி யன்னார் கழுத்திற் கவைகொடுத்
தடைகி லாதுகீழ்த் தள்ளி யகற்றுவர்.

31. ஆடு முட்டு மரிவிழிக் குங்கரிக்
கோடு முட்டுங் குடல்சரிந் தேவிழ
மாடு முட்டு மதின்மிசை யேறுவார்
பாடு மட்டும் படாதபா டாகுமே

32. தோலெ டுத்துத் துனைந்து வருநரைத்
தோலெ டுத்துத் துனைந்து துவைக்குமே
வேலெ டுத்து விரைந்து வருநரை
வேலெ டுத்து விரைந்து சிதைக்குமே.

33. மடைய டுத்த மரக்கிளை மேவிய
கிடைய டுத்த கிளர்சிறைக் குஞ்சிலிற்
படைவ ருத்தப் படியிறை வைப்படிக்
கிடைவி டுத்து விழுவர் கிடங்கிடை.

34. திருந்த வேணியிற் சென்று மதின்முடி
பொருந்து வாரேப் புழையினர் தள்ளவே
வருந்தி யேறி வழுக்கி யுயர்மரத்
திருந்து வீழ்பவ ரென்ன விழுவரே.

35. ஆய்க ருவிக ளாற்பத ணத்துளார்
வாய்கள் தோறு மதின்மிசை யேறுநர்
சாய்க வென்று தறித்திட வேபனங்
காய்கள் போலக் கருந்தலை வீழுமே.

36. அடுத்து வாயி லனுகுந ரைக்களி
றெடுத்து வானி லெறிந்து நெடுங்கையிற்
பிடித்து வீசிப் பிசைந்துபின் மண்மிசைப்
படுத்த ரைத்துயிர் பாத்துடல் வீசுமால்.

---

30. கிடுகு-கேடயம்.
32. தோல்-கேடயம், யானைப் பொறி.
33. கிடை-கூடு, படிதல்-தங்குதல். இறைவை-ஏணி.
36. பாத்து-பிரித்து.

37. கதவு டைக்குங் களிறுக ளங்கிலைக்
கதவ டைக்குங் களிறுக லாக்குவர்,
புதவு நீக்கப் புகும்படர் அங்கிலைப்
புதவு காக்கும் புதுமர மாக்குவர்.

38. எட்பு கவிட மின்றிய வாரியர்
தட்ப வெப்பந் தனைந்த மனத்தொடு
கொட்பு றத்திறல் கொண்டு பொருதுமே
உட்பு கமுடி யாதுள் ளுடைந்தனர்.

39. பிளையை விட்டனர் வெங்க ணிடங்கர்வாழ்
வளைய விட்ட வகழொடு பாமதில்
அளைய விட்டிலர் மானமொ டாண்மையுங்
களைய விட்டல ரென்று கலங்கினர்.

40. உளம லுத்தவ ருள்ளுடைந் தோடுற
வளம லுத்த வடவர் படைவலர்
கொளமி குத்திகல் கொண்டு புதியதோர்
களம மைந்துக் கலந்து பொருதனர்.

(நளத்திடைப் போர்)

41. ஆளு மாளு மடர்த்தன ராளவர்
நாளு நாளு நணித்தென நல்லயில்
வாளும் வாளும் மடுத்தனர் வாள்பயில
தோளுந் தோளுந் துணித்தன சென்னியே.

42. வில்லும் வில்லும் பிசைக்க வளைத்தனர்
பல்லும் பல்லும் பறக்கக் கடித்தனர்
சொல்லுஞ் சொல்லுஞ் சுடச்சுடச் சொல்லினர்
வெல்லும் வெல்லுமென் றெண்ணிடும் வீரரே.

---

37. களிறுகல்-யானைபோன்றகல். புதவு-கதவு.

38. தட்பவெப்பம்-விருப்பும் வெறுப்பும். கொட்புற-கூட்டமாக.

39. இடங்கர்-முதலை. அளைய-பொருந்த.

41. நணித்து-குறுகியது. அயில்-கூர்மை.

43. வேலும் வேலும் மிகைத்தெதிர் வீசினர்
கோலுங் கோலுங் குறிப்பினி லெய்தனர்
தோலுந் தோலுந் துளைப்பட வேந்தினர்
சாலுஞ் சாலுமென் றெண்ணுந் தறுகணர்.

44. வெம்பும் வெம்பும் மிடலுடை வீரரெய்
அம்பு மம்பு மழன்றெதிர் மண்டிடும்,
பம்பும் பம்பும் பரிக்குலங் கோடெனுங்
கம்புங் கம்புங் கனற்றுங் கரிக்குலம்.

45. தேருந் தேருந் திசைதிசை மோதலான்
ஊரு வோரு முறுநருஞ் சாய்ந்துகு
சோரி சோருந் தொறுந்தொறும் வாய்திறந்
தோரி யாவலோ டுண்ணவண் ணுருமே.

46. உருளை வீசி யுறுத்தெழு வார்புலிக்
குருளை போலக் கொதித்தெழு வார்பகை
மருளை நோக்கி மடங்க லெனச்சினந்
திருளை நோக்கு மிரவிபோல் நோக்குவர்.

47. வாளை வீசி வருத்த வெதிர்வரும்
ஆளை வீசி யடிக்குங் களிறுகள்
தோளை வீசித் துறையிற் றுணிகளை
வேளை வீசி வெளுப்பவர் போலுமே.

48. வில்ல டிப்பவர் வேலி லிடிப்பவர்
மல்ல டுப்பவர் வாளி னெடிப்பவர்
கொல்ல டுப்பவர் கூடக் களிற்றினம்
நெல்ல டிப்பவர் நேர வடிக்குமே.

---

43. கோல்-அம்பு. தோல்-கேடயம். சாலும்-தகும்.

44. மிடல்-வலி. அழன்று-தீபபறந்து. கோடு-யானைக் கொம்பு. கம்பு-தடி. கனற்றும்-தீபபற்றச் செய்யும்.

45. ஊருவோர்-பாகர். ஓரி-நரி.

46. குருளை-குட்டி. மருள-வெறி.

47. வேளை-ஏற்றகாலம்.

48. மல்-உடற்போர். கொடித்தல்-கொல்லல். நேர-போல.

49. சோலை வாரியாச் சூழ்பனை தென்னையின்
காலை யிரவக் காய்கள் சிதறல்போல்
சாலை வீரர் தலைகள் சிதறவே
காலை வாரி யடிக்குங் களிறுகள்.

50. அதரி யாடெருத் தாவினம் போலவே
கதறி வீழ்ந்துகை கால்தலை மூளைகண்
சிதறி யோடிடச் செங்களம் பட்டிடக்
குதிரை யோடிக் குளம்பி னுழக்குமே.

51. கழையெ னத்திரள் காலிற் குருதிநீர்
குழைய விட்டசெஞ் சேற்றிற் குதிரைகள்
மழைய டுக்கும் வயலி னிடைப்பசுந்
தழைமி திப்பவர் தம்மின் மிதிக்குமால்.

52. கால றுந்தன கைக ளறுந்தன
மேல றுந்த விழிக ளறுந்தன
தோல றுந்தன துன்னுஞ் சுடர்முடி
ஏல றுந்த விருபடை வெள்ளமே.

53. ஊறெ டுத்த வுடலுகு செம்புனல்
ஆற டுத்த, வறுவை புரளலாற்
சேற டுத்த சினப்படை யாளர்கள்
மாற டுத்த வலம்படு செங்களம்.

54. பொருது வென்றுறப் போம்படை முன்செலீஇப்
பெருகி மேல்வரும் பேணலர் தானையை
வருவி சைப்புனல் வாய்கற் சிறையென
ஒருவன் றாங்கி யுழக்கி யழிக்குவன்.

---

49. கால்-அடிமரம். சா-வெட்ட. சால்ஐ-தகுதியான.
50. அதரியாடல்-நெற்போரடித்தல்.
51. கழை-மூங்கில். மழையடுத்தல்-நீர்நிறைதல்.
52. ஏல்-மிக.
53. ஊறெடுத்த-ஊறிய. அறுவை-அற்றவுடல். புனல் ஆறு அடுத்த களம் சேறடுத்த என்க.
54. கல்சிறை-கல்லணை.

55. பட்ட வீரர் படாதவ ரென்பது
திட்ட மாகத் தெரிகில வென்னெனில்,
வெட்டி வீழ்த்த விழும்படைக் கைகளும்
அட்டை போல வலைந்து பொருதன.

56. ஏந்து வாட்கை யொருவனை யெய்திடாத்
தோய்ந்து மேற்புகத் தூவிட வெங்கணை
போந்தை வெண்மடல் போலவு மாருடன்
னார்ந்து செல்லு முருளையு மொத்தனன்.

57. போர ணிந்து பொருதகு தும்பையந்
தார ணிந்துடல் தானைத் தலைவனைத்
தார ணிந்து தலைக்கொள வேயொரு
வீரன் வந்து விலங்கியே மீட்குவன்.

58. உரிமை யாளனுன் னொல்க வுடைபடும்
அருமை கண்டக லாமலக் கூழையை
எருமை போல விடைப்படத் தாங்கியே
பெருமை பெற்றொரு மள்ளன் பிறங்குவான்.

59. கைப்ப டைகள் கடும்பகை தாக்கலான்
பொய்ப்ப டையதாப் போய்வெறுங் கையராய்
எய்ப்பி னில்வைப் பிலாமையி னுற்சிலர்
மெய்ப்ப டைகொடு வென்றி பெறுவரே.

60 குளிறு மாமுகி லென்னக் குமுறியே
வெளிறு கோட்டின் விலங்கி யெதிர்வரும்
களிறு கண்டு கடுஞ்சின மள்ளரோர்
ஒளிறு வாளினை யோச்சி நகைக்குமே.

---

55. அலந்து-சுழன்று, அசைந்து.

56. எய்திடா - அறுக்க முடியாமையால். போந்தை மடல்- பனங்கருக்கோலை. ஆர - வண்டிச்சக்கர ஆரக்கால். உடலிற் தைத்த அம்புகளால் கிலந்தோயாது இருந்தான்.

57. தார்-தூசிப்படை அணிந்து தலைக்கொள-சூழ்ந்து வளைக்க. விலங்கி-வென்று.

58. உரிமையாளன் - படைத்தலைவன். உன்னொல்க-முனமுடைய. கூழை-பின்னணிப்படை.

59. எய்ப்பினில் வைப்பு-உதவிக்காக வைத்திருப்பது. மெய்ப்படை-உடல்வலி.

60. குளிறுதல்-ஒலித்தல். வெளிறு-வெண்மை.

61 கலங்க மேல்வரு காய்சின யானையை
விலங்கி யஃதொடு வீழ்ந்த வொருவனை
வலங்கொ டேபகை வாட்கை மறவர்கள்
அலங்கல் சூடித் திரண்டுபின் றுடுவர்.

62. மண்க ளிக்க மறப்படை வீட்டியே
கண்க ளிக்க நடுகலைக் கண்டவன்
பண்ப ழிக்கப் படாதென வேயுடற்
புண்ணி ழித்துப் பொருக்கென வீழ்குவன்.

63. இளமை தந்து பிறுதியு முண்டென
உளமி குத்த வுணர்வு தலைக்கொடு
களமு குத்துக் கருங்கை மறவரை
எளிமை வைத்துமு னெள்ளுமோர் மள்ளனே.

64. சுற்ற மோவெனச் சூழ்ந்தழ முன்செலீஇக்
கொற்றங் கொண்ட கொழுந னுரம்படு
வெற்றி வேலினை வேய்ந்துதன் மார்பிடைச்
சிற்று யிர்விடு வாளொரு செல்வியே.

65. குலையு மென்குழற் கோதைய ரோவென
உலையு முள்ளத் தொருமை யுறத்தழீஇ
விலையி லாதவை மேவிய காதலன்
தலையொ டுமுடிந் தாளொரு தையலே.

66. சொன்ன சொற்றவ றாது துணிவொடு
துன்னி மேல்வருந் துன்னலர் தாசியைத்
தன்னி ளம்புலி தாங்குதல் கண்டுதாய்
உன்னி யுன்னித்த னுள்ள மகிழுவாள்.

67. மேய தெவ்வரை வீழ்த்தியே வீழ்ந்ததன்
சேய னுண்மைத் திறங்கண்டு செம்மனத்
தாயு வந்துவந் தார்க்கு மெனிற்றமிழ்த்
தாயர் வீரந் தனையெடுத் தோதவோ?

---

61. அலங்கல்-மாலை.
63. தந்துதல்-கழிதல். உகுத்து-சிந்தி.
65. உலையும்-வருந்தும். விலையிலாதது-மதிப்புகழ்.
66. துன்னி-நெருங்கி. தாசி-கொடிப்படை.

### வேறு

68. தருவலி மறவருந் தலைவ ராயரும்
பெருவிசைத் தேரிடைப் பின்னு முன்னுமாய்ப்
பரவையின் மறவர்கள் பட்ட செங்களக்
குருதியி னிடைசெலக் குரவை யாடுவர்.

69. இன்னது செய்கிலே னெனிலி தாகுவல்
என்னமுன் சொன்னதங் கியன்றி லாமையால்
மின்னியல் தீயிடை வீழ்ந்து துண்ணென
இன்னுயி ரீந்திசை யெய்து வார்களே.

70. சிறுவனுந் தனியனுஞ் செருப்பு காதனும்
திறலொடு பொருதவத் திறமை கண்டுவந்
தறைகழல் புனைந்தவ னுண்மை கூறியே
மறவனைச் சூழ்ந்திகல் மறவ ராடுவர்.

71. அறப்பொருட் படிசிறி தகற்சி யின்றியே
மறப்பொருட் படியக மலிவு மீக்குறத்
திறப்பொருட் படிவட செருநர் தம்மொடு
புறப்பொருட் படிதமிழ்ப் பொருநர் ஆர்த்தனர்.

### வேறு

72. பண்ணு றுத்த பனிச்சுவை யாழொலி
மண்ணு றுத்த மயிர்க்கண் முழவொலி
கண்ணு றுத்த கழைமுக் குழலொலி
உண்ணு றுத்து மறவரை யூக்குமால்.

73. பல்வ கைய பறையின் பருவொலி
மல்வ கைய மழைக்கண் முரசொலி
கொல்வ கைய வளையொடு கொம்பொலி
வெல்வ கைய விறிப்புற வூக்குமே.

74. பாவை யன்ன பருங்கண் விறலியர்
பூவை யன்ன புதுக்கிசை பாடியும்
ஒவ மின்னுயி ருற்றென வாடியும்
வி லாப்படர் தங்களை யூக்குவர்.

---

68. பரவை களம்-கடல்போன்ற களம்.
71. மலிவு-மகிழ்ச்சி. ஆர்த்தனர்-பொருதனர்.
72. பனி-குளிர்ச்சி. மண்-கருஞ்சாந்து.
73. மல்-வளம். வளை-சங்கு.
74. ஓவம்-சித்திரம் தா-தவறு..

75. இன்ன வாறங் கிருபடை வீரரும்
மன்னி நின்று வலிந்து பொருதனர்;
அன்ன காலையவ் வாரிய ராமனும்
பின்ன ரோடு பெருங்கள மேயினன்.

76. படங்க ளென்ன மணித்தமிழ் மள்ளர்கள்
திடங்கொண் டண்மித் திறலொடு தாக்கினர்
கடுங்க ணாளர் கணைகொடு மள்ளரை
ஒடுங்க வைத்தன ருள்ளுடைக் தொல்கினர்.

77. குருதி யாடிக் குவிபிணக் காடணர்
பரவை போலப் படர்செங் களத்தினைப்
பரிதி காணப் படாதெனச் செல்லவே
இரவு வந்த திறுங்கொலு வேனெனு.

## 8. இரவுப் போர்ப் படலம்

(சேயோன்)

1. பகலை வென்று பனிப்பகை யென்றுபேர்
புகல நின்ற புகழொடு போதுநீ
அகல வென்றுல காள வவாவுடன்
இகல நின்ற விருள்வந் தடைந்ததே.

2. தூதர் வந்து சொலப்படை யாளரைப்
போதி ரென்னவே போய்ப்பொரு தேயவர்
ஏதி லார்விடு மேவி லழிந்தனர்;
ஈத றிந்துசே யோனு மெதிர்த்தனன்.

3. ஏவுக் காயிர மாயிர மென்னவே
சாவுக் காகச் சமைதர வாரியர்
ஆவிக் காக வடுகளம் பாழ்படக்
கூவிக் கொண்டு குலைகுலைத் தோடினர்.

4. நிலவு லாவிய நீண்மதி வெண்குடை
இலகு செந்தமி ழேந்த லிசையொடு
விலகி லாது விளங்கிட வேதமிழ்ப்
புலவர் கூடிப் புதுக்களம் பாடினர்.

---

77. அணர்தல்-மேல்நோக்கியெழுதல். பரவை-கடல்.

5. ஒப்பி லாத வொருவன்மு னரியன்
தப்பி லாவிழி தம்பியு மற்றரும்
அப்பு மாரி பொழிய வவைபெலாங்
குப்பு றுத்துக் கொடுங்கணை தூவினன்.

6. ஒருவ னோடு பலவ ருடன்றெழூந்
தருவ வெங்கணை தூவ வொளித்தொகை
இரவை நீக்கிப் பகல்தர வேசுடர்
வரவு கண்டில ராகி மயங்கினர்.

7. செந்நி லத்துருள் செந்தலை சூடிய
பொன்னி னத்துப் பொதிந்த முடிமணி
மின்ன வானின் விளங்கிடு மீனினம்
இன்ன லூற்றிமை யாம விளைந்தன.

8. ஓங்கி யேவு மொருவன் சுடுகணை
தாங்கி லாது தசரதன் மைந்தனும்
ஈங்கு நிற்க வினியிய லாதெனப்
பாங்கு நிற்பவ ரோடு பகர்ந்துமே.

9. அறிந்து சேயவ னாற்றலை முன்கொடு
முறிந்து சென்ற முதுகரைப் போலவே,
உறந்து தம்பியின் னோட வகன்றவன்
பறந்து சென்றனன் பாசறை யெய்தினான்.

10. ஆங்கு நின்றனு மன்முத லாயரை
ஓங்கி யோங்கி யுதைத்துத் துரத்தியே
நீங்கி வெங்களம் நீள்முடிக் கோயில்புக்
கோங்கு தந்தைபா லுற்ற துரைத்தனன்.

11. தந்தை கேட்டுத் தழுவித் தழுவியென்
மைந்த வுன்னை மகனெனப் பெற்றவெற்
கெந்த நாளி லெதுகுறை யீதென
வந்த துண்டோ வெனவுள் மகிழ்ந்தனன்.

---

5. குப்புறுத்து-வீழ்த்தி.
9. முதுகர்-தோற்றவர். உறந்து-விரைந்து.

12. வென்றி வீரன் விடைகொடு தந்தைபால்
குன்று காணுங் கொடிமணிக் கோயிலைச்
சென்று கூடினன்; சென்ற வடபுலர்
என்று மில்லா விரும்பட ரெய்தினர்.

### வேறு

13. பாடியை யடைந்து ராமன் பாவியேன் கெட்டே னெம்பி!
கோடிநாட் பழகி னாலுங் கொடிதவ மிலங்கை மைந்தன்
ஆடிய லேவக் கல்வி யறிந்திட முடியு மோதான்
பீடணற் குரைத்த மாற்றம் பிழைத்திடும் போலு மன்றோ?

14. அன்றவன் சொன்ன வாறே யருந்தமி ழிலங்கை வேந்தன்
முன்றிலை யடைந்தே யென்னில் மொய்குழல் தன்னைக் கூடி
இன்றியாம் பட்ட துன்ப மின்றியே யயோத்தி தன்னைச்
சென்றடைந் திருப்பே மன்றோ சிறுமதி யாற்கெட் டேனே.

15. தூதுவ னெடுத்துச் சொன்ன தூயசெந் தமிழை யேனும்
பாதுகாத் திருப்பே னாகிற் பகைகெட வுறவு தாங்கி
மாதினை யடைந்தே முன்போல் மனமகிழ்ந் திருப்பே னன்றோ?
ஏதினிச் செய்வே னெம்பி! யிடரினை யெதிர்கொண் டேனே.

16. ஆவது மாகற் கேற்ற தறிவது மழிந்து சிந்திப்
போவதும் போகற் கேற்ற புலமையும் பொருந்தா வினர்
ஓவது புரிந்து மண்மே லொழிகுவ ரென்னு முண்மைக்
கேவது புரிந்து நானே யிலக்கிய மானே னந்தோ!

---

13. ஆடு இயல்-வெல்லும். ஏவக்கல்வி-விற்றொழில்.

14. அவன்-அனுமன்.

17. இன்னபற் பலவுங் கூறி யினைந்துமே புலம்புராமன்;
பின்னவ னண்ணு! வீது பெரியவர் செய்கை யாமோ?
மின்னருக் கிறவி னோடு நிலையையு மெண்ணிப் பாரா
தின்னலுற் றிரங்கி யேங்க லேழைமைப் பால தன்றோ?

18. மண்டிய துன்ப மென்மேல் வருகினு மவற்றைத் தேடிக்
கொண்டபே ரின்ப மாகக் கோடலே யவற்றை வென்றி
கண்டதா முலைவி லாத கடுந்திற லவர்கட் கென்று
பண்டையோ ருரைக்கு முண்மை பயின்றறி யீரோ வென்ன.

19. தேற்றியே யிருக்கும் போது செழுந்தமிழ்த் தலைவ ரெல்லாம்
போற்றிய பெருமை விட்டுப் புகழொடு மானங் கெட்டு
மாற்றலர்க் கடிமை யாகி வண்டமிழ் வாழ்வை யன்னார்க்
கேற்றியே யுரிமை கொன்ற விரண்டக னுங்கு வந்தான்.

20 கண்டது மறவ ரெல்லாங் கருக்கென விருக்கென் றோட்டங்
கொண்டன ரவரை மற்றோர் கோடரிக் காம்பு தேற்ற
அண்டின ரெனினு மன்னு ரச்சமற் றிருந்தா ரல்லர்
தண்டமி ழவரென் றோர்புற் சருக்கெனில் விருக்கென் பாரே.

21. இரண்டகன் றன்னைத் தானே யிணையென வினிமை யெல்லாந்
திரண்டசெந் தமிழர் வாழ்வின் றெளிபய னெனும்பூ வைக்குங்
கரண்டக மெனவே வந்து காத்தருள் தருஞ்சே யோனென்
றருண்டன ரென்னி லன்னே னருந்திறற் கிணையா தென்கோ,

19. இரண்டகன்-வீடணன்.
20. கோடரிக்காம்பு-சுக்கிரீவன்.
21. கரண்டகம்-பூக்குடலை.

22. முன்னிவன் றன்னை வீழ்த்தி முறையுட னரசு பெற்ற
பின்னவா! வென்றால் நீயும் பேரரு ருற்றாய் பாவம்!
உன்னருஞ் சேனை சூழ வுனதுநா டடைந்து நீயும்
இன்னலர் துய்ப்பா யென்ன வினைந்துவில் லவனுங் கூற·

23. உள்ளம துடையே கேலய! உறுதியாய் நாளை வென்றி
கொள்ளுவம்; நாளை யந்தக் குறியனைக் கொல்வே
னென்றவ்
வள்ளலுந் தேற்றத் தேறி வடவனும் பள்ளி புக்கான்;
புள்ளின மொலிப்ப வானம் புலர்ந்தது புலரி காண்பான்.

## 9. இரண்டாம்போர்ப் படலம்

1. இருண்டபே ரிருளை நீக்கி யிளங்கதிர்ச் செல்வன்
றப்பிற்
றிரண்டுமே பொருது வென்று சென்றவர் போக
மண்ணிற்
புரண்டுமே யுயிரை நீத்துப் போனமா மறவர்க் கின்றே
டிரண்டுநா ளாயிற் றென்ன வெண்ணுவான் போல
வந்தான்.

2. கதிரவன் றோன்ற முன்னங் கடுந்திறல் மறவ வெள்ளம்
கதுமென வெழுந்து போந்து களத்திடைப் பரந்த
தாங்கே
அதிர்குரல் முரசஞ் சங்க மருந்துடி பதலை காளம்
முதிர்கினை முழுவ மற்றும் முகிலென முழங்கிற்
றம்மா!

3. முந்தைநாள் முழுது மாவல் முடிகுற மிதக்க வுண்டு
சந்தைபோ லொருவிச் சென்று சலிப்பினை யிரவுக் கிந்து
குந்துகால் விலங்கும் புள்ளுங் கூடியே களையி னோடு
வந்துவாய் திறந்து போரின் வருகைபார்த் திருந்த
மாதோ.

---

23. குறியன்-சேயோன். வள்ளல்-சுக்கிரீவன். புலரி-ஞாயிறு. புலரி காண வானம் புலர்ந்தது.

2. பதலை-துடுமம். காளம்-கொம்பு.

(இராவணன்)

4. முன்னைநாட் போன்றே மன்னர் முனைப்புலம் படர்ந்து மொய்த்தார்;
தன்னிகர் தானே யான தமிழர்தந் தலைவன் றனை
மன்னர்மூ வரையங் கேவ வரிசையாய்ப் போய்மொய்த் தன்னார்
இன்னலுற் றழியப் பொங்கி யிறைமகன் களம்புக் கானே.

5. வெங்களி றழக்கப் பாய்மா விரைவொடு குழைக்கத் திண்டேர்க்
கங்குருள் கலக்கச் சூரர் கழலடி மிதிப்பச் சேறாய்
அங்குறை யுறுத்தச் சேறு ரமைப்புறுங் களத்தி னூடே
பொங்கொளி மணித்தே ரூர்ந்து புகுமிரா வணனைக் கண்டே.

6. யாரென வடவன் கேட்ப வண்ணலுக் கிளைய பாவி
வீரவென் றமைய னென்ன, விழுப்புக ழுடையன் போலும்!
யாரிவ னொளிக்கொப் பாவ ரையகண் கூசு கின்ற
பாருநண் பகலிற் றோன்றும் பருதிபோல் விளங்கு கின்றான்.

7. செங்கதிர் போன்ற மேனி திகழொளி சூழப் பெற்ற
மங்கல வுருவி னோடு வாய்ந்தகட் டழகு மிக்கான்
திங்களி னுருவஞ் சேப்பத் திகழ்கிறு னெனவே முற்றான்;
செங்கைவே லவனுந் தேரைச் செருக்களஞ் செலுத்தி னானே.

8. மன்னவர் மன்னன் வில்லை வளைத்தடர் மாரி பெய்ய
மின்னெனப் பகைவர் தோன்றி வெருவென வெருவுற் றோட;
முன்னனைக் கரவாற் கொன்று முறையிலா தரசு கொண்ட
பின்னனங் கடையக் கண்டே பின்வரு மாறு சொல்வான்.

---

5. கங்கு-ஓரம். அமகுறை-அறுபட்ட உடல்.
6. எழுறுதல், மகிழ்தல், வருந்துதல், மயங்குதல்.
8. வெருகு-பூனை. கரவு-வஞ்சனை.

### வேறு

9\. உள்ளவா றுரைக்கிறே னொருவர்க் குள்ளதைக்
கொள்ளுதல் தீததைக் கொடுத்தல் நன்றதைக்
கள்ளமாய்க் கொள்வதிற் கயமை வேறுண்டோ?
என்னுறு பொருளினு மியம்பக் கேட்டியால்.

10\. அண்ணனைக் கொன்றவ னரசை வவ்வியே
உண்ணவு முடுக்கவு முலக மேசவும்
புண்ணுடை நெஞ்சொடு புலம்பி வாழ்தலின்
மண்ணிடை மண்ணென மடிதல் தீமையோ?

11\. அன்னதும் பகைவனுக் கடிமை யாகியோ
புன்னெறி யான்முடி புனைத லன்றியும்
என்னையுங் கொல்லுதற் கிசைந்த வெம்பியோ
டுன்னையும் பெற்றவ ருறுதி பெற்றரே!

12\. ஐயன்மீ ரிருவருந் தமிழ ராய்குலத்
துய்யரா யெப்படித் தோன்றி னீர்களோ?
கையிலா காதநீர் காலைக் கும்பிட்டுச்
செய்யவேண் டியதினைத் தெளியச் சொல்லுவீர்?

13\. வண்டமிழ் மக்கள்தன் மான மென்பதை
உண்டியி னன்றுதம் முயிரின் மேலதாக்
கொண்டவ ருங்களைக் குறித்த மட்டிலும்
விண்டவ ரென்பதை விளக்கிக் கொண்டனிர்.

14\. மன்னுயி ரேகினும் மான மென்பதைப்
புன்னுனி யாயினும் போக்கற் குட்படாத்
தென்னவர் மரபினிற் சிறுமைக் கஞ்சிடா
மன்னவ ரிருவரும் வந்து தோன்றினீர்?

15\. எப்படி யோதமி ழினத்தில் வந்துமே
தப்பியே பிறந்தனிர் தமிழர் வீழ்வினைப்
பப்பியே வருங்குலப் பகைவர் காலினில்
தொப்பென விழுந்தெழுந் தொழும்பர் நீவிரே.

---

15\. பப்புதல்-ஒப்புதல். தொழும்பர்-அடிமைகள்.

16. அரசெனப் படுவது மரச வாழ்வதும்
உரைசெயின் மக்களுக் குதவி செய்வதே,
அரசனைப் போக்கியவ் வரசு பெற்றநீ
கரிசனத் தொடுசெயுங் கடமை யென்னவோ?

17. ஆரியக் கோடரிக் கான காம்பதாக்
காரியப் படுமுதற் கயவ னேயினச்
சீரிய தமிழ்மரஞ் சிதைய வெட்டிடும்
பூரிய வுன்னுயிர் போக்கு வேனிதோ.

18. இன்னன வுரைத்திட வேதும் பேசிலா
துன்னிய கருத்திலா வூம னாகியே
வெர்ரிடு வானென வில்லை வாங்கியே
இன்னெனக் கணைதொட விறைவன் சீறியே.

வேறு

19. அடித்தவன் றன்னை வீழ்த்தி யரமியன் முதலோ ராவி
துடித்திட வடித்து வீழ்த்தித் தொகைபட நாறி யார்ப்ப
எடுத்தவர் தம்மை மன்னர் ஏகியே ராமன் முன்னர்
விடுத்தன ரவனும் பொங்கி விரைந்தெழ மறித்துப்
பின்னோன்.

20. எம்பியா னிருக்க வில்லை யெடுப்பது தகுதி யோமான்
கும்பலில் விரைந்து பாயுங் கோளரி யென்னப் பாய்ந்தே
தப்பலர் தின்னற் கெண்ணுந் தரிமுரைத் தலிய னுயவ்
வம்பனோ டோட்டி யீதோ வருகிறே னென்று கூறி,

21. சென்றுமே யெதிர்க்க மேலோன் செய்கதிர் வேலாற்
றாக்கப்
பொன்றிலன் மயங்கி மண்மேற் பொருக்கென
வீழ்ந்தா னாங்கு
நின்றனு மனுங்கொண் டேகி நீள்சிலை யவன்முன்
சேர்ப்பக்
கன்றிய வவனுஞ் சென்று கடிதினி விளைத்து
மீண்டான்.

---

19. அரமியன்-ஆரியப் படைத்தலைவன்.

22. வில்லினன் சென்ற பின்னர் வேலினன் கோயில் புக்கான்;
அல்லலுற் றழுங்கு வோருக் காரிய முனிவ ராளர்
புல்லிய மருந்து போட்டுப் புண்ணையும் பொருந்தச் செய்ய
எல்லருங் களைப்பு நீங்கி யெழுந்தன ரொருவா றாக.

23. ஈங்கவர் களைப்பு நீங்கி யெழுந்தபின் வடவ ராமன்
தாங்கிய துயரி னோடு தனித்தனி தழுவி யெம்மீர்!
ஆங்கவன் றன்னை யின்றே யழிக்குவே னென்ன வன்னார்
நாங்களு மதுவே யென்றார்; நடுமகன் நடக்கை காண்பாம்.

## 10. கும்பகர்ணன் கொலைப் படலம்

### வேறு

1. புண்ணோடமர் களமாகியே பொருவேனென விறைவன்;
அண்ணாவிதோ வந்தேனொடி யாமென்றிடு யாவும்
நண்ணார்குல மில்லாமலே நான்செய்குவ னென்று
திண்ணார்படை புடைசூழவே சென்றான்கும் பகன்னன்.

2. வடிவேலொடு கதிர்வாளை வலங்கொண்டு சுழற்றிப்
படையோலிட வயமாவொடு பாய்மாவொலி முற்ற
இடியேறென முரசங்கிணை யியமுள்ளன மற்ற
துடியோடடி படவேயழல் சுடுசெங்களம் புக்கான்.

3. கண்டே கொடித் தேர்கோடரிக் காம்பானவை யுடனே
ஒண்டார்குல முயிர்தாங்கியே யோடோடின வதனைக்
கண்டேமுதல் தின்றேறிரி கடையோனெதிர் வரவே
உண்டோவலி யெனமுன்வர வோடோடின னவனும்.

4. தடிகொண்டிடை மகனோங்கியே தாக்கத்தறு தலைகள்
அடியுண்டன ருதையுண்டன ரளறுண்டனர் குருதிப்
பொடியுண்டனர் புரளுண்டனர் பொய்யுண்டனர் போக
இடியுண்டக ரவாமென விடருண்டகல் வாரே.

---

2. வயமா-யானை. பாய்மா-குதிரை. இயம்-பறைப்பொது.
3. கடையோன்-சுக்கிரீவன்.

5. அவ்வேளையில் வடவாரிய னவனுரென வஞ்சன்
ஒவ்வாமுறை யாலன்றெனை யோடென்றவ
னிளையோன்,
எவ்வேளையு முனைநம்பி யிருக்கின்றவன் முதியோன்
இவ்வேளையி லிவனுக்கிணை யில்லென்றதும் வில்லோன்.

6. எதிர்சென்றன னதுகண்டது மிடியேறென வுறுமிக்
கதிர்வேலினுக் கெதிரேசுடு கணைதூவியே வருவோன்
வெதிரும்படி யவனும்பெரு வில்வாங்கியே சுடுகோல்
உதிரும்படி விடுமுன்னிவை யுரைசெய்குத லானான்.

7. வடவாரிய வொருநாளிலும் வந்தோமிலை யுமது
வடவாரிய மானாலுமுன் மரபோடும தையும்
கடனாகவே தமிழோர்கொலை கைக்கொண்டனர் நீயும்
படநாகம தானாயல பழியும்பல கொண்டாய்.

8. பகையின்றியே யயலாரகம் பண்பின்றியே மன்னர்
புகலாகுமோ? நாடோடிகள் போலப்புகுந் தாலும்
தகையின்றியே யதையாளுவோர் தமரைக்கொலை
செய்து
வகையின்றியே பகைகொண்டலை மடவோர்களு
முண்டோ?

9. புலையுண்பதும் பிறிதோருயிர் பொன்றப்புல மின்றிக்
கொலைசெய்வதுங் கூடாதெனல் குற்றங்குறை
யென்னில்,
அலையுண்டிடு முயிர்காவல ராவார்செல வின்றே
சிலைவாவுல காள்வோர்கொலை செய்வோர்களோ
சொல்லும்?

10. ஒருகுற்றமு மறியாவெம தூற்றோரையு மூற்றோர்
பருகுற்றன ரந்தோசுடு பகழிப்பகை யாலே,
அருகுற்றது பிழையோமுதி யாளோடிளை யானும்
திருகுற்றிட வின்றேதென செய்தாரட பாவீ!

---

6. வெதிர்தல்-நடுங்குதல். கோல்-அம்பு.
7. து-தந்த. அல-அதுமட்டுமல.

11. பெண்ணுக்கிரங் காமக்களிப் பெரும்பேருல கத்தில்
மண்ணுக்கொரு சுமையாகநீ வந்தெங்குபி றந்தாய்?
கண்ணுக்கவர் மரமோவலை கல்லாய்த்தெரிந் தாரோ?
என்னைத்தனை யென்றுசெய் திகல்கொண்டனை
மடையா!

12. சிறைவைத்தனி ரென்பாய்கொ லுன்றேவிக்கிது நாளும்
குறைவைத்தன மில்லென்பது கொடியோயறிந் திலை;
இறைவிக்கினை யாவாள்தமி ழினியார்க்கினி யாளே
கறைவைத்தவெம் பின்றோனிடங் கழறித்தெறி வாயே.

13. வாவென்றசொல் லதுகொண்டுநீ வந்தாயிலை பாவி!
ஏவொன்றிய சிறுவன்றமி ழினமொன்றியே வந்து
தாவொன்றினை யடடாவுன் றலைதப்புவ தினியில்
கோவென்றில னெனினும்வன் கொலையென்றிடுங்
கொடியா!

14. தாதாடிய வண்டோவிடு தண்டாமரை நாடன்
பேதாய்மொழி பொய்யாமலுன் பெண்பாலொடு
செல்வப்
போதாவென வேயுன்னிடை போதந்திட விட்ட
தூதாகிய வதிகாயனைச் சொல்லோடு துறந்தாய்.

15. மலைவாலியி னுயிருண்டுபின் வலிகொண்டுமே வந்த
கொலைகாரநீ நேரேதமிழ்க் கோனைப்புக லெண்ணில்
நலியாமலுன் மனைதந்து நலஞ்செய்குவ னன்றே!
புலிவாயக லில்லாவெலி போலாயினை சிறுவா!

16. பண்டேவரு முனிவோரடு பசிகொன்றன மல்லால்
உண்டோகுறை யிதுகாணுமோ ருயிர்கொன்றது
முண்டோ?
தண்டாதுண வுண்டேயொரு தமிழ்நாடர்க ளேனும்
உண்டோவுன துயர்நாடதி லோரன்றியி லாதாய்!

---

11. உலகத்து இல். என்-என்.
12. இனியார்-மகளிர். கறை-குற்றம்.
13. ஏவம், தா-குற்றம். சிறுவன்-சுக்கிரீவன்,
15. பின்-சுக்கிரீவன்,

17. கொன்னஞ்சர விளிலுங்கழி கொடியோரென வறியாத்
தின்னுஞ்சுவை யெல்லாமவர் தேக்குண்டு தெவிட்ட
வன்னெஞ்சரை யினிதூட்டி வளர்த்தாகுறு பயனைக்
கன்னெஞ்சர்க ளேவம்பினற் கைமேற்பெற லாமே.

18. முனிவோரென வயலுறெடன முறையேபுறந் தருதல்
முனிவோரென வெருவித்தவ முதுகோலமா வாழ்வை
முனிவோரென வுரைதந்தது முடிவாகியே தமிழர்
முனிவோரென வெதிர்வந்தனர் முறையோவடி
யவலே!

## வேறு

19. நால்மறை வேள்வி யென்று நஞ்சினுங் கொடிய
நும்போர்
ஊன்மனைறந் துணற்கு நீயும் உதவியே யுதவி கோடல்
மேன்முறை யாமோ மக்கள் விரும்பிடுஞ் செயலோ
வன்றி
நூன்முறை யோடு பட்ட நுணங்கிய வறிவு மாமோ?

20. இறையொடு முரணி வந்த விரண்டகன் றன்னை யேற்றல்
முறைமையோ நால்வ ரோடு முன்பிறந் தவனீ யன்றோ?
இறைமையை யறியா யோவுன் னெம்பிக்கு மென்றம்
பிக்கும்
நிறைகுண வேறு பாட்டை நினைத்துப்பார்த் திலையோ
வென்ன.

21. வேள்வியை யிகழ்ந்தவ் வேள்வி விரும்பியே செய்யு
மான்ற
கேள்வியு மருளுஞ் சால்புங் கிளர்தவ வலியும் வாய்ந்து
நாள்வளர்த் துலகை யோம்பி நற்றவம் புரிமே லோரைத்
தோள்வலி யதனால் வாட்டித் துரத்தியே கொடுமை
செய்யும்.

---

17. ஏவு அம்பு.

18. முறையே-முறையாக. புறந்தருதல் முனிவோர் என-பாதுகாத்தலை வெறுப்பார் என்று. வெருவி-அஞ்சி. வாழ்வை முனிவோர் என உரைதந்தது-வாழ்க்கையை வெறுப்பவரென உரைத்தது. முடிவாகி-உண்மையாகி. தமிழர் முனிவோர்-தமிழர் பகைவர்.

22. பாவிகா ளினிமே லிந்தப் பாரிலி லில்லா துங்கள்
ஆவியை யழித்துப் போக்கி யறத்தைக்காத் திடவே
யீங்கு
மேவினே னெனவில் வாங்கி வெங்கணை துவி
யார்த்தான்
பாவலர் புகழ்நல் லோனும் பகழிமா மழைபெய் தானே.

23. வெற்றிதோல் விகளில் லாது வீரர்க ளிரண்டு பேரும்
கொற்றமார் கொள்வா ரென்னக் கூறிடு மறிவு வீழ
எற்றினில் முடியு மோவென் றேங்கவாங் குள்ளோ
ரெல்லாம்
சற்றுமே சலிப்பி லாது தருக்கியே பொருதா ரம்மா!

24. எண்ணிடப் படாம லேவ மிடையறு தியலப் பார்ப்போர்
கண்ணிடைப் படாது காலிற் கதிரொளிப் பிழம்பு போல
மண்ணிடைப் படாது வான மருவியே வெருவி நீங்கிப்
புண்ணிடப் படாது நீக்கிப் பொருதனர் பொருவி
லாதார்.

25. மாகெடுத் துடலை யோம்பி வருதலை வெறுத்த லன்றித்
தாகெடுத் துறவு பூண்டு தமிழ்கொடுத் துதவி ஞேரை
வேகடுத் தழலும் பொன்போல் வெஞ்சின மூட்டி
நம்மை
ஆகெடுத் தோமே யென்றுங் கஞ்சினர் முனிவ
ரெல்லாம்.

26. வன்கொலை யொருநாள் காக வஞ்சக னற்றம் பார்த்துத்
தென்கலை யெழுதுங் கையைச் செவ்விதழ் பிடிக்குங்
கையைத்
தின்கலை யறுப்பான் போலச் செலவையு மறுத்துப்
பின்னர்த்
தன்கொலை யம்பொன் றேவித் தலையையு மறுத்தா
னையோ!

---

24. கால்-காற்று. பிழம்பு-வடிவம். புண்-உடல்.
25. மா-விலங்கு. தா-பகை. தமிழ்-இனியவுணவு.
26. அற்றம்-ஏற்றநேரம். தென்கலை-தமிழ். இதழ்-ஏடு.
தின்கலை-தின்னும் மான். செலவு-கால்கள்.

27. ஒருமையுங் குறைவி லாத வூக்கமு மாக்கஞ் சேர்க்கும்
அருமையு மறிவு முற்றோர்க் காவன செய்து காக்கும்
பெருமையுந் தகவுஞ் சால்பும் பெருகிய தமிழர் தங்கள்
உரிமையைப் பறிப்பான் போல வுயிரினைப் பறித்தா
னந்தோ!

28. புரண்ட தி யாக்கை மண்ணிற் புலர்ந்தது குருதி வெள்ளம்
திரண்டது தமிழர் வெள்ளஞ் செறிந்தது திசைகள்
நான்கும்
வெருண்டது வடவர் சேனை வீழ்ந்தது போரின்
கொட்டம்
இருண்டது நெடிய வான மெழுந்தது பெருங்கூப் பாடே.

29. கும்பலாய் மறவ ரோடிக் கோயிலைக் குறுகி யையா!
தும்பையந் தொடையல் வேய்ந்து சுடுகணை தூவி
யொன்னார்
அம்பினுக் குயிர்தந் தோட வாரம ருழக்கி யிருத்
தம்பியும் வடவ னம்பாற் சாய்ந்தன னென்று மொன்னம்.

30. அரியணை யிருந்த மன்ன னுவென வலறிக் கீழே
கரியென வுருண்டு வீழ்ந்து கைபிசைந் தழுங்கி யுள்ளம்
உருகியே திரண்டு கண்க ளுற்றிருந் தொழுக மேலும்
பொருமியே பெருமூச் சாடிப் புலம்பினன் வாய்விட்
டம்மா!

### வேறு

31. தம்பியோ வென்னைத் தனிவிட் டமுகென்றே
நம்பியோ முன்னை நடந்தாயோ ஞாட்பினிடைத்
தும்பியோ வென்னத் தொகைநின்ற வம்பலர்கள்
வெம்பியோ வென்னத்தான் வென்றுகளங்
கொண்டாயோ?

32. தம்பி யிருவரெனத் தாழாத் தருக்கழிந்தேன்
உம்பி தனையா னுயிரோ டிழந்தேனென்
எம்பி யுனையு மிழந்தே யிறவாமற்
கொம்பை யிழந்த கொடுமரம்போல் நின்றேனே.

---

31. ஞாட்பு-போர். தும்பி-யானை.

33. தென்னா! வுளரினிக்குஞ் செந்தமிழா! தென்னிலங்கை
மன்னா! வெனக்கு மலைக்குமலை யாய்வந்த
பின்னா! தமிழ்ப்புலவர் பேச்சுக் குகந்தகும்ப
கன்னா! வுனையென்று காண்பேன் கடையேனே.

34. பாட்டி யருங்கொலையும் பாவையவள் வன்கொலையும்
வாட்டானை யோடுகதிர் வாட்கரன் றன்கொலையும்
கேட்டேயின் றுன்கொலையுங் கெழுதகையோ
யானின்றும்
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி நின்றேனே.

35. மண்ணா மணியே மறஞ்செறிந்த கொல்லேறே
நண்ணார் திரண்டு நலியத் துணையின்றி
அண்ணாவோ வென்றே யழைத்தாயோ வாணமுகா!
பண்ணா வுதவிப் படுபாவி யானேனே.

36. மலையிகழ்ந்து நீண்டொழியா வன்மைதழீஇத்
தூயதமிழ்க்
கலைமலிந்த கையறுத்துக் காலறுத்துக் கண்ணேபின்
தலையரிந்து நீமடியத் தம்பியோ வுன்றனைவன்
கொலைபுரிந்து கொன்றானைக் கொன்றுபழி வாங்கேனோ?

37. ஒன்னா ருடன்சேர்ந் துயிர்குடிக்கக் காத்திருப்போன்
முன்னே பிறந்து முனைசென் றெனக்காவென்
முன்னே யிறந்து முதிராப் புகழ்பூண்ட
பின்னோயுன் முன்னே பிறந்து மிறந்திலேனே.

38 வண்ணத் தமைந்த மார்ப்பஞ் சணைதுயிலுங்
கண்ணுக் கடங்காக் கதிர்சூழுஞ் செம்மேனி
புண்ணுக் கெழுகுருதி புலர்ந்து பொடியாடி
மண்ணிற் புரண்டு மழுங்கி யழிந்ததுவோ?

39. எப்போது காண்பே னெனும்போ திகன்மறவர்
செப்பாது சென்றநடுச் செல்வன் பருவுடலைக்
கைப்போது தாங்கிவந்து கண்முன் நிலைநிறுத்தத்
தொப்பென்று வீழ்ந்து துணையே யெனவிறையும்.

---

38. புண்ணுக்கு-புண்ணில் வடி. பொடி-புழுதி.

40. வாட்டடங் கைகளால் வாரி யெடுத்தணைத்தே
ஓட்டை மனமுருக வோவென்று கூப்பிடக்
கேட்டங்கு கூடிக் கிளையெல்லாங் கோவென்று
போட்டெங்கள் வாயிடைமண் போனுயோ
வென்றழுதார்.

41. தானைத் தலைவர் தலைவன் றனைத்தேற்றித்
தேனைப் பழித்ததமிழ்ச் செல்வனுடல் நெய்யிட்டு
யானைப் படையாள ராளுங் களம்புக்கே
ஏனைப் படையோ டெதிர்த்துப் பொருதனரே.

42. அன்னவர்தம் முன்ன ரனுமன் முதலானோர்
துன்னிப் பொருதழித்தார், தோலா வதிகாயன்
தன்னைச் சிலைராமன் றம்பி யெதிர்ந்தவர்கள்
இன்னுற் றயர்வுற் றிருக்கையிலோ ராரியனும்.

43. கூரம்பு தந்தவனைக் கொல்லென் றெதிர்பொரவே
பூரியனு மாவி பொருக்கென் றொழித்திட்டான்;
வீரர் விரைந்தோடி வேல்வேந்த னுக்கோத
மாரி பொழிகண்ணன் மற்றுந் துயர்கொண்டே.

44. எம்பியைமுன் றேற்றே றனைத்தனையோ வேல்வீரர்
அம்புக் கினியவிரை யாயினரா கெட்டேன்
செம்பிட்ட மாமேனிச் சேனைத் தலைவர்களும்
எம்பிக் குறுதுணையா வேகினரென் செய்கேன்!

45. என்றின் னனவா றினைந்து புலம்பியிடை
நின்று மறுபடியும் நெகிழ்ந்து புலம்புகையில்,
வென்று களங்கொண்டு வீடுற்ற சேயோனும்
சென்று புலம்புந் திருவாளனை நோக்கி.

46. அப்பா வருந்துவதா லாகுவதென் னிவ்வுலகில்
எப்போ தொருநா ளிறப்ப துறுதியன்றோ?
இப்போதே யான்சென் றிகலார் தமைநூறித்
தப்பாது மீள்வனெனத் தான்றேற்றிச் சென்றனனே.

---

42. இன்னுற்று-துன்புற்று.
44. செம்பிட்ட-உறுதியான, செந்நிறமான.

47. சென்றுமணித் தேரேறித் தெவ்வர்குல மின்றேடு
பொன்றி யொழிந்ததெனப் போர்முரசங் காரார்ப்ப
நின்றபெருஞ் சேனையொடு நேரார் புகழ்திரன்
துன்று குருதிச் சுடுசெங் களம்புக்கான்.

## 11. சேய்வீழ் படலம்.

### வேறு

1. தூயோர்களும் புகழுந்தமிழ்த் தூயோன்றிரு மைந்தன்
தீயோர்குலந் திரியுங்களந் தேரேறியே செல்லச்
சேயோன்வர விருளோடுடன் செல்லும்பனி போலச்
சேயோன்வர வடவாரியர் சென்றார்திசை திசையாய்.

2. வின்னாணியி னொலியானிலம் வீழ்வார்சில வடவர்
கொன்னேகணை தூயம்பறை குறைவிப்பது வீணே
முன்னாளையே கணைதூவிடு முழுவன்மையுங் கண்டாம்;
பின்னேயும தேசெய்தியைப் பேசிப்பய னென்னே?

3. இடியேயென வுறுமப்படை யிரியக்கிடை மாறி
வடவாரிய ரொருமூலையில் மருவிப்பொர வாங்கே
கொடியாடணி தேரூரியே குறுகித்தனி யாகக்
கொடியாருடல் நரிநாயிரை கொள்ளத்தரு வேளை.

4. அதுகண்டவன் சிற்றப்பனு மணைந்தேவட வோனைப்
புதையுண்டொளிர் வில்லோயொரு புறமுற்றவன்
மகனும்
சிதையுண்டொழி நாளாகியே தீப்போர்புரி கின்றான்.
இதுகண்டும டோமேலினி யிவனைக்கொல லரிதே.

5. இளையோனெடி யானேகியே யெலிசூழ்வெரு கென்ன
வளைவாகியே பெருவாகை மலைந்தேவரு கின்றோம்
எளிதேயிது போதென்னவே யேகென்றனு மாறோ
டுளையாவவ னரசோடவ னுடனேகின னிளையோன்.

---

1. சேயோன்-ஞாயிறு.
4. புதை-அம்புக்கூடு. அடுதல்-வெல்லல்.
5. உளையா-வருந்துகின்ற. அரசு-சுக்கிரீவன். அவன்-பீடணன். இளையோன்-லக்குவன்.

6. கண்டானமை வருவானிது காலேயவ னுயிரை
உண்டேகுவ மினையோவென வுளறிச்செல வஞ்சன்
அண்டாருயி ருண்டேபொரு மவனுங்கடை மகனைக்
கண்டேபதை பதையாவிரு கடையுங்கனல் கால.

7. வந்தாயட படுபாவிநீ வலியக்கொலு மரிமுன்
கந்தாடிய கரிபோலவே கடையாகழி மடயா!
இந்தாருமு னொடுசெந்தலை யேற்றேகியு னுண்டான்
செந்தாமரை யடிதூவியே செய்யேவழி பாடே.

8. முதியோரொழி படவேவழி முறையாகவே பின்னும்
புதியோரது முறைசெய்யவே பொலியுந்தமி ழரசும்
இதுவோமுறை வடவாரிய னிணைநீவியே பெற்றால்
அதையாரு மதிப்பாரிலை யறிவர்ம்முறை கேடா!

9. நீரோடழி கொடிபோலவே நெடியோனொடு தமிழர்
வேரோடழி வாரன்றியே மிஞ்சாரொரு வருமே
ஊரோடொரு வனுமாயக லூரேதுணை யன்றி
யாரோடிருந் தடடாதமி ழரசாளுவை யையா!

10. உம்மோடெழு மிளையானைமுன் னொடுவன்கொலை
செய்தோர்
தம்மோடுக லந்தேயவர் தாள்கும்பிடு கையா!
எம்மானவ ரான்முன்ல னிறந்தாலெழு வாயோ
சும்மாவிருப் பாயோசிரிப் பாயோவெது சொல்லாய்?

11. ஏனந்தனி விட்டோர்தமை யேத்தித்திரி வோரின்
மானந்தனை விட்டேபகை வழியைக்கும் பிட்டே
ஈனந்திய வத்தாணியி லிருந்தேதொலை யென்று
நாளுந்தனை விடினுந்தமிழ் நல்லோர்விடு வாரோ?

---

7. கந்து ஆடிய-கட்டுத்தறியில் வருந்திய.

9. அகலூர்-மக்களில்லா ஊர்.

11. ஏனம்-பாத்திரம். ஈன் நந்திய-பிறப்புமிக்க-பலரைக் கண்ட. அத்தாணி-கொலுமண்டபம்.

12. உள்ளந்தனி லுரமின்றியே யுளநாள்வரை யுண்ட
வள்ளந்தனை யறியாவிழி மடவாரொடு பொருதார்
வெள்ளந்தனை நகரிற்புக விட்டேவெளிப் பட்ட
கள்ளந்தனை நினையாமுனங் கவல்கின்றதெ னுள்ளம்.

13. உருவந்தமி ழன்றித்தமி ழுணர்வொன்றிலா துரிமை
ஒருவன்றர வழிபாடுசெய் துயிர்வாழுநீ விளையும்
பருவந்தனி லேகென்மணி பதராவது போலப்
பருவந்துறு பருவந்தனிற் பாழ்பட்டழிந் திலையே.

### வேறு

14. ஒற்றைப்பா வாடை யுடுத்தோண் டொடிக்கையார்
சுற்றிப் பறந்துவந்து சொல்லிச் சிரிக்காரோ?
சிற்றப்பா தூயதமிழ்ச் செல்வமது வேண்டுமென
உற்றென்னைக் கேட்டிருந்தா லுடன்றந் திருப்பேனே.

15. தெருவினி லூர்கோலஞ் செல்வாயேற் கைகொட்டிச்
சரிகுழலா ருன்சிறுமை சொல்லிச் சிரிக்காரோ?
தருவா யரசெனக்குத் தாவென்று கேட்டிருந்தால்
திருவாள னாகவுனைச் செய்திருக்க மாட்டேனோ?

16. முற்றத் துறந்த முனிவோ ரெனக்கூறிச்
சுற்றத்தோ டின்பநலந் துய்ப்போ ரடிவருடும்
சிற்றப்பா வொவ்வொன்றுந் தேடினுமுன் போலவினப்
பற்றற்றோர் தங்களையிப் பாரிலறி வாருளரோ?

17. வந்தேறி தன்னடிக்கீழ் மானமிலா தேவீழ்ந்து
தந்தாளு மையே தமிழரசென் றுமுனவன்
இந்தாரு மென்னவுனக் கீய வவன்பாட்டன்
முந்தாநா ளீட்டிவைத்த மூலப் பொருளோகாண்?

18. கூடப் பிறந்தவனைக் கொல்லக் குலப்பகைவன்
கூடப்போய்க் கூடியபுன் கோடாரிக் காம்பேயுன்
நாடறிய சூழ்ச்சியெலா நானறிவே னீதப்பி
ஓடிப் பிழைக்கவிடே னேகெடுவாய் நின்னில்லே.

---

12. வள்ளம்-உணவு. மடவார்-படைத்தலைவர். பொருதார்-பகைவர்.

13. உறு பருவந்தனில் பருவந்து - பிறந்தபோதே வருந்தி.

19. என்றலுமே; சென்னி யெடுத்து முறுவலித்தே
ஒன்றி யதுசொல்ல வோவென்ற தோடன்றி
நன்றல்ல செய்தே நலங்கொல்லு மெம்முனைக்
கொன்றுநலங் காத்திடவே கூடினே னரியனை.

## வேறு

20 என்றவ னுரைக்கச் சேயோ னெரியெனக் கனன்று சீறிக்
குன்றன குவவுத் தோளாற் கொடுஞ்சிலை வளைத்தம் பெய்ய
நின்றவக் குவனுஞ் சீறி நேர்பொர விருவ ரம்பும்
ஒன்றையொன் றெதிர்ந்து தாக்கி யுருமென முழங்கிற் றம்மா,

21. இருவரு முடன்று சீறி யினியுல கிலையென் பார்போல்
ஒருவரை யொருவர் வெல்லற் குள்ளன வெல்லாஞ் செய்து
பொருதனர் பகைவர் வெள்ளம் பொள்ளெனப் போந்து மொய்த்துப்
பருதியின் வட்டம் போலப் பகழிதூஉய் வறிய தாய.

22. ஆங்கவை தம்மை வீழ்த்தி யடுகணை மாரி பின்னும்
ஊங்குபெய் தொருவ னுக வுருத்தியே யலுப்பக் கண்ட
தீங்குளான் றகுந்த வேளை சிதைக்குவாய் தாழ்க்கா தென்னப்
பாங்கிலான் பகழி தூவப் படையறுத் தவனுந் தூவ.

23. ஆரிய விளவல் சோர்வுற் றயரவப் பாவி தேற்றி
நேரிய முறையொன் றின்றி நெடிதிகன் றலுத்தான் மீது
கூரிய பகழி தூவிக் குறுக்கினிற் பொருதப் பின்னப்
பூரியன் களைப்பு நீங்கிப் பொருதன னவனுங் கூட.

---

22 தீங்குளான்-பீடணன், பாங்கிலான்-இலக்குவன்.

24\. முதிரிய கணைப்பி னோடு முனைப்பொடு பொரப்பின் வந்த
பதரொரு கணையி னாற்றேர்ப் பாகனைக் கொன்றான்; பாவி
குதிரையைக் கொன்றான்; கொல்லக் குலமகன் கனன்று பாய்ந்தோர்
கதிரயில் வேலைப் பின்னோன் கணையினா லறுத்து வீழ்த்தான்.

25\. கடுங்கணை யேவி யேவிக் கையலுத் தனனென் றாலும்
ஒடுங்கின னில்லை யோவா துறுகணை தூவி யார்த்தான்
நடுங்கினர் வடவ ரெல்லாம் நாமினித் தப்போ மென்று
மடங்கலி னாவ நாழி வறிதுபட் டொழிந்த தம்மா.

26\. ஆயினு மிளைத்தா னில்லை அயின்முக வாளி கொண்டு
சேயனும் பொருதா னந்தச் சிறியனோர் கணையை யேவித்
தாயினு மன்பின் மிக்க தமிழர்கள் செல்வந் தன்னைக்
கோயில்கை யறத்தி னேங்கக் கோவெனக் கொன்றிட் டானே.

27\. பராவிடத் தமிழ்ப்பா வாணர் பகையடுந் தமிழ மன்னர்
வராவிடத் தொருவன் றன்னை வளைத்துமே முறையொன் றின்றி
அராவிடத் தறுநஞ் சன்ன வாரிய ராமன் றம்பி
திராவிடக் கொழுந்தை யந்தோ திருகியே யெறிந்திட் டானே.

28\. மாபெருங் கொலைஞ ரான மறையவ ருவந்து வாழ்த்த
மாபெருந் தொலைவ னான வடமொழி யாளன் றம்பி
மாபெருங் கலைஞ ரான வளமலி தருந்தென் னாடர்
மாபெருந் தலைவர் தங்கள் மரபினை யொழித்திட் டானே.

---

24\. பதர்-இலக்குவன். பாவி-பீடணன். பின்னோன்-இலக்குவன்.

25\. மடங்கல்-சிங்கம். ஆவநாழி-அம்புக்கூடு.

26\. கையறம்-கையறுநிலை-இரங்கல்.

29 ஓரின மக்கட் கன்றி யுதவிடா னெனுஞ்சொல் லேக
கூரிய வடிவேல் கொண்டு குத்தியே பகைவர் தம்மைப்
பாரிய விலங்கும் புள்ளும் பாத்துணக் கொடுத்த வள்ளல்
ஆரிய ராமன் றம்பி யம்பினுக் கிரையா னானே.

30. கூடினர் வடவ ரெல்லாங் குளிர்ந்தன புறம்பு முன்னும்,
பீடணன் முதலா னோர்கள் பெருமகிழ்க் கடலு
ளாழ்ந்தாழ்ந்
தாடினர்; முனிவ ரெல்லா மருங்கவ லொழிந்தே
யின்பங்
கூடின மினியா மென்று குதித்துக்கூத் தாடி னாரே.

31. புகலருந் தம்பி தன்னைப் புகழ்ந்துபா ராட்டி ராமன்
அகமகிழ் வுற்றா; னந்தோ! வருந்தமிழ்ச் செல்வன்
றன்னைத்
தகவிலேங் கொன்றே மென்று தமிழர்க ளெல்லா
மாய்ந்த
மகன்றனைச் சுற்றிப் பூசல் மயக்கமுற் றழுங்கி னாரே.

## 12. கையறுநிலைப் படலம்.

### வேறு

1. சென்ற மைந்தன்செருவிற் பகைவரை
வென்று வானக மிலைந்து கதிர்மணிக்
குன்று போலக் குலுங்கி வருகுவா
னென்று மன்னவ னெண்ணி யிருக்கையில்.

2. ஆய காலை யடையலர் தங்களாற்
சேயி றந்தவச் செய்தி யுரைத்திடக்
கோயில் வாயில் குறுகிக் குளிர்தமிழ்த்
தூய வன்றனைத் தூதர் வணங்கியே.

3. கல்வின் பாவைகண் ணீர்விடுங் காட்சியைப்
புல்லி வாய்புல ரக்கொடு போந்ததைச்
சொல்ல நாவெழ வில்லைத் தொழுதகை
இல்லை மேழுற வேக்கற்று நின்றனர்

---

31. பூசல் மயக்கம்-கூடியழுதல்.
1. கையறுநிலை-கழிந்தோர்க்கு ஒழிந்தோர் வருந்துதல்.
3. ஏக்கற்று-வருந்ததோட்டைவற்று.

4. உற்ற தென்ன வுரைமி னெனவவர்
கொற்ற வானரக் குலமகன் றெவ்வரை
வெற்றி கண்டக்த வில்லவன் நம்பியால்
இற்றை வேலையின் றுயின னென்னுமுன்.

5. ஆவெ னாவிழுந் தாவி கலங்கினன்
மேவி யேயுணர் விம்மி யெழுந்தனன்
ஓவி லாதுகண் ணூற்றிருந் தோடவே
கூவி னான் றிருக் கோயில் குழுறவே.

6. பின்னும் பின்னும் பெருங்கிடை வீழ்ந்துவீழ்ந்
தன்ன கோயி லணிநில மம்பியா
இன்ன னாய விறைவன் குழவியா
முன்னும் பின்னு முழைந்து புரண்டனன்.

7. கண்பி சையுஞ்செங் கையை முறுக்குமால்
பண்பி யன்றவாய்ப் பல்லை நெரிக்குமால்
மண்பு ரண்ட வுடலை வளைக்குமால்
வன்பு கைந்தெரி யென்ன வுயிர்க்குமால்.

8. கையை நோக்குங் கதிர்வடி வேல்முனை
வையை நோக்கு மகனிலை நோக்குந்தன்
மெய்யை நோக்கும் விரிகடல் வேலிவாழ்
பொய்யை நோக்கும் புகழையு நோக்குமால்.

9. கொவ்வை யென்னக் குருவிழி சேப்புறந்
தெவ்வ ருள்ளந் திடுக்கிடச் செவ்விதழ்
கவ்வ நாக்கறல் காணக் கடுஞ்சினக்
குவ்வை வெந்தழல் கொந்தளித் தோங்குமே

10. குழந்தை யோவெனுங் கோமக னேயுளங்
குழைந்தை யோவெனுங் கோளர்கை யம்பினால்
விழுந்தை யோவெனும் வேறு படைத்துணை
இழந்தை யோவெனு மென்செய்கு வேனெனும்.

---

6. அன்ன-அந்த. இன்னன்-துன்புறுபவன்.
8. வை-கூர்மை. வாழ்பொய்-நிலையாமை.
9. அறல்காண-நாக்கைக் கடிக்க. குவ்வை-கூட்டம்.

11. அப்ப வோவெனு மாண்மக னேயெனும்
ஒப்பி லோயெனு மோவென தாவியே
இப்ப வோபிற கோவினைறந் தேனென
எப்பி வோவரு வாயென வேங்கு மால்.

12. மைந்த வோவெனும் வண்டமிழ் மக்களின்
தந்தை யோவெனுந் தம்முயி ரோவெனும்
உந்தை யோடின வூனரை யோட்டியே
முந்தை யோடினை யோவெனு மொய்ம்பினான்.

13. அன்ன ரோடுநீ யாரியம் புக்கையோ
பின்ன ரெங்கு பெயர்ந்து நடந்தையோ
உன்னை யெய்த்தவ ரோடி யொளித்தரோ
இன்னுங் கேட்டிலை யோவெனு மேறனான்.

14. ஆரி யர்பகை யற்றதன் றேவெனும்
ஆரி யர்மகிழ்ந் தார்த்தன ரோவெனும்
பூரி யர்முனி வோர்கள் புலங்களி
கூரத் துள்ளிக் குதித்தன ரோவெனும்.

15. அம்ப றைவறி தாகவே நீயுளம்
வெம்பி யேபடை வேறுரி லாதவன்
தம்பி யேவந் தடுக்கிலா நிற்கையில்
கும்ப லாய்ப்பகை கூடிச் சிரித்ததோ?

16. குன்ற மன்ன குணக்கட லேயுனைக்
கொன்ற பாவியைக் கோடரிக் காம்பினை
ஒன்று கூடிய வூனரை யேவனைக்
கொன்றி தோபழிக் குப்பழி வாங்குவேன்.

17. என்னு முன்னு மெழுந்திருக் கும்பிற
கின்னு மோவென் றிரைக்கு முறைக்கும்பல
தின்னுஞ் சீறுந் தியங்கு மயங்குங்கால்
பின்னும் பின்னும் பெயர்ந்து புலம்புமால்.

---

16. ஏவன்-இராமன்.

18. மீனா வேனிதோ வென்றுதப் பாதெனக்
குனா ரைத்துச் சுருக்கெனச் சென்றனை
ஆவி லாதொ ரயலவ னபிம்னால்
மாள வேரவுனை வாழ்த்தி யனுப்பினேன்.

19. தங்க மேசெங் தமிழ்ப்பயில் வாயொடு
பொங்கு நீர்மை பொழியும் புனைமலர்த்
திங்கள் மாமுகஞ் சேர்தரு சென்னியைச்
செங்க ளத்திடைத் தேடியான் காண்பனோ?

20. நீறு பூத்த நெருப்பன வஞ்சரைக்
கூறு பாத்துக் கொடுத்துக் கழுகுண
வீறு பூத்தசெவ் வேற்கையை வெம்படைக்
காறு பேர்த்த களத்திடைக் காண்பனோ?

21. இன்ன கூறி யிராவண னேங்கிட
அன்ன காலை யருந்தமிழ் மள்ளர்கள்
துன்னி னாரிளந் தோன்றலோ டாயிடை
மன்ன னாவென வாரி யெடுத்தனன்.

22. ஏந்த மார்பி லிறுகத் தழுவினன்
வேந்தர் வேந்தனு மெய்மறந் தையன்மேற்
சாய்ந்து தானெனுந் தன்மை யொழிந்தனன்;
போந்தி யாவரும் பூசல் மயங்கினர்.

23. எயிறொ லிப்ப ரிளமதி முத்துவர்
வயிற லைக்குவர் மாரடித் துந்துவர்
மயிர விழ்க்குவர் வாயடித் தேங்குவர்
உயிர டக்குவ ரோவென் றலறுவர்.

24. ஏங்கு வார்விழு வாரெழுந் தேந்தலைத்
தாங்கு வார்செழுந் தாமரைக் கைகளால்
ஓங்கி யோங்கி யறைந்தறைந் தொண்மதி
வீங்கு வாரழு வாருளம் வெம்புவார்.

---

19. நீர்மை-அருள், மலர்-கண்.
20. பாத்து-பகுத்து. வீறு-வெற்றி. காறு-கொழு.
22. ஏந்து அம் மார்பு. ஏந்து-உயர்ந்த. பூசல்மயங்கினர்-மாய்ந்த மகனைச் சூழ்ந்து பேரொலியிட் டழுதனர்.
23. எயிறு-பல். உந்துதல்-மேல்விழுந்து முன் செல்லுதல்

25. ஓவென் றாமரி னுள்ளுடைந் தானுக
ஏவொன் றுள்ளுற வேறிய மஞ்ஞைபோல்
ஆவென் றேங்கிவண் டார்குழ லென்னிளங்
கோவென் றோடிப்போய்க் குப்புற வீழ்ந்தனள்.

26. விழுந்தெ ழுந்து விழுந்தெழுந் தேவிழுந்
தெழுந்த விம்முறை யெண்ணில வாகவே
பொழிந்த வுண்கட் புனல்முழுக் காட்டியே
குழைந்த செந்தூள் குழைத்துடல் பூசினுள்.

27. தத்து வாள்நிலந் தாறுமா றுகவே
கத்து வாளையை யோவெனக் கைகொடு
மொத்து வாளுடல் மூரவந் தேனெனப்
பித்தி போலப் பிதற்றிப் புலம்புவாள்.

28. தலையெ டுத்தே யுடலொடு சார்த்துவாள்
சிலையெ டுத்துவந் தேகையிற் சேர்த்துவாள்
மலைய டுத்தகை வாளுறத் தெவ்வரைத்
தொலைய வெட்டெனத் தூக்கியே வெட்டுவான்.

29. கையை முத்திக் கலைமதி முத்திமா
மெய்யை முத்தி விழிமுத்தித் தன்னுடல்
மையை மொத்தி நடைமுத்தி வாய்திறந்
தையை யோவென் றரற்றுவா ளின்னணம்.

### வேறு

30. கண்ணே மணியேயென் கண்மணியிற் பூம்பாவாய்
மண்ணு மணியே மணியொளிருஞ் சேயொளியே
எண்ணேயவ் வெண்ணி லெழுகின்ற நல்லுணர்வே
அண்ணு வலங்கோல மாய்க்கிடக்கக் கண்டேனே.

31. பண்ணுெத் துயர்ந்ததமிழ்ப் பாட்டின் பெரும்பயனே
உண்ணத் தெவிட்டா வுடல்வளர்க்குஞ் செந்தேனே
வண்ணத் தருங்கலமே வாடா மணமலரே
எண்ணத் தொலையா விடர்க்கடலுள் வீழ்த்தனையே.

---

25. ஏ-அம்பு. மஞ்ஞை-மயில்.

26. செந்தூள-செஞ்சந்தனப்பொடி. குருதி தோய்ந்து வறண்ட உடலில் கண்ணீர் படிவே அதுகரையக் கையால் தடவினுள்.

32. அருளொழுகு கண்ணு மவிர்மதிபோல் வாமுகமும்
தருமலர்நின் கையும் தமிழ்பயி லுஞ் செவ்வாயும்
மருவவருஞ் செந்தா மரைபுரைசெம் மேனியுமின்
றிருள்படிந்து செஞ்சேற் றிடைபுரண்டு மாழ்கினவே.

33. கேள்வாய்ச்சொற் றட்டாக் கெழுதகையே யப்பாவுன்
ஆள்வீச்சைப் பேச்சை யரும்பகழி வேல்வீச்சை
வாள்வீச்சைக் கண்டு மகிழாம லாரியருன்
நாள்வீச்சைக் கண்டு நலனழியச் செய்தாரோ.

(பிள்ளைப்பருவம் பத்து)

34. ஆழ்கடலி னுவதெலா மாய்ந்த தமிழ்ப்பெரியார்
வீழ்க பகைப்பிணிமேல் மேல்வளர்க வன்புநலம்
சூழ்க திருவுளத்துச் சூழ்ந்தனவெல் லாஞ்சேயோன்
வாழ்க வெனமுன்னாள் வாழ்த்தியசொற்
பொய்த்ததுவோ!

35. மங்கா மதிபோல் மலர்முகத்தை யண்ணாந்து
முங்கா விதழ்விரித்து மொய்விழியிப் பல்காட்டித்
தங்கா வுவப்போங்கச் சதங்கைக்கால் கைகாட்டிச்
செங்கீரை யாடிச் சிரிக்கயான் காண்பேனோ!

36. பெருங்கண்ணா ரிப்போற் பெயராது சூழ்நிற்பக்
கருங்கை மறவர் களத்துப் பகைகொண்டார்
முருங்கவடித் தோட்டிடுநின் முன்னோர் புகழ்பாடி
அருங்கண் வளர்கெனத்தா லாட்டி மகிழ்வேனோ!

37. நெஞ்சி லுவப்போங்க நீள்கவலை யாழ்ந்தொழிய
வஞ்சியென் கண்கள் மலர மலர்க்கையால்
அஞ்சு விரலு மலரிகொள்ள வேகுறிப்பாற்
கொஞ்சிநீ சப்பாணி கொட்டநான் காண்பேனோ!

---

33. நாள்வீச்சு-சாவு, முடிவு.

35. முங்குதல்-அமிழ்தல். செங்கீரை-இளஞ்சொல்.

36. பெருங்கண்ணார்-தோழியர். முருங்க-அழிய.

37. சப்பாணி-கைதட்டுதல்.

38. வேய்முத்தஞ் செந்நெல் விளைமுத்தம் வெண்சங்கத்
தாய்முத்தந் தண்கார் தருமுத்தம் பூங்கமுகச்
சேய்முத்தம் வேண்டேனென் செல்வா தமிழ்பயில்செவ்
வாய்முத்தந் தந்து மகிழ்விக்க மாட்டாயோ !

39. ஓகை யொடுமறவ ருற்றுடலுஞ் செங்களத்துக்
காகங் கழுகு களித்துண்ணக் கைசெய்வான்
பாகுபடும் பாவைப் படைவெட்டி வாளேந்தி
வாகை புனைந்து வரக்கண் டுவப்பேனோ!

40. வெம்பிடா இங்கு விளையாட நீவந்தால்
தும்பிலீ யாடித் துடைப்பே னுடற்களங்கம்
நம்புநீ யென்று நவின்றுசிறு கைகாட்டி
அம்புலீ வாவென் றழைத்துவக்கக் காண்பேனோ !

41. துறைபட்ட செந்தமிழ்வாய்த் தோழ ருடன்கூடி
நிறைபட்ட பொற்சதங்கை நின்றொலிப்ப நில்லாது
முறைகெட்ட தெவ்வீர் முதுகிட்டோ டீரென்று
பறைகொட்டி நீயாடப் பார்த்துவக்க மாட்டேனோ !

42. தெற்றி யிவர்ந்தேறிச் சில்லோதிக் கிண்கிணியார்
முற்றி லிடைமுகத்தை மூடி முணுமுணுப்பக்
கொற்றச் சிறுவருடன் கூடிக் குறுங்காலாற்
சிற்றில் சிதைத்துச் செருக்கிவரக் காண்பேனோ !

43. கடையுண்ட செச்சை கலகலப்பக் கால்பெயர்த்துத்
தொடைவண்டு பாடத் துணைவர் புடைசூழப்
படையுண்ட வுன்கண்ணோர் பார்த்துவக்க வேதெருவில்
நடைவண்டி யோட்டிவர நான்கண் டுவப்பேனோ !

---

38. வேய்-மூங்கில். சங்காகிய தாய். சேயாகிய முத்தம்.

39. கைசெய்தல் - பழகுதல். பாகுபடும் - பலவகைப் படும்.

40. அம்புலி-சந்திரன்.

42. தெற்றி-திண்ணை. சில்-குளிர்ந்த. ஓதி - கூந்தல். கிண்கிணி சதங்கை. முற்றில்-சிறுமுறம். சிற்றில்-மணல்வீடு.

45. செச்சை-சதங்கை. தொடை-மாலை. படை-வாள், வேல்.

44. மாயோன் மருகன் பகனேவண் டார்குழவி
சேயோ னெனும்பெரும்பேர் சென்றொழிந்த
தின்றேதேன்
தாயா ருறவுவந்து தங்கமெங்கே யென்றுலெள்
வாயா லெளியேன் மறுமொழியென் சொல்வேனே.

45. கோமகனே செல்வக் குழந்தாய் குறும்பறுக்கும்
நாமவேற் கையண்ணல் நன்மரபுக் கோர்விளக்கே
மாமனார் வந்தென் மருமகனெங் கேயென்றால்
தாமரைவாய் விண்டென்ன சாற்றுவேன் சாவில்லேன்.

46. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்டேமேன் மேலும் விரும்புந் தமிழ்வாயா !
பாட்டனார் வந்தெம் பழம்பெயர னெங்கென்று
கேட்டாலென் னென்று கிளக்குவேன் கேடுடையேன்.

47. நந்தா வொளிவிளக்கே நற்றமிழர் சொற்பொருளே
எந்தாய் குழந்தாய் இணையில்லாப் போரேறே
அந்தோ பழிகார ஆரியர்கை யம்பினுக்கோ
மைந்தாயான் பெற்று வளர்த்தேன் மலைபோலே.

வேறு

48. தனியா யலர்ந்த மலர்வா யெழுந்து
தகவே கசிந்த தெளிதேன்
கனியா விளைந்து படவே யுயர்ந்து
கலைதா விவந்த தமிழர்
அனைபோ லுவந்து முடிசூ டவிந்த
வரசா ளவந்த மகனே !
இனியா ரைநம்பி யுயிர்வாழ் வனுந்த
னியலோ டடைந்த வெளியேன் !

49. படிமேல் நடந்து விளையா டிமுந்து
பசியா கவந்து பரிவாய்
மடிமீ தமர்ந்து தமிழ்வாய் திறந்து
வடிதே னுகர்ந்து மழலை
நெடிதே மொழிந்து மதிபோல் வளர்ந்து
நிலமா ளநின்ற மகனே !
கடிதே சினந்து வடவோ னெறிந்த
கணையா லிறந்த தறமோ ?

45. குறும்பு-சிற்றரசு. நாம-அச்சம்.
46. வேட்டல்-விரும்பல். பழம்போன்ற இனிய.

50. செய்யோன் விளர்ந்து படவே சிவந்து
சிறுவா யிறந்த பொழுது
நெய்யா டவந்து நெடியோ னுவந்து
நிலமாள் கவென்று நெடிய
கையான் முகந்து மலைமார் பணைந்த
கனியே யிடும்பர் கணையால்
ஐயோ வருந்தி யடடா புலம்பி
யழவே யிறந்த தழகோ?

51. கொலைவா ணர்விட்ட கணைமார் புதொட்ட
குறியா லேபட்ட மகனே
மலைவா ணரிட்ட குலைவா ழைபட்ட
வடிதே னைவிட்ட மலர்போல்
கலைவா ணரட்ட விழிமீ துபட்ட
களமீ துசொட்ட கலுழி
அலைவா ணர்விட்ட கலமீ துபட்ட
வலையோய் வுபட்ட தடடா!

52. திசையெட் டுமொன்று படவெற் றிகொண்டு
திடமுற் றுயர்ந்த திறலோன்
இசைநட் டெழுந்து துளிர்விட் டுயர்ந்த
வெழில்சொட் டநின்ற வெழிலே!
திசைகெட் டுவந்து நகர்முற் றிநின்ற
திருவற் றவம்பர் கணையால்
பசைகெட் டுலர்ந்து பரிவுற் றுநொந்து
படவிட் டிறந்த தழகோ?

53. ஏடா ளர்கண்ட விசையோ டுவந்த
விறையோன் பயந்த விறையே!
நாடா ளநின்ற நினைவே கவின்று
நகர்சூ ழவந்து நலியும்
கேடா ளர்தந்த கணையா லிறந்து
இளைசூ ழநின்று கதறும்
காடா ளவென்று சமைவா கிநின்ற
கனியே கனிந்த திதுவோ?

---

50. செய்யோனை - சூரியனை. விளர்த்தல்-வெளுத்தல்.
51. மலர்போல் விழிமீது சொட்டகலுழி. கலுழி-கண்ணீர்.
நெய்யாடல்-நன்றாய் எண்ணெய் தேய்த்துக் குளித்தல்.
53. ஏட்டாளர்-புலவர். காடு-சுடுகாடு.

54 வந்தே றியர்கை யம்பா லுயிர்பி
ரிந்தே மடிந்த மகனே!
அந்தோ வுனையி ழந்தே யெனைம
றந்தே யலைந்த னறிவாய்
எந்தா யினையல் வந்தே னெனவு
கந்தே யெழுந்து வருவாய்
மைந்தா விதுத விர்ந்தா லுணர்வி
ழந்தே வருந்தி மடிவேன்.

55. குளிர்கா வலர்ந்த மலரா டுவண்டர்
குலமோ டணிந்த குழலார்
வளியா டலின்றி யொருசே ரநின்று
மதிமே டுகன்றி யழவே
ஒளியோ னயர்ந்து பட வே சிவந்த
வொளிபோ யிருண்டு படவே
வெளியா ரெறிந்த கணையா லிறந்து
விடவோ பயந்த னுனையே.

56. செய்ந்நின் றுநீல மலர்கின் றவாவி
செறிகின் றநாடு தனைநீ
மெய்ந்நின் றுகாவல் புரிகென் றுநூலை
மிகவென் றவேலன் விழைய
எய்ந்நின் றவேவ முறவென் றிமார்ப
மிழிகின் றசோரி புரளப்
பொய்ந்நின் றுபோன பொருளென் றுபோதல்
புகழ்வென் றியாமோ புதல்வா!

57. வருவா யெழுந்து மகனே விரைந்து
மலர்வாய் திறந்து மழலை
தருவா யுவந்து பெறவே நயந்து
தமிழா ளவந்த தலைவா!
திருவா ளனுந்தை யருகோ டிவந்து
சிறுவா வுவந்து திகழ்வாய்
பெருவாழ் வுதந்த பெரியோ யெதிர்ந்து
பெறவே யெழுந்து வருவாய்.

---

55. மதிமேடு-கன்னம. ஒளியோன்-சூரியன்.
56. எய்-எய்தல். ஏவம்-அம்பு.
57. எதிர்ந்து-மறுபடியும்.

67\. போய்ப்படை தம்மோ டன்னூர் பொருதனர்; போய பின்னர்
வாய்ப்புடை மகனை கையில் வளர்த்திடே மன்னர் மன்னன்
காய்ப்புட னெழுந்து சென்று கதிர்மணித் தேரி லேறித்
தீப்படை வெருவி யோடச் செருக்களம் புகுந்தா னம்மா.

68\. மொழிப்படி யிரண்டி லொன்று முடிந்திடு மின்றோ டென்று
மழைப்படு முரச மார்ப்ப வளைக்குலஞ் சரிதா னென்ன
இழைப்படு பறைகள் ஆமா மினித்தடை யிலைகா னென்னக்
கழைப்படு குழலுஞ் சேர்ந்து கடலென முழங்கிற் றம்மா.

## 13. இறைவீழ் படலம்

### வேறு

1\. தாவி லாத்தமிழ்த் தானைத் தலைவர்கள்
காவ லன்வரு முன்னங் களத்திடை
ஓவி லாவட வூனரை வீழ்த்திடே
நாவ லோங்கிட நல்லமர் செய்தனர்.

2 அன்ன ராக வயோத்தி யிராமனும்
துன்னி வெங்கணை தூவிட வேதமிழ்
மன்ன ரேன்று வலங்கொடு நின்றனர்;
அன்ன காலை யருந்தமிழ்ச் செல்வனும்.

3\. முரச மார்ப்ப முழங்கிட வெள்வளை
புரசை யானையும் பொன்மணித் தேர்களும்
கரிசை யற்ற கடும்பரி மாக்களும்
வரிசை யாத்தமிழ் மள்ளர் தொகுத்துற.

---

68\. கழை-மூங்கில், இனிமை.
1\. நாவல்-வெற்றிமுழக்கம்.
2\. மன்னர்-சேனைத்தலைவர். ஏன்று-எதிர்நின்று.
3\. புரிசை-கழுத்திடு கயிறு. கரிசை-அளவு.

4. புலவு வேலவன் போர்த்திறங் காணவெண்
ணிலவு கான்றிட நீடுயர் வான்விடுத்
துலகு மேவு முயர்மதி போலவெண்
ணிலகு தண்குடை வெள்ள நிழற்றவே.

5. அண்ண லாண்மை யறிந்த கழுகுகள்
மண்ணில் வீழும் வடவ ருடலினை
உண்ண முன்பறந் தோடுதல் போலவே
விண்ணி லொண்கொடி வெள்ளம் பறந்தன.

6. புலவ ரோடு பொருநருங் கூத்தரும்
இலகு பாணரு மின்னிசைப் பாட்டியும்
பலவர் சூதரும் பாடியும் ஆடியும்
குலவு தேர்மிசைக் கூடியே சென்றனர்.

7. வாளும் வேலும் வலம்பட வீசுவர்
தோளுந் தோளுந் துவன்றிட மூசுவர்
கேளுங் கேளுங் கிளர்மறம் பேசுவர்
ஆளு மாளு மரும்பகை யேசுவர்.

8. வாளும் வேலும் வளைதடி யோடமை
ஆளி மொய்ம்பினை யாளுந்தா ளாண்மைசேர்
மீளி யோடு வெறிக்கரி தேர்பரித்
தூளி யொண்படாந் தொக்கெனப் போர்த்ததே.

9. யானை வெள்ள மழன்றுள முன்செலத்
தானை வெள்ளந் தறுக ணுடன்செல
ஏனை யுள்ள மெனவிரைந் தேசெலச்
சேனை வெள்ளஞ் செருக்களம் புக்கதே.

10. புக்க வெள்ளம் பொருகள மெங்கணும்
பக்க மாமலை பாயு மருவிபோல்
தொக்கு நின்ற துகளடி யோடறத்
தக்க தென்று ததும்பி நிறைந்ததே.

---

4. எண் ணிலகு-எண்ணற்ற.

7. துவன்றிட-நெருங்கிட. மூசல்-மொய்த்தல்.

8. மீளி-மறவன். தூளி-புழுதி. படாம்-மேற்கட்டுச்சேலை

11. கரியி னோடு கரிகள் பொருதன
பரியி னோடு பரிகள் பொருதன
அரியி னோடரி போல வடலுடைப்
பெரிய ரோடு பெரியர் பொருதனர்.

12. கால றுந்தன கைக ளறுந்தன
வால றுந்தன மண்டை யுடைந்தன
தோல றுந்தன சோரி சொரிந்தன
ஏல றுந்த விருபடை வெள்ளமே.

13. கழுகுங் காகமுங் காவண மிட்டன
ஒழுகு செம்புன லோரி யருந்தின
முழுகு சேற்றிடை மூழ்கும் பிணங்களை
நழுகு றுதுசெந் நாயிழுத் துண்டன.

14. தைபொ ழிந்த தமிழர் தலைமகன்
கைபொ ழிந்த கடுங்கணை மாரியால்
மெய்பொ ழிந்த விறலுடை யாரியர்
பொய்பொ ழிந்த புனைகதை யொத்தனர்.

15 சோரி வாரியிற் றுள்ளுவ ரோர்சிலர்
பாரின் மீது படுக்குவ ரோர்சிலர்
ஓரி போற்சில ரோடிட வேவட
வீர ரின்றி வெறுங்களம் பட்டதே.

16. கண்டி ராமன் கனன்று விரைந்தெதிர்
கொண்டு சென்றிரு கோளரி போலவி
ரண்டு பேரு நவின்றுமே வஞ்சினம்
மண்டி யேவம் வழங்கி மலைந்தனர்.

17. ஏவ மாரி யிருவரும் பெய்யவவ்
வேவ மாரி யிருநிலந் தோய்கிலா
தேவ மாரி யிவறுதல் போலழி
யேவ மாரி யிணையறி கில்லவே.

---

12. ஏலறுந்த-ஒப்பற்ற.
13. காவணம-பந்தல். ஓரி-நரி. முழுகுதல்-மிகுதல்.
14. தை-அழகு. மாரி மெய் பொழிந்த.
16. கோளரி-சிங்கம். மண்டி-மிக.
17. மாரி ஏவ இவறுதல்போல - முகில்பெய்வதை போல.

18. இன்ன 'காலை யிலக்குவ னேமுதல்
அன்னர் யாரு மருந்தமிழ் மன்னனைத்
துன்னி வெஞ்சுடர் சூழ்பரி வேடமே
என்ன வெங்கணை யேவினர் பாவிகள்.

19. துன்றி யேவுஞ் சுடுகணை மாரியைப்
பொன்ற வீழ்த்திப் பொரவொரு தேரினில்
சென்று ராமனுஞ் செய்யதேர்ப் பாகனைக்
கொன்று வீழ்த்தினன்; கோமன் தம்பியும்.

20. படுஞ்சி னத்த பரிகளைக் கொல்லவே
கடுஞ்சி னத்தொடு கன்றரி யேறுபோல்
கொடிஞ்சி நின்று குதித்துக் கொடியன்மேல்
நெடுங்கை வாளை நிறம்பட வோங்கினன்.

21. கொடிய பாவியைக் கொன்மென அந்தவாள்
வடவ னெம்பியும் வந்தவன் முன்னுறக்
கடிதி னேவிடக் கண்டவி ராவணன்
படிறத் காத்தவப் பாவிமே லேவினன்.

22. நிறம்பி ளந்து நிலத்தில் விழுந்தனன்;
புறம்பு நின்ற புலைமகன் மாதலி
அறம்பி றழ்ந்தவில் லாளியை யண்மியே
குறும்ப ரம்பனேர் கூர்ங்கணை தந்துமே.

23. நம்பி கேட்டருள் நல்லதிவ் வேளையே
எம்பி மீதுவா ளேவிடு முன்னரே
தும்பி யந்தொடைத் தூமணி மாமுடி
வெம்பி யேநிலம் வீழ்ந்திடச் செய்கென.

---

18. பரிவேட்டம்-சூரியனைச் சூழும் வட்டம்.

19. தம்பி-பீட்டனன்.

20. கொடிஞ்சி-தேர்த்தட்டு. நிறம்-மார்பு.

21. ஏவிட-அம்பெய்ய. படிறன்-பீட்டனன்.

22. குறும்பர் அம்பன் - குறும்பர் கைபட்ட அம்பு போன்றவன். குறும்பன்-கெட்டவன்.

24. பாவி நன்றெனக் கொண்டப் பகழியை
ஏவு முன்னர்வா ளேவித் திரும்புமுன்
ஏவி னான திருந்தமி ழோரெலாம்
ஓவெ னவழ ஒண்முடி கொய்ததே.

25. குடைநி ழற்றக் கொழும்பொன் னணைமிசை
நெடிதி ருந்து நிலத்தமி ழோர்க்கரண்
உடைய தாகியென் றுங்கவி ழாமுடி
வடவ னம்பினால் மண்மிசை வீழ்ந்ததே.

26. கொடிய னம்பினாற் கோமகன் றன்முடி
கடமை மேய கனிதமிழ் மக்களின்
உடமை யாய வுரிமைகள் போல்விழ
அடிமை போல வவிழ்ந்தது சோரியே.

27. திருந்து பஞ்சணை மேவினுஞ் சோர்புறும்
மருந்து கண்டிலா மாமலர்ச் செயுடல்
வருந்தி வீழ்ந்தொர் வடவன் கை யம்பினாற்
பொருந்தி மண்ணிற் புரண்டுருண் டோய்ந்ததே.

28. கண்டி ரண்டக னும்புயல் கண்பட
மிண்டி யோர்மலை மேல்மலை வீழ்தல்போல்
ஒண்டி யேவிழுந் தோவென வேயழக்
கண்ட தெவ்வருங் கண்கலுழ்ந் தாரரோ.

29. படிற னோடு பகைவர்க ளேயழின்
குடிகள் சூழ்ந்தழல் கூறவும் வேண்டுமோ?
நெடியன் வீழ நிணம்படு போர்க்களம்
அடுதல் மாறி யழுங்கள மாயதே.

30. துண்ணெ னக்கடந் துய்யவாள் பாய்பசும்
புண்ணி னோடு புலம்பிப் பொருக்கென
மண்ணில் வீழ்ந்த வடவனைக் கொண்டுபோய்
உண்ணி யேமருந் தொத்தின ராரியர்.

---

24. பகழி ஏவுமுன் வாளேவினான்; வாள்ஏவித் திரும்புமுன் பகழிஏவினான் என்க.

30. கடம்-உடல். மருந்து உண்ணி-மருந்தூட்டி.

31. தம்பி நோவுறத் தானைத் தலைவரும்
நம்பி னோர்களு நற்றவ மேலரும்
வெம்பு சேனையும் வீவுறச் செய்தனன்.
கம்பி யென்றுவிற் கையன் புலம்பினன்.

32. எண்ணி றந்த வினத்தரை யேழையேன்
புண்ணி ருந்து புலம்பிடப் போயுயிர்
மண்ணில் வீழ்ந்து மடிந்திட வையகோ
பண்ணி னேனெனப் பாடிப் புலம்பினன்.

33. இன்ன னாகி யிளைய வடபுலன்;
அன்னை யாகியு மாகியுந் தந்தைமுன்
மன்ன னாகியும் வாழ விருந்தவன்
தன்னை யுன்னித் தமிழர்க ளேங்குவர்.

34. பொன்னைத் தேக்கிலென் பூவைத் தொடுக்கிலென்
தன்னை நேர்தமிழ்த் தாயிங் கிருக்கிலென்
என்னை போனபின் னென்னினி யீங்கென
மன்னைக் காஞ்சி மருவிப் புலம்பினர்.

35. செருவ கத்திறை வீழ்ந்தெனச் சீறியே
ஒருவன் மண்டி யுடன்றெழுந் தொன்னலர்
கருவ கத்தினிக் காண்பிலை யாமெனப்
பொருக ளத்துப் புகுந்தடர்த் தார்த்தனன்.

36. செய்தி கேட்டதுந் தெவ்வ ரிலங்கையும்
பொய்தி யாகப் பொருக்கெனப் போர்க்களம்
எய்தி மக்களெல் லோரு மிறையெமக்
குய்தி யுண்டோ வுலகிலென் றேங்கினர்.

37. உருளை போல வுருண்டன ரோர்சிலர்;
குருளை போலக் குதித்தன ரோர்சிலர்;
இருளை முன்பினு மீர்த்தன ரோர்சிலர்;
தெருளை நீத்துத் தியங்கின ரங்ஙனே.

---

31. கம்பி-கடிவாளம-கடிவாளம் போன்றவன்.

34. என்ஐ-எனது தலைவன். மன்னைக்காஞ்சி-இறந்தவர் தன்மை கூறி யிரங்கல்.

37. குருளை-விலங்கின்குட்டி. இருள்-மடத்தல். தெருள்-தெளிவு.

38. ஆய காலைவன் டார்குழல் கைதலை
தோய வேற்கண் டொடுமணற் கேணியிற்
பாய வோவெனப் பாடிப் புலம்பியே
போயொ ருங்கிறை வீழ்களம் புக்கனள்.

39. புக்க துந்தமிழ்ப் பூத்தபூங் கொம்பினைத்
தொக்கு மேதமிழ்த் தோகை மயிலினம்
செக்க மேனி சிவக்கச் சிவக்கறைத்
தொக்க வோவென வோங்கி யழுதலர்.

40. புலம்பி னோடு புகுந்திறை மீதவள்
அலம்பு வேடனை தம்புற வேமயிற்
குலப்பு லம்பிடக் குன்றினிற் றேயயற்
சிலம்பு வீழ்மயில் செத்து விழுந்தனள்.

41. புல்லி யேயுடல் போர்த்தொரு மைப்படக்
கொல்லை ஞாதுங் குருகிற் பொருமியே
வல்லு யிர்த்திதோ வந்தன னென்றுளே
சொல்லி யேமுகந் தொட்டுயிர் விட்டனள்.

42. தன்னைத் தாங்குந் தமிழர் தலைமகன்
தென்னர்க் காவன செய்து திருவொடு
நன்னர்த் தாய நலமிவை கொல்லெனப்
பன்னிப் பன்னிப் பரிந்து புலம்பினர்.

43. தையு றுந்தமிழ்த் தாயின் றலைமகள்
மையு றும்பொழில் மாலையும் பல்வகைப்
பையு றுந்தமிழ்ப் பண்ணையு மெண்ணியே
கைய றுநிலை யுற்றுக் கதறினர்.

---

40. அலம்பு-வறிய. புலம்பிட-தனித்திட. சிலம்பு-பக்கமலை. செத்து-போல.

41. குருகு-துருத்தி. பொருமி-பெருத்து. வல்உயிர்த்து-பெருமூச்சுவிட்டு.

42. தன்னைத் தாங்குதல்-தனக்குத் தானே ஒப்பாதல். நன்னர்-நன்மை.

43. தை, பை-அழகு. மாலை-மாலைக்காலம். பண்ணை-விளையாட்டு. கையறு நிலை-துயர்.

44. கலந்த காதற் கயிற்றினிற் கட்டியே
உலந்த போழ்தத் துதவிலா ரென்றெமைப்
புலந்து கைவிட்டுப் போயினி ரோவெனக்
கலுழ்ந்து நாவலர் கையறம் பாடினர்.

**வேறு**

45. புத்துணர்வே யொருநாளும் பொன்றாத
பெரும்புகழே புலவ ராயும்
முத்தமிழி னுட்பொருளே மூவாத
பெரும்பயனே முகையொன் றில்லாக்
கொத்தலரும் புதுமலரே கொம்பவிழுந்
தீங்கனியே குளிர்தென் காலே
அத்தனையு மொவ்வாத வரும்பொருளே
யெங்குசென் றீ ரையோ வையோ !

46. முதுக்குறைவோர் தனிக்காத்த தமிழகத்தை
யன்னாரின் முன்னே யாகப்
புதுக்குறையொன் றில்லாது நன்னலஞ்செய்
தாருயிர்போற் போற்றி வந்தே
ஒதுக்கிடமின் றில்லாது கொல்புலிவாய்
மான்போல வுதவான் முன்னர்
எதுக்கெளியே யுயிர்தாங்கித் தனித்துழல
விட்டகன் றீ ரெந்தா யெந்தாய் !

47. பேருலகில் மக்களுக்குப் பேருரிமை
யுடையனெனும் பெரும்பேர் பெற்றார்
யாருடையர் தமிழகத்தைத் தனிக்காத்த
பெரியோனே யடல்வே லண்ணல்!
காரிருளை முனிந்தோட்டுங் கதிர்நாண
வகத்திருளைக் கடிந்தே யோட்டும்
சீருடைய திருவிளக்கே யெமைத்தவிக்க
விட்டெங்கு சென்றாய் சென்றாய் !

---

44. புலந்து-வெறுத்து. கலுழ்ந்து-அழுது. கையறம்-இரங்கற்பா. 46. முதுக்குறைவு-அறிவு.

47. பேருரிமையுடையன, விளக்கு என்னும் பெரும் பேர்-இராவணன். 49. நந்தாமல்-குறையாமல். நயந்து-விரும்பி.

48. கொடிபற்றிப் படர்ந்துபயன் கொடுக்குமுயர்
கொழுகொம்பைக் கொன்ற வந்தக்
கொடியற்றுப் படிவீழ்ந்து கொம்போடு
பயனழிந்து குறுகு மாப்போல்
இடையற்ற நீரொழுக்கி னிணைந்தொருமை
யாய்க்கலந்த விறைவன் சென்ற
அடியொற்றி யாங்களழ விட்டொருங்கு
சென்றனையெம் மன்ன யன்னாய்!

49. வந்தேயெங் குலமுதலா விருமையற
வொருமையுற வளமை யாவும்
நந்தாம லேழினைந்து நாடாமல்
நாடிவர நயந்தே நாளும்
தந்தேமுத் தமிழின்பந் தலைநிற்பத்
தனிக்காத்துத் தலைமை தாங்கி
அந்தோவெங் களைத்தனியே யழவிட்டுச்
சென்றீரே யம்மே யப்பா!

50. மாரியென வேகுறையொன் றில்லாது
காத்தெம்மை வந்தின் றேயினு
யாரெனவோ துயர்க்கடலு ளழுந்தியழ
விட்டகன்றெம் மம்மே யப்பா!
ஓரினமா மக்களைக்கொன் றுண்டதுவும்
வேள்வியென வுரைத்தே மாற்றும்
பூரியரா மாரியர்க்கெங் களைக்காட்டிக்
கொடுத்தெங்கு போனீர் போனீர்!

51. பேரிருளைப் புறங்கண்டு பெருகொளியைப்
பரப்பியருட் பெரியார் போலப்
பாருலகைப் புறந்தந்து பாலிக்கு
மிருசுடர்போய்ப் பட்டாற் போலக்
காரிருளிற் கண்ணஞ்சாக் கள்வர்கள்தங்
கைப்பட்டுக் கவல்வார் போல
ஆரியப்பாழ்ம் பேரிருளி லலையவிட்டுச்
சென்றீரே யச்சோ வச்சோ!

---

50. வேள்வி - நரமேதம். 51. புறந்தருதல் - காத்தல். அச்சோ-ஐயோ.

52. உண்ணென்று படைப்பீர்மன் உடுத்தென்று
விரிப்பீர்மன் உடன்றே யுள்ளம்
கண்ணின்று காயீர்மன் கல்லென்று
சொல்வீர்மன் களிதேன் பாகின்
விண்ணின்று நாட்பெய்யு மழையென்று
வந்தீர்மன் வெறியே மேங்க
மண்ணொன்றி நின்றீர்மன் கல்லொன்றி
னெவ்வாறு வாழ்வே மன்னே!

53. ஓங்கிவளர் பனம்பழத்தி னுள்ளேதினு
மூன்றுகொட்டை யுண்டா னாலும்
பாங்குடைய மூன்றிலொன்று பொய்க்கொட்டை
யாவதுபோற் பயன்பா டின்றித்
தீங்குடையார்க் காளடிமை யானகொடி
யோன்குடைக்கீழ்த் தெவியார் போல
ஏங்கியழ விட்டகண்ணீர் யாங்களிழைத்
திட்டகுறை யென்னே யென்னே!

54. பொன்புறத்த வெள்ளையுள்ளத் தேங்காய்க்குக்
கண்மூன்று பொருந்து மாறல்
இன்புறுத்து மிளநீரை வெளிவிட்டு
வெறுமையுறு மிளங்கண் ணொன்று
வன்புறுத்தித் தலையுடையி னன்றிவிடா
வெளியிரண்டு வன்கண் ணேபோல்
அன்புறுத்தித் தலையுடைந்தீ ரவன்விட்டான்
வெளிப்பகைவர்க் கந்தோ வந்தோ!

55. தம்முதலு மினியசுவைத் தசைக்கனியு
முதல்வளர்க்குந் தாயி னோடு
மும்முதலு மழியவய லவர்க்குதவு
நுங்கேபோல் மூத்தோ ரான

---

52. கண்-இரக்கம்.

53. பொய்க்கொட்டை - உள்வீடு இல்லாதகொட்டை. இதுமுளையாது. தெவியர்-பகைவர்.

54. ஓடுபொன்னிறம். இளங்கண் - மெல்லிய தோல் போர்த்தகண். தலையுடைத்தல் - தேங்காயுடைதல். வன்கண் - வலியகண், ஆண்மை.

நும்பிருவ ரோடுதமிழ்க் குலமுதலு
மழியவட நுலையர்க் காளாய்ப்
பொம்முதலா கியபாவிக் காளாக்கி
விட்டெங்கு போனீர் போனீர்!

56. கல்லாத மறமுதலே கண்ணோடுங்
கைத்தாயே கலங்கா நின்றே
அல்லாத புரிந்தொழுகு மடிமைதருங்
குடிமக்க ளான தொன்றோ?
சொல்லாத ஆமென்றோ சுவைகண்டோ
கொன்றுண்ணுந் துகளோ ரான
பொல்லாத வாரியப்பாழ்ம் புலிக்கிரையாத்
தந்தெங்கு போனீர் போனீர்!

57. வாழையடி வாழையென வந்தவிளங்
கன்றழிந்த வகையே போல
வாழையடி வாழையிளங் கன்றனைய
விளவரசை வடவர்க் கீந்து
வாழையடி வாழையென வந்தருள்மா
பெருந்தலைவர் மரபைப் போக்கி
ஏழையடி யவரானோ மென்செய்கோந்
தமிழ்காத்த வெம்மீ ரெம்மீர்!

58. தாயற்றுத் தந்தையற்றுத் தண்டமிழைத்
தம்மவர்போற் றுங்க வந்த
சேயற்று மில்லாது சிற்றப்பன்
றன்னையற்றுச் சிறுமை யுற்றுக்
காயுற்ற திறன்மறவக் கடலற்றுக்
கையற்றுக் கண்ணு மற்று
நோயுற்று மற்றொன்றுந் தோன்றாது
பயனற்று நொந்தேம் நொந்தேம்.

---

55. தம்முதல்-குருத்து. தாய்-சிம்பு - கிழங்கு விழுந்த கொட்டைக்குள் இருப்பது. மும்முதல்-கன்று, சிம்பு, பழம், குலமுதல்-சேயோன். பொம்முதல்-உடல் விம்முதல்.

56. கைத்தாய்-வளர்ப்புத்தாய். துகள்-குற்றம்.

58. கையற்று-செயலற்று. கண்-அறிவு.

59. எங்களைப்பெருந் தலைவர்களை யுண்டேப்ப
மிட்டதுட னொழிலார் செல்வம்
பொங்குபழந் தமிழகத்தை யடிமையெனும்
படுகுழியிற் போட்டாய் போட்டுத்
தங்கள்குலந் தனையழித்த தறுதலைக்கெங்
களைக்காட்டித் தந்தா யந்தோ
உங்குயிலா தாரியமே! யடியோடு
வருமுதலற் றொழியா யோநீ?

### வேறு

60. இன்ன வாறவ ரேங்கிய பின்னர்மா
மன்ன னோடு மயிலை மகனைமன்
பின்ன னோடு பெரியரை வைத்துமே
கன்னி லைத்தநன் காட்டினை வாழ்த்தினர்.

61. காடு வாழ்த்திக் கலைத்தமிழ்ச் செல்வர்கள்
நாடு வாழ்த்தி நகரிற் புகுந்தனர்;
நாடு நீத்து நமக்குள கொள்ளவே
காடு காத்த கடுங்கொலை யாளனும்.

62. செடிமி குத்தவன் றேவியை யெய்தியே
கடமை தப்பிக் கருந்தொழி லாளருக்
கடிமை யுற்றுய ரண்ணனைக் கொன்றமா
கொடிய னோடுயர் கோயிலை நண்ணினன்.

63. அரியை வஞ்சனை யாய்க்கொன் றதனுழை
நரிபு குந்தது போல நறுந்தமிழ்ப்
பெரிய வன்றனைப் பின்னவ னுற்கொலை
புரிபு கோயிலுட் புக்கனன் பாவியே.

## 14. ஒப்பந்தப் படலம்

### வேறு

1. கொடிய பாவியுந் தமிழர்தம் பேரிறை குலத்தை
வடவ ராமனுற் கொல்வர லாற்றினை வகுத்தாம்;
அடிமை யாகியே யாரியர்க் கருந்தமி ழகத்தை
உடமை யாக்கிய வொப்பந்த மினைத்தென வுரைப்பாம்.

---

59. உங்கும்-எங்கும்.
60. வைத்து - அடக்கம்செய்து. கல்நிலைத்த - நடுகல் உள்ள. 62. செடி-தீமை. 63. நுழை-குகை.

2. பாலை யாகிய பீடணன் வேண்டிய படியே
மீளி யாகிய வடவனும் விறன்மிகு மெய்காப்
பாளர் சூழ்தர விலங்கையி னணியினைப் பார்த்து
நகரு லந்தவன் பெருமையை நினைந்துட னைந்தான்.

3. இந்த வூர்க்கிணை யுலகினி லெங்குமே யியன்ற
எந்த வூர்களு மிருப்பதாக் கேட்டிலே னெமது
சொந்த வூருமே யிந்தவூர்க் கிணையுறத் தோற்கின்
இந்த வூர்க்கிணை பேசுத லெவ்வகை யியலும்?

4. மனையின் காப்பெனக் கூறிடத் திகழ்புற மதிலைப்
பனிம லைத்திர ளென்னினுங் குறையெனப் படுமால்
பனிம லைக்கிலா வலிமையும் பொருண்மையும் பகைவர்
வினையை யோட்டிடும் படைகளு மிதற்குள மிகையே.

5. மதிலை முற்றியே யறிவிலே னென்படை வலியைச்
சிதற விட்டன னம்மதிற் கிடங்கினைத் தேரின்
சிதலை யாலினைத் தின்றுவீழ்த் துவதுபோற் செறியும்
முதலை யாளினை வீழ்த்தியே கவிழ்த்ததெம் மொய்ம்பே.

6. தமிழர் மாபெருந் தலைவன்வீற் றிருந்தவத் தாணி
தமிழர் வாழ்வினற் பெருமையை விளக்கவோர்
சான்றும்;
கமழு மூரகச் சோலையை யுண்மையிற் காணின்
உமிழு மாய்கதிர் மணிவிளை பொழிலென்ப தொன்றே.

7. நினைமுன் றொன்னக ருளவெலாங் கூறிட நீயும்
அனுமன் சொற்படி யாங்குவந் திலையே யாயின்,
இனுமென் னாட்டில ரோடுவன் றமிழர்க ளெல்லாம்
எனைமுன் சேர்ந்திருந் தாலுமா டெய்துத லின்றே.

8. இன்னு முள்ளவிவ் விலங்கையின் பெருமையை
யெல்லாம்
இன்ன வாறெனத் தனித்தனி யாகவே யெடுத்துப்
பன்ன வென்றனா லாவதோ பழந்தமிழ் மக்கள்
மன்னர் மன்னனா வந்தவன் வாழ்வதே வாழ்வு.

---

2. மீளி-கொலைஞன். உலந்த-கெட்ட.
5. சிதலை-கறையான். மொய்ம்பு-வலி
7. முன் உளவும், தொன்னகர் உளவும். முன்-அண்ணன். ஆடு-வெற்றி.

9. என்று கூறியே காண்டகு தொன்னக ரெங்கும்
சென்று கண்கவி கொள்ளவே கண்டனர் சென்று
ஒன்று பொன்மணி குயின்றவத் தாணியை யுற்றுக்
கொன்ற பாவிய ரிருக்கையி லமரவே கொடியோன்.

10. ஏழை தன்னையு மோர்பொரு ளாகவே யெண்ணி
வாழை நேரடி வாழையா யிறைபெற வந்த
மாழை மாமணி யிருக்கையில் வாழ்ந்திட வைத்த
வீழை நேருமிந் நன்றியை வீயினு மறக்கேன்.

11. பகைவ னோடுடன் பிறந்தவ னென்பதும் பாரா
அகம கிழ்வுற வேயெனை யாள்விடுத் தழைத்தே
தகவ னாக்கியே யிலங்கையாள் பரிசினைத் தந்தே
உகவ னாக்கிய வுதவியான் மறப்பதி லொன்றோ?

12. மைதி கழ்விழி மானினை யெடுத்துமே வந்த
உய்தி யில்லவன் உடன்பிறப் பென்பது மோரா
எய்தி னேனிலை யோதமி ழிலங்கையை யீந்த
செய்தி கொல்லுவ னோவுயி ரேகினுஞ் சிறியேன்.

13. இனைய பற்பல விழிதக வுடையன வியம்பிப்
புனைம லர்க்கழல் முடியுறப் படியிசைப் பொருந்தி
எனைய னேயெனுற் செயத்தகு வனவுனக் கேதோ
துனைய னேன்செயும் படிபணித் தருள்கெனத்
தொழுதான்.

14. தொழுதெ ழுந்தவவ் வடிமையை வடமகன் றுணைவா!
எழுது மோவியந் தன்னினு மழகுடை யிலங்கை
விழுது போலநீ தாங்குதற் கென்படை வீரர்
தொழுதி செய்குவ ரிவணிருந் தேபெருந் துணையே.

---

9. குயின்ற-செய்த. கொடியோன்-பீடணன்.

10. மாழை-பொன். வீழ்-விழுது.

11. உகவன்-மகிழ்ச்சியுடையவன்.

13. என்னையனே. துனையன் - விரைவில் செயல்புரி பவன்.

15. எம்பி னத்தரிங் கிருப்பதற் கெவ்வகை யூறும்
உம்பி னத்தவர் செய்திடாச் செய்வதீ தொன்றே?
உம்பி னத்தவர்க் குரியவா முரிமைக ளெல்லாம்
எம்பி னத்தரு மியல்பினி லெய்திடச் செய்வாய்.

16. எய்தி யுள்ளவெம் முரிமையை யென்றுமே தமிழர்
கொய்தி டாதுசெய் வாயது வன்றியெங் குலத்தர்
எய்தி யிங்குவாழ் வதற்கொரு தடையிலா தென்றும்
செய்தி மற்றுநும் மவர்பகை கொளாமலுஞ் செய்வாய்.

17. உங்கள் தாய்மொழி யுங்களுக் குரிதுபோ லுயர்ந்தோய்!
எங்கள் தாய்மொழி யெங்களுக் குரியதா வீங்குத்
தங்கி வாழ்ந்திடு மெம்மவர் தாய்மொழி தன்னை
இங்கு பேசவுங் கற்கவு முரிமைசெய் யென்றும்.

18. பின்னு மெம்மவர் பிறப்புரி மையினைதும் பிழையா
கன்ன லெம்புரிந் திடுகமற் றெங்கள்நன் னாட்டில்
இன்னு முன்குறும் பரும்படை யெடுத்திடா திருக்க
மன்ன கட்டளை யிடுகுவை யன்னர்க்கு வகுத்தே.

19. மண்ண வாவியான் றமிழகம் வரவிலை மன்னா!
விண்ண வாவிய வேள்விசெய் தெங்குல மேலோர்
உண்ண வாவிய தொழித்தரை மொழித்தவர்க் குரிமை
பண்ண வாவியே வந்தன னறிகுவை பதைத்தே.

20. என்று கூறவே யிரண்டக னிணையடி வணங்கி
நன்று நன்றுயா னின்னும்வேண் டியவெலா நயப்பேன்
கொன்று தின்பதை யன்றிவே றெதையுமெங் குலத்தர்
அன்றெ றுரென வகத்தியன் கேட்டியென் றறைவான்.

21. வேள்வி செய்தலா லுண்கில மினியந்த வேள்வி
ஆள்வி னைக்குயர் வலியுடைத் தென்பதை யரசே
கேள்வி வல்லவர் கிளக்குவர் தமிழர்கள் கேட்டே
நாள்வ ளம்பட நம்புவ ரெனவவன் நவின்றான்.

---

19. அவாவிய-விரும்பிய.
20. நயப்பேன்-விரும்பிச் செய்வேன்.
21. ஆள்வினை-போர். நாள் வளம்பட-நாள் ஆக ஆக.

22. எனிற்பு கன்றதன் படியுமர் வாழவே யெம்மோர்
இனித்த டுக்கிலா திருந்திடச் செய்குவே னென்றான்;
தனித்து முன்னவர் தேடிய தமிழ்க்கரு வூலம்
அனைத்தும் போக்கியிந் நிலையுறச் செய்யிரண் டகனும்.

23. என்று கூறச்சுக் கிரீவனு மெழுந்தெம திறைவா!
நன்று செய்யவே யுதவுவே னியன்றதை நாளும்;
வென்று பேரர சளித்தவன் குலத்தினர் வெறுக்கின்
அன்று போலயா மடிமைகொண் டலைகுவோ மென்றான்.

24. மின்னை வீழ்த்தியே யொளிமிகுந் தமிழக விந்தந்
தன்னை காத்தழும் பாதுகாத் துயர்பழந் தமிழ
மன்னை வீழ்த்தியே யாரியர்க் கடிமையா வந்த
மன்னர் வாழ்த்தியா மாமென வழிமொழி வகுத்தார்.

25. படியி னன்றிகொன் றூர்க்கிலை யுய்தியொப் பந்தப்
படிந டக்கிலே னெனிற்றச ரதன்மகன் பகையாய்
அடிமை யாகியே யலைகுவேன் முன்னைபோ லர்ணே;
படைவ லோயிதி லையபின் றெனவடி பணிந்தான்.

26. பணிந்து கூறிய விரண்டகற் றழுவியப் பாவி
துணிந்து ளேனறி வொழுக்கமிக் குடையையுன் சொல்லைத்
தணிந்து வாழ்கென வாழ்த்தினன்; மணிமுடி தன்னை
அணிந்து பேரர சாக்கிய வகையினை யறைவாம்.

## 15. முடிசூட்டுப் படலம்

### வேறு

1. அந்தநா ளேக விவ்வா றடுத்தநா ளயோத்தி ராமன்
முந்தநா ளயோத்தி விட்டு மொய்குழ லோடு கானம்
வந்தநா முடித்த தன்றோ? மணிமுடி புனைந்து பின்னோய்
இந்தநா ளேநன் னாளா வேகுநா ளாகச் செய்வாய்.

---

22. கருவூலம்-பொருட்குவை.
26. தணிந்து-நிறைந்து.
1. நாம்வந்த-நாம்வந்தகாரியம்.

2. என்றவன் கூறக் கேட்ட விளையவன் ஞெழுது நீங்கிச்
சென்றவ னிடத்து மூன்னோன் றெளித்ததை யெடுத்துக்
கூற
நன்றெனா நாடு கொண்ட நஞ்சினுங் கொடிய பாவி
வன்றிறல் மறவர் தம்மால் மணிமுர சறைவித் தானே.

3. உருமென முரச மார்த்தே யூனரு முளவு ளாரும்
தெருவினி லங்கு மிங்குந் திரிதரத் திருடர் போல,
வருவர்போ குறுவ ராக வழக்குடைத் தமிழர் தம்மில்
ஒருவருஞ் செவிசாய்க் காம லூமர்போற் சென்று
ரம்மா.

4. விண்பட முழக்கிச் செல்லும் வினைர்கள் முரசி னோசை
கண்படுங் காலை வெட்டுங் கயவர்போ லயலார்ச்
சேர்ந்து
மண்பட விறையை வீழ்த்த வஞ்சகன் செயல்முன்
னோடிப்
பண்படுஞ் செவியில் நெய்தற் பறையெனப் பட்ட
தன்றே.

5. அண்ணனைக் கொன்ற பாவிக் கடிமையா யலைதல்
நீத்துத்
தண்ணறுங் கானஞ் சேறல் சாலவு நன்றென் பாரும்;
உண்ணென வொருவன் சோற்றை யொருவனுக்
கொருவ னீயத்
திண்ணென வுண்போ னென்ன செயத்துணி யானென்
பாரும்.

6. பருகிய நஞ்சு போலப் பாழ்படத் தமிழர் தம்வாழ்
வெரியென வெதிரில் வந்தான் என்செய்யா னினியென்
பாரும்,
கரவினில் மான மின்றிக் கள்வர்போ லயலார்ச் சார்ந்த
ஒருவனோ தமிழர் வாழ்வுக் குரியவன் காணென்
பாரும்.

---

3. ஊனர்-வட்டவர். உளவுளர்-இரண்டகத்தமிழர்.

4. கண்படுங்காலை-தூங்கும்போது. நெய்தற்பறை-சாப்பறை.

7. செம்மணி யோடு நஞ்சு சேர்ந்துள வாறு போல
எம்மிறை யோடிப் பாவி யேன்பிறந் தானென் பாரும்,
இம்மியி னளவு மான மின்றியே பகைவன் காலிற்
றம்மென வீழ்ந்தா னேசெந் தமிழருக் கிறையென்
பாரும்,

8. நிலமுள தனையு நீங்கா நெடும்புகழ் படைத்த மன்னர்
குலமுள தனையு நீங்காக் கொடும்பழி தேடிக் கொற்றக்
கலமுள தனையும் ஏந்திக் கரவினி லயலார்ச் சேர்ந்து
வலமுள தனையும் விட்ட மானியோ விறையென்
பாரும்.

9. ஆரியர்க் குரிய தேயோ வருந்தமி ழகமென் பாரும்;
ஆரியன் கொடுக்க வன்னா னப்பன்சொத் தோவென்
பாரும்;
பூரிய னரச னாகிப் பொன்முடி புனையு நாளில்
ஊரையொப் பணிசெய் யாதீ ரொருவரு மேயென்
பாரும்.

10. இன்னன முரைப்பா ரன்றி யிலங்கையி லொருவ
ரேனும்
மன்னவன் வாழ்க வென்று வாழ்த்தினா ரில்லை யாகத்
தன்னிக ரில்லாத் தூய தமிழ்நா டிலங்கை தன்னை
இன்னுயிர் கழிந்து நின்ற யாக்கைபோ லாக்கி னாரே.

11. சிற்றில்க ளின்றி யெல்லாத் தெருக்களும் வறுமை
தாங்கும்
முற்றில்க ளெல்லாம் வீட்டு மூலையை மருவிச் சோங்கும்
நற்றமிழ்ச் சிறுவர் கையைய நடைவண்டி நண்ணா
தேங்கும்
தெற்றிபி னகங்கள் தோறுஞ் சிறுபறை வறிது தூங்கும்.

12. நீரகங் கலவைச் சாந்த நிழலையு மறிகி லாநீர்
சேரகஞ் சிறுவர் தங்கள் சேவடி நிழலுங் காணா
ஊரகஞ் சோலை யாத்த வூசலக ளோய்வு பூணும்
கூரகங் கனிந்தா டுஞ்செய் குன்றங்கள் வறிது காணும்.

---

7. தம் என-அரசு தாவென.
8. தனையும்-அளவும். வலம்-வலி. மானி-மானமில்லான்.
11. சோங்குதல்-மறத்தல். தூங்கும்-தொங்கும்.
12. அகம் கூர்கனிந்து-மனமிக மகிழ்ந்து.

24. அவ்வுரை கேட்ட வில்லோ னையனீ யஞ்ச வேண்டாம்
ஒவ்வொரு வருமெண் ணூறு றுற்றபோ துடன்று சீறி
வெவ்வுரை புகல்வ ரந்த வினைமுடிந் ததன்பின் யாரும்
தெவ்வரே யெனினு மன்பு செய்குவ ரியல்பீ தாமே.

25. ஆதலால் வருந்த வேண்டா மையனீ யரச னானால்
மூதறி வாள ரான முதுதமிழ் மக்க ளெல்லாம்
போதுவர் போந்து நேர்மை புரிகுவர் பின்ன ரெல்லாம்
காதல ராவர் வேண்டுங் காரியம் புரிதி யென்றான்.

26. என்றலு மிளைய பாவி யேவலர் தம்மை யேவச்
சென்றவ ரிறைவ னென் னுந் திருவினை யிழந்து நிற்கும்
குன்றென வுயர்ந்த மாடக் கோயிலைக் குறித்த போதிற்
கொன்றவோ ருடலைக் கோலங் கொண்டெனக் கோலஞ்
செய்தார்.

27. முடிபுனை வேளை யீது முறையொடு வருக வென்றே
கடிமுர சோய்வி லாது காரென முழக்கி னார்கள்
அடிமையு மடிமை கொண்டா ரன்றியோர் தமிழ
ரேனும்
குடிகொள வில்லை யந்தக் கொடிதவழ் மாடக் கோயில்.

28 அறிவிலன் கொடியன் பாவி யயலவர்க் கடிமை யாகி
இறைமகன் றன்னைக் கொன்ற விரண்டகன் விழவு
காணக்
குறுகிட வேண்டா மென்று கொடுமுடி மீது நின்று
மறியல்செய் வதுபோ லாடி வருந்தின கொடிக ளம்மா.

29. உறவினர் வந்தா ரில்லை யுகந்தவர் வந்தா ரில்லை
அறிவர்கள் வந்தா ரில்லை யமைச்சர்கள் வந்தா ரில்லை
மறவர்கள் வந்தா ரில்லை மாதர்கள் வந்தா ரில்லைச்
சிறுவரும் வந்தா ரில்லைத் தீயவன் கோயி லம்மா.

30. பாவலர் பாணர் கூத்தர் பாட்டியர் பொருநர் பாவல்
நாவலர் புலவர் சூதர் நானில மினிது காக்கும்
காவலர் மற்று முள்ள கனிதமிழ் மக்க ளின்றி
மேவலர் பாடி போல விளங்கின மாடக் கோயில்

---

24. ஊறு- இடையூறு ஊறு உற்றபோது என்றது.

31. அடிமையைக் கோலஞ் செய்தே யரியணை தன்னி லேற்றிக்
கடிமுர சிரங்கத் தெவ்வர் களித்துவாழ் கென்ன வாழ்த்த
வடமகன் றமிழர்க் கெல்லா மாபெருந் தலைவ னென்றே
முடிபுனைந் தான்கொ லூரார் முதலையாள் முறைமை போன்றே.

32. காட்டிடைப் பகைத்து வந்த காளையை யாக்க ளெல்லாம்
கூட்டமாய்க் கூடிப் பற்றிக் கொண்டொரு கல்மீ தேற்றிச்
சூட்டினார் முடியாக் கட்குத் துலங்கிறை நீயே யென்ன
நாட்டிடை விடுதல் போல நாடக நடந்த தம்மா.

33. பொன்முடி புனைந்த பின்னர்ப் பூரியன் மெய்காப் பாகத்
தன்படை தன்னை வைத்துத் தமிழர்க ளுரிமை கொல்ல
அன்புடன் முகமன் கூறி யாரிய னயோத்தி சென்றான்,
புன்படை யோடு முன்கொல் புல்லனுந் தம்மூர் சென்றான்.

34. ஆரியன் போய பின்றை யரசியற் பயிற்சி மிக்க
பேரறி வாள ரின்றிப் பெரியதுஞ் சிறிது மான
காரிய மெல்லாந் தானே கைக்கொடு தமிழர்க் காக்கும்
மாரிய னென்ன வேகோ மாளிக்கூத் தாடி னானே.

## 16. ஊர்பழி படலம்

### வேறு

1. அடிமையாய் வடவ ரான வாரியர்க் கிலங்கை தன்னில்
முடிபுனைந் தரச னான முதன்மையாற் றமிழர் வாழுங்
கொடியணி மாட நீடுங் குருமணித் தெருவந் தோறும்
மடியினில் நெருப்புப் போன்றான் வலம்வர வெண்ணி னானே.

---

31. இரங்க-ஒலிக்க, எங்க. களித்து-நீ களித்து, அடிமை யானென அவர்கள களித்து.

32. கார்முடி-தூக்கணங் குருவிக் கூடு.

34. கோமாளிக் கூத்து-கூத்தில் கடிப்போர் எல்லா ரச்சவும் தானே நடித்தல்.

2. எண்ணிய வெண்ணந் தன்னை யெவரிடஞ் சொல்வான் பாவம்
அண்ணனே தம்பி யோசிற் றப்பனே மாம னேகூட்
டுண்ணியே கிளைகள் போல வுடன்வரு சுற்ற மோவுட்
கண்ணிய வின்ப துன்பங் கழறிடு நண்பரோ வில்லான்.

3. உற்றதா லுறுவ தாராய்ந் துரைத்திடு மமைச்சோ வன்றி
அற்றம்பார்த் தெளிய கூறு மறிவரோ வற்றங் காணும்
ஒற்றரோ வறிவு மாண்டு முறுபயிற் சியுமிக் கூர்ந்த
கற்றரோ காலங் கூறுங் கணியரோ வருகி லாதான்.

4. அருந்தமிழ்க் கடலை நண்ணி யகம்புறப் புனலை மாந்தி
அருந்தமி ழவர்க ளுள்ள மாகிய பைங்கூ ழோங்கப்
பொருந்தவே செய்யுள் மாரி பொழிந்துநா டோறு மாக்கந்
தருந்தமிழ்ப் பெரியா ரான சான்றவ ருறவோ வில்லான்.

5. மற்றுமா மஞ்சு துஞ்சு மதிலணி யிலங்கை மூதூர்
முற்றுமே சுற்றி னாலும் முந்திரி யிரக்கங் காட்டும்
சுற்றமோ துணையா வாரோ தோழரோ விலைமென் கூந்தற்
சிற்றிடை யார்க ளோடு சிறூர்களும் வெறுத்தா ரம்மா.

6. பழந்தமிழ் மறவர் கொற்றப் படைகளை யெறிந்துவிட்டுக்
குழைந்தநெஞ் சுடைய ராகிக் கோமகன் றன்னைப் போரில்
இழந்ததை யெண்ணி யெண்ணி யிரங்கின ரன்றி யொன்றும்
விழைந்திலர் படிறன் பேரை விளம்பவும் வேறுப்புற் றரே.

7. பூக்கிடைச் செங்கா லன்னம் பொருந்திய வினத்தி னீங்கிக்
காக்கையை யுறவு கொண்ட காதைபோற் கண்ணி லாதான்
மாக்கொலை கார ரான வடவரை யுறவு கொண்டு
தாய்க்குலந் தன்னி னீங்கித் தனிமைய னானா னம்மா.

8\. நகரணி காண வேண்டி னூருள தமிழ மக்கள்
யாருமே துணையி லாதா னென்செய்வா னொருவன் பாவம்!
ஆரிய மறவர் தம்மை யடைந்துதான் மேற்கொண் டுள்ள
காரிய மினைய தென்று கழறினான் மான மில்லான்.

9\. மற்றவ ரதனைக் கேட்டு மன்னனே வருந்த வேண்டாம்
சுற்றமு நண்புந் தோன்றாத் துணைவருந் துயரம் போக்கற்
குற்றரு நாங்க ளன்றோ வுறுகுறை யுண்டோ வூரைச்
சுற்றுவ மின்றே யின்பந் தோய்தரும் படிநா மென்றார்.

10\. என்றவர் கூறக் கேட்ட விரண்டக னுவகை பூத்து
நன்றுநன் றெம்மீ ரின்றே நகரணி கண்டு மீளற்
கன்றுபோல் முரச மின்று மறைகென வறைந்தா ரூரார்
அன்றுபோ லின்று மானு ரரசனும் வெளிப்பட் டானே.

11\. இலங்கைமா நங்கை யந்த விரண்டகன் வரவு காண
மலங்கியே விளக்க மென்னும் மலர்விழி பொத்திக் காணும்
புலங்கெட விருள தென்னும் புரிகுழல் விரித்தே யில்லந்
திலங்கிடு கதவ வாயைத் திறந்திடா திலைந்தா ளம்மா.

12\. வென்றெறி முரச மார்ப்ப வெற்றிவேற் கொற்றத் தண்ணல்
மன்றலங் குழலி யோடு மணவிழாக் கண்ட நன்னாள்
ஒன்றிய நிலையை யெண்ணிப் புள்ளுநடைந் திலங்கை மானும்
இன்றைய நிலையை யொப்பிட் டினைதல்போ விருந்த வில்லம்.

13\. கருவிடைப் பூத்து மானங் காய்த்துப் பழுத்துப் போந்த
உருவிடைச் சுவைக்கச் சொட்டு மொழுக்குடைத் தமிழ ரில்லம்
ஒருபுடைக் கதவ மேனு முவந்தில வுவவா ரோடு
தெருவிடைப் பிணம்போ லேபூந் தேரிடைச் சென்றா னம்மா.

---

11\. மலங்கல்-மயங்கல். இலங்கல்-விளங்கல்.
12\. பலகணியிற் பதுங்கிப் பார்த்தனர்.
13\. மானம் பூத்துக்காய்த்து. புடை-பக்கம்.

14. இன்னண மாக மக்க ளியைபிலா தவரை யர்னும்
மன்னவ னுகிப் பேரூர் வலஞ்செலுங் கொடிய பாவி
தன்னையூர் மக்க ளெல்லாந் தனித்தனி வெறுத்து
மற்றோன்
துன்னிய செயலை யாய்ந்து சொல்லியே பழிக்க லானார்.

15. ஆடவர் பழித்த வாற்றை யறிந்தன ளன்றே; மாட
கூடநீ ளிலங்கை மூதூர்க் கொடியிடைக் கோவ்வைச்
செவ்வாய்
ஆடமைப் பசுந்தோ ளம்பா லயில்விழித் தரள
வெண்பல்
மோடவிழ்ந் திளிக்குச் செந்தேன் மொழித்தியர்
பழித்தல் காண்பாம்.

## வேறு

16. ஊரினை விட்டே யழிபடை யாள ருடனோடி
ஆரிய னைக்கும் பிட்டமு தன்னு னடிமீது
வேரற வீழும் மரமென வீழ்ந்த விழலன்றான்
தேரினில் வந்தான் நன்றிது வென்றார் சிலமாதர்.

17. பொங்கொளி யோனுங் கண்டுள நாணும்
புகழ்மிக்கான்
பங்கி லெழுந்துந் தண்டமிழ் கற்றும் பண்புற்றும்
எங்கையை யந்தோ வன்கொலை செய்த இழியானைச்
செங்கை குவித்தான் நன்றிது வென்றார் சிலமாதர்.

18. திருவிட மொன்றோ வீந்திர மோடு தென்பாலி
பெருவள நாடு மொருகுடை யாண்ட பெரியோனைச்
செருவிடை வடவன் றுணைகொடு வீழ்த்த தீயோற்குத்
திருவிழ வொன்றோ? நன்றிது வென்றார் சிலமாதர்.

19. பாவலர் பாடும் பைந்தமி ழேடு பயில்கையால்
காவல னாகக் கருதியே யொருவர் காணாது
மாவலர் சோலைப் பாசறை புக்கே வடவோனின்
சேவடி தொட்டான் நன்றிது வென்றார் சிலமாதர்.

---

15. அமை-மூங்கில். தாளம் முத்து. மோடு-மிகுதி.

20. பூமண நாறு தேபொதி கொள்ளும் புறவாய்போல்
தாமரை போலத் தமிழக மெங்குந் தகநின்ற
கோமக னோடு வந்து பிறந்தான் கொடியோனும்
தேமலி னின்னான் நன்றிது வென்றார் சிலமாதர்.

21. பீடண னென்று பெற்றவ ரிட்ட பெயர்கொண்டே
ஏடண னென்றே யுலகினர் தூற்ற முறைகொன்று
கேடண வியலிக் கொடியோன் போனீர்க் கிடையெங்குந்
தேடினு மில்லை நன்றிது வென்றார் சிலமாதர்.

22. ஒருகுடை நீழலிற் றமிழக முழுது முயிர்போலப்
பெருகொளி மூத்தின் குலமென வாண்ட பெரியோனின்
திருவடி காணு வடமக னடிமைச் சிறியோனூர்த்
தெருவிடை வந்தான் நன்றிது வென்றார் சிலமாதர்.

23. ஒன்றிய வுறவைத் தன்னொடு வந்த வுயர்கொம்பைக்
கொன்றொழி தெவ்வைப் புகலென மானங்
கொன்றந்தோ
இன்றல வென்று மேயொரு தமிழ ரிவனேபோற்
சென்றவ ருண்டோ நன்றிது வென்றார் சிலமாதர்.

24. இறையோன் காத்த தமிழக மென்னு மியல்காவைக்
குறையா கென்று தின்றடி யோடு கொல்விக்கும்
நறையான் போலத் தமிழர்கள் வாழ்வி னலங்கொல்லும்
சிறையோ னுனன் நன்றிது வென்றார் சிலமாதர்.

25. பூப்போ லுள்ளம் புதுமணம் வீசும் புலவோர்செந்
நாப்போ லென்றுந் தமிழர்கள். வாழ நலஞ்செய்யும்
காப்போல் வந்த விறையொடு தமிழர் கையுண்ணும்
தீப்போல் வந்தான் நன்றிது வென்றார் சிலமாதர்.

---

20. புறவாய்-புறவிதழ். தேமல்-பெண்கள் உடலிற் றோன்றி அழகைக் கெடுக்கும் பசுமைநிறம்.

21. நீர்க்கிடை-கடல்சூழ்ந்த உலகம்.

24. குறை ஆகு என்று-அழிகவென்று. சிறையோன்-அடிமை.

25. கா-சோலை. கை-ஒழுக்கம்.

26. சும்மாட் டோடு தலையி லிருந்த சுமைகொண்டிட
அம்மாட் டானைக் குப்புற வீழ்த்தே யழிகேணி
இம்மாட் டிறையா னேயென் பார்போல் இளையோனும்
செம்மாப் புற்றான் நன்றிது வென்றார் சிலமாதர்.

27. அறம்பொரு ளின்பங் கண்டுயர் வுற்ற வறிவோனை
மறம்பட வடவர் கழல்கால் யாத்து மருங்காட
நிறம்பட வேலின் கூர்நுனி யஞ்சா நேர்நின்று
திறம்பட வென்றான் நன்றிது வென்றார் சிலமாதர்.

28. அம்மை யழுத்தம் மப்ப னழுத்தம் மன்பழுவே
தம்மின முற்றுங் கொன்று தொலைத்த தகவில்லான்
இம்மெனு முன்னே நன்று புரக்கு மிறையாகிச்
செம்மைய ழைத்தான் நன்றிது வென்றார் சிலமாதர்.

29. என்றின வாறு கூறியே யேச வியல்கெட்டு
முன்றி லிருண்டு வாயுறை கதவு முகமூடிச்
சென்றவர் காணக் கைவிழி காட்டுந் தெருவிட்டுத்
தன்றம ரோடு கோயில் புகுந்தான் தகவில்லான்.

30. சீரிய முறையில் லானுயர் தமிழர் திரளான
நேரிய வினம்விட் டேயர சவையில் நிலனாளும்
ஓரிய னைய்ஙின் றென்னலர் துணையை யுறவோம்பி
ஆரிய வடிமை யாயர சிருந்தா னவனம்மா.

## 17. இறுவாய்ப் படலம்

### வேறு

1. விதைப்பினைத் தின்றுமே வெறுநி லத்தினை
முதைப்புனங் காட்டிய மூரிக் கீந்துமே
இதைப்பெறு கெனச்செலு மிலங்கை கண்டனம்;
அதைப்பறி மைபுகு மயோத்தி காணுவாம்.

---

26. அம் மாட்டான்-அந்த மாட்டுக்காரன். அழிகேணி—பாழ்ங்கிணறு. இறை-மாட்டுக் குரியவன். செம்மாப்பு-செருக்கு. பாற்குடங் கொண்டு செல்லும் மாட்டுக்காரனைக் கிணற்றில் தள்ளி மாடு கொண்டதுபோல், இறையைக் கொன்று உரிமை போக்கி அரசு கொண்டான். சும்மாடு—உரிமை. சுமை—ஆட்சி மாடு-நாடு.

27. மருங்கு ஆட-சூழ்ந்தாட. நிறம்-மார்பு. 'கழல்கட்டியாட' எனப்பழித்தது; பேடியென்றவாறு.

1. விதைப்பு-பயிர். முதைப்புனம்-முதிர்ந்த பயிர்நிலம்.

2. இரண்டக மறிகிலா விறைவன் மண்மிசைப்
புரண்டிடத் தமிழகம் புலம்ப நின்றிடும்
இரண்டகன் றனைப்பிரிந் திலங்கை நீங்கியே
திரண்ட தம் மவரொடு சிலைக்கை ராமனும்.

3. பரிசிலா ரொடுசில பகல்ந டந்துபோய்க்
கரிசுசுக் கிரீவனுங் கனிந்து நல்கிய
வரிசையோ டவன்விடை வழங்கக் கொண்டுநல்
லரசினை யவாவியே யாறு சென்றனன்.

4. முனிவரும் படைஞரு முடுகிச் சூழ்வர
மனையொடு செலச்சில மாதஞ் சென்றதர்
கனிவளர் கானகங் கடந்து நாடுகண்
டினையவன் மகிழ்வுட னயோத்தி புக்கனன்.

5. புக்கது கேட்டதும் பொருக்கென் றூரினர்
மக்களி லாதகம் வறுமை யெய்திட
ஒக்கவாண் பெண்ணொலா மொருங்கு போந்தவண்
தொக்கனர் வருகெனத் தொடர்ந்து வாழ்த்தினர்.

6. ஆரிய நலாரவ னழகை யுண்டனர்
ஆரியர் சீதையை யள்ளிக் கொண்டனர்
ஆரிய னாரவ ரன்பை யுண்டனன்
காரிகை சீதையுங் கவலை விண்டனள்.

7. ஓட்டிய நண்பரு மூரிமைச் சுற்றமும்
மட்டிலாக் கிளைஞரு மதிய மைச்சரும்
தட்டழிந் தினைதரு தாயர் மூவரும்
நெட்டிழை யாரொடு நெருங்கிக் கண்டனர்.

8. ஆயிழை யோடுபின் னவனுந் தானுமாய்த்
தாயர்கள் மலரடி தம்மின் மீதுவீழ்ந்
தேயெழு முன்விழுந் திணைந்த மொய்கழல்
தாயசத் துருக்கனைத் தழுவிக் கொண்டனன்.

---

மூரி-இழுட்டெருது. பறித்தல் - தினறழித்தல். மை - எருமை, இங்கே எருமைக் கூட்டம்.

3. பரிசு-தன்மை. கரிசு-குற்றம். ஆறு-வழி.

4. அதர்-வழி.

7. நெட்டிழையார்-மனைவியர்.

9. கொத்தலர் குழலியுங் குளிர்ந்த நெஞ்சனாய்
அத்தைமார் தங்களோ டளவ ளாவியே
முத்தெனு முறுவலை முகிழ்த்துச் சட்டெனத்
தொத்திய தங்கைமார் தொகையை மேயினன்.

10. நம்பியும் பரதனன் னலமோ? வென்றிட
அம்புடை வில்லியா ளனுப்பி யுள்ளனன்
உம்பியுன் வருகைதன் னுயிருக் கேமமாய்
நம்பியுள் ளானென நவில நூல்வலான்.

11. சென்றுளா னெங்கெனச் செல்வ நிற்பிரிந்
தன்றிருந் தயோத்தியை யகன்று போய்நலந்
துன்றிய நந்தியூர் தன்னைத் துன்னியே
நன்றுளான் மிதியடி நயந்து போற்றியே.

12. என்றலுந் தலைமகன் இனைந்து நாளிதோ
சென்றுகாண் பேனெனச் செல்வ வொல்லையே
ஒன்றுவன் கோயிலை யுறுதற் குள்ளென
நன்றென ராமனு நடத்தல் மேயினன்.

13. தாரணிந் தேகுலத் தைய லோடணி
தேரினி லேற்றியே சென்ற கன்றெரு
ஈரிதழ் மலர்ந்திட வீரிது நீங்கிப்போய்க்
கூரொளி யவிர்மணிக் கோயில் நண்ணினர்.

14. தெம்புட னொளிமணித் தேரி னின்றிழிந்
தம்பெனுங் கண்ணியோ டகல விட்டிலாக்
கும்பலி னின்றுபோய்க் கோயி லுட்புகுந்
தெம்பியின் வருகைபார்த் திருக்கு நம்பியும்.

15. கானகம் போனதுங் காப்பை நீத்ததும்
மானினை யிழந்ததும் மதில்வ ளைத்ததும்
வானுய ரிலங்கைமா மன்னை வீழ்த்ததும்
ஏனினு நிகழ்வெலா மிசைத்தி ருந்தனன்.

---

9. தொத்துதல்-திரளுதல்.
10. ஏமம்-காவல். நூல்வலர்ன்-சுமந்திரன்.
13. ஈர்இதழ்-இருபுற வீட்டு வரிசை. கூர்-மிகுதி.

16. ஒன்றுத லெங்கைய ரோடு கோயிலும்
பண்ணையு மாயமும் பாவை பூவையும்
வண்ணவொண் கிள்ளையு மானு மேனவும்
கண்ணிணை களிப்புறக் கண்டு வந்தனள்.

17. ஓடியே தூதுவ ருற்று நந்தியைப்
பாடுறீந் திணைந்திடும் பரதற் கண்டுமே
காடகன் றண்ணலுங் கடிகொள் நன்னகர்
கூடின னென்றுளங் குளிரக் கூறினர்.

18. எழுதெழில் நந்தியி லிருந்த யோத்தியை
அழுதழு தருவிநீ ரற்ற கண்ணொடும்
பொருதினை யெண்ணியே புலர்ந்த நெஞ்சொடும்
பழுதர வாண்டவப் பரதன் கேட்டதும்.

19. தொழுதகை யோடுபின் றொடரு வாரின்றி
அழுதகண் ணொடனன் றுவென் றோடிப்போய்
விழுதறு மரமென வீழப் பாரினிற்
புழுதிகொள் ளடியிணை பூண்ட கைகளே.

20. காரியன் கண்டுளங் கசிந்து கைகளால்
வாரியே யெடுத்துமார் பணைத்து வாருகண்
ணீரினைத் துடைத்தவ னிலைமை கண்டுகண்
சூரிநீ ராட்டியுள் ளுழுகப் புல்லினன்.

21. வருந்தலை யெம்பியெவ் வகையிங் காற்றிநீ
இருந்தனை யென்றினைந் திரங்கிச் சென்றதும்
பொருந்திய நிகழ்வையும் புகன்று கேட்டவர்
திருந்திய கருத்துளத் தெளிவு கொண்டனர்.

22. கோவிலும் பிறகனுங் குறுகிக் கண்டுவந்
தாவன கழறியு மளவ ளாவியும்
மூவரு முடிமழித் தால மூழ்கிநற்
பாவகம் போலவொப் பனையின் மேயினர்.

---

16-பண்ணை-விளையாடிடம். ஆயம்-தோழியர் கூட்டம்.
20. காரியன் - அரசுபெறுங் காரியத்திற் கருத்த
முள்ளவன், சூரிநீர்-மிக்கநீர்.
22. ஆலம்-நீர்.

23, திருமுடி புனைந்தொளி திகழி ருக்கைபோந்
தொருகுடை நிழலுல கோம்பு வீரெனப்
பரிவொடு நற்குணப் பரதன் வேண்ட வே
சரியென மூனிவர்கள் தகுந்த தாமென்றார்.

24. இருநக ரொப்பனை செய்து நம்பியை
அருவியம் புனிதநீ ராட்டிப் பட்டுடுத்
துருவணி கலனணிந் துயரத் தாணியார்
குருமணி யிருக்கையிற் கொடியொ டேற்றினர்.

## வேறு

25. பொன்பொலி முத்த மாலையுங் கமழும்
பூந்தொடை மாலையும் புனைந்தே
இன்பொடு வாழ்கென் றுரியர் வாழ்த்த
வியைந்துபல் லியங்கட லார்ப்பத்
தன்பொரு மின்னார் சாமர மிரட்டத்
தவளவெண் குடைநிழல் கவிப்ப
அன்பொடு பரதன் கொடுக்கவே வாங்கி
அணிமுடி புனைந்தனன் வசிட்டன்.

26. திருந்திய மணிமா முடிபுனைந் தரசு
செய்கையில் வேண்டுவ யாவும்
பொருந்திநீ டூழி வாழ்கென வாழ்த்திப்
புகுந்திடு மாரியர் தமக்கு
விருந்தொடு மணிபொன் னிலங்கூ றை
வெறுப்பவே கொடுத்தரி யணையில்
இருந்தனன் மறந்து மேவலிற் றிறம்பா
வெம்பிய ருவந்திட வினிதே.

27. புலவொடு சோமத் தாக்கிய கள்ளும்
பொறுக்கவே யுண்டுமின் னியலார்
குலவிட வுவந்து மாரிய வறநூற்
கூறுவேள் விகள்பல செய்தும்
நிலம்மெயர்ந் தேகிக் காகுள மாடி
நேரிழை யாரொடு கூடி
இலகிட வழிபன் மக்களைப் பெற்று
மினிதர சிருக்கையி லொருநாள்.

28. இறந்ததன் பிள்ளை யோடரண் மனைவா
 யெய்தியோ ராரிய னெம்மை
அறந்தவா தாண்டவுன் முன்னோர் காலத்
 தையகோ வெம்மவர் தம்மிற்
பிறந்தவர் முதிரா தேயிளஞ் சாக்கா
 டடைந்ததிற் பேதையும் மோர்செய்
நிறைந்தவண் புகழைக் கெடுத்தனை பாவி!
 நெறியிலா யெனவிகழ்ந் தழுதான்.

29. காவலர் தம்மா லறிந்தது பிராமண்
 கடுகியாங் கடைந்தவற் றெழுதே
தேவரீர் நடந்த திதுவென வெடுத்துச்
 செப்புமி னெனவவன் சிலாந்து
பாவியுன் னாட்சி தன்னிலென் மகவைப்
 பறிகொடுத் தேனிதோ விழுந்தேன்
ஆவியைப் போக்கி விடுகிறே னென்ன
 வையனே பொறும்பொறு மென்றே.

வேறு

30. காவலன் றன்னைப் பார்த்துக் கடிதினம் மேலோர்
 தம்மைப்
பாவிமுன் றருதி யென்னப் பறந்துபோய்ச் சொலவன்
 னாரும்
மேவிடத் தொழுது வேந்தன் விளைந்தமை மொழிந்திப்
 பிள்ளை
சாவினுக் கேது காணேன் றமியனே னென்ன வன்னார்.

31. மாத்தமி ழொருவன் விந்த மலைகடந் தேகி பாது
காத்திடு நாட்டிற் போந்து கடுந்தவஞ் செய்கின் றனச்
சூத்திரன் றவஞ்செய் கின்ற தொலைவரு தீமை யேயித்
தீத்தொழி லாளன் பிள்ளை செத்ததற் கேது வாகும்.

32. அன்றியு மவனைக் கொன்று லாவிதீ ரிந்தப் பிள்ளை
பொன்றிய வுயிரைப் பெற்றுப் பொலிகுவா னுறுதி
 யாக
என்றவர் கூறப் பாவி யிமையிலப் பாவி தன்னைக்
கொன்றியா னுய்வே னென்று கூறியே படையோ டேகி.

---

30. ஏது-காரணம்.
31. தீத்தொழில்-வேள்வித்தொழில்.

33. ஆவலோ டிருக்கும் பார்ப்பனை யாரியர் காட்டச் சென்று
மேவியவ் விடத்தைத் தூய விழுத்தமிழ் மகனைக் கண்டி
யாவனீ தவஞ்செய் கின்றா யென்னவப் பெரியோ னைய
பாவிதன் னினத்தை நீத்த பதடிநம் பயனென் றில்லேன்.

34. சம்புகன் என்பா ரென்னைத் தமிழ்நா டுடையேன் பொல்லாத்
தம்பியி னுளவா லெங்கள் தமிழிரா வணனைத் தீயன்
வம்பனா ரியன யோத்தி மன்னனா மிராம னென்பான்
அம்பினா லுறவி னோடு மழிந்துமே சென்றா னந்தோ!

35. ஆதலா லிளையோன் செய்யு மாரிய வடிமை யாட்சி
நீதென வெறுத்தே யாவி செலவடக் கிருக்கின் றேன்கொல்
பாதுகாப் பற்ற யானோர் பழந்தமிழ் மகனென் றுழன்
ஓதகா தென்று வாளை யுருவியே தலைகொய் தானே.

36. ஆரிய ருவந்து வாழ்த்தி யலர்மழை தூவி யார்த்தார்;
நேரிலான் பிழைத்தே னென்று நெடும்படை யொடுகா னீக்கி
ஊரினை யடையப் பிள்ளை யுயிர்த்ததென் றவர்பொய் கூறச்
சீரிலா னுவந்தே யாட்சி செய்துகொண் டிருக்கு நாளில்.

37. அயலவ னிடத்தி லோராண் டிருந்தவா ரணங்கைச் சேர்த்த
இயல்பல வென்றே யூரா ரேசுகின் றார்க வென்றோர்
நயமொழி யொற்றன் கூற ராமனுந் திடுக்கிட் டேங்கி
மயலுட னெழுந்து போய்த்தன் மனைவியை யடைந்து கண்ணே!

38. ஒழுக்கமில் லவள்நீ யென்றிவ் வூரவ ரொன்றோ செய்வார்
கொழுக்கலிச் சாறுப் பாயுங் கோசல நாட்டோ ரெல்லாம்
பழிக்கிறா ரினிமே லுந்தன் பாவையே யுயிரை யானும்
இழக்கிலே னென்னில் மான மிருக்கிலா தென்செய் கேனே.

35. வடக்கிருத்தல்-உண்ணாதிருந்து உயிர்விடல்.

44\. பழியினைக் குணமென் றுயர்குண மதனைப்
பழியெனக் கொண்டுளந் திருகி
வழிவரு மக்கட் பண்பெனும் பொருளை
யருந்துக்கு மறிவிலா ராகி
இழிசெயல் புரிவோர் பிறர்பழிக் காளா
யிறுதியிற் றுணையிலாப் பிணமாய்
அழிகுவ ரயோத்தி ராமனே யிதனுக்
காகுவன் சான்றெனு முலகே.

45\. வாழ்கதாழ் வுயர்வில் லாத்தனித் தமிழர்
வழங்குசெந் தமிழ்மொழி வாழ்க;
வாழ்கசெந் தமிழைத் தாய்மொழி யாக
வழங்குசெந் தமிழர்கள் வாழ்க;
வாழ்கபல் வளமும் பொருந்தியே தமிழர்
வாழ்திரா விடமது வாழ்க;
வாழ்கவெங் காவி யக்கதை தமிழர்
மனத்தளி யொளிர்ந்துவா ழியவே.

---

44\. துணையிலாப் பிணம்-அனாதைப்பிணம். எனும் உலகு-என்று உலகம் பழிக்கும்.
45\. தளி-கோயில்.

ஐந்தாவது போர்க் காண்டம் முற்றிற்று.

குழந்தை செய்த

இராவண காவியம் முற்றிற்று.

